பாபாசாகேப்

# டாக்டர் அம்பேத்கர்

நூல் தொகுப்பு :

தொகுதி 27





டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர்

தோற்றம்: ஏப்ரல் 14, 1891 பரிநிர்வாணம் : டிசம்பர் 6, 1956

## உண்மையான சுதந்திரம்

சுதந்திரத்தை பொறுத்தவரை, அதன் முக்கியத்துவத்தைத் தொழிலாளர்கள் உணர்கின்றனர். ஆனால் சுதந்திரம் பற்றி ஒரு தவறான அணுகுமுறையும், அதன் முக்கியத்துவம் பற்றித் தவறான கருத்தும் உள்ளது என்றும் தொழிலாளர்கள் நினைக் கின்றனர். ஒரு நாட்டின் சுதந்திரம் ஐய நிலையிலான எந்தக் குறிப்பிட்ட தன்மை கொண்ட அரசாங்கம் அல்லது சமூக அமைப்புடன் முடிச்சுப் போட்டுக் கொள்வதில்லை. பெயரளவி லான சுதந்திரம் உள் அடிமைத்தனத்தையே குறிக்கும்.

சுதந்திரம் என்பது ஒரு நாடு அந்நிய நிர்ப்பந்தம் இல்லாமல் அதன் அரசாங்க வடிவத்தையும் அதன் சமூக அமைப்பையும் நிர்ணயிக்க அதற்குள்ள சுதந்திரத்தைக் குறிக்குமே தவிர வேறல்ல. எத்தகைய அரசாங்கம் அமைக்கப்படுகிறது, எத்தகைய சமுதாயம் நிர்ணயிக்கப்படுகிறது என்பதைப் பொறுத்துத்தான் உள்ளது சுதந்திரத்தின் மதிப்பு.

- டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர்,
தொகுதி 18

This Volume XXVII in Tamil forms the Second part of the English Edition Volume 13 Part I of **Dr. Babasaheb Ambedkar - Writings and Speeches - Published by the Education Department, Government of Maharashtra**, 1992.

*முதற் பதிப்பு: மார்ச், 2002*
*விஷு ஆண்டு, பங்குனி*

© உரிமைப் பதிவு

**விலை** : *ரூ. 40/-*

**நூலகப் பதிப்பு :** ரூ. [redacted]-105

**வெளியீட்டாளர்:**
*டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்*
*சமூக நீதி மற்றும் உரிமையளிப்பு அமைச்சகம்,*
*இந்திய அரசு,*
*15, ஜன்பத் சாலை,*
*புதுடில்லி.*

**விற்பனை நிலையம்:**
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்.,*
*41B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,*
*அம்பத்தூர், சென்னை - 98.*

*அச்சிட்டோர்:*
**பாவை பிரிண்டர்ஸ் (பி) லிமிடெட்.,**
*142, ஜானி ஜான் கான் ரோடு,*
*ராயப்பேட்டை, சென்னை - 600 014.*
*தொலைபேசி: 8532441, 8532973*

# ஆலோசனைக்குழு

**மாண்புமிகு டாக்டர் சத்தியநாராயண ஜாட்டியா,**
சமூக நீதி மற்றும் உரிமையளிப்புத்துறை அமைச்சர்,
இந்திய அரசு

**டாக்டர் பிந்தேஸ்வர் பாதக்,** பிஎச்.டி., டி.லிட்.,
செயல் துணைத் தலைவர்,
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,
புதுடில்லி.

**திரு. சத் பால்**
இயக்குநர்,
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,
புதுடில்லி.

நிர்வாக ஆசிரியர் (தமிழ்):
ரா. ரங்கசாமி (மாஜினி)
சென்னை, தமிழ்நாடு.

ஆங்கில நூல் வெளியீடு:

*கல்வித்துறை,*
*மகாராஷ்டிர மாநில அரசு, 1992.*

ஆங்கில நூல் தொகுப்பாளர்:

*திரு. வஸந்த் மூன்*
*மும்பை*

தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர்:

*ரா. ரங்கசாமி (மாஜினி)*

மொழிபெயர்ப்பாளர்கள்:

*திரு. பரஞ்சோதி*
*திரு. என். இராமகிருஷ்ணன்*
*திரு. வி. இராதாகிருஷ்ணன்*
*திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)*
*திரு. ஏ.எஸ். மணி*

ஒப்புநோக்கியோர்:

*திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)*

பிழைதிருத்த உதவி:

*திரு. வி. இராதாகிருஷ்ணன்*

# அணிந்துரை

நமது இந்திய நாட்டின் அரசியல் சாசனம் உலகின் தலை சிறந்த அரசியல் சாசனங்களில் ஒன்றாகத் திகழ்கிறது. இத்தகைய சிறப்புமிக்க அரசியல் சாசனத்தை உருவாக்கி, செழுமைப் படுத்தி, வடிவமைத்துத் தந்த பெருமை பிரதானமாக பாரத ரத்னா டாக்டர் பாபா சாகேப் அம்பேத்கரையும், அரசியல் சாசன வரைவுக் குழுவையும் சேரும். அரசியல் நிர்ணய சபையின் பரிசீலனைக்கு அவர் சமர்ப்பித்த இந்திய அரசியல் சாசனத்தின், இந்திய அரசமைப்பின் முன்வரைவு இந்தத் தொகுதியில் அப்படியே வெளியிடப்பட்டுள்ளது.

மேலும், இந்த முன்வரைவு குறித்து அரசியல் நிர்ணய சபையில் நடைபெற்ற காரசாரமான, கருத்தாழமும் செறிவுமிக்க விவாதங்களும், அந்த முன்வரைவுக்குச் சமர்ப்பிக்கப்பட்ட திருத்தங்களும் இத்தொகுதியில் இடம்பெற்றுள்ளன. விவாதங் களின்போது எழுப்பப்பட்ட பல்வேறு பிரச்சினைகளுக்கும், ஐயங்களுக்கும், கேள்விகளுக்கும், சர்ச்சைகளுக்கும் டாக்டர் அம்பேத்கர் ஆணித்தரமாகவும், அழுத்தம் திருத்தமாகவும், அசைக்க மறுக்க முடியாத ஆதாரங்களுடனும் பதிலளித்து அனைவரது பாராட்டையும் பெற்றிருப்பதையும் காண்கிறோம்.

டாக்டர் அம்பேத்கர் நமது பாரதத் திருநாட்டின் ஈடு இணையற்ற சட்ட மேதைகளில் ஒருவர் என்பதை மெய்ப்பித்துக் காட்டியுள்ளார். டாக்டர் அம்பேத்கர் நூல்களின் தமிழாக்கம் வாசகர்கள் பல்வேறு பயனுள்ள விஷயங்களைப் பற்றித் தெரிந்து புரிந்து கொள்வதற்கும், எல்லோரும் எல்லாமும் பெற்று இன்புற்று வாழும் புதியதோர் சமுதாயம் உருவாகும் திசை வழியில் நாடு முன்னேறுவதற்கும் உதவும் என்றும் நம்புகிறோம்.

நல்வாழ்த்துக்கள்!

(ஒப்பம்) **டாக்டர் சத்திய நாராயண ஜாட்டியா**
சமூக நீதி மற்றும்
உரிமையளிப்புத்துறை அமைச்சர்,
இந்திய அரசு.

புதுடில்லி

# பதிப்புரை

மகாராஷ்டிர மாநில அரசு ஆங்கில மொழியில் வெளியிட்டு வரும் டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுதிகளை இந்தியிலும் தமிழ் உட்பட ஏனைய இந்திய மொழிகளிலும் மொழிபெயர்த்து வெளியிடும் பணியை இந்திய அரசின் நல அமைச்சகத்தைச் சார்ந்த டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன் மேற்கொண்டு நிறைவேற்றி வருகின்றது. இந்தப் பணி மக்களிடையே மிகுந்த வரவேற்பைப் பெற்றிருப்பது மகிழ்ச்சி அளிப்பதாகும்.

டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுப்பு வரிசையில் 26-வது தொகுதியை நாட்டு மக்களுக்கு அளிப்பதில் பெருமகிழ்ச்சி கொள்கிறோம். உயர்ந்ததொரு இலட்சியத்தை நோக்கி நம் நாடு செல்லும் பயணத்தில் டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல்கள் வழிகாட்டியாகவும் உறுதுணையாகவும் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

ஆங்கில நூல்களை தமிழ் உட்பட இந்திய மொழிகளில் அளிப்பதில் முனைந்து பணியாற்றும் நிர்வாக ஆசிரியர்கள், மொழிபெயர்ப் பாளர்கள், ஒப்புநோக்குவோர், அச்சகத்தார் ஆகிய அனைவரும் நமது பாராட்டுதலுக்கு உரியவர்கள். இந்த அரிய பணியில் ஒத்துழைப்பு நல்கும் அனைவர்க்கும் நன்றியைத் தெரிவிக்கின்றோம்.

ஏனைய தொகுதிகளைப் போலவே இந்தத் தொகுதியையும் மக்கள் வரவேற்று ஆதரிப்பார்கள் என நம்புகின்றோம்.

சத்பால்

புதுடில்லி

இயக்குநர்

டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்

# தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர் உரை

பாரத ரத்னா டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் ஒரு சகலகலா வல்லவர்; பல அரிய திறமைகளின் பெட்டகமாகத் திகழ்ந்தவர்; சீரிய பண்புகளின் சுரங்கமாக விளங்கியவர்; நேரிய செயற்பாடுகளின் கருவூலமாக மிளிர்ந்தவர். சுருங்கச் சொன்னால் அவரை ஒரு நடமாடும் பல்கலைக் கழகம் என்று கூறினால் அது மிகையாகாது.

இவையெல்லாவற்றையும் விட முக்கியமாக டாக்டர் அம்பேத்கரை இந்திய அரசியல் சாசனத்தின், அரசமைப்புச் சட்டத்தின் பிதாமகர் எனக் கூறலாம். அவரது அற்புத சட்டப் புலமையை, உலகிலுள்ள பல்வேறு அரசியல் சாசனங்கள் குறித்து அவருக்கிருந்த ஆழ்ந்த, தேர்ந்த, தெளிந்த ஞானத்தை இது விகசிதமாகப் புலப்படுத்துகிறது. மகாராஷ்டிர மாநில அரசு ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ள டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் பேச்சும் எழுத்தும் தொகுப்பு வரிசை 13 ஆவது தொகுதி தமிழில் 26, 27, 28, 29, 30 ஆவது தொகுதிகளாக வெளியிடப்படுகிறது. இவை அனைத்தும் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அரசியல் நிர்ணயசபையில் சமர்ப்பித்த அரசமைப்புச் சட்ட முன்வரைவு குறித்த விவாதங்களாகும். இந்த விவாதங்களுக்கு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அளித்த பதில்கள் படிப்போர் உள்ளத்தைப் பிணைத்து ஈர்ப்பதாக உள்ளன. எத்தகைய சிக்கலான விஷயமாக இருந்தாலும் புள்ளிவிவர ஆதாரங்களோடு, தகுந்த விவரங்களோடு, அலசி ஆராய்ந்து, அசைக்க மறுக்க முடியாதபடி அவர் பதிலளித்திருப்பதைக் காணலாம்.

இந்த ஐந்து தொகுதிகளும் பலரால் மொழிபெயர்க்கப்பட்டிருப்பதால் மொழி நடையும், சொல்லாக்கமும், பதப் பிரயோகங்களும் வேறுபட்டிருப்பது தவிர்க்க முடியாததாகி விட்டன. இதனை வாசகர்கள் பொறுத்தருள்வார்கள் என்று நம்புகிறோம்.

இதுவரை வெளிவந்துள்ள தொகுதிகளுக்குப் பேராதரவு அளித்து வந்துள்ளதைப் போன்றே இந்த ஐந்து தொகுதிகளும் வாசகர்களால் பெரிதும் வரவேற்கப்படும் என்று நம்புகிறோம்.

**தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர்**

# பிழைத்திருத்தம்

| பக். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 14 | 23 | பொருத்தமட்டில் | பொறுத்தமட்டில் |
| 23 | | மாநிலலத்திற்கும் | மாநிலத்திற்கும் |
| 26 | 18 | கட்டவரைவின் | சட்ட வரைவின் |
| 29 | அடியிலிருந்து | பண்டிட் ஹிருதயநாத் | **பண்டிட் ஹிருதயநாத்** |
| | வரி 4 | குன்ஸ்ரு | **குன்ஸ்ரு:** |
| 42 | அடியிலிருந்து | ஆட்சேபணை | ஆட்சேபனை |
| | வரி 5 | | |
| 53 | மேலிருந்து | | |
| | வரி 2 | ஆட்சேபணை | ஆட்சேபனை |
| 60 | 10 | ஷியாமானந்தன் | சியாமானந்தன் |
| | | சகாய் | சகாயா |
| 71 | மேலிருந்து | அபிப்ராயம் | அபிப்பிராயம் |
| | கீழ் வரி | | |
| 74 | மேலிருந்து | | |
| | கீழ் வரி 7 | ஷிபன்லால் | சிபன்லால் |
| 77 | மேலிருந்து | | |
| | கீழ் வரி 2 | ஷிபன்லால் | சிபன்லால் |
| 97 | அடியிலிருந்து | அளகுராய் | அல்குராய் |
| | மேலே வரி 5 | சாஸ்திரி | சாஸ்திரி |
| 106 | மேலிருந்து | முகமது தகீர் | முகமது தாஹிர் |
| | வரி 6 | | |
| 149 | அடியிலிருந்து | சௌத்ரி | சௌதரி |
| | மேலே வரி 10 | | |
| 228 | அடியிலிருந்து | சியாமானதன் | சியாமானந்தன் |
| | மேலே வரி 4 | சஹாயா | சகாய் |
| 229 | மேலிருந்து கீழ் | சியாமானதன் | சியாமானந்தன் |
| | வரி 1 | சஹாயா | சகாய் |
| | கீழிருந்து 3, | ,, | ,, |
| | கீழிருந்து 8 | ,, | ,, |
| 290 | கீழிருந்து மேல் | லட்சுமி நாராயண | லட்சுமி நாராயண் |
| | வரி 8 | சாகு | சாகு |
| | மென்றும் | மென்னும் | |
| 330 | 8 | செறுத்தும் | செலுத்தும் |
| 336 | 18 | பெரும் | பெறும் |
| 338 | 20 | குள்ளடங்களி | குள்ளடங்கிய |
| 358 | 31 | தகுதியுடைவர் | தகுதியுடையவர் |
| 364 | 21 | வேறானலன்றி | வேறானாலன்றி |
| 459 | 13 | வகயகம் | வகையம் |

குறிப்பு: இந்திய அரசமைப்பின் முன்வரைவு, இந்திய அரசியலமைப்பின் வரைவு என்ற இரு சொற்களும் ஒரே பொருளையே குறிக்கின்றன.

<u>பொருளடக்கம்</u>

## பாகம் II

## விதி வாரியாக விவாதம்

# குறிப்பு

*1948 நவம்பர் திங்கள் 15- ம் நாள் இந்திய அரசமைப்பு முன்வரைவின் பல்வேறு விதிகள் மீது விவாதம் தொடங்கியது.*

*டாக்டர் அம்பேத்கர் ஒப்புக்கொண்ட அனைத்து திருத்தங்களையும் அரசியல் நிர்ணயசபை ஏற்றுக்கொண்டது. இத்திருத்தங்கள் இங்கு இணைக்கப்பட்டுள்ளன.*

*சில திருத்தங்களை டாக்டர் அம்பேத்கர் முதலில் ஏற்றுக் கொள்ளவில்லை; அதற்கான காரணங்கள் எதுவும் தரப்படவில்லை. அத்தகைய சில திருத்தங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. அதற்குப் பின்னர், ஒவ்வொரு விதி மீதும் விவாதம் நடைபெற்றபோது, அவர் ஏன் சில குறிப்பிட்ட திருத்தங்களை ஏற்றுக்கொண்டார் என்றும், இதர சில திருத்தங்களை ஏன் ஏற்றுக்கொள்ளவில்லை என்றும் விவரமாக விளக்கிக் கூறினார். இவ்வாறு அவர் ஏற்றுக் கொள்ளாதவை அதிகமானவையாகும். அவற்றை இணைத்திருந்தால், தொகுப்பு பெரியதாக இருந்திருக்கும். அதன் காரணமாகவே அவை சேர்க்கப்படவில்லை. அவையால் ஏற்றுக்கொள்ளப்பட்ட திருத்தங்கள் பற்றிய முழுவிவரங்கள் தரப்பட்டுள்ளன. டாக்டர் அம்பேத்கர் அளித்த விளக்கங்களுடன் ஏற்றுக் கொள்ளப்பட்ட திருத்தங்கள், அரசியலமைப்புச் சட்ட விதிகள் பற்றிய முக்கியத்துவத்தை வாசகர் முழுமையாக அறிந்துகொள்ளத் துணைபுரியும்.*

*இத்தொகுதி முக்கியமாக டாக்டர் அம்பேத்கரின் செயல்பாடு சம்பந்தப்பட்டதாகும். அரசியல் நிர்ணயசபையில் விவாதிக்கப் பட்ட பிரச்சினைகளும் அவர் கூறிய எல்லாக் கருத்துக்களும் இத் தொகுதியில் இடம் பெற்றுள்ளன. விவாதத்திற்கும், குறிப்பிட்ட சந்தர்ப்பத்திற்கும் சம்பந்தமுள்ள, டாக்டர் அம்பேத்கரின் கருத்துக் களைத் தெளிவுபடுத்தவும், பாராட்டவும் தேவையான மதிப்பிற் குரிய உறுப்பினர்களின் விமர்சனங்களும், கருத்துக்களும் இதில் சேர்க்கப்பட்டுள்ளன.*

## விதி 1

**மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர்** (பம்பாய்-பொது): திரு. துணைத்தலைவர் அவர்களே, பேராசிரியர் கே.டி.ஷாவின் திருத்தத்தை ஏற்க முடியாததற்காக நான் வருந்துகிறேன். + சுருக்கமாகச் சொன்னால், என்னுடைய ஆட்சேபனைகள் இரண்டுதான். முதலாவதாக அவையில் நான் முன்மொழிந்த பிரேரணைக்கு ஆதரவாக நான் கூறிய தொடக்க உரையில் கூறியதுபோல், அரசின் பல்வேறு அமைப்புகளின் பணிகளை முறைப்படுத்தும் நோக்கத்தைமட்டும் கொண்ட ஒரு சாதனம்தான் அரசியலமைப்புச் சட்டம். இது குறிப்பிட்ட கட்சிகளின் குறிப்பிட்ட உறுப்பினர்கள் பதவியில் அமர்த்தப்படுவதற்கான சாதனமல்ல. அரசின் கொள்கை எப்படி இருக்க வேண்டும், சமூக, பொருளாதாரத் துறையில் சமுதாயம் எவ்வாறு அமைய வேண்டும் என்பதை எல்லாம், காலத்திற்கும் சூழ்நிலைக்கும் ஏற்ப மக்களே முடிவு செய்ய வேண்டிய விஷயங்களாகும். இவற்றை அரசியலமைப்புச் சட்டத்தில் வரையறுக்க முடியாது; ஏனெனில், அத்தகைய ஏற்பாடு ஜனநாயகத்தையே அழித்துவிடும். அரசின் சமூக அமைப்பு ஒரு குறிப்பிட்ட அமைப்பு முறையினைப் பெறும் என்று அரசியலமைப்புச் சட்டத்தில் நாம் கூறினால், தாங்கள் எத்தகைய சமூக அமைப்பு முறையில் வாழ விரும்புகிறோம் என முடிவு செய்து கொள்கின்ற மக்களின் உரிமையை நாம் பறித்துக் கொள்கிறோம் என்பது என்னுடைய கருத்தாகும். முதலாளித்துவ சமுதாய அமைப்பினைக் காட்டிலும் சோஷலிச சமுதாயம் சிறந்தது என்று பெரும்பான்மையான மக்கள் முடிவு செய்வது இன்று முற்றிலும் சாத்தியமே. இதரவகையான சமுதாயம் இன்றுள்ள அல்லது நாளை அமைய உள்ள சோஷலிச சமுதாயத்தைக் காட்டிலும் சிறந்ததாக இருக்கக் கூடிய சில வேறுவகையான சமுதாய அமைப்பை உருவாக்கும் வழிமுறைகளை சிந்தனையாளர்கள் எளிதில் காணமுடியும்.

மக்கள் தங்களுக்கு வேண்டிய சமுதாய அமைப்பு பற்றி முடிவு செய்து கொள்ள அனுமதிக்காமல், ஒரு குறிப்பிட்ட சமுதாய அமைப்பு முறைக்கு அவர்களைக் கட்டுப்படுத்துவதற்கான காரணத்தை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. எனவே நான் இத்திருத்தத்தை எதிர்ப்பதற்கு இதுவும் ஒரு காரணமாகும்.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள் அதிகாரபூர்வமான அறிக்கை தொகுதி VII, நவம்பர் 15, 1948. பக். 403.

இரண்டாவது காரணம்: திருத்தம் முற்றிலும் தேவையற்றது என்பதாகும். அரசியலமைப்புச் சட்டத்தில் நாம் இணைத்துள்ள அடிப்படை உரிமைகளைத் தவிர, அரசின் நெறிமுறைக் கோட்பாடுகள் பற்றிக் கூறும் இதர பிரிவுகளையும் நாம் சேர்த்துள்ளோம் என்ற உண்மையை என்னுடைய மதிப்பிற்குரிய நண்பர் பேராசிரியர் ஷா கணக்கில் எடுத்துக் கொண்டதாகத் தெரியவில்லை. பாகம் 4ல் கண்டுள்ள விதிகளை என்னுடைய மதிப்பிற்குரிய நண்பர் பேரா சிரியர் படித்துப் பார்ப்பாரேயானால், சட்டமன்றமும், நிருவாகமும் அவற்றின் கொள்கையை வகுத்துக் கொள்வதில் சில குறிப்பிட்ட கடமைப் பொறுப்புகளை மேற்கொள்ள இந்த அரசியலமைப்புச் சட்டம் பணித்துள்ளதைக் காண்பார். இதுபற்றிக் கூறும் விதி 31ஐ மட்டும் பார்க்கலாம். இந்தவிதி கூறுவதாவது: பின்வருபவற்றை அடைய அரசு தன்னுடைய கொள்கையை நெறிப்படுத்தல் வேண்டும்:

(i) குடிமக்கள், ஆணும், பெண்ணும் சரிநிகராக போதிய வாழ்க்கையை நடத்துவதற்கான உரிமை பெறுதல்;

(ii) பொதுவான நலனைப் பேணும்வகையில் சமுதாயத்தின் மூலப்பொருள் ஆதாரங்கள் மீதான சொத்துரிமையினையும் கட்டுப்பாட்டினையும் பகிர்ந்தளித்தல்;

(iii) பொருளாதார அமைப்பின் செயல்பாட்டினால் உற்பத்திச் சாதனங் களும், செல்வமும் சமுதாய நலனுக்குக் குந்தகம் விளைவிக்கும் வகை யில் ஒரு சிலரிடம் குவிந்துவிடாதபடிப் பார்த்துக் கொள்ளுதல்;

(iv) ஆண், பெண் இருபாலருக்கும் சமமான வேலைக்குச் சமமான கூலி கிடைக்கச் செய்தல்.

அனேகமாக இம்மாதிரி வகையிலான இதர சில இனங் களும் உள்ளன. நான் பேராசிரியர் ஷாவிடம் கேட்க விரும்பும் கேள்வி இதுதான்: நான் இங்கு கவனத்திற்குக் கொண்டு வந்துள்ள இத்தகைய நெறிமுறைக் கோட்பாடுகளில் சோஷலிச நோக்கமும் உள்ளடக்கமும் இல்லை என்றால், சோஷலிசம் என்பதுதான் என்ன என்று என்னால் அறிந்துகொள்ள முடியவில்லை.

எனவே, நமது அரசியலமைப்புச் சட்டத்தில் இந்த சோஷலிசக் கோட்பாடுகள் சேர்த்துக் கொள்ளப்பட்டுள்ளன என்றும், இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ளத் தேவையில்லை என்றும் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

★ ★ ★

(பேராசிரியர் கே.டி.ஷா. கொண்டு வந்த கீழ்க்கண்ட திருத்தம் வாக்கெடுப்புக்கு விடப்பட்டது:)

[1]**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் இதுதான்:

*''விதி (1) ன் துணைவிதி (1) ல் 'ஒரு இருக்கும்' என்ற வார்த்தைகளுக்குப் பின்னர் 'மதச் சார்பின்மை, கூட்டாட்சி, சோஷலிசம்' என்ற வார்த்தைகள் சேர்க்கப்பட வேண்டும்.*

திருத்த முன்மொழிவு நிராகரிக்கப்பட்டது.

**திரு. துணைத்தலைவர்:** நான் இங்கு ஒன்றினைத் தெளிவு படுத்த விரும்புகிறேன். டாக்டர் அம்பேத்கர் பதிலளித்த பின்னர் மேலும் விவாதத்தை அனுமதிக்கமாட்டேன். ஏற்கனவே நான் ஒரு தவறு செய்துவிட்டேன். அத்தவற்றை மீண்டும் செய்ய விரும்ப வில்லை (சிரிப்பு).

**மகபூப் அலி பேக் சாகிப் பகதூர்** (சென்னை: முஸ்லீம்): துணைத் தலைவர் அவர்களே, பின்வருவதை முன்மொழிகிறேன்:

*'விதி (1)ன் துணைவிதி (1)ல் 'மாநிலங்கள்' என்ற வார்த்தைக்குப் பதிலாக 'மாகாணங்கள்' என்ற வார்த்தை பயன்படுத்தப்படவேண்டும்''.*

துணைத் தலைவர் அவர்களே, இந்த அரசியலமைப்புச் சட்ட வரைவை பரிசீலனைக்காக எடுத்துக்கொள்ள வேண்டும் என்று முன்மொழிந்து, அரசாங்க அமைப்பு பற்றி டாக்டர் அம்பேத்கர் விளக்கிப் பேசியபோது கூறினார்...

**திரு. துணைத் தலைவர்:** இத்தகைய விவாதம் தேவை இல்லை. புதிதாக ஏதாவது சொல்ல வேண்டி இருந்தால், அதைப் பற்றிப் பேசுமாறு மதிப்பிற்குரிய உறுப்பினரை வேண்டிக் கொள்கிறேன்.

★ ★ ★

[2]**மக்பூப் அலிபேக் சாகிப் பகதூர்:** பெரிய முக்கியத்துவத் துவம் எதுவும் இல்லாத வகையில் ''ஒன்றியம்'' என்ற வார்த்தை பயன் படுத்தப்பட்டது என்று டாக்டர் அம்பேத்கர் கூறினால், ''கூட்டரசு''

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், VII, நவம்பர் 15, 1948, பக்கம் 403
2. மேற்படிநூல் (அதிகாரப்பூர்வ அறிக்கை), தொகுதி VII, நவம்பர் 15, 1948, பக்.104

என்ற வார்த்தையை நாம் ஏன் பயன்படுத்தக்கூடாது என்பதற்கு எவ்வித காரணமும் இல்லை. ஆனால், இந்த கூட்டாட்சி அரசு அமைப்பு காலப்போக்கில் ஓரடுக்கு அரசாக மாற்றப்படலாம் என்ற கருத்தில் 'ஒன்றியம்' என்ற வார்த்தை உபயோகிக்கப்பட்டிருக்கு மானால், இப்போதே சரியான வார்த்தையை சபை பயன்படுத்த வேண்டியுள்ளது; அதனால், எதிர்காலத்தில் அரசாங்கத்திற்கு வர விரும்பும் எந்தக் கட்சியும் இத்தகைய அரசு அமைப்பு முறையை ஓரடுக்கு அரசாக எளிதில் மாற்றிவிட முடியாது. எனவே, 'ஒன்றியம்' என்ற வார்த்தைக்குப் பதிலாக, 'கூட்டரசு' என்ற சரியான வார்த்தை யைப் பயன்படுத்துவதை இப்போது சபைதான் முடிவு செய்ய வேண்டும்.

துணைத்தலைவர் அவர்களே, எனவே நான் சபையின் முன் வைத்துள்ள திருத்தம் நியாயமானதாகும். அரசு ஒரு கூட்டாட்சி அரசாக இருக்கவேண்டும், ஓரடுக்கு அரசாக இருக்கக்கூடாது என்று நீங்கள் கருதினால், எதிர்காலத்தில் அதிகாரபீடத்தில் அமரவிரும்பும் கட்சி இதனை ஓரடுக்கு அரசாக மாற்றி, அதற்குப் பாசிச, சர்வாதி கார உருவம் கொடுப்பதைத் தடுக்க வேண்டுமென்று விரும்பி னால், 'கூட்டரசு' என்ற சரியான வார்த்தையை நாம் பயன்படுத்தத் தீர்மானிக்கவேண்டும். எனவே, 'ஒன்றியம்' என்ற வார்த்தைக்குப் பதிலாக 'கூட்டரசு' என்ற வார்த்தையைப் பயன்படுத்த வேண்டு மென்று முன்மொழிகிறேன்:

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இத் திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்ளவில்லை.

திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

★ ★ ★

[1]**மாண்புமிகு திரு. கன்ஷியாம் சிங் குப்தா** (மத்திய மாகா ணங்கள் மற்றும் பீரார்: பொது): ஐயா, நான் பின்வரும் திருத்தத்தை முன்மொழிகிறேன்:

'விதி 1ல் 'மாநிலம்' என்ற வார்த்தை எங்கெங்கு வருகிறதோ, அந்த இடங் களில் 'பிரதேசம்' என்ற வார்த்தையைப் பயன்படுத்தப்பட வேண்டும்,

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள் அதிகாரபூர்வமான அறிக்கை தொகுதி VIII, நவம்பர் 15, 1948. பக்.406.

அரசியலமைப்புச் சட்ட வரைவு முழுவதிலும் அதற்கேற்ப மாற்றங்களைச் செய்ய வேண்டும்.''

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இத்திருத்தத்தை எதிர்க்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** நம்முன் இப்போதுள்ள திருத்தம் இதுதான்:

> 'விதி 1 ல் எங்கெங்கு 'மாநிலம்' என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளதோ, அந்த இடங்களில் 'பிரதேசம்' என்ற வார்த்தை பயன்படுத்தப் பட வேண்டும்; அரசியலமைப்புச் சட்டவரைவு முழுவதிலும் அதற்கேற்ப மாற்றங்களைச் செய்ய வேண்டும்''.

எதிர்ப்போர்தான் அதிகம் எனக் கருதுகிறேன்.

**திரு. எச்.வி. காமத்:** வாக்கெடுப்பு நடத்த வேண்டும்.

**திரு. துணைத் தலைவர்:** ''எதிர்ப்போர்''தான் அதிகம் என்று நினைக்கிறேன். வாக்கெடுப்பது தேவை இல்லை. இந்த வேண்டுகோளை நிராகரிக்க எனக்கு அதிகாரம் உள்ளது. இச்சூழ்நிலையை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் கவனத்தில் கொள்ளவேண்டுகிறேன். ''எதிர்ப்போர்'' தான் அதிகம் என்று மிகவும் தெளிவாகத் தெரிகிறது.

**மாண்புமிகு திரு. கன்ஷியாம் சிங் குப்தா:** ''எதிர்ப்போர்'' அதிகம் என்பதை ஏற்றுக்கொள்கிறேன்.

**மாண்புமிகு பண்டிட் ஜவஹர்லால் நேரு:** நமது வேண்டுகோளுக்குப் பதிலாக, கைகளை உயர்த்திக் காட்டலாம். அவ்வாறு செய்தால், உண்மைநிலை சற்று தெளிவாகத் தெரியும்.

**திரு. துணைத் தலைவர்:** மாண்புமிகு திரு. ஜி.எஸ். குப்தா எதிர்ப்போர்தான் அதிகம் என்பதை ஒத்துக்கொள்கிறாரா?

**மாண்புமிகு கன்ஷியாம் சிங் குப்தா:** எதிர்ப்போர் அதிகம் என்பதை ஒத்துக்கொள்கிறேன்.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், அதிகாரபூர்வமான அறிக்கை தொகுதி VIII, நவம்பர் 15, 1948. பக்.412.

திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

**திரு. எச்.வி. காமத்:** ஐயா, நான் பின்வரும் திருத்தத்தை முன் மொழிகிறேன்:

''விதி 1 ன் துணைவிதி (1)ல் கூறப்பட்டுள்ள 'மாநிலங்கள்' என்னும் வார்த்தைக்குப் பதில் 'மாகாணங்கள்' என்ற வார்த்தை பயன்படுத்தப்பட வேண்டும்.''

விவாதம் தொடர்கிறது.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இத்திருத் தத்தை நான் ஏற்றுக் கொள்ளவில்லை.

*(இந்நேரத்தில் திரு. ஹிம்மத் சிங் கே.மகேஸ்வரி பேசுவதற் காக எழுந்தார்.)*

**திரு. துணைத் தலைவர்:** மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் விவாதத்திற்கு ஏற்கனவே பதிலளித்துள்ளார். இத்திருத்தத்தின் மீது மேலும் எவ்வித விவாதத்தையும் நான் அனுமதிக்க இயலாது.

**பண்டிட் ஹிருதயநாத் குன்ஸ்ரு** (ஐக்கிய மாகாணங்கள் - பொது): ஐயா, ஒரு உறுப்பினர் திருத்தத்தை முன்மொழிந்தபின்னர், டாக்டர் அம்பேத்கர் அதனை ஏற்றுக்கொள்கிறாரா என்று அவரிடம் கேட்கிறீர்கள். அவருடைய கருத்துக்களைக் கூற அனுமதி அளித்து, இப்பொருள் குறித்து இதர உறுப்பினர்கள் பேசுவதைத் தடை செய் கிறீர்கள். இதனால், சபையின் உணர்வுகள் மதிக்கப்படுவதில்லை.

**திரு. துணைத்தலைவர்:** என்னுடைய நிலைமையை பண்டிட் ஹிருதயநாத் குன்ஸ்ரு சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்று நினைக்கிறேன். இங்குள்ள ஒவ்வொரு உறுப்பினருக்கும் முடிந்த மட்டில் வாய்ப்பளிக்க நான் எப்போதும் தயாராக உள்ளேன். கடந்த சிலநாட்களில் நான் எப்படி செயல்பட்டேன் என்பதை இங்கு குறிப் பிட்டுக் காட்டுவதைத் தவிர வேறு எந்த விளக்கமும் இப்போது

---

1. *அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், அதிகாரபூர்வமான அறிக்கை தொகுதி* VII, *நவம்பர் 15, 1948. பக். 413.*

தேவை இல்லை. நமக்கு இப்போது காலஅவகாசம் போதாது. திரு. காமத் தமது திருத்தத்தை முன்மொழிந்த பின்னர், யாராவது ஓர் உறுப்பினர் எழுந்து ஏதாவது கூறுவார்களா என்று சிறிது நேரம் காத்திருந்து கவனித்தேன். ஒருவரும் எழுந்திருக்கவில்லை. குறிப்பாக திரு.காமத் முன்னர் கூறிய வார்த்தையையே கூறியதை நான் கவனித்தபோது டாக்டர் அம்பேத்கர் பதில் கூற விரும்புகிறாரா என்று நான் அவரைக் கேட்பது சபையின் விருப்பத்திற்கு மாறாகச் செயல்படுவதாகாது என்று நினைத்தேன்.

சபையின் மனப் போக்கினை உணர்ந்து செயல்பட நான் தவறி இருந்தால் அதற்காக வருந்துகிறேன்.

***பண்டிட் ஹிருதய நாத் குன்ஸ்ரு:*** ஒரு துணை விதி சாதாரணமானது என்றும், அதன் மீது போதுமான விவாதம் ஏற்கனவே நடந்துள்ளது என்றும் நீங்கள் கருதினால், அந்த துணை விதி குறித்து விவாதிக்க அனுமதி மறுப்பது உங்களுக்குள்ள முழுமையான உரிமையாகும். விவாதத்தை நிறுத்த உங்களுக்கு அதிகாரம் உண்டு; சம்பந்தப்பட்ட மாண்புமிகு உறுப்பினரை பதிலிறுக்குமாறு கூறவும் அதிகாரம் உண்டு. இத்தகைய அதிகாரத்தின் அடிப்படையில்தான் டாக்டர் அம்பேத்கரைப் பதில் அளிக்க அழைத்தீர்கள். இவ்வாறு நீங்கள் செயல்பட்டதற்கு ஆட்சேபனை எதுவும் இருக்க முடியாது.

***திரு. துணைத் தலைவர்:*** அப்படியானால், இப்போது திருத்தத்தை வாக்கெடுப்பிற்கு விடுகிறேன்.

திரு. காமத்தின் திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

★ ★ ★

[1]***திரு.மகாவீர் தியாகி:*** ஐயா, என்னுடைய திருத்தத்தில் கூறப்பட்ட எல்லா வார்த்தைகளும் சேர்க்கப்பட வேண்டுமென்று நான் முற்றிலும் வலியுறுத்தவில்லை.

இதுகுறித்து ஓர் உரை நிகழ்த்தி, சபையின் நேரத்தை வீணடிக்கவும் நான் விரும்பவில்லை. இருப்பினும், ஒரு கருத்தை மட்டும்

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள் அதிகாரபூர்வமான அறிக்கை தொகுதி VII, நவம்பர் 15, 1948. பக். 413.

இங்கு தெளிவுபடுத்த விரும்புகிறேன். இதனை கருத்தில் கொண்டு, இத்திருத்தத்தை முறைப்படி முன்மொழிகிறேன்:

> "விதி (1)ன் துணைவிதி (1)ல் மாநிலங்கள் என்ற வார்த்தைக்குப் பதிலாக "குடியரசு மாநிலங்கள்" என்ற வார்த்தைகளும் மற்றும் ஒன்றியத்தின் இறையாண்மை மக்கள் அனைவரிடமும் உள்ளடங்கி இருக்கும் என்றும் சேர்க்கப் பட வேண்டும்."

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** இத்திருத்தம் மீது வாக்கெடுப்பு நடத்த விரும்புகிறேன்.

**திரு.மகாவீர் தியாகி:** திரு.துணைத் தலைவர் அவர்களே, இந்தவரைவு எப்படி இருப்பினும், இறையாண்மை மக்களிடம் உள்ளடங்கி கிடக்கின்றது என்று அரசியலமைப்புச் சட்ட வரைவினைத் தீட்டிய அறிஞர் கூறியுள்ள காரணத்தால், என்னுடைய திருத்தத்தை வலியுறுத்த விரும்பவில்லை. டாக்டர் அம்பேத்கர், இறையாண்மை மக்களிடம் உள்ளடங்கி கிடக்கின்றது என்பதை எடுத்துக் கொள்ளு வதால், அவருடைய விளக்கம் வருங்காலத்தில் மேற்கோள் காட்டும் வகையில் பதிவேடுகளில் இடம்பெறும் என்று நம்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எவ்வித சந்தேகத் திற்கும் இடமின்றி, இறையாண்மை மக்களிடம் பொதிந்துள்ளது. மேலும் முகப்புரை பற்றி நாம் விவாதிக்கும்போது இந்த விஷயம் மீண்டும் எழுப்பப்படுமானால், அதற்கு நான் சிறிதளவும் ஆட் சேபனை செய்ய மாட்டேன் என்பதையும் என்னுடைய நண்பருக்குத் தெரிவிக்க விரும்புகிறேன்.

**திரு. மகாவீர் தியாகி:** அப்படியானால் என்னுடைய திருத் தத்தை விலக்கிக் கொள்ள அவையின் அனுமதி கோருகிறேன்.

அவையின் அனுமதியுடன் திருத்தம் விலக்கிக் கொள்ளப் பட்டது.

---

1. *அரசியல் நிர்ணயசபை விவாதங்கள் அதிகாரபூர்வமான அறிக்கை தொகுதி VII, நவம்பர் 15, 1948. பக். 418.*

**பேராசிரியர் கே.டி.ஷா:** திரு. துணைத் தலைவர் அவர்களே, பின்வரும் திருத்தத்தை நான் முன்மொழிகிறேன்:

*''விதி (1) துணைவிதி (1)ல் 'மாநிலங்கள்' என்ற வார்த்தைக்குப் பிறகு 'அவற்றிடையே சமத்துவமாக' என்ற வார்த்தைகள் சேர்க்கப்பட வேண்டும்'' (பேராசிரியர் ஷா தமது திருத்தம் பற்றி விளக்கிப் பேசிய பின்னர் விவாதம் தொடர்ந்தது.)*

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** துணைத் தலைவர் அவர்களே, இத்திருத்தத்தை எதிர்க்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் மீது வாக்கெடுப்பு நடத்து கிறேன்.

திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

**திரு. நசிருதீன் அகமது:** திரு.துணைத் தலைவர் அவர்களே, பின்வரும் திருத்தத்தை முன்மொழிகிறேன்:

*'விதி (1) ன் துணைவிதி (1)க்குப் பின்னர் பின்வருவதைச் சேர்க்க வேண்டும். மேலும் 'இந்தியாவின் ஐக்கிய மாநிலங்கள் என்று அழைக்கப் படும்.''*

ஐயா, எவ்வித விவாதத்திற்கும் உள்ளாகாத திருத்தம் இது. மற்றொரு திருத்தம் இதற்கு மாற்றாகும். அதனைப் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

*'விதி (1)ன் துணைவிதி (1)க்குப் பின்னர், பின்வருவதைச் சேர்க்க வேண்டும். 'மேலும் இந்திய ஒன்றியம்' என்று அழைக்கப்பட வேண்டும்.*

என்னுடைய மற்றொரு திருத்தம் வருமாறு:

*''விதி 1ன் துணைவிதி (1)க்குப் பின்னர் பின்வருவதைச் சேர்க்க வேண்டும்: மேலும், 'இந்திய ஒன்றியம்' என்று அழைக்கப்பட வேண்டும்.''*

ஐயா, இம் மூன்று மாற்றுத் திருத்தங்களை சபை முன் வைக் கின்றேன். என்னைப் பொருத்தமட்டில், முதலாவது திருத்தத்தையே

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள் அதிகாரபூர்வமான அறிக்கை தொகுதி VII, நவம்பர் 15, 1948. பக். 421.

நான் விரும்புகிறேன். ஆனால், இவை பற்றி சபையின் கருத்து என்ன என்பதைப் பொறுத்துத்தான் இது உள்ளது.

*(திருத்தம் பற்றி திரு. காமத் விமர்சித்துப் பேசிய பின்னர், டாக்டர் அம்பேத்கர் பதில் கூற எழுந்தார்.)*

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இத்திருத் தங்கள் அனைத்தையும் எதிர்க்கிறேன்.

இந்திய ஐக்கிய மாநிலங்கள் என்று அழைக்கப்படவேண்டும் என்ற முதலாவது திருத்தம் குறித்து என்னுடைய நண்பர் திரு.காமத் கூறியவாதம் முற்றிலும் ஏற்றுக்கொள்ளக்கூடிய வாதமாக உள்ளது; எனவே அத்திருத்தத்தை முழு மனதுடன் நான் ஏற்றுக்கொள்கிறேன்.

'கூட்டரசு' என்ற வார்த்தையை, நான் ஏன் பயன்படுத்த வில்லை என்பது குறித்தும் 'ஒன்றியம்' என்ற வார்த்தையை நான் ஏன் பயன்படுத்தினேன் என்பது குறித்தும் எனது கருத்துக்களை விவரித்துள்ளேன். அரசியலமைப்புச் சட்ட வரைவு மிகவும் சிறந்தது என்று கூறுவதில் உறுதியுடன் இருக்கிறேன்.

**துணைத் தலைவர்:** இப்போது ஒவ்வொரு திருத்தமாக வாக் கெடுப்பிற்கு விடப்படுகிறது.

**திரு.நசிருதீன் அகமது:** என்னுடைய திருத்தங்களை விலக்கிக் கொள்ள அனுமதி கோருகிறேன்.

சபையின் அனுமதியுடன் திருத்தங்கள் விலக்கிக் கொள்ளப் பட்டன.

**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் எண்: 113

**திரு.நசிருதீன் அகமது:** 113 -ம் எண் திருத்தத்தை இப்போது நான் முன்மொழியவில்லை. ஆனால், உங்களின் அனுமதியுடன் 114 எண் திருத்தத்தை முன்மொழிகிறேன்:

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள் அதிகாரபூர்வமான அறிக்கை தொகுதி VII, நவம்பர் 15, 1948. பக். 422.

"விதி (1) ன் துணைவிதி (2) ல் தொடக்கத்தில் காணப்படும் 'இந்த' என்ற (சுட்டுக்குறிப்புச்) சொல் நீக்கப்பட வேண்டும்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இங்கு ஓர் ஒழுங்குப் பிரச்சினையை எழுப்புகிறேன். இது ஒரு திருத்தம் இல்லை என்பது என்னுடைய ஒழுங்குப் பிரச்சினையாகும். மூலக் கருத்தின் சாரத்தை மாற்றினாலொழிய எதுவும் திருத்தமாகாது. மேயின் 'பாராளுமன்ற நடைமுறைகள்' என்னும் நூலில் மேற்கோள் எதுவும் இருக்குமா என்று தேடிக் கொண்டிருக்கிறேன். இந்த ஒழுங்குப் பிரச்சினையை மட்டும் இப்போது எழுப்புகிறேன். நான் இப்போது இவ்வாறு கூறுவதற்கு என்னுடைய நண்பர் மன்னிக்க வேண்டும். பலதரப்பட்ட திருத்தங்களைச் சபை முன் கொண்டுவரும் பழக்கம் இவருக்கு இருக்கிறது. இங்கு ஒரு கால் புள்ளி வேண்டும், அங்கு அரைப் புள்ளிகள் தேவையில்லை என்பன போன்ற பலவேறு திருத் தங்களைக் கொண்டுவரும் பழக்கம் இவருக்கு உள்ளது. ஆரம்ப கட்டத்திலேயே இத்தகைய குழப்பத்திற்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும்.

**திரு. நசிருதீன் அகமது:** சுதந்திரத்தின் வாயிற்படியில் நாம் இருக்கும்போது இவ்வாறு என்னை தடுத்தால் நான் தலைவணங்கி, தலைவரின் முடிவுக்குப் பணிவதைத் தவிர வேறு வழியில்லை.

**திரு. துணைத் தலைவர்:** ஒழுங்கு பிரச்சினைக்கு உங்களுடைய பதிலென்ன?

**திரு. நசிருதீன் அகமது:** ஒழுங்குப் பிரச்சினைக்கு நான் அளிக்கும் பதில் இதுதான். விதியிலிருந்து 'இந்த' என்னும் குறியீட்டுச் சொல் நீக்கப்படவேண்டும் என்று விரும்புகிறேன். அவ்வகையில் இது ஒரு திருத்தம்தான். இது அரசியலமைப்புச் சட்ட வரைவுக்குக் கொண்டு வரப்பட்டுள்ள திருத்தம் என்பதில் ஐயமில்லை. இது தேவையற்றது, பயனற்றது, காரணமில்லாதது, பொருள் முக்கியத் துவமில்லாதது என்றெல்லாம் பலவாறு கூறித் திருத்தத்தை எதிர்க்கலாம். ஆனால், டாக்டர் அம்பேத்கர் இது ஒரு திருத்தமே அல்ல

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், அதிகாரபூர்வமான அறிக்கை, தொகுதி VII, நவம்பர் 15, 1948. பக். 422-24.

என்று சட்டரீதியில் இது ஒரு திருத்தம் அல்ல என்று நிராகரிக்கவும் முடியாது.

நிறுத்தக் குறியிடுதல் மற்றும் சிறு மாற்றங்கள் செய்தல் போன்றவை குறித்து திருத்தங்கள் கொண்டுவரும் பழக்கம் எனக்கு இருப்பதாக என்னுடைய நண்பர் குறை கூறினார். இத்திருத்த வரைவு சம்பந்தப்பட்ட மட்டில் அந்தப் பழக்கத்தைப் பின்பற்றுவதை நான் நிறுத்தி விட்டேன் என்று மகிழ்ச்சியுடன் அவருக்கும், சபைக்கும் தெரிவித்துக் கொள்கிறேன். (சிரிப்பு).

**திரு. துணைத் தலைவர்:** இது வரைவுத் திருத்தம் என்று சொல்லுகிறீர்கள். அரசியலமைப்புச் சட்ட வரைவுக் குழுவுக்கும் அதன் தலைவருக்கும் இவ்விஷயத்தை நாம் ஏன் விட்டு விடக் கூடாது? இத் திருத்தங்களில் ஏதாவது பொருள் இருந்தால் அவர்கள் ஏற்றுக் கொள்வார்கள்.

**திரு. நசிருதீன் அகமது:** நீங்கள் கூறும் வண்ணம் செய்தால், சபையின் முடிவுக்கு விடுவதற்குப் பதிலாக வரைவுக் குழுவின் முடிவுக்கு விட்டு விடுவதாகும். வரைவுக்குழுவின் பிரதிநிதி இங்கு முன்கூட்டியே தன்னுடைய கருத்தை வெளியிட்டு இருக்கிறார். வரைவுக்குழுவின் முடிவுக்கு இத்திருத்தத்தை நான் விட்டு விட வேண்டுமென்றால், இதனை நான் விலக்கிக் கொள்ளுவதாகவே பொருள்படும். எனவே, 'இந்த' என்ற குறியீட்டுச் சொல் ஒரு பெயரில் வரும் சொல் இல்லை என்று தாழ்மையுடன் கூறிக் கொள்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** இந்த ஒழுங்குப் பிரச்சினை குறித்து டாக்டர் அம்பேத்கர் கூறுவதைக் கேட்போம்.

**டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மதிப்பிற்குரிய உறுப்பினர் ஏன் 'இந்த' என்ற குறியீட்டுச் சொல்லைப் பயன்படுத்துவதை ஆட்சேபிக்கிறார் என்று எனக்குப் புரியவில்லை. இச்சொல் ஒரு குறியீட்டுச் சொல். அட்டவணையில் மாநிலங்கள் பற்றிக் குறிப்பிடும் போது இது முற்றிலும் தேவை. பொதுவாக மாநிலங்கள் என்று

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், அதிகாரபூர்வமான அறிக்கை, தொகுதி VII, நவம்பர் 15, 1948. பக். 422 -424

மட்டும் நாம் சொல்லவில்லை. அட்டவணையில் காணப்படும் குறிப்பிட்ட சில மாநிலங்களைத்தான் குறியிட்டுக் காட்டுகிறோம். ஆகையால் 'இந்த' என்ற குறியீட்டு விதிச்சொல் தேவைப்படுகிறது.

இரண்டாவதாக, நான் கூற விரும்புவது இதுதான்: இங்கு ஒரு கால்புள்ளி தேவை, இன்னொரு இடத்தில் அரைப்புள்ளி தேவை அல்லது 'ஒரு' என்ற குறியீட்டுச் சொல் இந்த இடத்திற்குப் பொருந்தும், இன்னொரு இடத்தில் 'இந்த' என்ற குறியீட்டு சொல் ஒரு பெயரில் வரும் சொல் இல்லை என்று தாழ்மையுடன் கூறிக் கொள்கிறேன்.

**திரு. துணைத்தலைவர்:** இந்த ஒழுங்குப் பிரச்சினை குறித்து டாக்டர் அம்பேத்கர் கூறுவதைக் கேட்போம்.

**டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மதிப்பிற்குரிய உறுப்பினர் ஏன் 'இந்த' என்ற குறியீட்டுச் சொல்லைப் பயன்படுத்துவதை ஆட்சேபிக்கிறார் என்று எனக்குப் புரியவில்லை. இச்சொல் ஒரு குறியீட்டுச் சொல், அட்டவணையில் மாநிலங்கள் பற்றிக் குறிப்பிடும்போது இது முற்றிலும் தேவை. பொதுவாக மாநிலங்கள் என்று மட்டும் நாம் சொல்லவில்லை. அட்டவணையில் காணப்படும் குறியிட்டுக் காட்டுகிறோம். ஆகையால் 'இந்த' என்ற குறியீட்டுவிதிச்சொல் தேவைப்படுகிறது.

இரண்டாவதாக, நான் கூற விரும்புவது இதுதான்: இங்கு ஒரு கால்புள்ளி தேவை, இன்னொரு இடத்தில் அரைப்புள்ளி தேவை அல்லது 'ஒரு' என்ற குறியீட்டுச் சொல் இந்த இடத்திற்குப் பொருந்தும், இன்னொரு இடத்தில் 'இந்த' என்ற குறியீட்டுச் சொல் தேவை எனப் பலவாறு கூறும் அளவிற்கு ஓர் இந்தியனுக்கு ஆங்கில மொழியில் தேர்ந்தெளிந்த புலமை இருப்பதாக எந்த இந்தியனும் அனுமானம் செய்து கொள்வது - என்னைப் பற்றியே பேசுகிறேன் தவறானதாகும். ஆங்கில மொழியைப் பொறுத்தவரை தனக்கு முழுமையான ஆங்கில இலக்கண 'அறிவாற்றல் இருப்பதாக என் நண்பர் முனைப்போடு' உரிமை கொண்டாடினால், ஆஸ்திரேலிய நாட்டு அரசியலமைப்புச் சட்டத்தை அவர் ஒருமுறை பார்க்க வேண்டுமென்று விரும்புகிறேன். ஆஸ்திரேலிய நாட்டு அரசியலமைப்புச் சட்டத்திலிருந்து இத்தகைய வார்த்தைகளை நாம் எடுத்துள்ளோம்;

'இந்த' என்ற குறியீட்டுச் சொல்லும் அதிலிருந்து எடுத்த சொல் தான். எனவே, ஆஸ்திரேலிய நாட்டு அரசியலமைப்புச் சட்டத்தை எனக்கு அரணாக எடுத்துக் கொள்வேன். ஆங்கில மொழியை நன்கு அறிந்த சிறந்த சட்டவல்லுநர்களால் அது எழுதப்பட்டது என்றும், ஆங்கில மொழியைப் பயன்படுத்துதில் அவர்கள் எவ்விதத்திலும் தவறிழைத்து இருக்க முடியாது என்றும் நாம் கருதலாம்.

**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் வாக்கெடுப்பிற்கு விடப் படுகிறது.

திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் எண் 119. திரு.நசிருதீன் அகமது.

**திரு. நசிருதீன் அகமது:** ஐயா, பின்வரும் திருத்தத்தை முன் மொழிகிறேன்:

> 'விதி 1 துணைவிதி '3-ன் உபவிதி (சி)ல் 'ஆகலாம்' என்ற வார்த்தை களுக்குப் பின் 'இனிமேல்' என்ற வார்த்தையைச் சேர்க்க வேண்டும்.''

ஐயா, வரைவுக்குழுத் தலைவரின் கோபத்திற்குள்ளாக வேண்டிய நிலையில்தான் நான் இத்தீர்மானத்தை முன்மொழிகிறேன். உறுப் பினர்களின் எண்ணங்கள் சபைமுன் சமர்ப்பிக்கப்பட வேண்டும், சபையின் அபிப்பிராயத்தையும் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண் டும். எந்த உறுப்பினர் மனதையும் நான் புண்படுத்தியிருந்தால்........

**திரு. துணைத் தலைவர்:** எவருடைய உள்ளத்தையும் புண் படுத்தும் பிரச்சினையே இங்கு எழவில்லை.

**திரு. நசிருதீன் அகமது:** 'இனிமேல்' என்றசொல் இதற்குப் பின்னர் சேர்த்துக் கொள்ளப்படும் மாநிலங்களைக் குறிக்கிறது. எனவே 'இனிமேல்' என்ற சொல் பொருத்தமானதாகும். இச் சொல்லைச் சேர்த்துக் கொள்ளுமாறு சபையை வேண்டிக் கொள் கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர்:** இது முற்றிலும் தேவை யற்றது என்பது என் கருத்து. இதனை நான் எதிர்க்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் வாக்கெடுப்பிற்கு விடப் படுகிறது.

திருத்தம் நிராகரிக்கப்படுகிறது.

*(1948 நவம்பர் 17ஆம் நாள் வரை சபை ஒத்திவைக்கப்பட்டது.)*

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** *(டாக்டர் எச்.சி. முகர்ஜி):* இப்போது நாம் திருத்தங்களை எடுத்துக் கொள்வோம். திருத்தம் எண் 126. பேரா சிரியர் ஷா.

**பேராசிரியர் கே.டி.ஷா:** *(பீகார்: பொது):* திரு.துணைத் தலைவர் அவர்களே, பின்வரும் திருத்தத்தை முன்மொழிகிறேன்:

'விதி (1) துணைவிதி (3) ன் உபவிதி (C) க்குப் பின்னர், பின்கண்டவை சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்:

'அல்லது ஒன்றியத்துடன் சேர்ந்துகொள்ள அல்லது தானாக இணைந்து கொள்ள அல்லது ஒன்று சேர்ந்திட விரும்புகிற.'

*(இதன் பின்னர் பேராசிரியர் ஷா பேசினார்).*

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** *(பம்பாய்: பொது):* ஐயா, இத்திருத்தத்தை எதிர்க்கிறேன்.

திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

★ ★ ★

**பேராசிரியர் கே.டி.ஷா:** திரு. துணைத் தலைவர் அவர்களே, என் பெயரிலுள்ள திருத்தம் பின்வருமாறு உள்ளது.

''விதி 1ல் பின்வரும் ஷரத்து சேர்க்கப்பட வேண்டும்:

''இந்த அரசியலமைப்புச் சட்டம் அமலுக்கு வரும் நாளிலிருந்து பத்தாண்டு காலத்திற்கு மேற்படாமல், இவ் அரசமைப்புச் சட்டத்துடன்

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், அதிகாரபூர்வ அறிக்கை, தொகுதி VIII, 1948, நவம்பர் 17, பக்கம் 425.
2. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், அதிகாரபூர்வ அறிக்கை, தொகுதி VIII, 1948, நவம்பர் 17, பக்கம் 426.

இணைக்கப்பட்டுள்ள பல அட்டவணைகளிலும் இதனைத் தொடர்ந்த பல விதிகளிலும் உள்ளடங்கியுள்ள தனித்தன்மை அல்லது வேறுபாடு ஒழிக்கப் பட வேண்டும்; மற்றும் இந்திய ஒன்றியத்தின் உறுப்பு மாநிலங்கள் யாவும் ஒரே சீராக கூட்டுறவு முறையில் கிராமக் கூட்டுறவு வட்டாரங்களாக அவற்றிடையே சீரமைக்கப்பட வேண்டும்.''

*(இதற்குப் பின்னர் விவாதம் நடைபெற்றது.)*

[1]**மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர்:** திருத்தத்தை எதிர்க் கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** வாக்கெடுப்பிற்குத் திருத்தத்தை விடுகிறேன்.

*(பேராசிரியர் ஷாவின் திருத்தம் நிராகரிக்கப்பட்டது.)*

[2]**திரு. நசிருதீன் அகமது** (மேற்கு வங்காளம் - முஸ்லீம்): ஐயா, பின்வரும் திருத்தத்தை முன்மொழிகிறேன்:

''மேலே 1வது விதியின் தலைப்பு ஆரம்பிக்கும்போது, 'அத்தியாயம் I' என்னும் வார்த்தையும் ரோமன் எண்ணுடன் சேர்க்கப்பட வேண்டும்.''

*(இதன் பின்னர் திரு. அகமது பேசினார்.)*

[3]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இந்தத் திருத்தத்தை நான் எதிர்க்கிறேன்.

திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

[4]**மாண்புமிகு பண்டிட் கோவிந்த் வல்லப பந்த்** (ஐக்கிய மாகாணம்: பொது): ஐயா, 1 வது விதிக்குக் கொண்டு வரப்பட்ட மீதமுள்ள திருத்தங்கள் மீது விவாதம் பின்னர் நடத்தலாம் என்றும், இப்போது 2வது விதியைப் பரிசீலிக்கலாமென்றும் பிரேரணை செய்கிறேன். இந்த முக்கியமான விஷயம் பற்றி ஒருமித்த கருத்தை

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், அதிகாரபூர்வ அறிக்கை, தொகுதி VIII, 1948, நவம்பர் 15, பக்கம் 426.
2. மேற்படி அதே நூல், பக்கம் 430.
3. மேற்படி அதே நூல், பக்கம் 430.
4. மேற்படி அதே நூல், பக்கம் 431.

நாம் எட்ட முடியவில்லை. விவாதம் ஒத்திவைக்கப்பட்டால் ஒருவகை தீர்வை எய்த முடியும் என்ற நம்பிக்கை எனக்குள்ளது. இதனால், எதுவும் இழக்கப்பட மாட்டாது.

(திரு. ஆர்.கே. சித்வா திரு. பந்த்தின் கருத்தை ஆதரித்தார்).

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** பண்டிட் கோவிந்த் வல்லப பந்தின் கருத்தை நான் ஏற்றுக்கொள்கிறேன்.

**சேத் கோவிந்த தாஸ் (ம.மா - பீரார்: பொது):** ஐயா, பண்டிட் பந்த் முன்மொழிந்த கருத்தை முழு மனத்துடன் ஆதரிக்கிறேன்.

**திரு. எச்.வி. காமத்:** திருத்தங்களை எத்தனை நாட்களுக்கு நிறுத்தி வைப்பீர்கள் என்பதை அறிய விரும்புகிறேன்.

**மதிப்பிற்குரிய உறுப்பினர் ஒருவர்:** ஒருநாள், ஒருவாரம் அல்லது இரண்டு வாரங்களாகலாம்.

**திரு. துணைத்தலைவர்:** ஒருவகையான கருத்து உடன்பாடு ஏற்படும்வரை சில துணைவிதிகள் பற்றி விவாதிப்பதை நிறுத்தி வைக்கலாமென்று கருதுகிறேன். அவ்வாறு செய்வது நாட்டின் நல னுக்கும் சபையின் நலனுக்கும் உகந்ததாகும்.

* * *

## விதி 2

[2]**திரு. நசிருதீன் அகமது:** ஐயா, பின்வரும் பிரேரணையை முன்மொழிகிறேன் :

''விதி 2 மற்றும் விதி 3க்குப் பதிலாக பின்வருவதை சேர்த்துக் கொள்ள வேண்டும்''

'2. நாடாளுமன்றம் சட்டத்தின் மூலம்

(அ) புதிய மாநிலங்கள் ஒன்றியத்துடன் சேர அனுமதிக்கலாம்;

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், அதிகாரபூர்வ அறிக்கை, தொகுதி VIII, 1948, நவம்பர் 15, பக்கம் 431.
2. மேற்படி அதே நூல் 431.

*(ஆ) எந்த ஒரு மாநிலத்தையும் பிரித்து இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலங்களை அமைக்கலாம்.*

*(இ) பின்வரும் வகையை சேர்ந்த இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நிலப் பகுதிகளை ஒன்றிணைந்து ஒரு மாநிலத்தை அமைக்கலாம். அதாவது -*

i. *மாநிலங்கள்,*

ii. *ஏதேனும் ஒரு மாநிலத்தின் ஒரு பகுதி அல்லது பகுதிகள்*

iii. *புதியதாக கையகப்படுத்தப்பட்ட பிராந்தியம்;*

*(ஈ) இந்த விதியின் (அ) ன் கீழ் அல்லது (ஆ) மற்றும் (இ) இனங்களின் கீழ் அனுமதிக்கப்பட்ட எந்த மாநிலலத்திற்கும் பெயர் சூட்டலாம்;*

*(உ) எந்த ஒரு மாநிலத்தின் பெயரையும் மாற்றலாம். இவை அனைத்தும் பின்வரும் நிபந்தனைக்குட்பட்டவை.*

*குடியரசுத் தலைவரின் பரிந்துரை அடிப்படையில் அல்லாது நாடாளு மன்றத்தின் எந்த அவையிலும் இந்த நோக்கத்திற்காக சட்ட முன்வடிவு எதுவும் அறிமுகப்படுத்தக்கூடாது; மற்றும்*

*(அ) முதலாவது அட்டவணை பாகம் 1ல் (அ) சட்டவரைவில் தெரிவிக்கப் பட்டுள்ள திட்டம் முதல் அட்டவணையின் 1 ஆவது பகுதியில் தற்காலிகமாகக் குறிப்பிடப்பட்டிருக்கும் எந்த ஒரு மாநிலத்தின் அல்லது மாநிலங்களின் எல்லை களையோ அல்லது பெயரையோ பாதிக்கக்கூடியதாக இருக்குமாயின், சட்ட வரைவில் அவ்வாறு தெரிவிக்கப்பட்டிருக்கும் திட்டம் குறித்தும், அதன் விதிமுறைகள் குறித்தும் சம்பந்தப்பட்ட மாநிலத்தின் அல்லது மாநிலங்கள் ஒவ்வொன்றின் சட்டமன்றத்தினதும், ஈரவையுடைய சட்டமன்றமாயின் இரு அவைகளதும் கருத்து என்ன என்பதை குடியரசுத் தலைவர் உறுதி செய்து கொள்ள வேண்டும்.*

*(ஆ) இந்தத் திட்டம் முதல் அட்டவணையில் மூன்றாவது பகுதியில் தாற்காலிகமாகக் குறிப்பிடப்பட்டிருக்கும் எந்த ஒரு மாநிலத்தின் அல்லது மாநிலங்களின் எல்லைகளையோ அல்லது பெயரையோ பாதிக்கக்கூடியதாக இருக்குமானால், அப்போது இத்திட்டத்திற்கு சம்பந்தப்பட்ட மாநிலத்தின் அல்லது மாநிலங்களின் முன்னிசைவு பெறப்பட வேண்டும்.''*

*(இப்போது பிரேரணையை முன்மொழிந்த உறுப்பினர் இதற்குப் பின்னர் பேசினார்).*

[1]**ஸ்ரீ நசிருதீன் அகமது:** ..... இது சம்பந்தமாக அடுத்துத் தாம் கொண்டுவரும் திருத்தம் பற்றி விளக்குகிறார்.)

[2]**திரு. அனந்தசயனம் அய்யங்கார்:** திரு.துணைத்தலைவர் அவர்களே, இந்த திருத்தங்களை நான் எதிர்க்கிறேன். இவை யாவும்

1. *அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், அதிகாரபூர்வ அறிக்கை, தொகுதி VIII, 1948, நவம்பர் 15, பக்கம் 435.*
2. *மேற்படி அதே நூல், பக்கம் 435.*

வெறும் சொற்சிலம்பம். இத்திருத்தங்களை அனுமதிக்கக்கூடாது என்றும் உங்களைக் கேட்டுக்கொள்வேன். இப்போது இதனை வாக்கெடுப்பிற்கு விடலாம்.

★ ★ ★

[1]***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** திருத்தங்களை எதிர்க்கிறேன்.

***துணைத்தலைவர்:*** திருத்தம் எண்கள் 131, 132, ஆகிய இரண்டின் மீதும் வாக்கெடுப்பு நடத்துகிறேன். டாக்டர் அம்பேத்கர் ஏற்கனவே பேசிவிட்டார். எனவே மேற்கொண்டு விவாதம் இருக்காது.

திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன.

★ ★ ★

***திரு. கே.வி.காமத்:*** ஐயா, பிரிவு 2 பற்றி நான் பேச விரும்புகிறேன்.

திரு. துணைத்தலைவர் அவர்களே, இப்பிரிவில் சிறிய குறை இருப்பதாக எனக்குத் தெரிகிறது. என்னுடைய மாண்புமிகு நண்பர் அவர்கள் திறமைமிக்க சட்ட வல்லுநர்; அரசமைப்பு வழக்கறிஞர்; வரைவுக்குழு இறுதியாக இதனை வடிவமைக்கும்போது, இக்குறையை நீக்கிவிடுவார். அரசியலமைப்புச் சட்ட வரைவுக்குழு அறிக்கையிலிருந்து நான் படித்துக் காட்டுகிறேன். 1947 ஜுலை முதல் ஆகஸ்டு வரை உள்ள காலத்திற்கான இரண்டாவது தொடர். ஒவ்வொரு உறுப்பினருக்கும் கடந்த ஆண்டு இத்தொடரின் ஒரு படிவம் வழங்கப்பட்டது. இதில் பிரிவு 2 இவ்வாறு தொடங்குகிறது: ''கூட்டரசின் நாடாளுமன்றம்'', என்று கூறும்போது உண்மையில் கூட்டரசு என்னும் வார்த்தையை ஒன்றியம் என்று மாற்றியுள்ளோம். பிரிவு 2ல் திடீரென 'நாடாளுமன்றம்' என்ற வார்த்தையை புகுத்தி இருக்கிறீர்கள். அது எந்த நாடாளுமன்றத்தைக் குறிப்பிடுகின்றது என்று கூறப்படவில்லை. இது ஒரு குறையாகும்; ஏனெனில் இதுவரை முந்திய பிரிவில் நாடாளுமன்றம் பற்றி எதுவும் சொல்லப்பட

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், அதிகாரபூர்வ அறிக்கை) தொகுதி VII, நவம்பர் 18, 1948, பக்கம் 435.

வில்லை. எனவே, ''ஒன்றியத்தின் நாடாளுமன்றம்'' என்று இங்கு நாம் கூற வேண்டும். அவ்வாறு செய்தால், இக்குறைபாடு நீக்கப்படும் என்று நம்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. காமத் கூறியதை நாம் கவனத்தில் கொள்ளலாம்.

விதி 2 அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப் பட்டது.

★ ★ ★

## விதி 3

[1]**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** (சென்னை - பொது): திரு. துணைத்தலைவர் அவர்களே, பின்வரும் பிரேரணையை நான் முன் மொழிகிறேன்:

> ''விதி 3-ன் துணைப்பிரிவு (அ)ல் பின்வரும் வார்த்தைகள் முடிவில் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்: ''அல்லது மாநிலங்களுக்கு அல்லது மாநிலங் களின் பகுதிகளுக்கு இதர பிராந்தியங்களைச் சேர்ப்பதால்''

★ ★ ★

**திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்:** இத்திருத்தங்களை ஏற்றுக்கொள்ளுமாறு சபையை வேண்டிக் கொள்கிறேன். ஏனெனில், அப்போதுதான் இந்த விதி முழுமை பெறும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, என்னுடைய நண்பர் திரு.சந்தானம் கொண்டு வந்துள்ள திருத்தத்தை கொள்கை அளவில் ஏற்றுக் கொள்கிறேன். திருத்தத்தின் வாசகத்தினை 'அல்லது எந்த மாநிலத்தின் ஒரு பகுதி யுடன் எந்த ஒரு பிராந்தியத்தையும் இணைத்து'' என்று சற்று மாற்றி யமைக்க விரும்புகிறேன்.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** இந்த மாற்றம் எனக்கு ஏற்புடையதாகும்.

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், அதிகாரபூர்வ அறிக்கை) தொகுதி VII, நவம்பர் 18, 1948, பக்கம் 435.

[1]**ராவ் பகதூர் சியாமாநந்தன் சகாய்**(பீகார் - பொது): திரு. துணைத் தலைவர் அவர்களே, நான் ஒரு கருத்தைக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். டாக்டர் அம்பேத்கர் தன்னுடைய அடுத்த திருத்தத்தைப் பற்றி விளக்கினால், விஷயங்கள் தெளிவாகிவிடும். அதனால், திருத்தங்களை முன்மொழிந்துள்ள என்போன்றவர்கள், எங்களுடைய திருத்தங்களை வலியுறுத்த வேண்டுமா அல்லது வேண்டாமா என்பதை முடிவு செய்ய எளிதாகும்.

**திரு. துணைத்தலைவர்:** நான் உங்கள் கருத்தை முற்றிலும் ஏற்றுக்கொள்கிறேன். டாக்டர் அம்பேத்கர் தம்முடைய திருத்தத்தைக் கொண்டுவரலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, பின்வருபவற்றை நான் முன்மொழிகிறேன்:

*''விதி 3க்குத் தற்போதுள்ள நிபந்தனைக்குப் பதிலாக, பின்வரும் நிபந்தனை சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்:*

*(அ) ''நாடாளுமன்றத்தின் எந்த ஒரு அவையிலும் குடியரசுத் தலைவரின் பரிந்துரை அடிப்படையின்றி இந்நோக்கத்திற்காக சட்ட முன்வடிவு எதுவும் அறிமுகப்படுத்தப்பட மாட்டாது; மற்றும் (அ) சட்டவரைவில் தெரிவிக்கப் பட்டுள்ள திட்டம் முதல் கட்ட வரைவின் 1ஆவது பகுதியில் தாற்காலிக மாகக் குறிப்பிடப்பட்டிருக்கும் எந்தவொரு மாநிலத்தின் அல்லது மாநிலங் களின் எல்லைகளையோ அல்லது பெயரையோ பாதிக்கக்கூடியதாக இருக்கு மாயின், சட்டவரைவில் அவ்வாறு தெரிவிக்கப்பட்டிருக்கும் திட்டம் குறித்தும் அதன் விதிமுறைகள் குறித்தும் சம்பந்தப்பட்ட மாநிலத்தின் அல்லது மாநிலங்கள் ஒவ்வொன்றின் சட்டமன்றத்தினதும், ஈரவையுடைய சட்ட மன்றமாயின் இரு அவைகளதும் கருத்து என்ன என்பதை குடியரசுத் தலைவர் உறுதி செய்து கொள்ள வேண்டும்.*

*(ஆ) இந்தத் திட்டம் முதல் அட்டவணையின் மூன்றாவது பகுதியில் தாற்காலிகமாகக் குறிப்பிடப்பட்டிருக்கும் எந்த ஒரு மாநிலத்தின் அல்லது மாநிலங்களின் எல்லைகளையோ அல்லது பெயரையோ இந்தத் திட்டத் தோடு சம்பந்தப்பட்ட மாநிலத்தின் அல்லது மாநிலங்களின் முன்னிசைவு பெறப்பட வேண்டும்.''*

திரு. துணைத்தலைவர் அவர்களே, அரசியலமைப்புச் சட்டத்தின் வரைவில் ஆரம்பத்தில் குறிப்பிடப்பட்டுள்ள நிபந்

1. *அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், அதிகாரபூர்வ அறிக்கை, தொகுதி VII, நவம்பர் 18, 1948, பக்கம் 435.*

தனையுடன் திருத்தப்பட்டுள்ள நிபந்தனையை ஒருவர் ஒப்பிட்டுப் பார்த்தால், புதிய திருத்தம் இரண்டு மாற்றங்களை அறிமுகப்படுத்தி யுள்ளது என்பதை உறுப்பினர்கள் அறிய முடியும். முதலாவதாக, மூல வரைவுப்படி சட்ட முன்வடிவை தாக்கல் செய்ய இந்திய அரசிற்கு மட்டும்தான் அதிகாரம் அளிக்கப்பட்டிருந்தது. மூலவரை வின்படி, நாடாளுமன்றத்தின் தனி உறுப்பினருக்கு அதிகாரம் இல்லை. இவ் வகையான சட்டத்தைக் கொண்டுவர நாடாளுமன்ற உறுப்பினர்கள் தங்களுக்குச் சம்பந்தமுள்ளதாக உணர்கின்ற, தாங்கள் விரும்பும் எந்த பிரேரணையையும் அவையில் கொண்டு வருவ தற்குள்ள உரிமையை இது குறைத்து விடுகிறது என்பதையும், ஒரு வகையில் இது கடுமையாக உள்ளது என்பதையும் வரைவுக்குழுவின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டது. அதன் பின்னர், இந்திய அரசுக்கு மட்டும் அதிகாரம் வழங்கும் இந்த ஏற்பாட்டை நாங்கள் நீக்கிவிட்டோம். அந்த அதிகாரம் குடியரசுத் தலைவருக்கு அளிக்கப் பட்டது; மற்றும் இந்திய அரசோ அல்லது வேறு ஒரு தனி நபரோ அத்தகைய சட்ட முன்வரைவை அவையில் கொண்டு வந்தால், குடியரசுத் தலைவரின் பரிந்துரையை அது பெற்றிருக்க வேண்டு மென்றும் கூறியுள்ளோம். இது ஒரு மாற்றம்.

இரண்டாவது மாற்றம் வருமாறு:

மூலவிதி 3ன் படி இந்திய அரசு சட்டம் கொண்டுவரும் அதிகாரம் (அ) (i), (ii) ல் கூறப்பட்டுள்ள இரண்டு நிபந்தனைகளால் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. நிபந்தனைகள் என்னவெனில், எந்த ஒரு நடவடிக்கையும் மேற்கொள்ளுவதற்கு முன்னர் சம்பந்தப்பட்ட பிராந்தியத்தைச் சேர்ந்த மாநில சட்டமன்றத்தில் பெரும்பான்மை யான பிரதிநிதிகள் குடியரசுத் தலைவருக்கு விண்ணப்பம் செய்து இருக்க வேண்டும் அல்லது சட்ட முன்வரைவில் கூறப்பட்ட திட் டத்தால் எந்த ஒரு மாநிலத்தின் பிராந்தியங்கள் அல்லது பெயர் பாதிக்கப்படுகிறதோ அந்த மாநில சட்டமன்றத்தில் இது சம்பந்தமாக ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்க வேண்டும். மாநிலத்தின் எல்லைகள் மாற்றப்பட்டாலன்றி தங்களுடைய நிலைமை பாது காக்கப்பட மாட்டாது என்று மிகவும் கடுமையாக உணரும் ஒரு சிறுபான்மை பிரிவு இருக்கலாம் என்றும், அந்தக் குறிப்பிட்ட சிறு பான்மைப்பிரிவினர் வேறு மாநிலத்திலுள்ள தங்களுடைய சகோதரர்

களுடன் இணைய அனுமதிக்கப்படவேண்டும் என்றும் இத்தருணத்தில் ஒரு முறையீடு வந்தது, அதனை அடுத்து, மூல வரைவில் (அ) வின் (i)மற்றும் (ii) யையும் மற்றும் மூலவரைவின் (ஆ) யையும் திருத்தப்பட்ட வரைவில் நீக்கிவிட உத்தேசித்துள்ளோம். இவை இரண்டு பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன - அதாவது ( அ ) மற்றும் (ஆ) என்பதாக. பாகம் (i)ல் உள்ள மாநிலங்களின் அதாவது மாகாணங்களின் பிராந்தியங்களைச் சீரமைக்கும் பொருள் பற்றியது (அ) என்னும் பாகம்; புதிய திருத்தத்தின் (ஆ) என்பது இப்போது இந்திய சமஸ்தானங்கள் என்று அழைக்கப்படுபவை சம்பந்தப்பட்டதாகும். என்னுடைய புதிய திருத்தத்தில் கண்ட (அ) மற்றும் (ஆ) உட்பிரிவுகளுக்கிடையே உள்ள முக்கியமான வேறுபாடு இதுதான்: (அ) சம்பந்தப்பட்டவரை பாகம் I ல் கூறப்படும் மாநிலங்களின், பிராந்தியங்களின் சீரமைப்பாகும்; இங்கு தேவைப்படுவது எல்லாம் கலந்து ஆலோசனை செய்வதாகும். ஒருமித்த இசைவு தேவையில்லை. தனது பரிந்துரையை அளிப்பதற்கு முன்னர் குடியரசுத் தலைவர் செய்ய வேண்டியது எல்லாம், அவர்களின் விருப்பங்கள் என்னவென்பது அறிந்து கொள்ளப்பட்டதாக அவர் திருப்தி கொள்ள வேண்டும்.

(ஆ) சம்பந்தப்பட்டவரை, ஒருமித்த இசைவு இருக்க வேண்டும் என்ற நிபந்தனை உள்ளது. நான் கூறியது போன்று, தற்போது நம்மைப் பொறுத்தவரை சமஸ்தானங்களின் நிலைமையிலிருந்தும் மாகாணங்களின் நிலைமை வேறுபட்டது என்ற உண்மையின் அடிப்படையில்தான் வித்தியாசம் உள்ளது. சமஸ்தானங்கள் இறையாண்மை உள்ளவை. ஆனால் மாகாணங்கள் இறையாண்மை உள்ளவை அல்ல. எனவே, மாகாணங்களின் பிராந்தியங்களை மாற்றுவதற்கு அவைகளின் இசைவை அரசு பெற வேண்டுமென்ற கட்டாயம் இல்லை; ஆனால் இந்திய சமஸ்தானங்களைப் பொறுத்தவரை, அவற்றிற்கு இறையாண்மை உள்ளகாரணத்தால், அவற்றின் இசைவைப் பெறுவது முறையாகும்.

பேராசிரியர் ஷா கொண்டுவந்துள்ள திருத்தத்தைப் பொருத்தவரை, புதிய நிபந்தனையின் உபவிதியில் கண்டுள்ள என்னுடைய திருத்தத்திற்கும், அவருடைய திருத்தத்திற்கும் பெருமளவில் வேறுபாடு இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. சமஸ்தானங்களில் விவாதங்கள் தொடங்கப்படவேண்டும் என்று அவர் கூறுகிறார். என்னுடைய நிபந்தனையின் (அ) உபவிதியின் படி, சமஸ்தானங்கள்

கலந்தாலோசிக்கப்பட வேண்டும். பாதிக்கப்படும் குறிப்பிட்ட மாநிலத்தின் சட்டமன்றத்தின் முன் ஒரு தீர்மானத்தை வைத்து விவாதிக்க வேண்டும் என்று பிரதம அமைச்சரையோ அல்லது ஆளுநரையோ கேட்கின்ற அணுகுமுறையை குடியரசுத் தலைவர் கலந்தாலோசிக்கும் முறையாக கடைப்பிடிப்பார் என்பதில் எனக்குச் சிறிதளவும் சந்தேகம் இல்லை. அவ்வாறு செய்வதால் முதல் நடவடிக்கையினை சம்பந்தப்பட்ட சமஸ்தான சட்டமன்றம் எடுத்ததாகத்தான் இருக்குமேயன்றி நாடாளுமன்றம் எடுத்ததாக இருக்காது என்பது தெளிவாகும். எனவே, பேராசிரியர் ஷாவின் திருத்தம் உண்மையிலே தேவையற்றது என்று கருதுகிறேன்.

**மாண்புமிகு கே. சந்தானம்:** ஆனால், ஒரு கோட்பாடு என்று அவர் அழைப்பதன் மீது அவர் கொண்டுள்ள அளவற்ற ஆர்வம் காரணமாக அவர் கொண்டுவந்துள்ள திருத்தம் அவருடைய குறிக்கோளையே முற்றிலும் தோல்வியுறச் செய்துள்ளது துரதிருஷ்டவசமானதாகும். எனவே, இத்திருத்தம் தள்ளுபடி செய்யப்பட வேண்டும் என்றும், டாக்டர் அம்பேத்கர் முன்வைத்துள்ள கருத்து ஏற்றுக்கொள்ளப்பட வேண்டுமென்றும் வேண்டுகிறேன்.

★ ★ ★

**திரு. துணைத் தலைவர்:** இதிலிருந்து சித்வா என்ன சொல்லுகிறாரென்று கேட்போம். திரு. காமத் நமது கவனத்திற்கு கொண்டு வந்துள்ள திருத்தங்களை நிச்சயமாக விவாதத்திற்கு எடுத்துக் கொள்வோம்.

**திரு. ஆர்.கே. சித்வா:** பேராசிரியர் ஷாவின் திருத்தத்தை எதிர்த்து திரு.சந்தானம் கூறிய வாதங்களை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் தெளிவாகவும், புரியக்கூடியதாகவும் உள்ளது... எனவே டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்தை அவை ஏற்றுக் கொள்ள பரிந்துரைக்கிறேன்.

*(நசிருதீனின் திருத்தம் முன்மொழியப்படவில்லை).*

[1]**திரு. துணைத்தலைவர்:** பண்டிட் ஹிருதயநாத் குன்ஸ்ரு. பண்டிட் ஹிருதயநாத் குன்ஸ்ரு (ஐக்கிய மாகாணங்கள்: பொது):

1. *அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், அதிகாரபூர்வ அறிக்கை) தொகுதி* VII, *நவம்பர் 17, 1948, பக்கம் 441.*

திரு.துணைத்தலைவர் அவர்களே, பின்வரும் பிரேரணையை முன்மொழிகிறேன்:

> ''டாக்டர் அம்பேத்கர் தற்போது முன்மொழிந்த திருத்தத்தில், ''முன் இசைவு'' என்ற வார்த்தைகளுக்குப் பதிலாக, 'கருத்துக்கள்' மற்றும் 'இருந்து இருக்கிறது'' என்ற வார்த்தைகளுக்குப் பதிலாக ''இருந்து இருக்கின்றன'' என்ற வார்த்தைகள் முறையே பயன்படுத்தப்பட வேண்டும்.''

(இதைத் தொடர்ந்து உரையாற்றலும், விவாதங்களும் நடந்தன).

★ ★ ★

[1]**திரு. ரோஹிணி குமார் சௌதரி** (அஸ்ஸாம் - பொது): திரு. துணைத்தலைவர் அவர்களே, பேராசிரியர் ஷா, பண்டிட் குன்ஸ்ரு ஆகிய இச்சபையின் இரண்டு வல்லுநர்களின் திருத்தங்களை எதிர்ப்பது என்னுடைய துரதிருஷ்டமாகும். அவர்களின் கருத்துக் களைக் குறைவாக மதிக்கிறேன் என்பதல்ல; ஆனால் டாக்டர் அம்பேத்கரின் திருத்தங்கள் இன்றைய சூழ்நிலைக்கு ஏற்றவாறு இருப்பதினால், அவருடைய திருத்தங்களை நான் மிகவும் அதிகமாக விரும்புகிறேன்...

[2]**திரு. ஆர்.கே. சித்வா** (ம.மா - பீரார்: பொது): சமஸ்தானங் களுக்கும், மாகாணங்களும் இடையே ஏன் இத்தகைய வேறுபாடுகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன என்பதை அவைக்கு விளக்குமாறு வேண்டு கிறேன்.

என்னுடைய கருத்துக்களைக் கூறி, இந்தத் திருத்தத்தை வெகுவாக ஆதரிக்கிறேன். மேலும், சமஸ்தானங்களைப் பொறுத்த வரையில் ஏன் வேறுபாடு ஏற்படுத்தப்பட்டுள்ளது என்பதையும், மாகாணங்களைப் பொறுத்தவரை, சட்டமன்றத்தின் இசைவு தேவை என்றும், சமஸ்தானங்களின் முன்இசைவு தேவை என்றும் டாக்டர் அம்பேத்கர் கூறியுள்ளது குறித்து அவர் தெளிவாக விளக்கு வார் என்று நம்புகிறேன்.

**திரு. துணைத்தலைவர்:** இப்போது, டாக்டர் அம்பேத்கர் பேசுவார்.

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், (அதிகாரப்பூர்வ அறிக்கை) தொகுதி VII, நவம்பர் 17, 1948, பக்கம் 446.
2. அதே அறிக்கை, பக்கம் 456-459.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** இப்போதைய கேள்வி இதுதான்.

**மௌலானா ஹஸ்ரத் மோஹனி:** (ஐக்கிய மாகாணங்கள்: முஸ்லீம்): திரு. துணைத்தலைவர் அவர்களே, நான் ஒரு ஒழுங்குப் பிரச்சினையை எழுப்புகிறேன். டாக்டர் அம்பேத்கர் ஒரு திருத் தத்தை மட்டும்தான் முன்மொழிந்துள்ளார். அதற்குப் பதிலளிக்கும் உரிமை எதுவும் அவருக்கு இல்லை. இந்த அவையின் முந்தைய தீர்ப்பு ஒன்று எனக்குத் தெரியும். அதில் உறுதியாகக் கூறப்பட்டுள்ளது...

**திரு. ஆர்.கே.சித்வா:** இந்த விதி முழுவதும் விவாதிக்கப் படுகிறது என்று எனக்குத் தெரிகிறது. அவ்வாறு விதி முழுவதும் விவாதிக்கப்பட்டால், பதிலளிப்பதற்கு டாக்டர் அம்பேத்கருக்கு உரிமை உண்டு.

**மௌலானா ஹஸ்ரத் மோஹனி:** அம்பேத்கர் ஏற்கனவே பேசியுள்ளார்; மீண்டும் அவர் பேசுவதற்கு உரிமை இல்லை.

**திரு.துணைத்தலைவர்:** அவைத் தலைவர் அவர்களிடம் கூறுங்கள்.

**மௌலானா ஹஸ்ரத் மோஹனி:** திரு. துணைத்தலைவர் அவர்களே, நான் குறிப்பிடுகிற அவையின் தீர்ப்புப்படி - இந்த அவையின் அச்சிடப்பட்ட நடவடிக்கைக் குறிப்பிலிருந்து மேற்கோள் காட்டுகிறேன் - ஒரு பிரேரணையை முன்மொழிபவர் பதில் அளிப் பதற்கு உரிமை இல்லை. இரண்டாவது முறையாகவும் அவர் பேச முடியாது.

**திரு. துணைத் தலைவர்:** விதியும், திருத்தமும் இப்போது விவாதிக்கப்படுவதாக நான் கருதுகிறேன். எனவே, டாக்டர் அம்பேத்கர் பேசுவார்.

**மாண்புமிகு திரு. கன்ஷியாம் சிங் குப்தா** (ம.மா. மற்றும் பீரார் - பொது): திரு. துணைத்தலைவர் அவர்களே, பிரேரணை செய் தவர் பதிலளிப்பதற்கும் உரிமை உண்டு.

**திரு. துணைத் தலைவர்:** என்னுடைய கருத்துக்கு நீங்கள் கூறுவது வலுவூட்டுகிறது.

**மாண்புமிகு திரு. கன்ஷியாம் சிங் குப்தா:** நான் சொல்ல விரும்புவது ஒரு திருத்தத்தை முன்மொழிபவர் யாராக இருந்தாலும், பதிலளிக்கும் உரிமை அவருக்கு உண்டு.

**திரு. துணைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் பதிலளிப்பதற்கு உங்களுக்கு எவ்வித ஆட்சேபனையும் இல்லை அல்லவா?

**மாண்புமிகு திரு. கன்ஷியாம் சிங் குப்தா:** நான் ஆட்சேபனை செய்யவில்லை என்பதுமட்டுமல்ல, ஒரு திருத்தத்தை முன்மொழிபவருக்கு பதிலளிக்க உரிமை உண்டு என்ற பழக்கத்தை நிலை பெறச் செய்யவும் விரும்புகிறேன். ஏனெனில், சட்டமன்றத்துக்கு வகுக்கப்பட்டுள்ள விதிகளிலிருந்து நம்முடைய விதிகள் பெருமளவில் வேறுபடுகின்றன.

**திரு. துணைத்தலைவர்:** டாக்டர் அம்பேத்கரின் பதிலுக்குப் பின்னர் இதுபற்றி நாம் முடிவு செய்து கொள்ளலாம்.

**திரு. லட்சுமி நாராயண் சாஹு** (ஒரிசா - பொது): திரு. துணைத் தலைவர் அவர்களே, என்னுடைய பெயரில் நான் கொடுத்த திருத்தம் ஒன்று உள்ளது.

**திரு. துணைத் தலைவர்:** திரு.சாஹு, உங்களின் இருக்கையில் அமருங்கள். இப்போது டாக்டர் அம்பேத்கர் பதில் கூறுவார்.

**மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர்:** (பம்பாய் - பொது): என்னுடைய நண்பர் திரு.குன்ஸ்ரூ கொண்டு வந்துள்ள திருத்தத்தின் மீது எனக்கு அதிகமான அனுதாபம் உண்டு; துரதிருஷ்டவசமாக, இப்போதைய நமது சூழ்நிலையில், அதனை என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. என்னுடைய திருத்தத்தில் முதலில் நான் கூறியது அரசியலமைப்புச்சட்டத்தில் கண்டுள்ள சில விதிகள் அல்லது துணைவிதிகளுக்கு முரண்பட்டவை என்பதுதான் எனது நண்பர் தன்னுடைய திருத்தத்திற்கு ஆதரவாக வலியுறுத்திக் கூறிய வாதமாகும். விதி 3ல் கூறப்பட்டுள்ள ஷரத்துக்கள் சம்பந்தப்பட்டவரையில் மாகாணங்களுக்கும் சமஸ்தானங்களுக்குமிடையே உருவாக்கப்பட்ட வேறுபாடு குறித்து நான் நியாயப்படுத்திப்பேசியது 226, 230 மற்றும் 294 ஆகிய விதிகளுக்கு முரண்பட்டவை என்று அவர் கூறினார். இப்போது நான் பணிவுடன் கூறுவது இதுதான். மாகாணங்

களுக்கும் சமஸ்தானங்களுக்குமிடையே உருவாக்கப்படும் வேறு பாட்டையும், அவர் மேற்கோள் காட்டிய விதிகளையும் ஆதரித்து நான் வலியுறுத்திக் கூறியதில் எவ்வித முரண்பாடும் இல்லை.

மாகாணப் பட்டியலில் குறிப்பிட்டுள்ள விஷயங்கள் சம்பந்த மாக சட்டமியற்றும் அதிகாரத்தை மத்திய சட்டமன்றத்திற்கு அதிகார மளிக்கும் விதி 226ஐப் பொறுத்தவரை, நான் பணிவுடன் கூறுவது என்னவென்றால், மேலவையில் மூன்றில் இரண்டு பங்கு பெரும் பான்மையுடன் நிறைவேற்றப்படும் தீர்மானத்தின் அடிப்படையில் தான் இந்த சட்டமியற்றும் அதிகாரத்தை மாநிலங்களின் அவை யில் சமஸ்தான பிரதிநிதிகள் எண்ணிக்கை அளவில்தான் மாகாணங் களின் பிரதிநிதிகள் இடம்பெறுவார்கள் என்பதை அவர் அறிந்து கொள்ளவேண்டும். தீர்மானத்தில் இடம் பெற்றுள்ள விஷயங்கள் சம்பந்தமாக சட்டமியற்றும் அதிகாரம் அளிக்கும் அந்தக் குறிப் பிட்ட தீர்மானத்தின்மீது நடைபெறும் விவாதங்களில் அவர்கள் நிச்சயமாகப் பங்கு கொள்ளுவார்கள். எனவே, இந்திய சமஸ்தானங் களின் இறையாண்மையை விதி 226 அபகரித்துக் கொள்கிறது என்று கூறுவது நியாமானதாகாது. சமஸ்தானங்கள் முழுமையாகப் பிரதி நிதித்துவம் பெற்றுள்ள மேலவை நிறைவேற்றிய சிறப்புத் தீர்மானம் மூலம் உண்மையிலேயே இறையாண்மை வழங்குகின்ற ஒரு நட வடிக்கையாகும் இது. எனவே, முரண்பாடு எதுவும் இருப்பதாக வாதிடத் தகுந்த சான்று இல்லை.

விதி 230 குறித்தும் இதனையே எனது விளக்கம் எனத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். அரசியலமைப்புச் சட்டம் நிறைவேறிய பின்னர் இந்திய சமஸ்தானங்கள் என்ன செய்யும் என்பது ஒருபுறமிருக்க, மூன்று விஷயங்கள் அடிப்படையில் சமஸ் தானங்கள் தற்போது சம்மதம் தெரிவித்துள்ளன; இம்மூன்று விஷ யங்களில், வெளிநாட்டு விவகாரங்கள் ஒன்று ஆகும். வெளிப் படையாகச் சொன்னால், ஒப்பந்த உடன்படிக்கையை நிறைவேற் றுவது மத்திய நாடாளுமன்றத்திற்கு வழங்கப்பட்ட அதிகாரத்தின் அடிப்படையில் அமைந்ததாகும்; ஒப்பந்த உடன்படிக்கை வெளி நாட்டு விவகாரம் என்னும் பொருளின்கீழ் வருகிறது. எனவே, இது எவ்வகையிலும் சமஸ்தானங்களின் இறையாண்மை உரிமைகளைப் பறிப்பதாகாது.

இந்திய சமஸ்தானங்களில் உள்ள சிறுபான்மையினருக்குப் பாதுகாப்பளிக்கும் விதிமுறைகளை விஸ்தரிப்பு செய்யும் விதி 294 பற்றி கூறவேண்டுமானால், இது இந்திய சமஸ்தானங்களின் இறையாண்மையை அத்து மீறுவது போல் தற்சமயம் தோன்றக்கூடும்; ஆனால், உண்மையில் அது அப்படியல்ல. இந்திய சமஸ்தானங்கள் முன் நாங்கள் வைக்கும் உத்தேசத் திட்டங்களில் ஒன்றுதான் இது. இதன்படி, இந்திய ஒன்றியத்துடன் இணைய விருப்பம் தெரிவிக்கும் போது, விதி 294ஐ அவைகள் ஏற்றுக்கொள்ள வேண்டியதிருக்கும். இவ்விதி விஸ்தரிப்பு வரைவுக் குழுவினால் தயாரிக்கப்பட்டது என்பதை நான் கூற வேண்டும்; சில இந்திய சமஸ்தானங்களின் அரசியல் நிர்ணய சபைகள் இது விஷயமாக வேறுபாடுகள் நிறைந்த, கவலை அளிக்கக் கூடிய முறையில் விதிமுறைகளை வகுத்துள்ளன என்ற விபரம் வரைவுக்குழுவிடம் தெரிவிக்கப்பட்டது. எனவே, சிறுபான்மையினர் பாதுகாப்புக்கு எத்தகைய ஏற்பாடுகளை மத்திய அரசு ஏற்றுக்கொள்ள வேண்டும், ஏற்றுக்கொள்ளக் கூடாது என்ற நியதிகளை உருவாக்குவது அவசியம் என்று வரைவுக்குழு கருதியது.

திரு துணைத்தலைவர் அவர்களே, இந்திய சமஸ்தானங்கள், பிரிட்டிஷ் இந்திய மாகாணங்கள் ஆகியவற்றிற்குமிடையே வேறுபாடு காட்டுவது பற்றி இங்கு அதிகமாகப் பேசப்பட்டது. அரசியலமைப்புச் சட்டம் உருவாக்கத் திட்டமிடும் இந்த வேறுபாடு பற்றி அவை மிகவும் உணர்ச்சி வசப்பட்டுள்ளது என்பதை நான் முற்றிலும் உணர்கிறேன். ஆனால், இந்த அவையில் இரண்டு விஷயங்கள் பற்றிக் கூற ஆசைப்படுகிறேன். முதலாவதாக, பிரிட்டிஷ் மாகாணங்கள், இந்திய சமஸ்தானங்கள் ஆகிய இருதரப்புகளுக்கும் ஏற்புடைய ஒரு பொதுவான அரசியலமைப்புச் சட்டத்தை வகுப்பதற்கு ஒரு குறிப்பிட்ட அடிப்படையை எய்தும் பொருட்டு பிரிட்டிஷ் மாகாணங்களைப் பிரதிநிதித்துவப்படுத்தும் இந்திய அரசியல் நிர்ணய சபையால் ஒரு பேச்சுவார்த்தைக் குழுவும், இந்திய சமஸ்தானங்களின் பிரதிநிதிகளால் ஒரு பேச்சுவார்த்தைக் குழுவும் அமைக்கப்பட்டன; இவ்விரு குழுக்களுக்கிடையே ஏற்பட்ட உடன்பாட்டின் விதிமுறைகளால் தற்போது நாம் கட்டுப்பட்டுள்ளோம். பேச்சுவார்த்தைக் குழுக்களின் அறிக்கைகள் அளிக்கும் விபரங்களைப் பற்றிக் கூற நான் விரும்பவில்லை. இக்குழுவின் அறிக்கை பற்றி என்னுடைய மதிப்பிற்குரிய நண்பர் பண்டிட் குன்ஸ்ரூ சற்று நினைவுபடுத்திப் பார்ப்பாரேயானால், இந்திய சமஸ்தானங்களின் பிராந்தி

யங்களின் மீது அத்துமீறல் செய்ய அனுமதிக்கும் வழிவகை எதுவும் பேச்சுவார்த்தைக் குழுக்களின் அறிக்கையில் இல்லை என்பதை அவர் தெரிந்து கொள்ள முடியும். இவ்விரு குழுக்களிடையே ஏற்பட்ட உடன்பாடு அதுதான் என்றால் - ஒப்பந்தம் அல்லது உடன்படிக்கை என்று நான் கூறவில்லை - அந்த உடன்பாட்டை மதிப்பதுதான் நல்லது. மற்றும் ஒன்றை குறிப்பிட விரும்புகிறேன் - அரசிய லமைப்புச் சட்டத்தில் மற்றொரு விதி - என்னுடைய நண்பர் திரு. குன்ஸ்ரூ இதை மேற்கோள் காட்டவில்லை என்று வருத்தத்துடன் கூறுகிறேன் - அதாவது மிகவும் முக்கியமான விதி 212 இருப்பதைக் காணலாம். இந்திய சமஸ்தானங்களைப் பொறுத்தவரை இந்திய அரசமைப்புச் சட்ட வரைவு எத்தகைய சரியான சாத்தியக் கூறுகளை உள்ளடக்கியுள்ளது என்பதை விளக்கிட விரும்புகிறேன். இந்திய ஒன்றியத்திற்குச் சாதகமாக இந்திய சமஸ்தானங்கள் செய்து கொள்ளும் இணைப்பு ஒப்பந்த அடிப்படையில் அவற்றை இந்திய ஒன்றியத்தில் இணைய அனுமதி வழங்கும் விதி 3யை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் படித்திருப்பார்கள் என்று நம்புகிறேன். இந்திய ஒன்றியத்துடன் ஒரு சமஸ்தானம் இணையும் போது மத்திய அரசு சம்பந்தமாகவும் மாகாண அரசுகள் சம்பந்தமாகவும் அதன் நிலை இணைப்பு ஒப்பந்தத்தில் கூறப்பட்டுள்ள நிபந்தனைகளால் முறைப் படுத்தப்படும்; முறைப்படுத்தவும் வேண்டும். இந்திய சமஸ்தானங் கள் இந்திய அரசியலமைப்புச் சட்டத்துடன் இணைந்து விடச் செய்வதற்கு இந்த இணைப்பு ஒப்பந்தம் மட்டுமே வழிமுறையல்ல. அரசியலமைப்புச் சட்டத்திலுள்ள விதி 212 மற்றும் ஒரு மிகவும் முக்கியமான விதியாகும். எந்த ஒரு இந்திய சமஸ்தான மன்னனும் தனது சமஸ்தானத்தின் இறையாண்மையை முற்றிலுமாக இந்திய ஒன்றியத்திற்கு மாற்றிவிட விதி 212 வகை செய்கிறது. 212ன்படி இறையாண்மையை முழுவதாக மாற்றிய பின்னர், அந்த மன்னனின் குறிப்பிட்ட பிராந்தியம் இந்தியாவின் ஒரு பகுதி என்று கூறும் வகை யில் மாறி விடுகிறது. இந்திய ஒன்றியத்தில் அதன் இறையாண்மை உள்ளடங்கி விடுகிறது. விதி 212 கீழ் அதிகாரம் வழங்கப்படுகிறது. குறிப்பிட்ட பிராந்தியத்தின் இறையாண்மையை சம்பந்தப்பட்ட மன்னர் இந்திய ஒன்றியத்திற்கு முழுமையாக மாற்றிய பின்னர், அப் பிராந்தியம் இந்தியாவின் ஒரு மாகாணமாக ஆளப்படும். அத்தகைய விஷயத்தில் இந்திய மாகாணங்களின் அரசியலமைப்பை விளக்கும் அரசியலமைப்புச் சட்டத்தின் பாகம் II அந்த இந்திய சமஸ்தானத் திற்குத் தானாகவே பொருந்தும்; அல்லது அது மத்திய அரசால்

நிருவகிக்கப்படும் ஒரு பிரதேசமாக இருக்கும்; அதனால் அக் குறிப்பிட்ட பிராந்தியத்திற்கான எவ்வகையான நிருவாக அமைப்பு முறையையும் வகுக்க குடியரசுத் தலைவருக்கும் இந்திய நாடாளு மன்றத்திற்கும் முழு அதிகாரம் இருக்கும். எனவே, அவைக்கு நான் தாழ்மையுடன் தெரிவிப்பது என்னவென்றால் இந்த விஷயம் பற்றி பதட்டப்பட வேண்டிய அவசியமில்லை. நமக்குச் சற்று பொறுமை இருக்குமானால் - இது பற்றி எனக்கு சிறிதளவும் சந்தேகம் இல்லை - அரசியலமைப்பை உருவாக்குவதற்கு நடவடிக்கைகள் மேற்கொள்ளுவதற்கு முன்னர் நிலவிய குழப்பத்தைக் குறைப்பதற்கு பெரிதும் உதவிய இந்திய சமஸ்தானங்களுக்கான நமது அமைச்சர் இந்திய ஒன்றியம் பெற்றுள்ள உண்மையான முதன்மை அதிகாரத்தைப் பயன்படுத்துவார்; அத்துடன் குழப்பத்தை மேலும் குறைத்து, இந்திய சமஸ்தானங்கள் விஷயத்தில் நாம் கடைப்பிடிக்கும் விதிமுறை களை அனைத்து சமஸ்தானங்களும் ஏற்றுக் கொள்ளுமாறு செய்து அமைதியை நிலைநாட்டுவார். 212 வது விதியிலுள்ள வழிவகை களைப் பின்பற்றி, மாகாணங்கள் சம்பந்தமாக கையாண்ட நடவடிக் கைகள் இந்திய சமஸ்தானங்கள் விஷயத்திலும் இந்திய ஒன்றியம் மேற்கொள்ளும் வகையில் நமக்கு இறையாண்மையை முழுமை யாகக் கிடைக்கப் பாடுபடுவார்.

இரு பேச்சுவார்த்தைக் குழுக்களும் ஒப்புக் கொண்ட ஒப்பந் தத்திற்கு நாம் மதிப்பளித்து விவேகத்துடன் செயல்படுவோம் என்றும், நல்லெண்ணம், சமாதானம், கௌரவம் ஆகியவை இரண்டு தரப்பினருக்கும் கிட்டும் வகையில் ஒப்பந்தம் மூலம் அடிப்படையினை மாற்றிடும் நிலையினைப் பெறும் வரையில்'' இவ் வழியினைத் தொடர்ந்து பின்பற்றுவோம் என்றும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

திரு. துணைத் தலைவர் அவர்களே, இந்தத் திருத்தத்தை நான் எதிர்க்கிறேன் (மகிழ்ச்சி ஆரவாரம்).

**திரு. துணைத்தலைவர் :** பண்டிட் எச்.என். குன்ஸ்ருவின் திருத்தம் மூலம் மாற்றப்பட்டுள்ள திருத்தம் எண் 150யை வாக்கெடுப் பிற்கு விடுகிறேன். (குறிக்கீடுகள்) நான் விரும்பும் வகையில் சபை நடவடிக்கைகளை நடத்த அன்புடன் என்னை அனுமதியுங்கள்.

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** என்னுடைய தீர்ப்பை வழங்கப் போகிறேன். திருத்தம் ஒன்றை முன்மொழிந்தவர் பதில் கூறுவதற்கு அவையின் விதிமுறைகளில் எவ்வித உரிமையும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை.

டாக்டர் அம்பேத்கர் பதில் கூறுமாறு நான் அழைத்ததற்குக் காரணம் அவரிடம் சில கேள்விகள் கேட்கப்பட்டன. இக் கேள்விகள் சம்பந்தமாக அவரது கருத்தினை விளக்கிட அவருக்கு ஒரு சந்தர்ப்பம் அளிப்பது சரியானது, முறையானது, நியாயமானது என்று கருதினேன். அதுதான் எனது தீர்ப்பு. இப்போது குன்ஸ்ரூவின் திருத்தம் மீது வாக்கெடுப்பு நடைபெறும்.

(திருத்தம் நிராகரிக்கப்பட்டது. டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் மட்டும் நிறைவேறியது.)

★ ★ ★

[2]**திரு. துணைத்தலைவர் :** டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்ட பின்னர் பேராசிரியர் கே.டி. ஷாவின் திருத்தமும், அடுத்துவரும் எண் 175 வரையிலான எல்லாத் திருத்தங்களும் தள்ளுபடியாயின என்று கருதுகிறேன்.

(திருத்தம் எண். 176 முன்மொழியப்படவில்லை.)

.....இதன்மூலம் விதி 3 பூர்த்தியடைகிறது. விதி முழுவதையும் விவாதிக்க யாரும் விரும்புகிறீர்களா?

**பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா** (மேற்குவங்காளம் - பொது) : விதி முழுவதும் பற்றி விவாதிக்க மாண்புமிகு உறுப்பினர் ஒருவர் அனுமதிக்கப்பட்டால், அதன் விளைவு என்ன? அதற்கு மீண்டும் பதிலளிக்க டாக்டர் அம்பேத்கர் அனுமதிக்கப்படுவாரா?

**திரு. துணைத்தலைவர் :** நிச்சயமாக இல்லை.

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், (அதிகாரபூர்வ அறிக்கை) தொகுதி 7, 1948, நவம்பர் 18, பக்கம் 461.
2. அதே அறிக்கை, பக்கம் 462.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** விதி முழுவதும் இன்னும் முற்றிலுமாகப் பரிசீலிக்கப்படவில்லை; டாக்டர் அம்பேத்கர் விதி முழுவதையும் பற்றி விவரிக்கவில்லை: இதுவரை திருத்தத்திற்கு மட்டும்தான் பதிலளித்துள்ளார்.

**திரு. துணைத்தலைவர் :** மாண்புமிகு உறுப்பினர் கூறுவதைக் கேட்டோம். சொன்னதையே திரும்பவும் அவர் கூறினால், அவ்வாறு செய்ய வேண்டாம் என்று அவரை நாம் கேட்டுக் கொள்வோம்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** அப்படியானால், டாக்டர் அம்பேத்கர் பதில் அளிக்க வேண்டிய கட்டாயமில்லை என்று பொருளா?

**துணைத் தலைவர்:** நீங்கள் கூறுவது சரி அல்ல.

**திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்** (சென்னை - பொது) **: இது** வெறும் யூகம்தான். இப்பிரச்சினையே இங்கு எழவில்லை.

[1]**திரு. துணைத்தலைவர் :** இப்போது, ''திருத்தப்பட்ட விதி 3 அரசியலமைப்புச் சட்டத்தின் ஓர் அங்கமாகிறது.''

பிரேரணை நிறைவேற்றப்பட்டது.

## விதி 4

★ ★ ★

**திரு. நசிருதீன் அகமது** (வங்காளம் - பொது) : திரு. துணைத் தலைவர் அவர்களே, பின்வரும் திருத்தத்தை முன்மொழிகிறேன்:

> ''இந்த அரசியலமைப்புச் சட்டத்தின்'' என்ற வார்த்தைகளை விதி 4ன் துணை விதி (1)லிருந்தும், அரசியலமைப்புச் சட்ட வரைவின் முழுப் பகுதியிலும் இதே சந்தர்ப்ப சூழ்நிலையில் எங்கெங்கு அந்த வார்த்தைகள் வருகின்றனவோ அந்த இடங்களிலிருந்தும் நீக்கப்படவேண்டும்; விதி 303ன் துணைவிதி (1)ல் (பிபி) புதிய பொருள் வரையறை சேர்க்கப்பட வேண்டும்:- ''(பிபி)'' ''விதி'' என்பது இந்த அரசியலமைப்புச் சட்டத்தின் விதி'' என்று பொருள்படும்'' (இதனையடுத்து விவாதம் நடைபெற்றது).

★ ★ ★

1. அரசியல் நிர்ணய சபை (அதிகாரபூர்வ அறிக்கை) தொகுதி VII நவம்பர் 18, பக்கம் 465-66.

**திரு. துணைத் தலைவர்:** மதிப்பிற்குரிய உறுப்பினர் விதி (4)க்கு தமது எல்லாத் திருத்தங்களையும் ஒன்றன் பின் ஒன்றாக 18 ஆம் எண் திருத்தம் வரையிலும் முன்மொழியலாம். முடிந்த அளவிற்குச் சுருக்கமாக இருக்க வேண்டும்.

**திரு. நசிருதீன் அகமது :** ........ ஐயா, நான் பின்கண்ட திருத்தத்தைப் பிரேரணை செய்கிறேன்:

> ''விதி (4)ன் துணைவிதி (1)ல் 'விதி 2 அல்லது விதி 3' என்ற வார்த்தைகளுக்கு பதிலாக 'விதி 2 அல்லது 3' என்ற வார்த்தைகளும் எண்களும் சேர்க்கப்பட வேண்டும்''.

துணை விதி (1)ல் செய்யப்பட்டிருப்பதுபோல் 'விதி' என்ற வார்த்தை திரும்பத் திரும்பக் குறிப்பிடப்பட வேண்டியதில்லை; உண்மையில் இந்த அரசியலமைப்புச் சட்டவரைவில் பல இடங்களில் இது வருவது தேவை இல்லை.

இனி பின்வரும் திருத்தத்தை முன்மொழிகிறேன்:

> ''விதி (4)ன் துணைவிதி (1)ல் 'விதி 2 அல்லது விதி 3' என்ற வார்த்தைகளுக்கும் எண்களுக்கும் பதிலாக 'விதி 3' என்ற வார்த்தையும் எண்ணும் சேர்க்கப்பட வேண்டும்''

அடுத்து பின்வரும் திருத்தத்தை முன்மொழிகிறேன்:

> ''விதி 4ன் துணைவிதி (1)ல் ஆக அத்தகைய வழிவகைகளைக் கொண்டதாக இருக்க வேண்டும்' என்ற வார்த்தைகளுக்குப் பதிலாக 'மேலும் இதற்கும் வகை செய்யவேண்டும்' என்ற வார்த்தைகள் பயன் படுத்தப்பட வேண்டும்.''
> இது ஒரு சாதாரணமான திருத்தம் தான்.

இப்போது, இந்த விதிக்கு என்னுடைய இறுதித் திருத்தத்தை முன்மொழிகிறேன்:

> ''விதி 4ன் துணைவிதி (2)ல் ''நோக்கங்களுக்காக'' என்ற வார்த்தைக்குப் பதிலாக 'எனும் பொருள் வரையறைக்கு உட்பட்டு' என்ற வார்த்தைகள் பயன்படுத்தப்படவேண்டும். இது வெறும் சொல் சார்ந்த திருத்தமேயாகும்.

*  *  *

**மகபூப் அலி பேக் சாகிப் பகதூர்** (சென்னை - முஸ்லீம்): திரு. துணைத் தலைவர் அவர்களே, திருத்தம் எண். 184ஐ முன்மொழிகிறேன்:

> ''விதி 4ன் துணைவிதி (2)ல் 'விதி 304ன்' நோக்கங்களுக்காக' என்பதற்குப் பதில் 'விதி 304ன்கீழ்' என்ற வார்த்தைகள் பயன்படுத்தப்பட வேண்டும்.''

இப்போதுள்ள வார்த்தைகளை அப்படியே வைத்துக் கொண்டால் சில வகையான சிக்கலுக்கு வழி செய்கிறது. எனவே 'விதி 304ன் கீழ்' என்ற வார்த்தைகளை இதற்கு மாற்றாக நாம் பயன்படுத்தலாம்.

**திரு. கே.வி. காமத்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, என்னுடைய மதிப்பிற்குரிய நண்பர் நஸிருதீனின் திருத்தம் எண். 177 பற்றி சுருக்கமாக சில வார்த்தைகளை உங்களுடைய அனுமதியுடன் கூற விரும்புகிறேன். டாக்டர் அம்பேத்கர் பதில் கூறுமாறு நீங்கள் அவரை அழைப்பதற்கு முன்னர், அவரிடம் நான் ஒரு வேண்டுகோளை வைக்கிறேன். திருத்தம் எண். 177 நிராகரிக்கப்பட வேண்டுமென்பது அவருடைய கருத்தாக இருக்குமென்றால், ஏன் அதனை அவர் எதிர்க்கின்றார் என்பதற்கான காரணங்களை அவர் நமக்குத் தெரிவிக்க வேண்டுமேயன்றி 'நான் இத்திருத்தத்தை எதிர்க்கின்றேன்' என்ற வழக்கமான சூத்திரத்தை அவர் கூறுவது சரியல்ல....

...... முடிவாக, 'நான் எதிர்க்கின்றேன்' என்ற சூத்திரத்தை திரும்பத் திரும்பச் சொல்லுவதற்குப் பதிலாக, ஏன் அவர் அவ்வாறு எதிர்க்கின்றார் என்பதற்கான காரணங்களைக் கூறுமாறு டாக்டர் அம்பேத்கரை வேண்டிக் கொள்கிறேன்.

**ஸ்ரீ ரோஹிணி குமார் சௌதரி :** என்னுடைய நண்பர் திரு. நசிருதீன் அகமதின் இத்திருத்தத்தை எதிர்த்து, அவரைப் பாராட்டிக் கௌரவிக்கும் பொருட்டு இம்மேடைக்கு முன் வந்து நிற்கின்றேன் (சிரிப்பு) .....

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** மாண்புமிகு திரு. துணைத்தலைவர் அவர்களே, நான் ஏதாவது பேச வேண்டிய அவசிய

1. அரசியல் நிர்ணய சபை (அதிகாரபூர்வ அறிக்கை), தொகுதி VII, நவம்பர் 18, பக்கம் 467-68.

முள்ள விஷயமாக இதனை நான் கருதவில்லை. ஆனால், திருத்தத்தை வழக்கம்போல் நான் எதிர்க்கக் கூடாது என்றும், என்னுடைய மதிப்பிற்குரிய நண்பர் திரு. நசிருதீன் அகமது கூறிய திருத்தங்களை நான் ஏன் ஒத்துக்கொள்ளவில்லை என்பதற்கான காரணங்களை விளக்க வேண்டுமென்றும் திரு. காமத் விரும்புவதால், என்னுடைய விளக்கத்தை அளிக்க இப்போது முன்வந்துள்ளேன். விதியின் சாரத்தைக் காட்டிலும், வார்த்தை அடுக்குகள் பற்றிய இத்தகைய விஷயங்கள் கோட்பாடு சம்பந்தப்பட்டவை என்று கூற முடியாது என்ற கருத்தை எல்லாரும் ஒத்துக்கொள்ளுவார்கள் என்று நம்புகிறேன். இது போன்ற விஷயங்களில், பல்வேறு அரசியலமைப்புச் சட்டங்கள் எத்தகைய வாசகத்தைப் பயன்படுத்தியுள்ளன என்பதை முன் மாதிரியாக நாங்கள் எடுத்துக் கொண்டுள்ளோம்.

''இந்த அரசியலமைப்புச் சட்டத்தினுடைய'' என்னும் சொற்றொடரை திரும்பத் திரும்பக் கூறியுள்ள விஷயத்தில் இதற்கு முன்னர் கடைப்பிடிக்கப்பட்ட நடைமுறையே நாங்கள் முற்றிலுமாகப் பின்பற்றியுள்ளோம். என்னுடைய நண்பர் திரு. காமத் ஆஸ்திரேலியா போன்ற பல்வேறு நாடுகளின் அரசியலமைப்புச் சட்டங்களைப் படித்துப் பார்த்ததாகவும், அவற்றில் ''இந்த அரசியலமைப்புச் சட்டத்தினுடைய'' என்ற சொற்றொடர் எங்கும் பயன்படுத்தப்பட்டதைக் காண முடியவில்லை என்றும் கூறினார். அவருடைய ஆராய்ச்சி முயற்சியில் அயர்லாந்து நாட்டின் அரசியலமைப்புச் சட்டத்தைக் கணக்கிலெடுத்துக் கொள்ளாதது வருத்தப்பட வேண்டியதாகும். அவர் அவ்வாறு ஆய்ந்து இருந்தால் நமது அரசியலமைப்புச் சட்டத்தின் வரைவில் பயன்படுத்தப்பட்ட சொற்றொடர் அயர்லாந்து நாட்டின் அரசியலமைப்புச் சட்டத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்றொடர்தான் என்பதை அவர் கண்டுகொண்டிருப்பார். அயர்லாந்து நாட்டின் அரசியலமைப்புச் சட்டத்தின் விதி *19*, *27*, அதன் துணைவிதி *(4)*, விதி *32*, விதி *46*, அதன் துணைவிதி *(5)* ஆகியவற்றைப் பார்த்தால், 'விதி' என்ற வார்த்தை எங்கெல்லாம் வருகிறதோ அதனைத் தொடர்ந்து ''இந்த அரசியலமைப்புச் சட்டத்தினுடைய'' என்ற சொற்றொடர் இடம்பெற்றிருப்பதை அவருடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

மேலும், இவ்வகையில் 1935-ஆம் ஆண்டு இந்திய அரசுச் சட்டத்தில் கண்டுள்ள சொற்றொடரைப் பயன்படுத்தி இருக்கிறோம் என்பதையும் திரு. காமத்துக்கு தெரிவித்துக் கொள்கிறேன். 1935ஆம்

ஆண்டு சட்டத்தின் எல்லாவிதிகளையும் பார்த்திட எனக்கு நேரம் இல்லை என்பது எனக்குக் கவலை தருவதாகும். ஆனால், என்னுடைய அதிர்ஷ்டம், 142-அ என்னும் விதி என் கண்ணுக்குப்பட்டது. இதில் இதே சொற்றொடர் பயன்படுத்தப்பட்டுள்ளது. எனவே, என்னுடைய மதிப்பிற்குரிய நண்பர் திரு. நசிருதீனின் திருத்தத்தின் முதல் பகுதியைப் பொறுத்தவரை, நாம் விசித்திரமான முறையில் செயல்படவில்லை என்பதையும் எந்தச் சொற்றொடரையும் பயன் படுத்துவதில் மற்ற நாடுகளின் அரசியலமைப்புச் சட்டங்களைப் பின்பற்றியிருக்கிறோம் என்பதையும் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

''அல்லது'' என்ற வார்த்தைக்குப் பின்னர் ''விதி'' என்ற வார்த்தையை மீண்டும் உபயோகிக்கக்கூடாது; ''விதி 2 அல்லது 3'' என்றுதான் சாதாரணமாக சொல்ல வேண்டும் என்ற அவருடைய இரண்டாவது திருத்தம் பற்றி என்னுடைய அதே பதிலைத்தான் தெரிவித்துக் கொள்கிறேன். இதிலும் கூட எல்லோருக்கும் தெரிந்த அரசியலமைப்புச் சட்டங்களைப் பின்பற்றியுள்ளோம். என்னுடைய நண்பர் அவற்றை ஆய்ந்து பார்த்தால் இத்தகைய சொற்றொடர் எல்லா இடங்களிலும் வருவதை அவர் காணமுடியும். இந்திய அரசுச் சட்டம் பிரிவு 69, உட்பிரிவு (3)யை பார்க்கும்படி அவரைக் கேட்டுக்கொள்கிறேன். அங்கு ''பத்தி'' என்று சொல் பயன்படுத்தப் பட்டு இருக்கிறது. ''பத்தி (டி) அல்லது பத்தி (இ)'' என்று அச்சட்டத் தில் எழுதப்பட்டிருக்கிறது. ''பத்தி (டி) அல்லது (இ)'' என்று சாதாரணமாக கூறப்படவில்லை. எனவே கோட்பாட்டு அளவில், இது விவாதத்திற்குரிய அல்லது கருத்து வேறுபாட்டிற்குரிய விஷய மல்ல. இது முன் நிகழ்வு சம்பந்தப்பட்ட சாதாரண விஷயம்தான். இங்கு எழுகின்ற கேள்வி இதுதான்: முன் நிகழ்வு இல்லாத விஷயம் எதையும் நாம் செய்துள்ளோமா? நான் தாழ்மையுடன் தெரிவிப்பது இதுதான்: சொற்றொடரைப் பயன்படுத்தும் விஷயத்தில் முன் நிகழ்வை பின்பற்றியுள்ளோம்; எனவே, வரைவில் காணப்படும் எந்தத் துணை விதிக்கும் எவ்வித ஆட்சேபணையும் இருக்க முடியாது.

**திரு. நசிருதீன் அகமது :** விதி (4)ன் துணை விதி (2) பற்றிய நிலமை என்ன? கூறு (2)ல் காணப்படும் ''இந்த அரசியலமைப்புச் சட்டத்தினுடைய'' என்ற வார்த்தைகளைப் பயன்படுத்தி வரைவை

தெளிவாக்குவதற்கு ஒரு குறுகிய கால அறிவிப்பு திருத்தம் தேவைப் படுகின்றது என்று கருதுகிறேன்.

**திரு. துணைத்தலைவர்:** ஒரு குறுகிய கால அறிவிப்புத் திருத் தத்தை அனுமதித்து, மோசமான ஒரு முன்மாதிரியை நாம் உண்டு பண்ண முடியாது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஐயா, இதை நான் ஏற்றுக் கொள்ள முடியாது.

**திரு. துணைத்தலைவர்:** அப்படியானால், திருத்தங்கள் ஒவ் வொன்றின் மீதும் வாக்கெடுப்பு நடத்தலாம்.

*(திரு. நசிருதீனின் திருத்தங்கள் அனைத்தும் நிராகரிக்கப்பட்டன. விதி (4)ன் துணை விதி (1) மற்றும் துணைவிதி (2) ஆகியவை அரசியலமைப்புச் சட்டத்தின் அங்கமாக ஏற்கப்பட்டன.)*

★ ★ ★

## விதி 28

[1]**திரு. துணைத்தலைவர் :** ..... அடுத்த திருத்தம் எண். 838 திரு.காமத் பெயரில் உள்ளது. திருத்தம் 838யை முன்மொழிகிறீர்களா?

**திரு. எச்.வி. காமத் :** திரு. துணைத் தலைவர் அவர்களே, நான் பின்வருவதை முன்மொழிகிறேன்:

> ''பகுதி 4ன் தலைப்பில் ''நெறிமுறை'' என்ற வார்த்தைக்குப் பதிலாக ''அடிப்படை'' என்ற வார்த்தைப் பயன்படுத்தப்பட வேண்டும்.''

திரு. துணைத்தலைவர் அவர்களே, என்னுடைய நண்பர் மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் மற்றும் சபையின் பரிசீலனைக்காக இத்திருத்தத்தை நான் முன் மொழியும்போது, இதுபற்றிய இரண்டு காரணங்களை மட்டும் முன்வைக்க விரும்புகிறேன்....

★ ★ ★

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள் (அதிகாரபூர்வ அறிக்கை), தொகுதி VII, 1948 நவம்பர் 19, பக்கம் 474.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய் - பொது) : மாண்புமிகு துணைத் தலைவர் அவர்களே, இவ்விரண்டு திருத்தங்களில் எதையும் என்னால் ஏற்றுக்கொள்ள முடியாமைக்கு வருந்துகிறேன்.[2] திரு. காமத்தின் திருத்தம் இப்போது காணப்படும் சொல்லமைப்பில் உண்மையிலேயே இணைக்கப்பட்டுள்ளது; இப்பகுதியின் முதல் விதியிலேயே ''அடிப்படை'' என்ற வார்த்தையை திரு. காமத் பார்க்கலாம். எனவே, கோட்பாடுகள் அடிப்படையானவையென கருதப்பட வேண்டும் என்னும் அவருடைய நோக்கம் இந்த விதியின் சொல்லமைப்பு மூலம் ஏற்கனவே நிறைவேறியுள்ளது என்பதை அவர் தெரிந்து கொள்ள வேண்டும்.

''நெறிமுறை'' என்ற வார்த்தை பற்றிக் கூறவேண்டுமானால், இந்த வார்த்தையை அப்படியே வைத்துக் கொள்ள வேண்டும்; ஏனெனில் அரசமைப்பின் இப்பகுதியை சட்டமாக்கும்போது வருங்கால சட்டமன்றமும், நிருவாகமும் அவைகளுக்குள்ள சட்டமியற்றும், நிருவாக அதிகாரங்களை எவ்வாறு செயல்படுத்த வேண்டுமென்ற சில வழிகாட்டும் முறைகளை அரசியல் நிர்ணயசபை நிர்ணயித்துக் கொடுத்திருக்கிறது. ''நெறிமுறை'' என்ற வார்த்தை நீக்கப்பட்டால், இப்பகுதியை சட்டமாக்கும்போது அரசியல் நிர்ணய சபை கொண்டிருந்த நோக்கம் நிறைவேறாது போய்விடுமே என்பது எனது கவலையாகும். இப்பத்தியில் இக்கொள்கைகளை உண்மையிலே, சிலர் கூறியதுபோல் மேலெழுந்தவாரியான அறிவிப்புகளாக புகுத்துவது நோக்கமல்ல. வருங்காலத்தில் சட்டமன்றமும், நிருவாகத் துறையும் இப்பகுதியில் சட்டமாக்கப்பட்ட இக்கொள்கைகளுக்கு உதட்டளவில் மட்டும் மரியாதை செலுத்தக்கூடாது என்பது அரசியல் நிர்ணய சபையின் நோக்கமாகும். ஆனால் இந்நாட்டின் நிருவாகத்திற்காக இப்போதிருந்து மேற்கொள்ளப்படும் சட்டமியற்றுதல், நிருவாகம் ஆகிய அனைத்து செயல்களுக்கும் இவை அஸ்திவாரமாக அமைய வேண்டும் என்பதுதான் அவையின் நோக்கமாகும். எனவே, 'நெறிமுறை', 'அடிப்படை' என்ற வார்த்தைகள் தேவை யானவை; அவற்றை வைத்துக் கொள்ளலாம் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

*(திரு. காமத்தின் பிரேரணை நிராகரிக்கப்பட்டது)*

★ ★ ★

---

1. அ.நி.வி. (அதிகாரபூர்வ அறிக்கை), தொகுதி 7, 1948, நவம்பர் 19, பக்கம் 476.
2. திரு. காமத்தின் திருத்தம் 838 மற்றும் 840வது எண்ணில் அடங்கியது.

**ஸ்ரீ எச்.வி. காமத் :** மாண்புமிகு துணைத் தலைவர் அவர்களே, என்னுடைய திருத்தத்தை திரும்பப் பெற அவையின் அனுமதி கோருகிறேன்.

அவையின் அனுமதியுடன் திருத்தம் திரும்பப் பெறப் பட்டது.

**திரு. துணைத் தலைவர் :** எண்கள் 841 முதல் 846 வரையிலுள்ள திருத்தங்களை இப்போது விவாதிக்கலாம். திருத்தங்களுக்கு அறிவிப்பு தந்திருப்பவர்கள் அவற்றை ஒவ்வொன்றாக முன்மொழியலாம். அதன் பின்னர் விவாதம் தொடரும்.

திருத்தம் எண். 841 எதிர்மறையானது. எனவே, அதைத் தள்ளுபடி செய்து விடலாம். திருத்தம் எண். 842யை முன் மொழிந்தவர் அவையில் இல்லை. எனவே அது தோல்வியுற்றது.

எண்கள் 843 முதல் 846 வரையுள்ள திருத்தங்கள் திரு. நசிருதீன் அகமது.

**திரு. நசிருதீன் அகமது:** 843, 844 மற்றும் 840 ஆகிய திருத்தங்களை நான் முன்மொழிகிறேன். திருத்தம் எண் 845ஐ முன் மொழியவில்லை.

ஐயா, பின்வரும் திருத்தங்களை முன்மொழிகிறேன்:

''விதி 28ல் ''சந்தர்ப்பம் வேறு வகையில் இருந்தாலன்றி'' என்ற வார்த்தைகள் நீக்கப்பட வேண்டும்.''

''விதி 28ல் 'கோருகிறது' என்ற வார்த்தைக்குப் பதிலாக'குறிப்பிடுகிறது' என்ற வார்த்தை பயன்படுத்தப்பட வேண்டும்.

''விதி 28ல் 'இந்த அரசு' என்னும் வார்த்தைகளுக்குப் பதில் 'அரசு' என்ற வார்த்தை பயன்படுத்தப்பட வேண்டும்.

(இதைத் தொடர்ந்து திரு. அகமது பேசினார்)

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, என்னுடைய நண்பர் திரு. நசிருதீன் அகமதுவின் திருத்தங்களை எதிர்க்கின்றேன். விதி 28ல் ''இந்த அரசு'' என்ற வார்த்தைகளை வேண்டும் என்றேதான் பயன்படுத்தியுள்ளேன். இந்த அரசமைப்புச் சட்டத்தில் 'அரசு' என்ற வார்த்தை இரண்டு வேறுபட்ட பொருள்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. மத்திய அரசு அல்லது மாகாண அரசு வகையில் பயன்படுத்தப்பட்டுள்ளது இரண்டும் அரசமைப்புச் சட்டத்தின் சில பகுதிகளில் 'அரசு' என்றுதான் கூறப்படுகிறது. இங்கு கூட்டாண்மைப் பொருள்படும் எனவே, 'இந்த அரசு' என்ற வார்த்தைகள் கூட்டாண்மை மற்றும் தனித்துக் குறிப்பிடும் பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளன. அரசமைப்புச் சட்டத்தின் விதியுடன் தொடங்கும் பாகம் IIIயை என்னுடைய நண்பர், பார்க்க நேரிட்டால், என்ன அர்த்தத்தில் 'அரசு' என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை அவர் அறியக் கூடும். இப்பாகத்தில் சந்தர்ப்பம் வேறுவகையில் கோரினாலன்றி மற்றபடி ''அரசு'' என்பதில், மத்திய அரசு, இந்திய நாடாளுமன்றம், எவ்வொரு மாநிலத்தின் அரசு, சட்டமன்றம் மற்றும் இந்திய எல்லைக்குட்பட்ட உள்ளாட்சி அல்லது இதர அதிகார அமைப்புகள் ஆகியவை அடங்கும். அதனால், நெறிமுறை கோட்பாடு கொள்கைகள் சம்பந்தப்பட்ட வரை, ஒரு கிராமப் பஞ்சாயத்து அல்லது மாவட்ட அல்லது உள்ளாட்சி மன்றம் கூட அரசு என்று பொருள்படும். நாம் என்ன பொருளில் இந்த வார்த்தையைப் பயன்படுத்தியுள்ளோம் என்பதை வேறுபடுத்தித்தான் 'அரசு' என்றும், 'இந்த அரசு' என்றும் குறிப்பிடுவது விரும்பத்தக்கது என்று கருதினோம். அரசியலமைப்புச் சட்டத்தின் 12வது விதியின் கீழ் ஏற்பாடு செய்யப்பட்டுள்ள இந்த வேறுபாட்டினை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் நன்கு காணலாம். அதில் நாம் கூறியிருப்பதாவது:

> ''எவ்விதப்பட்டமும் இந்த அரசால் அளிக்கப்பட மாட்டாது; ''அந்நிய நாட்டிடமிருந்து எவ்விதப்பட்டத்தையும் இந்திய குடிமகன் யாரும் ஏற்றுக் கொள்ளக்கூடாது.''

இதில் ''அரசு'' என்ற வார்த்தைகளை நாம் பயன்படுத்தவில்லை, ஆனால் முதல் பகுதியில் இது வருகிறது. எந்தத் தனி

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள் (அதிகாரபூர்வ அறிக்கை), தொகுதி VII, நவம்பர் 19, 1948, பக்கங்கள் 477-478.

நபருக்கும் எவ்விதமான பட்டத்தையும் மத்திய அல்லது மாகாண அதிகாரிகள் வழங்குவதை நாம் விரும்பவில்லை. இத்தகைய வேறுபாடு இருப்பதால், விதி 28ல் 'இந்த அரசு' என்ற வார்த்தைகளை வைத்துக்கொள்வது, இந்த அரசியலமைப்புச் சட்டத்தை வரைவு செய்யும்போது நாம் மேற்கொண்ட பழக்கத்திற்கு ஒத்ததாக உள்ளது என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் உணர்வார்கள் என நம்புகிறேன்.

**திரு. துணைத் தலைவர் :** மூன்று திருத்தங்கள் மீது இப்போது நான் வாக்கெடுப்பு நடத்துகிறேன்.

*(திரு. நசிருதீனின் திருத்தங்கள் அனைத்தும் நிராகரிக்கப்பட்டன. விதி 28 அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

★ ★ ★

*(விதி 29க்கு கொண்டுவரப்பட்ட அனைத்துத் திருத்தங்களும் நிராகரிக்கப்பட்டு அந்த விதி ஏற்றுக்கொள்ளப்பட்டது.)*

★ ★ ★

## விதி 30

[1]**திரு. நசிருதீன் அகமது :** ........ திரு. துணைத்தலைவர் அவர்களே, பின்வருவதை நான் முன்மொழிகிறேன்:

> ''விதி 30ல் ''முயற்சி செய்ய'' என்ற வார்த்தைகளை விட்டு விடலாம்.''

★ ★ ★

[2]**திரு. எச்.வி. காமத் :** திரு. துணைத்தலைவர் அவர்களே, திருத்தம் எண். 870யை முன்மொழிகிறேன்:

> ''விதி 30ல் 'தேசிய வாழ்க்கை' என்ற வார்த்தைகளுக்கு முன்னர் வரும் 'இந்த' என்ற வார்த்தை நீக்கப்பட வேண்டும்.''

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள் (அதிகாரபூர்வ அறிக்கை), தொகுதி VII, நவம்பர் 19, 1948, பக்கங்கள் 487.
2. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள் (அதிகாரபூர்வ அறிக்கை), தொகுதி VII, நவம்பர் 19, 1948, பக்கங்கள் 487-88.

''திரு. துணைத்தலைவர் அவர்களே, இது மிகவும் சாதாரணமானது என்று நினைத்து, இத்திருத்தத்தைக் கொண்டுவர எனக்குச் சிறிது தயக்கமாகத்தான் இருந்தது. ஆனால், 'இந்த' என்ற வார்த்தை கேட்பதற்கு காதில் நாராசம் ஊற்றுவது போல் இருந்தது. எனவே, இறுதியாக இத்திருத்த அறிவிப்பை அனுப்பினேன். என்னுடைய கற்றறிந்த நண்பர் டாக்டர் அம்பேத்கருக்கோ அல்லது அரசியலமைப்புச் சட்ட வரைவுக் குழுவின் அறிவாற்றல் மிக்க உடன் சகாக்களுக்கோ எத்தகைய வார்த்தைகளைப் பயன்படுத்த வேண்டுமென்று அறிவுரை கூறும் அகந்தை எனக்கு இல்லை. ஆனால், 'இந்த' என்ற வார்த்தை என்னுடைய காதில் எவ்விதம் நாராசம் பாய்ச்சுவது போல் உள்ளதோ அவ்வாறே அவர்களின் காதுகளிலும் நாராசம் பாய்ச்சுவது போல் இருக்கும் என்று என்னால் நிச்சயமாகக் கூறமுடியும். மேலும் சொற்கள் ஓசை விதிக்கு இது ஊறு விளைவிக்கிறது. எனவே, இந்த வார்த்தையை நீக்கிவிடுமாறு அவரைக் கேட்டுக் கொள்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் திருத்தத்தை ஏற்றுக் கொள்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் எண். 871 பிரேரணை செய்யப்படவில்லை. இப்போது விதி 30 பொது விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது.

★ ★ ★

[1]**திரு. மோகன்லால் கௌதம்:** விவாதம் முடிவு செய்யப் படப் போகிறதா?

**திரு. துணைத்தலைவர்:** திருத்தங்களுக்குச் சாதகமாகவும், எதிராகவும் விவாதம் நடைபெற போதுமான கால அவகாசம் கொடுத்துள்ளேன்.

**திரு. மோகன்லால் கௌதம்:** நான் பேசுவதற்கு அனுமதிப் பீர்களா?

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள் (அதிகாரபூர்வ அறிக்கை), தொகுதி VII, நவம்பர் 19, 1948, பக்கங்கள் 493

**திரு. துணைத் தலைவர் :** விவாதம் நடைபெற நியாயமான அளவு கால அவகாசம், சொல்லப் போனால் ஒருமணி நேரம் நாம் எடுத்துக் கொண்டு இருக்கின்றோம் என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். டாக்டர் அம்பேத்கர் இப்போது பேச வேண்டும்.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** திரு. துணைத் தலைவர் அவர்களே, இத்தகைய நெறிமுறைக் கோட்பாட்டுக் கொள்கைகளில் ஆர்வமுள்ள உறுப்பினர்களின் உள்ளங்களில் அரசியலமைப்பின் உண்மையான ஷரத்துக்கள் பற்றித் தவறான எண்ணங்கள் அதிகமாக இருப்பதை என்னால் உணரமுடிகிறது.

அவ்வாறு அவர்கள் தவறாகவோ அல்லது போதுமான முறையிலோ புரிந்துகொள்ளாது இருப்பதற்கு நானும் ஒரு காரணம்தான். அதாவது, இப்பிரேரணைக்கு ஆதரவாக முன்னுரையாக நான் பேசியபோது இந்த அம்சம் பற்றி நான் குறிப்பிடவில்லை. சபையின் முன் இவ்விஷயத்தை தெளிவான முறையில் வைக்க நான் விரும்பவில்லை என்பதல்ல; ஏற்கனவே அதிகமாகவே நான் பேசிவிட்டேன்; மீண்டும் அதிகம் பேசி, உங்களுக்கு அலுப்பூட்ட விரும்பவில்லை. அதனால்தான் முன்பு இதைப் பற்றிக் கூறவில்லை. அரசியல் அமைப்பில் அடிப்படையானது என்று நான் கருதுகிற நடுநிலைப்பாட்டை விளக்கும் பொருட்டு அவையின் நேரத்தில் சில நிமிடங்களை எடுத்துக்கொள்ள விரும்புகிறேன்.

நான் முன்னர் கூறியது போன்று, நாடாளுமன்ற ஜனநாயகம் என்று கூறப்படும் முறை ஒரு வகையான ஒழுங்கமைவு ஏற்பாட்டுக்கும் ''ஒருவருக்கு ஒரு வாக்கு'' எனக் கூறப்படும் நாடாளுமன்ற ஜனநாயகம் என்று இதற்குப் பொருள் கொள்ளுகிறோம். ஒவ்வொரு அரசும் உரைத்துப் பார்க்கப்பட நாடாளுமன்றம் விழிப்புடன் இருக்க வேண்டும். குறிப்பிட்ட கால இறுதியில் வாக்காளர்களும், வாக்காளர் தொகுதியும் அரசு செய்த பணியினை மதிப்பீடு செய்ய சந்தர்ப்பம் கொடுக்கப் படும்போது, அரசின் அன்றாடப் பணிகளை உரைகல்லில் உரைத்துப் பார்க்கப்படுவதையும் கூட நாம் நாடாளுமன்ற ஜனநாயகம் என்று பொருள் கொள்கிறோம். எந்த ஒரு குறிப்பிட்ட மக்கள் கூட்டமும் சர்வாதிகாரத்தை எவ்வித வழிமுறையிலும் நிறுவுவதை நாங்கள்

1. அ.நி.வி. (அதிகாரப்பூர்வ அறிக்கை), தொகுதி 7, 1948 நவம்பர் 22, பக்கங்கள் 494-95.

விரும்பவில்லை. அதன் காரணமாகத்தான் இந்த அரசியலமைப்பில் ஒரு அரசியல் ஜனநாயக முறையை அமைத்திருக்கிறோம்.

அரசியல் ஜனநாயகத்தை நாம் அமைத்திடும்போது, நமது இலட்சியமாக பொருளாதார ஜனநாயகத்திற்கும் ஏற்பாடு செய்ய வேண்டும். ஒரு சில மக்கள் பிரிவினர் அதிகார ஆட்சியைக் கைப்பற்றுவதற்கு உதவக்கூடிய சாதனமாக இதனை அமைக்க நாம் விரும்பவில்லை. அரசமைப்போருக்கு முன் ஓர் இலட்சிய பார்வையினை அளித்திடவும் அரசியலமைப்புச் சட்டம் விரும்புகிறது. அந்த இலட்சியம் பொருளாதார இலட்சியமாகும். என்னைப் பொறுத்தவரை, நான் அறிந்தவரை, அந்த இலட்சியம் 'ஒருவருக்கு ஒரு வாக்கு' என்பதாகும். இங்கு ஒரு கேள்வி எழுகிறது: பொருளாதார ஜனநாயகத்தை எவ்வாறு கொண்டு வருவது என்பது பற்றி ஒரு குறிப்பிட்ட கருத்து எதையும் நாம் நிர்ணயித்துள்ளோமா? பொருளாதார ஜனநாயகத்தை அமைக்கப் பல்வேறு வழிவகைகள் இருப்பதாக மக்கள் நம்புகின்றனர்; சோஷலிச அரசு பொருளாதார ஜனநாயகத்தின் சிறந்த அமைப்பு என்று நம்பிக்கை கொண்டவர்கள் உள்ளனர்; கம்யூனிசம்தான் பொருளாதார ஜனநாயகத்தின் முழுமையான வெளிப்பாடு என்று எண்ணுபவர்களும் இருக்கின்றனர்.

பல்வேறு முறைகள் மூலம் பொருளாதார ஜனநாயகம் அமைக்கப்பட முடியும் என்பதை கருத்தில் கொண்டு, நெறிமுறை கோட்பாடுகளில் வேண்டுமென்றே நாம் பயன்படுத்தியுள்ள வாசகம் அறுதியிட்டதாகவோ அல்லது நீக்குப்போக்கு இல்லாததாகவோ இல்லை. பொருளாதார ஜனநாயக இலட்சியத்தை அடைவதில் பல்வேறு சிந்தனை உள்ளவர்கள் தங்களுடைய வழிமுறையினைப் பின்பற்றவும், பொருளாதார ஜனநாயகத்தை அடைய வாக்காளர் மக்களின் இசைவு பெறுவது சிறந்த வழி என்போர் அவர்கள் விரும்பும் வகையில் முழுமையாகச் செயல்பட போதுமான வாய்ப்புக்களை அளித்துள்ளோம்.

திரு. துணைத்தலைவர் அவர்களே, எனவேதான் பகுதி 4ன் விதிகளில் வரும் வாசகம் வரைவுக்குழு எது சிறந்தது என்று கருதியதோ அவ்வகையில் எழுதப்பட்டுள்ளது. சூழ்நிலைகளையும், காலத்தையும் கருத்தில் கொண்டு அடிப்படையில் மாறுகின்ற, மாறி வர வேண்டிய ஏதாவது ஒன்றிற்கு அறுதியிட்ட, நீக்குப் போக்கு இல்லாத வடிவத்தைத் தருவது பயனுள்ளதாகாது. ஆகையால் நெறிமுறைக் கோட்பாடுகளுக்கு மதிப்பில்லை என்று கூறுவது பொருளற்றதாகும்.

நெறிமுறை கோட்பாடுகள் நமது பொருளாதார ஜனநாய கத்திற்கு வழிவகை செய்வதால், என்னுடைய கருத்தில் அவை நன்மதிப்புள்ளவை. நம்முடைய பொருளாதார இலட்சியத்திற்கு முறை என்ன, நம்முடைய சமுதாய அமைப்பு எவ்வாறு இருக்க வேண்டும் என்பது பற்றி சிந்தித்திடாது, அரசியலமைப்புச் சட்டத் தில் அளிக்கப்படும் பலவகை சாதனங்கள் மூலம் ஒரு நாடாளுமன்ற ஜனநாயகம் சாதாரணமாக அமையப்படுவதை நாங்கள் விரும்ப வில்லை. எனவேதான் நெறிமுறைக் கேட்பாடுகளை வேண்டு மென்றே நமது அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்த்துள்ளோம். இந்த அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்குவதில் நமக்கு இரண்டு இலக்குகள் உண்டு. முதலாவதாக, அரசியல் ஜனநாய கத்தை அமைப்பது. இரண்டாவதாக, பொருளாதார ஜனநாயகமே நமது இலட்சியம் என்பதற்கு ஏற்பாடு செய்வது, அதாவது ஆட்சியை ஏற்கும் எந்த அரசும் பொருளாதார ஜனநாயகம் அமைந் திட நடவடிக்கை மேற்கொள்ள வேண்டுமென்று நிர்ணயம் செய்வது. இக்கேள்வி பற்றி கவலைகொள்ளும் நண்பர்கள் இப்போது நான் கூறியதை மனதில் பதியச் செய்வார்களேயானால், அவர் களுடைய உள்ளத்தை உறுத்தும் தப்பபிப்பிராயம் மறைந்து விடும் என்று நம்புகிறேன்.

'முயற்சி செய்ய வேண்டும்' என்னும் வார்த்தையையும் மற்றும் இதுபோன்ற சொற்றொடர்களையும் நீக்க வேண்டுமென்று என்னுடைய நண்பர் திரு. தியாகி எனக்கு வேண்டுகோள் விடுத் தார். 'முயற்சி செய்ய வேண்டும்' என்ற வார்த்தையை நாம் ஏன் பயன்படுத்தி இருக்கின்றோம் என்பதை அவர் தவறாகப் புரிந்து கொண்டு இருக்கிறார் என நினைக்கின்றேன். அரசியலமைப்புச் சட்ட வரைவில் வரும் 'முயற்சி செய்ய வேண்டும்' என்பது மிகவும் முக்கியமானது என்பது என்னுடைய கருத்தாகும்.

நெறிமுறைக் கோட்பாடுகளைச் செயலாக்குவதற்கு அரசிற்குத் தடை ஏற்படும்போதும் அல்லது அரசைத் தடுத்து நிறுத்தும் சூழ் நிலைகள் ஏற்படும் போதும், இடையூறாகவும் பாதகமாகவும் சூழ் நிலைகள் ஏற்படும் கட்டத்திலும், அரசு எல்லாச் சூழலிலும் முயற்சி செய்ய வேண்டும். இதன் காரணமாகத்தான் 'முயற்சி செய்ய வேண்டும்' என்ற வார்த்தையைப் பயன்படுத்தியுள்ளோம். இல்லை யெனில், சூழ்நிலைகள் மிகவும் மோசமாக உள்ளன; போதுமான நிதி வசதி இல்லை; அதனால் அரசியலமைப்புச் சட்டம் கூறும்

வகையில் செயல்பட எங்களால் முயற்சி எதுவும் செய்ய முடியாது என்று எந்த அரசும் கூறிவிட இடமளிப்பதாகும். இச்சந்தர்ப்பத்தில் 'முயற்சி செய்ய வேண்டும்' என்ற வார்த்தை பெரிதும் முக்கியத் துவம் பெற்றுள்ளது என்பதையும், இதை நீக்க வேண்டுமென்பது தவறானது என்பதையும் என்னுடைய நண்பர் திரு. தியாகி உணர்வார் என்று எண்ணுகிறேன்.

இதர திருத்தங்களைப் பொறுத்தவரை நான் அவற்றை எதிர்க் கின்றேன்.

**திரு. துணைத் தலைவர் :** இதற்கு இரண்டு திருத்தங்கள் மட்டும்தான் முன்மொழியப்பட்டுள்ளன; அதன் மீது வாக்கெடுப்பு நடத்தலாம். முதலாவது திரு. தாமோதர் ஸ்வரூப் சேட் கொடுத்துள்ள திருத்தம் எண். 863 நிராகரிக்கப்பட்டது.

**திரு. எச்.வி. காமத் :** திரு. துணைத்தலைவர் அவர்களே, என்னுடைய திருத்தத்தை நான் வலியுறுத்தவில்லை.

**திரு. துணைத் தலைவர் :** அடுத்தது, திரு நசிருதீன் அகமது ..... கொடுத்துள்ள திருத்தம் எண். 867 ஆகும்.

[1]**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி** (சென்னை - பொது) : திரு. துணைத் தலைவர் அவர்களே, திரு. காமத் தம்முடைய திருத்தத்தை விலக்கிக் கொள்ள அவையின் அனுமதியைப் பெற வேண்டும்.

**திரு. ஹுசைன் இமாம் :** முன்மொழிந்தவர் திருத்தத்தை ஏற்றுக் கொண்டுள்ளார்!

**திரு. துணைத் தலைவர்:** திருத்தத்தை விலக்கிக் கொள்ள அவை அவருக்கு அனுமதி அளிக்கிறதா?

**மதிப்பிற்குரிய பல உறுப்பினர்கள் :** ஆம்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** அனுமதிப்பதை நான் ஆட்சேபிக்கிறேன்.

1. அ.நி.ச.வி. (அதிகாரப்பூர்வ அறிக்கை), தொகுதி 7, 1948 நவம்பர் 19, பக்கம் 495.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவர் திருத்தத்தை விலக்கிக் கொள்ள விரும்பினால், எனக்கு ஆட்சேபணை இல்லை; அவர் விலகிக் கொள்ளட்டும்.

**திரு. எச்.வி. காமத் :** இதுபற்றி அவையில் சில முரண்பட்ட கருத்துகள் உள்ளதாகத் தெரிகிறது. டாக்டர் அம்பேத்கர் அதை ஏற்றுக் கொண்டதாக மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் கூறுகிறார். அவர் ஏற்றுக்கொண்டதாக நான் நினைக்கவில்லை. அவர் அவ்வாறு ஏற்றுக்கொண்டிருந்தால், விலக்கிக்கொள்ளும் பிரச்சினை இங்கு எழவில்லை.

**திரு. துணைத் தலைவர்:** விலக்கிக் கொள்ள விரும்புகிறீர்களா?

**திரு. எச்.வி. காமத்:** ஆம்.

அவையின் அனுமதியுடன் திருத்தம் விலக்கிக் கொள்ளப் பட்டது.

விதி 30 அரசியலமைப்புடன் சேர்த்துக்கொள்ளப்பட்டது.

## விதி 30 -அ

[1]**திரு துணைத் தலைவர்** (டாக்டர் எச்.சி.முகர்ஜி): .... விதி 30-(அ) மீது இப்போது விவாதத்தைத் தொடர்வோம். திருத்தம் எண் 872 குறித்து உறுப்பினர் எவரும் பேச விரும்புகிறீர்களா?

* * *

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய் - பொது): திரு. துணைத் தலைவர் அவர்களே, இது சரியாக எது பற்றியது என்பது எனக்குத் தெரியவில்லை; ஆனால், மதுவிலக்கு பற்றிய விஷயமாக இருக்குமானால்.....

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள் (அதிகாரபூர்வ அறிக்கை), தொகுதி VII, 1948, நவம்பர் 22, பக்கம் 501.
2. அதே நூல், அதே பக்கம்.

**திரு. துணைத் தலைவர் :** ஆம், (அது பற்றியதே).

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அப்படியானால், விதி 38க்கு ஒரு திருத்தத்தை அவர் முன்மொழிவார் என்றும், அவருடைய திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்ளுவதாகவும் நானும் திரு. தியாகியும் ஒத்துக்கொண்டுள்ளோம். விதி 38-ஐ பரிசீலனை செய்யும் வரை, இந்த விஷயத்தை ஒத்திவைக்கலாம்;

**திரு. துணைத் தலைவர்:** எனவே, அடுத்த திருத்தம் எண் . 873-ஐ விவாதத்திற்கு எடுத்துக்கொள்வோம்.

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** இத்திருத்தம் (எண். 874) முறையாக முன்மொழியப்பட்டதா என்று எனக்குத் தெரியவில்லை.

**திரு. ராஜ்பகதூர்:** முறைப்படி திருத்தத்தை நான் முன்மொழிய வில்லை. இப்பிரச்சினையை அவையின் கவனத்துக்குக் கொண்டு வருவதற்கு சில வார்த்தைகளை நான் கூறினேன்.

**திரு. எச்.வி. காமத்** (சி.பி.பீரார்- பொது): .... டாக்டர் அம்பேத்கரின் பிரேரணை மீது நான் என் உரையில் முன் கூறிய வற்றையே மீண்டும் கூறவிரும்பவில்லை. ஐரோப்பா முன்மாதிரி யாக மேற்கொண்ட நாடாளுமன்ற ஜனநாயகமுறையும், அமெரிக்கா மேற்கொண்ட முதலாளித்துவ முறையும், சோவியத்து யூனியனின் சோஷலிச முறையும் மனிதகுலத்திற்கு அமைதி, மகிழ்ச்சி, வளம் ஆகியவற்றை அளிப்பதற்குத் தவறிவிட்ட நிலையில், ஒரு புதிய அரசியல் பொருளாதார முறையை இந்தியாவில் நாம் அமைக்க வேண்டும்; அத்துடன் மகாத்மா காந்தியின் பஞ்சாயத்து ராஜ்ய முறையை நனவாக்கிட வேண்டும்; இத்தகைய பரவல் முறை சோஷ லிசம் மூலம் மனிதகுலமும், உலகும் அமைதி, மகிழ்ச்சி என்னும் இலக்கினை அடைய நாம் உலகிற்கு வழிகாட்ட முடியும் என்ற என்னுடைய நம்பிக்கையை மட்டும் தெரிவிக்க விரும்புகிறேன்.

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், (அதிகாரப்பூர்வ அறிக்கை), தொகுதி VII, 1948, நவம்பர் 22, பக்கம் 503-04.

எனவே, தங்களின் அனுமதியுடன் இத்திருத்தத்தை முறைப்படி முன்மொழிகிறேன். அத்துடன், இந்த விதிக்கு கொண்டுவரப்பட்டுள்ள இதர திருத்தங்கள் விவாதத்திற்கு எடுத்துக்கொள்ள தயாராகும் வரை, என்னுடைய திருத்தத்தை நிறுத்திவைத்துக் கொள்ளுங்கள் என்று தனிப்பட்ட முறையில் உங்களை வேண்டிக் கொள்கிறேன். என்னுடைய திருத்தத்தை இப்போது படிக்கிறேன்:

''விதி 30க்குப் பின்னர், பின்வரும் புதிய விதியைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்:

'30-(அ) கிராமப் பஞ்சாயத்துக்கள் நிர்வாகத்தின் அடிப்படைக் கூறுகளாக இறுதியில் அமைய வேண்டுமென்ற நோக்கத்துடன் அவற்றை ஆரோக்கியமான முறையில் வளர்ச்சியுறச் செய்ய அரசு முயற்சி செய்ய வேண்டும்.''

**திரு. துணைத் தலைவர்:** இத்திருத்தம் பற்றி ஏதாவது கூற டாக்டர் அம்பேத்கர் விரும்புகிறாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இவ்விஷயம் பின்னர் எடுத்துக் கொள்ளப்படலாம் என்று முன்மொழிகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** திரு.கே. சந்தானம் பெயரில் பட்டியலில் 927 எண்ணிட்ட 31-(அ) என்னும் ஒரு புதியவிதியைச் சேர்ப்பதற்கான திருத்தம் ஒன்று உள்ளது. இதையும் அந்தத் திருத்தத்தையும் சேர்த்து ஒன்றாக விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளலாம். இவ்வாறு செய்வது அவைக்குச் சம்மதமா?

**மதிப்பிற்குரிய உறுப்பினர்கள்:** சம்மதம்

## விதி 31

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** விதி 31 மீது அவை இப்போது விவாதம் நடத்தும்.

**திரு. நசிருதீன் அகமது** (மேற்கு வங்காளம் - முஸ்லீம்): திரு.

---

1. அ.நி.வி. (அதிகாரப்பூர்வ அறிக்கை) தொகுதி VII, 1948 நவம்பர் 22, பக்கம் 504.

துணைத்தலைவர் அவர்களே, பின்கண்டவற்றை நான் முன்மொழிகிறேன்:

'விதி 31ன் (1) வது துணைப் பிரிவில் 'ஆண்களும் பெண்களும் சமமாக' என்ற வார்த்தைகள் நீக்கப்பட வேண்டும்.''

★ ★ ★

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, இத்திருத்தத்தை நான் எதிர்க்கிறேன்.

[1]**திரு. எஸ்.வி. கிருஷ்ணமூர்த்தி ராவ்** (மைசூர்) : திரு. துணைத் தலைவர் அவர்களே. பின்வருவதை நான் முன்மொழிகிறேன். 'விதி 31ன் துணைவிதி (v) ல் கண்டுள்ள 'பலமும் நலமும்'' என்ற வார்த்தைகளுக்குப் பதிலாக 'நலமும் பலமும்'' என்ற வார்த்தைகள் பயன்படுத்தப்பட வேண்டும்.''

சொல்நடையை முறைப்படுத்துவதற்காகவே என்னுடைய திருத்தத்தைக் கொண்டு வந்துள்ளேன். நலமாக இருந்தால்தான் பலமாக இருக்க முடியும்; இச்சொற்றொடரின் ஒலியும் இனிமையாக உள்ளது என்பதுதான் நான் கூறும் காரணமாகும். எனவே, இதனை முன்மொழிகிறேன்.

[2]**திரு. பிரஜேஷ் பிரசாத்** ( பீகார்-பொது): திரு. துணைத் தலைவர் அவர்களே, என்னைப் பேச அனுமதியுங்கள்.

**திரு. துணைத் தலைவர்:** மன்னிக்கவும். ஏற்கனவே போதுமான விவாதம் நடந்துள்ளது. இப்போது டாக்டர் அம்பேத்கர் பேசுவார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, இந்த குறிப்பிட்ட விதிக்குக் கொண்டு வரப்பட்டுள்ள பல திருத்தங்களில், விவாதத்திற்காக, இப்போதுள்ளவை நான்குதான். திரு. கிருஷ்ணமூர்த்தி ராவ் கொண்டு வந்துள்ள திருத்தத்தை நான் முதலில் எடுத்துக் கொள்கிறேன். வார்த்தைகளைப்

1. அ.நி.ச.வி. (அதிகாரப்பூர்வ அறிக்கை), தொகுதி VII, 1948 நவம்பர் 22, பக்கம் 513.
2. அ.நி.ச.வி. (அதிகாரப்பூர்வ அறிக்கை), தொகுதி VII, 1948 நவம்பர் 22, பக்கம் 578.

பயன்படுத்துவது பற்றியது இத்திருத்தம். இதனை இப்போதே ஏற்றுக் கொள்ளத் தயாராக உள்ளேன்.

என்னுடைய நண்பர் திரு.கே.டி.ஷா கொண்டு வந்துள்ள மூன்று திருத்தங்கள் உள்ளன. ''ஒவ்வொரு குடிமகனும்'' என்ற வார்த்தைகளை ''இந்தக் குடிமக்கள்'' என்ற வார்த்தைகளுக்குப் பதிலாகப் பயன்படுத்துவது பற்றியது அவருடைய முதலாவது திருத்தம். இதுவே தான் அவர் கொண்டுவரும் ஒரே திருத்தம் என்றால், அவருடைய திருத்தத்தை ஏற்றுக் கொள்ளுவதில் எனக்கு மிகுந்த சிரமம் எதுவுமில்லை; ஆனால், 'ஆண்களும் பெண்களும் சமமாக'' என்ற வார்த்தைகளை நீக்கிவிட வேண்டுமென்று அவர் கூறுவதற்கு எனக்கு மிகுந்த ஆட்சேபனை உண்டு. அரசியல் சாசனம் (அரசியலமைப்புச் சட்டம்) பற்றி இந்த அவையில் விவாதிக்கப்பட்டு, வார்த்தைகளை மாற்றுவதை பரிசீலனை செய்ய வரைவுக்குழுவுக்கு அது மீண்டும் அனுப்பிய பின்னர், ''ஒவ்வொரு குடிமகனும்'' என்ற சொற்றொடர்'' ''இந்த குடிமக்கள்'' என்ற வார்த்தைகளை விடச் சிறப்பாக உள்ளது என்பதை நான் முற்றிலும் உணர்ந்திருப்பதால் அவருடைய உணர்வுகளை பிரதிபலிக்கும் வகையில் அவற்றைச் சேர்த்துக் கொள்ள முழுமையாகத் தயாராக இருக்கிறேன். இந்த என்னுடைய உறுதிமொழியின் அடிப்படையில் இக்குறிப்பிட்ட திருத்தத்தை வலியுறுத்த வேண்டாமென்று அவரைக் கேட்டுக் கொள்கிறேன்.

அவருடைய இதர திருத்தங்களைப் பொறுத்த வரையில், அதாவது 31 வது விதியின் உபவிதிகள் (ii) மற்றும் (iii) ஆகியவைகளுக்குப் பதிலாக அவருடைய உபபிரிவுகளைப் பயன்படுத்துவதைப் பொறுத்தவரையில் நான் கூறுவது எல்லாம் இதுதான்: பேராசிரியர் ஷா தம்முடைய சொந்த உப விதிகளைப் பயன்படுத்தி அடைய விரும்புவதை இப்போதுள்ள வாசகத்தால் அடைய முடியாது என்பதை நிரூபிப்பாரேயானால் அவருடைய திருத்தத்தை ஏற்றுக் கொள்ள நான் முற்றிலும் தயாராக உள்ளேன். என்னுடைய பார்வையில், அரசியல் சாசன வரைவில் பயன்படுத்தப்பட்ட வாசகம் பேராசிரியர் ஷா கூறியுள்ள குறிப்பிட்ட நோக்கங்களைப் பெருமளவில் பிரதிபலிக்கும் விரிவான வாசகமாகும். ஒரு குறிப்பிட்ட கருத்துப் பாங்கு நோக்கத்திற்காக பொதுவான வாசகமாக வேண்டுமென்றே பயன்படுத்தப்பட்ட உபவிதிகளுக்குப்பதிலாக, குறுகிய இத்தகைய குறிப்பிட்ட உபவிதிகளை மாற்றாகப் பயன்படுத்துவதற்குத் தேவை

இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. எனவே, அவருடைய இரண்டாவது மற்றும் மூன்றாவது திருத்தங்களை நான் எதிர்க்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** இப்பொழுது திருத்தங்கள் ஒவ்வொன்றின் மீதும் வாக்கெடுப்பு நடத்துகிறேன்.

*(அனைத்து எட்டுத் திருத்தங்களும் நிராகரிக்கப்பட்டன. ஒன்று விலக்கிக் கொள்ளப்பட்டது. திரு.கிருஷ்ணமூர்த்தி ராவ் கொண்டுவந்த ஒரு திருத்தம் மட்டும் ஏற்றுக் கொள்ளப்பட்டு, சேர்த்துக் கொள்ளப்பட்டது. விதி 31 விவாதத்திற்கிணைய திருத்தப்பட்டு, அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப் பட்டது.)*

★ ★ ★

## விதி 31- அ

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** இப்போது திரு.சந்தானம் தமது திருத்தத்தை முன்மொழியலாம்.

**மாண்புமிகு திரு.கே.சந்தானம் :** திரு. துணைத் தலைவர் அவர்களே, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

'விதி 31க்குப் பின், பின்வரும் புதியவிதி சேர்க்கப்பட வேண்டும்:

'31 - அ. கிராமப்பஞ்சாயத்துக்களை அமைக்க அரசு நடவடிக்கைகளை எடுத்துத் தன்னாட்சி அரசின் அங்கங்களாக செயல்படத் தேவையான அதிகாரம் ஆணையுரிமையை அவைகளுக்கு வழங்க வேண்டும்.''

**மாண்புமிகு பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, திருத்தத்தை நான் ஏற்றுக் கொள்கிறேன்.

★ ★ ★

[2]**மாண்புமிகு பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, நான் இத்திருத்தத்தை ஏற்றுக்கொள்வதால், மேலும் எதுவும் நான் கூறுவதற்கு இல்லை.

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், (அதிகாரப்பூர்வ அறிக்கை), தொகுதி VII, 1948 நவம்பர் 22, பக்கம் 520.
2. அதே நூல், பக். 527.

*(மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் ஒருவர் பேசுவதற்கு எழுந்தார்.)*

**திரு. துணைத் தலைவர்:** இந்த விஷயத்தில் என்னுடைய தீர்ப்புதான் இறுதியானது. திரு.சந்தானம் முன்மொழிந்த திருத்தத்தை இதுவரை யாரும் எதிர்த்ததாக எனக்குத் தெரியவில்லை. அதனைப் பாராட்ட பலமுறைகள் இருக்கலாம்; ஆனால், அடிப்படையிலும் ஆதார நிலையிலும், இப்பேச்சுக்கள் யாவும் திருத்தத்தைப் பாராட்டு பவையேயன்றி வேறு ஏதுமல்ல.

*பிரேரணை ஏற்றுக்கொள்ளப்பட்டது.*

*விதி 31 - அ அரசியல் சாசனத்துடன் இணைக்கப்பட்டது.*

## விதி 32

[1]**திரு. ஷியாமானந்தன் ஷகாய்:** *(பொது)* திரு. துணைத் தலைவர் அவர்களே, உங்களுடைய அனுமதியுடன் திருத்தங்கள் 933 மற்றும் 934ஐ முன்மொழிய விரும்புகிறேன். பின்வருமாறு முன் மொழிகிறேன்:

> i. விதி 32ல்'கல்வி' என்ற வார்த்தைக்குப்பின்னர் ஒரு காற்புள்ளியும், 'மருத்துவ உதவிக்கு' என்னும் வார்த்தைகளும் சேர்க்கப்படவேண்டும்; மற்றும்
>
> (ஆ) 'நியாயமில்லாத தேவை' என்ற வார்த்தைகளுக்குப் பதில் 'நியாயமான நிவாரணம்' என்ற வார்த்தைகளைப் பயன்படுத்த வேண்டும்.''

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** *(பம்பாய்: பொது)*: திரு. துணைத் தலைவர் அவர்களே, இத்திருத்தங்களை எதிர்க்கிறேன்.

**திரு. துணைத்தலைவர்** *(டாக்டர் எச்.சி.முகர்ஜி)*: திருத்தங்கள் மீது இப்போது வாக்கெடுப்பு நடத்துகிறேன்.

*(மேலும் திருத்தப்பட்ட திருத்தங்கள் எண்கள் 933, 934 மற்றும் 936 நிராகரிக்கப்பட்டன.)*

★ ★ ★

1. அ.நி.ச.வி. (அதிகாரப்பூர்வ அறிக்கை), தொகுதி VII, 1948, நவம்பர்23, பக்கம் 329.
2. அதே அறிக்கை மற்றும் 529

## விதி 34

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** திரு. இராமலிங்கம் செட்டியார் கொடுத்துள்ள திருத்தம் கீழ்க்கண்டவாறு உள்ளது:

> ''மேலும் முக்கியமாக கிராமப்புறங்களில் குடிசைத் தொழில்களை கூட்டுறவு முறையில் அபிவிருத்தி செய்ய அரசு முயற்சி செய்ய வேண்டும்.''

இதுதான் திரு. செட்டியார் முன்மொழிந்த திருத்தத்தின் வாசகமாகும். இது முறைப்படி உள்ளது. எனவே, இவ்விதியை இப்போது பொதுவிவாதத்திற்கு எடுத்துக்கொள்ளலாம்.

★ ★ ★

[2]**திரு. நாகப்பா (சென்னை - பொது):** திரு.துணைத்தலைவர் அவர்களே, இச்சபையின் நேரத்தை நான் அதிகம் எடுத்துக்கொள்ள விரும்பவில்லை. 'எல்லாத் தொழிலாளர்களுக்கும், தொழில் சார்ந்த' என்ற வார்த்தைகளுக்குப் பின்னர் 'வேளாண்மை சார்ந்த' என்ற வார்த்தைச் சேர்க்கப்பட வேண்டும். திரு.துணைத் தலைவர் அவர்களே, உழைக்கும் மக்களில் பெரும்பான்மையினர் விவசாயத் தொழிலாளர்கள் என்பதை நான் கூறத் தேவை இல்லை.

**திரு. துணைத் தலைவர் அவர்கள்:** இது முறையானது அல்ல.

**மாண்புமிகு பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, நெறிமுறைக் கோட்பாடுகளில் குடிசைத் தொழில்கள் பற்றி சிறிது குறிப்பிட வேண்டுமென்ற கருத்து கணிசமான அளவிற்கு இருப்பதால், உறுப்பினர்களின் உணர்விற்கு செயல் வடிவம் கொடுக்கும் விதி 34ல் சிலவார்த்தைகளைச் சேர்த்துக் கொள்ள ஒப்புக்கொள்கிறேன். ஒன்று அல்லது இரண்டு வார்த்தைகளை மாற்றியமைத்துக் கொள்ளலாம் என்ற நிபந்தனையின் அடிப்படையில்

1. அ.நி.ச.வி. அதிகாரப்பூர்வ அறிக்கை, தொகுதி VII, 1948, நவம்பர்23, பக்கம் 532.
2. அதே அறிக்கை மற்றும் 534-35.

என்னுடைய நண்பர் திரு.இராமலிங்கம் செட்டியார் முன்மொழிந்த திருத்தத்தை ஏற்றுக்கொள்ள தயாராக உள்ளேன். நான் மாற்றியமைக்க விரும்புவது இதுதான்: 'குடிசைத் தொழில்களை' என்ற வார்த்தை களுக்குப் பின்னர் 'தனிப்பட்ட அல்லது' என்ற வார்த்தைகளைச் சேர்த்துக்கொள்ள விரும்புகிறேன். அவர் கூறும் 'முறையில்' என்ற வார்த்தைகளுக்குப் பதிலாக, 'அடிப்படையில்' என்ற வார்த்தையை பயன்படுத்த நான் விரும்புகிறேன். இவ்வாறு செய்வதால், திருத்தம் பின்வருமாறு அமையும்:

> ''மற்றும் குறிப்பாக குடிசைத் தொழில்களைத் தனிப்பட்ட அல்லது கூட்டுறவு அடிப்படையில் கிராமப்புறங்களில் அபிவிருத்தி செய்ய அரசு முயற்சி செய்ய வேண்டும்.''

இந்த விஷயத்தில் குறிப்பிட்ட அளவு அக்கறை காட்டும் அனேக உறுப்பினர்களின் விருப்பத்தை இது நிறைவு செய்யும் என நான் நம்புகிறேன்.

'தொழில் சார்ந்த' என்ற வார்த்தைக்குப் பின்னர் 'வேளாண்மை சார்ந்த' என்ற வார்த்தை சேர்த்துக் கொள்ளப்பட வேண்டுமென்று திரு.நாகப்பா முன்மொழிந்த திருத்தத்தை நான் முற்றிலும் ஏற்றுக் கொள்கிறேன் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** அது அனுமதிக்கப்படவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நீங்கள் அனுமதித் தால் எனக்கு எவ்வித ஆட்சேபனையும் இல்லை. தொழில்துறைத் தொழிலாளர்கள் போன்று வேளாண்மைத்துறைத் தொழிலாளர் களும் முக்கியத்துவம் பெற்றவர்கள் என்றும், அவர்களை 'மற்றபடி' என்ற வார்த்தைமூலம் சாதாரணமாகக் குறிப்பிடக்கூடாது என்றும் திரு. நாகப்பா கூறும் வாதத்தில் ஓரளவு பொருள் இருப்பதாக நான் கருதுகிறேன். இருப்பினும் இது உங்களுடைய தீர்ப்புக்குட்பட்டது. நீங்கள்தான் முடிவு செய்ய வேண்டும்.

**திரு. டி.ஏ. இராமலிங்கம் செட்டியார்:** டாக்டர் அம்பேத் கரின் திருத்தங்களை ஏற்றுக்கொள்கிறேன்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** (சென்னை - பொது): திரு. துணைத்தலைவர் அவர்களே, குடிசைத் தொழில்கள் என்ற வார்த்தையுடன் நிறுத்திக்கொண்டு, மீதியுள்ளதை தள்ளிவிடவும் என்று நான் கூறிக்கொள்கிறேன்.

'தனிப்பட்டமுறையில் அல்லது கூட்டுறவு அடிப்படையில்' என்ற வார்த்தைகள் வேண்டுமென்று ஏன் விரும்புகிறீர்கள்? கூட்டுறவு அடிப்படைக்கு சிறப்பு முக்கியத்துவத்தை நீங்கள் அளித்தாலொழிய இத்தகைய வார்த்தைகளைச் சேர்த்துக் கொள்வதில் எவ்விதப் பொருளுமில்லை. 'தனிப்பட்ட முறையில் அல்லது கூட்டுறவு அடிப்படையில்' என்ற வார்த்தைகள் நீக்கப்பட வேண்டுமென விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, நான் விளக்கம் அளிக்கலாமா? இவ்விஷயத்தில் ஆர்வம் கொண்டுள்ள உறுப்பினர்கள் இரண்டு பிரிவுகளைச் சார்ந்தவர்களாக இருப்பதை என்னால் காணமுடிகிறது. முதலாவது வகையைச் சேர்ந்தவர்கள் முற்றிலும் கூட்டுறவு அடிப்படையிலான குடிசைத் தொழில்களில் நம்பிக்கை கொண்டவர்கள்; மற்றொரு பிரிவினர், அத்தகையிலான எவ்வித வரம்பும் இல்லாத வகையில் குடிசைத் தொழில்கள் அமைந்திடுவதில் நம்பிக்கை கொண்டவர்கள். இவ்விரண்டு தரப்பினரையும் திருப்தி செய்யும் வகையில் இச்சொற்றொடரை வேண்டுமென்றே நான் பயன்படுத்தியுள்ளேன். இங்கு கூறப்பட்ட இரண்டுவித கருத்துக்களுடையவர்களுக்கும் திருப்தியளிக்குமென்று உறுதியாக நம்புகிறேன்.

**திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்** (சென்னை - பொது): நான் பேச விரும்பவில்லை.

**திரு. துணைத் தலைவர்:** நாம் போதுமான அளவிற்கு இவ்விஷயம் பற்றி விவாதித்துள்ளோம் என்று நினைக்கிறேன். இப்போது வாக்கெடுப்பு நடத்தலாம்.

**திரு.மகாவீர் தியாகி:** சுயதேவைப் பூர்த்தி அடிப்படையில் இவை யாவும் செய்யப்படும் என்று நம்புகிறேன். எனவே, என்

னுடைய திருத்தத்திற்கு டாக்டர் அம்பேத்கர் இறுதியாகக் கூறியுள்ள திருத்தத்தை ஏற்றுக்கொள்கிறேன்; அவ்வகையில் நான் முன்மொழிந்ததை விலக்கிக் கொள்கிறேன்.

அவையின் அனுமதியுடன் திருத்தம் விலக்கிக்கொள்ளப் பட்டது.

**திரு. அமியோ குமார் கோஷ்:** திரு. துணைத்தலைவர் அவர்களே, 'விவசாயத் தொழிலாளர்கள்' இதில் சேர்த்துக் கொள்ளப் பட்டுள்ளனரா, இல்லையா என்பதைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** இதில் சேர்த்துக் கொள்ளப்பட வில்லை; ஆனால், டாக்டர் அம்பேத்கரின் பிரேரணையை எவ்வித எதிர்ப்புமின்றி ஒரே மனதுடன் ஏற்றுக்கொண்டதால் என்னுடைய முந்தைய தீர்ப்பினை மாற்றிக் கொள்ளத் தயாராக உள்ளேன்.

**மதிப்பிற்குரிய உறுப்பினர்கள்:** ஓ, நாங்கள் ஏற்றுக்கொள்கிறோம்.

**திரு. துணைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் திருத்தியபடியுள்ள திரு.இராமலிங்கம் செட்டியாரின் திருத்தத்தை வாக்கெடுப்பிற்கு விடுகிறேன்.

திருத்தியபடியுள்ள திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

திருத்தப்பட்ட விதி 34 அரசியல் சாசனத்துடன் சேர்க்கப் பட்டது.

* * *

## விதி 35

[1]**திரு. துணைத் தலைவர்:** இப்போது விதி 35ஐப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்கிறேன்.

---

1. அ.நி.ச.வி. அதிகாரப்பூர்வ அறிக்கை, தொகுதி VII, 1948, நவம்பர் 23, பக்கம் 538.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, இத்திருத்தத்தைத் தற்காலிகமாக நிறுத்தி வைக்குமாறு உங்களை வேண்டிக் கொள்கிறேன்.

**திரு. துணைத்தலைவர்:** இந்த விதி பின்னர் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும் நோக்கத்தில் தற்போது நிறுத்திவைக்கப் பட அனுமதிக்கப்படுகிறது. அவை இதனை ஏற்றுக்கொள்கிறதா?

**மாண்புமிகு உறுப்பினர்கள்:** ஆம், ஏற்றுக்கொள்கிறோம்.

## விதி 36

★ ★ ★

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா** (மேற்கு வங்காளம் - பொது): திரு. துணைத் தலைவர் அவர்களே, பின்வரும் திருத்தத்தை நான் முன்மொழிகிறேன்:

> 'விதி 36ல், 'ஒவ்வொரு குடிமகனும் இலவசத் தொடக்கக் கல்வி பெற உரிமை பெற்றுள்ளார் மற்றும்' என்ற வார்த்தைகளை நீக்கிட வேண்டும்''.

திரு.துணைத்தலைவர் அவர்களே, பேச்சுக்களைக் குறைப்பது பற்றி தாங்கள் அளித்துள்ள தீர்ப்புக்குக் கண்டிப்பாகக் கட்டுப்படு வேன். இந்த திருத்தத்தின் விளக்கம் பற்றி சுமார் அரை டஜன் வாக்கி யங்களில் நான் விளக்கிட விரும்புகிறேன். இத்திருத்தத்தை அவை ஏற்றுக்கொள்ளும் என்று நம்புகிறேன். ஏற்றுக்கொள்ளும் பட்சத் தில், திருத்தம் பின்வருமாறு அமையும்: 'இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வந்த பத்து ஆண்டு காலத்திற்குள், பதினான்கு வயது நிரம்பும் வரை எல்லாக் குழந்தைகளுக்கும் இலவச, கட்டாயக் கல்வி அளிக்க அரசு முயற்சி செய்ய வேண்டும்''.

**திரு. நசிருதீன் அகமது:** திரு. துணைத் தலைவர் அவர்களே, பின்வரும் பிரேரணையை முன்மொழிகிறேன்:

> ''விதி 36 ல் 'கல்வி' என்ற வார்த்தைக்குப் பதில் 'தொடக்கக் கல்வி' என்ற வார்த்தைகள் பயன்படுத்தப்பட வேண்டும்.''

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** 'ஒவ்வொரு குடிமகனுக்கும் இலவசத் தொடக்கக் கல்வி பெற உரிமை உண்டு மற்றும்' என்ற வார்த்தைகளை நீக்கிவிட வேண்டும் என்னும் என்னுடைய நண்பர் திரு. மைத்ராவின் திருத்தத்தை ஏற்றுக் கொள்கிறேன். ஆனால், நண்பர் திரு.நசிருதீன் அகமதின் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள இயலாது. விதி 36ல் உள்ள துணைவிதியின் இதர அம்சங்களது நோக்கம் இலவச தொடக்கக் கல்வி அளிப்பதற்கு மட்டும் வரையறுக்கப்பட்டுள்ளது என்று அவர் கருதுவதாகத் தெரிகிறது. அது அவ்வாறு இல்லை. ஒவ்வொரு குழந்தையும் 14 வயது வரை ஒரு கல்விக் கூடத்தில் பயிலும் என்பதுதான் திருத்தம் செய்யப்பட்ட பின்னர் அமைந்துள்ள விதி தெரிவிக்கிறது. அடிப்படை உரிமைகளில் ஓர் அங்கமாக உள்ள விதி 18ல் வகை செய்யப்பட்டுள்ளதை அவர் கண்டு கொண்டிருக்க முடியும். 14 வயதிற்குக் கீழ் உள்ள எந்தக் குழந்தையும் வேலையில் அமர்த்தக்கூடாது என்கிறபோது, அக்குழந்தையை ஏதாவது ஒரு கல்விக்கூடத்தில்தான் சேர்க்க வேண்டும் என்பது தெளிவாகிறது. இதுதான் விதி 36ன் நோக்கமாகும்; எனவேதான் அந்தக் குறிப்பிட்ட விதியில் 'தொடக்க'' என்ற வார்த்தை முற்றிலும் பொருத்தமானதல்ல என்று கூறுகிறேன். ஆதலால் இத் திருத்தத்தை எதிர்க்கிறேன்.

*(பண்டிட் மைத்ராவின் பிரேரணை ஏற்றுக்கொள்ளப்பட்டது. நசிருதீன் அகமதின் பிரேரணை நிராகரிக்கப்பட்டது.)*

திருத்தப்பட்ட வடிவில் விதி36 அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

## விதி 35

[1]**திரு. முகமது இஸ்மாயில் சாகிப்** (சென்னை: முஸ்லீம்): திரு. துணைத்தலைவர் அவர்களே, விதி 35 யுடன் பின்வரும் விலக்குக் கூறு சேர்க்கப்பட வேண்டுமென முன்மொழிகிறேன்:

> 'மக்களின் எந்தப் பிரிவும், தொகுதியும் அல்லது சமுதாயமும் அதற்கென்று ஒரு தனிச்சட்டம் இருக்குமானால் அதனுடைய அத்தகைய சொந்த சட்டத்தை விட்டுக் கொடுக்க வேண்டுமெனக் கட்டுப்படுத்தக் கூடாது.

★ ★ ★

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், (அதிகாரப்பூர்வ அறிக்கை) தொகுதி VII, 1948, நவம்பர் 23, பக்கம் 538

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, இந்த விதிக்கு கொண்டு வரப்பட்டுள்ள திருத் தங்களை என்னால் ஏற்றுக்கொள்ளஇயலாது என்று அஞ்சுகிறேன். இவ்விஷயம் பற்றி விவாதிக்கும்போது, இந்நாட்டிற்கு சீரான உரிமை யில் தொகுப்புச் சட்டம் தேவையா அல்லது தேவையில்லையா என்னும் கேள்வியின் தகுதி பற்றி எதுவும் கூற எனக்கு உத்தேச மில்லை. என்னுடைய நண்பர் திரு.முன்ஷியும் திரு.அல்லாடி கிருஷ்ண சாமி அய்யரும் இதுபற்றி போதுமான வகையில் இத்தருணத்தில் விவாதித்துள்ளனர் என்று நினைக்கிறேன்.

சில அடிப்படை உரிமைகளுக்குத் திருத்தங்கள் முன்மொழி யப்படும்போது, இவ்விஷயம் குறித்து ஒரு முழு அறிக்கையை அளிக்க என்னால் முடியும்; எனவே, இப்போது இங்கு இதுபற்றி விவாதிக்கும் உத்தேசமில்லை.

என்னுடைய நண்பர் திரு. ஹுசைன் இமாம், திருத்தங் களுக்கு ஆதரவளிக்க முன்வந்தபோது, விரிந்து பரந்து கிடக்கும் நமது நாட்டைப்போன்ற ஒரு நாட்டிற்கு ஒரே சீரான சட்டத் தொகுப்பை வைத்துக்கொள்ளமுடியுமா? அது விரும்பக்கூடியதா? என்று வினவினார். இத்தகைய வாதங்கள் எனக்கு ஆச்சரியத்தைத் தருகின்றன என்பதை நான் ஒப்புக்கொள்ள வேண்டும். காரணம் சாதாரணமானதுதான்; மனிதஉறவின் கிட்டத்தட்ட ஒவ்வொரு அம்சத்தையும் தொடும் ஒரே சீரான சட்டத்தொகுப்பை நாம் இந்த நாட்டில் வைத்து இருக்கின்றோம். நாடு முழுவதும் செயல்படும் ஒரே சீரான முழு குற்றவியல் சட்டத் தொகுப்பு நம்மிடம் உள்ளது. இச்சட்டம் இந்தியத் தண்டனைச் சட்டம் மற்றும் குற்றவியல் விசாரணை முறைச் சட்டத்தொகுப்பில் அடங்கியுள்ளது. நாடு முழுவதும் பின்பற்றப்படும் சொத்துரிமை சம்பந்தப்பட்ட சொத் துரிமை மாற்றுச் சட்டம் நம்மிடம் உள்ளது. செலாவணிமுறிச் சட்டங்கள் உள்ளன;

மேலும், நாடு முழுவதற்கும் பொருந்துகின்ற, ஒரேசீரான உள்ளடக்கம் கொண்ட உரிமையியல் சட்டத்தொகுப்பு ஒன்று இந்நாட்டில் உள்ளது என்பதை நிரூபிக்கும் பல சட்டங்களை நான் மேற்கோள் காட்ட முடியும். திருமணம், வாரிசு உரிமை ஆகியவற் றில் மட்டும்தான் உரிமையியல் சட்டம் தன்னுடைய ஆதிக்கத்தை

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VII, 1948, நவம்பர் 23, பக்கம் 550.

இதுகாறும் செலுத்த முடியவில்லை. இச்சிறு பகுதியில்தான் நாம் இதுவரை ஆதிக்கத்தைச் செலுத்த முடியவில்லை. அரசியல் சாசனத்தின் ஓர் அங்கமாக விதி 35 ஐ வைத்துக்கொள்ள வேண்டுமென விரும்புபவர்கள் இந்த மாற்றத்தை கொண்டுவர எண்ணுகின்றனர். எனவே, நாமும் இத்தகையதைப் பெறமுயற்சி செய்யவேண்டுமென்ற வாதம் ஓரளவு தவறாக முன்வைக்கப்படுவதாக எனக்குத் தோன்றுகிறது. இதற்குக் காரணம் சாதாரணமானதுதான். அதாவது, உண்மையிலேயே, இந்நாட்டில் சமச்சீரான உரிமையியல் சட்டத் தொகுப்பு சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களையும் நமது அரசியல் சாசனத்தில் உள்ளடக்கியுள்ளோம். எனவே, இதனை நாம் செய்ய முடியுமா என்று இப்போது கேட்பது மிகவும் காலம் கடந்ததாகும். நான் குறிப்பிட்டது போல், ஏற்கனவே இதனை நாம் செய்துள்ளோம்.

திருத்தங்கள் சம்பந்தப்பட்டவரை, நான் கூற விரும்புவது இரண்டு கருத்துக்கள்தான். முதலாவது கருத்து இதுதான்:

இந்நாட்டைப் பொறுத்தவரையில் முஸ்லீம் தனிச் சட்டம் மாற்ற முடியாதது என்றும், நாடு முழுவதிலும் ஒரே சீராக அது இருக்கிறது என்றும் இத்தகைய திருத்தங்களை முன்வைத்துள்ளவர்கள் கூறுகிறார்கள். இந்த வாதத்தை மறுக்க இப்போது விரும்புகிறேன். 1935 ஆம் ஆண்டு வரை வடமேற்கு எல்லை மாகாணம் ஷரியத் சட்டத்திற்கு உட்படவில்லை என்பதை இத்திருத்தம் பற்றி பேசிய என்னுடைய பல நண்பர்கள் முற்றிலும் மறந்துவிட்டனர் என்று நினைக்கிறேன். வாரிசு உரிமை போன்ற விஷயங்களில் இந்து சட்டத்தை இம்மாகாணம் பின்பற்றி வந்தது. எனவே 1939ல் தான் மத்திய சட்டமன்றம் தலையிட்டு, வடமேற்கு எல்லை மாகாணத்தைச் சேர்ந்த முஸ்லீம்களுக்கு இந்த சட்டத்தை அமல் செய்வதை ஒழித்துவிட்டு, அவர்கள் ஷரியத் சட்டத்தை அனுசரிப்பதற்கான நடவடிக்கையை எடுக்க வேண்டியதிருந்தது. அது மட்டுமல்ல.

வடமேற்கு எல்லை மாகாணத்தைத் தவிர, 1937 வரை இந்தியாவின் பிற பகுதிகளிலும், ஐக்கிய மாகாணங்கள், மத்திய மாகாணங்கள் மற்றும் பம்பாய் போன்ற இதர பகுதிகளிலும் அதிக அளவில் முஸ்லீம்கள் இந்து வாரிசு உரிமைச் சட்டத்தைத்தான் பின்பற்றி வந்தார்கள் என்பதை என்னுடைய மதிப்பிற்குரிய நண்பர்கள் மறந்துவிட்டார்கள். ஷரியத் சட்டத்தைப் பின்பற்றி வந்த முஸ்லீம்

களுடன் இதர பகுதி முஸ்லீம்களையும் சமச்சீரான சட்டத்தின் கீழ் கொண்டுவரும் நோக்கத்தில் 1937ல் மத்திய சட்டமன்றம் தலையிட்டு, இந்தியாவின் இதர பகுதிகளுக்கும் ஷரியத் சட்டத்தை விஸ்தரிக்கும் பொருட்டு ஒரு சட்டம் இயற்ற வேண்டியிருந்தது.

வடக்கு மலபாரில் இந்துக்களுக்கு மட்டுமல்லாமல் முஸ்லீம் களுக்கும் மருமக்கதாயம் சட்டம் பொருந்தும் என்றும் என்னுடைய நண்பர் திரு.கருணாகர மேனன் என்னிடம் கூறினார். மருமக்கதாயம் சட்டம் தாய்வழிமுறைச் சட்டமாகும்; தந்தை வழிமுறைச் சட்ட மல்ல என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

எனவே, வடக்கு மலபார் முசல்மான்கள் இதுவரை மருமக்க தாயம் சட்டத்தையே பின்பற்றி வந்துள்ளனர். எனவே, முஸ்லீம் சட்டம் மாற்றப்படமுடியாத சட்டம் என்றும் கூறிக்கொள்ளுவதில் எவ்வித பயனுமில்லை. இப்போது இருக்கும் வடிவில் அது சில பகுதிகளுக்கு தற்சமயம் பொருந்தாது. பத்தாண்டுகளுக்கு முன்னர் தான் பொருந்துவதாக அது இருந்தது. எனவே, மத வேறுபாடின்றி எல்லாக் குடிமக்களுக்கும் பொருந்தக்கூடிய ஒரேவிதமான உரிமை யியல் சட்டம் ஒன்றை உருவாக்கும் நோக்கத்திற்காக, இந்து சட்டத்தி லுள்ளவை என்ற காரணத்திற்காக அல்லாமல், அவை பெரிதும் தகுதிவாய்ந்தவை என்ற காரணத்திற்காக இந்து சட்டத்தின் சில பகுதிகள் விதி 35 ஐ பிரதிபலிக்கும் புதிய உரிமையியல் சட்டத்தில் இணைத்துக் கொள்ளப்பட்டன. இதை வைத்து, முஸ்லீம் சமுதா யத்தின் உணர்வுகளை உரிமையியல் சட்ட கர்த்தாக்கள், பெரிதும் புண்படுத்தி யுள்ளார்கள் என்று எந்த முஸ்லீமும் கூறவாய்ப்பு எதுவும் இல்லை என்றுதான் கருதுகிறேன். உரிமையியல் சட்டம் உருவாக்கப் பட்ட பின்னர், மக்கள் அனைவரும் இந்நாட்டுக் குடிமக்களாக இருப்பதால் அவர்கள் மீது இச்சட்டம் புகுத்தப்படும் என்று இந்த விதி கூறவில்லை. இச்சட்டத்திற்கு உட்பட தாங்கள் தயாராக உள்ள தாக உறுதி கூறும் வகையில் வருங்காலத்தில் நாடாளுமன்றம் ஒரு தொடக்கத்தை ஏற்படுத்தலாம்; அதனால் ஆரம்ப கட்டத்தில் இச்சட்டம் தனிநபர் விருப்பப்படிதான் அமலாகும். அத்தகைய நடவடிக்கையால் நாடாளுமன்றம் மக்களின் நிலையை புரிந்து கொள்ள இயலும். இது ஒரு புதுமாதிரி முறையல்ல. வடமேற்கு எல்லை மாகாணத்தைத் தவிர இதர பிராந்தியங்களுக்கும் 1937 ஆம் ஆண்டு ஷரியத் சட்டத்தை அமல்படுத்தியபோது இத்தகைய முறை

கையாளப்பட்டது. ஷரியத் சட்டத்திற்குட்படவிரும்பும் ஒரு முஸ்லீம் ஓர் அரசு அதிகாரியை அணுகி, தான் ஷரியத் சட்டத்துக்குக் கட்டுப்பட விரும்புவதாக உறுதிமொழி ஒன்றை அளிக்க வேண்டும்; அத்தகைய உறுதிமொழி அளித்த பின்னர், அவரையும் அவருடைய சந்ததியினரையும் இச்சட்டம் கட்டுப்படுத்தும். இத்தகைய ஷரத்து ஒன்றை வகுத்துக் கொள்ளுவது நாடாளுமன்றத்திற்கு முற்றிலும் சாத்தியமானதாகும்; இதனால் இங்கு என்னுடைய நண்பர்கள் வெளிப்படுத்திய அச்சம் அறவே நீங்கிவிடும். ஆகையால், இத்திருத்தங்களில் எவ்விதமான பொருளுமில்லை, அவற்றை நான் எதிர்க்கிறேன் என்று அவைக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

*(முகமது இஸ்மாயில் சாகிப் மற்றும் பி.போக்கர் சாகிப் பஹதூர் ஆகிய இருவரின் திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன. விதி 35 அரசியல் சாசனத்துடன் இணைத்துக் கொள்ளப்பட்டது).*

## விதி 37

[1]**சர்தார் ஹுக்கும் சிங்** (கிழக்கு பஞ்சாப்: சீக்கியர்): திரு. துணைத் தலைவர் அவர்களே, பின்வரும் பிரேரணையை முன்மொழிகிறேன்.

'விதி 37ல் 'ஷெட்யூல்டு வகுப்பினர்' என்ற வார்த்தைகளுக்குப் பதிலாக 'எந்த வகுப்பையும் அல்லது மதத்தையும்சார்ந்த பிற்படுத்தப்பட்ட சமூகத்தினர்' என்ற வார்த்தைகளைப் பயன்படுத்த வேண்டும்.''

திரு. துணைத் தலைவர் அவர்களே, 1936 ஆம் ஆண்டு இந்திய அரசாங்க (ஷெட்யூல்டு வகுப்பினர்) ஆணையில் குறிப்பிடப்பட்டுள்ள சாதிகளும் இனங்களும் இந்த அரசியல் சாசன வரைவில் கண்ட 303 (டபிள்யூ) விதியில் 'ஷெட்யூல்டு வகுப்பினர்'' என்று விளக்கப்பட்டுள்ளது.

அந்த ஆணையில் பெரும்பான்மையான மலைவாழ் மக்களும், சாதிகளும், உட்சாதிகளும் விவரிக்கப்பட்டுள்ளன; அதில் பவாரியர், சமார், சுக்ரர், வால்மீகி, ஓது, சான்சி, சர்விபந்து மற்றும் ராமதாசி ஆகியோர் சேர்க்கப்பட்டுள்ளனர். அவர்கள் பல்வேறு மத நம்பிக்கைகளையும், மத விசுவாசத்தையும் உடையவர்கள் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். உதாரணமாக, சீக்கிய மதத்தைச் சேர்ந்த

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VII, 1948, நவம்பர் 23, பக்கம் 552-53.

ராம்தாசி, ஓது, வால்மீகி, சமார் ஆகிய சாதியினர் பெரும்பாலானோர் இருக்கின்றனர். இதர மதத்தைச்சார்ந்த தங்களுடைய சாதி சகோதரர்களைப் போல் இவர்களும் பின்னிலையிலுள்ளனர். ஆனால், இதுவரை ஷெட்யூல்டு வகுப்பினர் பெற்றுவரும் பயன்கள் பின்தங்கிய நிலையிலுள்ள சீக்கியர்களுக்குக் கிடைக்கவில்லை. இதன் விளைவாக ஏராளமானோர் மதமாற்றம் செய்து கொள்கின்றனர் அல்லது பெரிதும் அதிருப்தி அடைந்துள்ளனர்.

சட்டமன்றங்களுக்குத் தேர்ந்து எடுப்பது சம்பந்தப்பட்டவரை சிறிது நியாயம் உள்ளதை என்னால் புரிந்து கொள்ள முடியும். ஏனெனில் சீக்கியர்களுக்குத் தனிப் பிரதிநிதித்துவம் உள்ளது; பொதுத் தொகுதி இடங்களில் ஷெட்யூல்டு வகுப்பினர் தொகுதி ஒதுக்கீடு பெறுகின்றனர்.

தான் ஒரு சீக்கியர் அல்ல என்று உறுதிமொழி அளித்தாலன்றி தேர்தலில் போட்டியிட அனுமதி மறுக்கப்பட்ட எஸ்.கோபால் சிங் கால்சாவின் வழக்கு அனைவருக்கும் மிகவும் தெரிந்த வழக்காகும். சில பிரிவினருக்குப் பாரபட்சம் காட்டப்படுகின்றது என்ற எண்ணம் உருவாவதன் காரணமாக இத்தகைய வழக்குகளால் ஏமாற்றமும், அதிருப்தியும் ஏற்படுகின்றன.

சமுதாயத்தின் பிற்படுத்தப்பட்ட பிரிவினர் முன்னேற வேண்டும் என்பதுதான் இதில் பொதிந்துள்ள அடிப்படையான கருத்தாகும். இவ்வாறு அவர்கள் முன்னேறினால்தான் தேச நடவடிக்கைகளில் அவர்கள் சமமான வகையில் தங்களது பங்களிப்பை வழங்க இயலும். இக்கருத்தை நான் முற்றிலும் ஆதரிக்கிறேன். 'நலிவுற்றபிரிவினரின் கல்வி' பொருளாதார நலத்தை அபிவிருத்தி செய்வதற்கு விதியின் முதலாவது பகுதி வகை செய்கிறது என்று நான் கூறும் கருத்துக்கு எதிராக பின்வருமாறு வாதம் செய்யக்கூடும்: அதுவரை நல்லதுதான். இது ஒவ்வொரு பிரிவினருக்கும் பொருந்தும்; ஆனால் எந்தப் பகுதியிலும் 'நலிவுற்ற பிரிவினர்' யார் என்று விளக்கப்படாத நிலையில் 'ஷெட்யூல்டு வகுப்பினர்' பற்றிக் கூறும் பிற்பகுதி மீதுதான் கவனம் செலுத்தப்படுமேயன்றி, 'நலிவுற்ற பிரிவினர்கள்' பொருட்படுத்தப்பட மாட்டார்கள் என்ற அச்சம் உள்ளது. குறிப்பாக 'ஷெட்யூல்டு வகுப்பினர்' என்ற வார்த்தைகள் மூலம் பிற்பகுதியில் கண்ட பிரிவினரின் மீதுதான் முழுமையான கவனம் செலுத்த விதியும் கூட வலியுறுத்துகிறது எனக் கூறலாம்.

இவ்விஷயத்தில் என்னைத் தவறாகப் புரிந்து கொண்டார்கள் என்று நம்புகிறேன். 'ஷெட்யூல்டு வகுப்பினர்'பால் அரசு சிறப்புக் கவனம் செலுத்துவதுகுறித்து எனக்கு ஆட்சேபம் எதுவும் இல்லை. மாறாக, அதிக சலுகைகள் அளிக்கப்படுவதையும், பிற்பட்ட வகுப்பினர் மீது அதிகம் கவனம் செலுத்துவதையும் நான் ஆதரிக்கிறேன். ஆனால் இதில் எவ்விதமான பாரபட்சமும் இருக்கக் கூடாது என்பதுதான் என்னுடைய ஒரே நோக்கம். இந்த விதியின் நோக்கமும் அதுவல்ல. ஆனால், நான் கூறியதுபோல், 'ஷெட்யூல்டு வகுப்பினர்' என்றால் அதே சாதியைச்சேர்ந்தவர் சீக்கிய மதத்தைப் பின்பற்றினால் அவர்கள் ஷெட்யூல்டு வகுப்பைச் சேர்ந்தவர் அல்ல என்றுதான் இதுவரையிலும் சாதாரணமக்கள் நினைக்கின்றனர். இச்சட்டத்தை அமலாக்கம் செய்பவர்கள் தவறாக அபிப்ராயம் கொள்வதற்கு அல்லது பாரபட்சம் காட்டுவதற்கு இடமளிக்காத வகையில் உத்தரவாதம் தருவதில் நாம் கவனமாக இருக்க வேண்டும். தற்போதுள்ள விதியின்கீழ் கல்வி மற்றும் பொருளாதார நலன்கள் தான் அபிவிருத்தி செய்யப்பட வேண்டும்; ஆகையால், இப்பணி அனைத்து பிற்படுத்தப்பட்ட மக்களுக்கும் செய்யப்பட வேண்டுமேயொழிய, ஒரு குறிப்பிட்ட மதம் அல்லது கோட்பாட்டைப் பின்பற்றுபவர்களுக்கு மட்டுமல்ல என்பதைத் தெளிவுபடுத்த வேண்டும். இப்பிரேரணையை அவை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று பரிந்துரை செய்கிறேன்.

**திரு. ஏ.வி. தக்கர்** (ஐக்கிய கத்திவார் சமஸ்தானங்கள் - சௌராஷ்டிரா): திரு.துணைத்தலைவர் அவர்களே, இந்துக்கள், முஸ்லீம்களிடையே உள்ள பிற்படுத்தப்பட்ட சாதிகளைச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று கூறும் இந்தத் திருத்தத்தை (983) நான் முன்மொழிகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் இங்கு ஓர் அறிவிப்பு செய்ய அனுமதிப்பார்களா? பிற்படுத்தப்பட்ட வகுப்பினர், முதலியவை பற்றிக் கூறும் இவ்விரண்டு திருத்தங்களும் இணைப்புப் பட்டியலுக்குரியவையாகும். எனவே இணைப்புப் பட்டியல் பற்றி நாம் பரிசீலனை செய்யும்போது இவற்றை ஆய்வு செய்திடுவது நல்லது என்று நம்புகிறேன். இத்திருத்தங்கள் பற்றி தற்போது பரிசீலனை செய்வதைத் தள்ளி வைக்கலாம் என்று கருதுகிறேன்.

**திரு. ஏ.வி. தக்கர்:** குறிப்பிட்ட சில கோட்பாடுகளை வகுப்பது என்னுடைய திருத்தங்களின் நோக்கமாகும்.

**திரு. துணைத் தலைவர்:** இணைப்புப் பட்டியல் விஷயத்தை எடுத்துக் கொள்ளும்போது இவை குறித்து முழுமையாக பரிசீலனை செய்ய டாக்டர் அம்பேத்கர் உத்தேசித்துள்ளார்.

**திரு. ஏ.வி. தக்கர்:** அனைத்து பிற்படுத்தப்பட்ட சாதிகளையும் சேர்த்துக் கொள்வதற்கு அவர் ஒப்புக் கொள்வாரா?

**திரு. துணைத் தலைவர்:** இப்போது எதையும் அவர் ஒப்புக் கொள்ள மாட்டார். இவ்விஷயம் பின்னர் விவாதத்திற்கு வரும்.

**திரு. ஏ.வி. தக்கர்:** அப்படியெனில் என்னுடைய திருத்தத்தை முன்மொழிய விரும்பவில்லை.

**திரு. நசிருதீன் அகமது:** திரு. துணைத்தலைவர் அவர்களே, என்னுடைய திருத்தம் எண் 985 ஐ நான் முன்மொழியவில்லை. ஷெட்யூல்டு வகுப்பினரின் பெயர்கள் பெரிய எழுத்துக்களில் எழுதப் படவேண்டும் என்பதுதான் என்னுடைய திருத்தம். அரசியல் சாசன வரைவின் பக்கம் 147ல் கண்டுள்ள விதி 301(1), இனங்கள் (டபிள்யூ) மற்றும் (எக்ஸ்) ஆகியவற்றை வரைவுக்குழு தலைவரின் மேலான கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். அங்கு இரண்டு விளக்கங்களை குறிப்பிட்டுள்ளோம். 'ஷெட்யூல்டு வகுப்பினர்' எல்லா இடங்களிலும் பெரிய எழுத்துக்களில் உள்ளன; ஆனால் 'மலைவாழ்மக்கள்' சிறிய எழுத்துக்களில் எழுதப்பட்டுள்ளன.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நாம் அதை பரிசீலனை செய்யலாம்.

**சர்தார் ஹுக்கும் சிங்:** என்னுடைய திருத்தத்தை விலக்கிக் கொள்ள அனுமதி கோருகிறேன்.

*அவையின் அனுமதியுடன் திருத்தம் விலக்கிக் கொள்ளப் பட்டது.*

★ ★ ★

*விதி 37 அரசியல் சாசனத்துடன் இணைத்துக் கொள்ளப் பட்டது.*

## விதி 38

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** அரசியல் சாசன வரைவில் நாம் இன்று எடுத்துக்கொள்ள வேண்டிய விதியைப் பரிசீலனை செய்வதோடு இன்றைய நடவடிக்கையை ஆரம்பிப்போம். சட்ட முன் வடிவை அறிமுகம் செய்வதை சிறிதுநேரம் கழித்து எடுத்துக் கொள்வோம்.

**பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா** (ஐக்கிய மாகாணங்கள்: பொது): நான் அவை முன் ஒரு திருத்தத்தை வைக்கிறேன். இது திரு. மகாவீர் தியாகியின் திருத்தத்துக்குத் திருத்தமாகும். அவர் இதை ஏற்றுக்கொள்வார் என நம்புகிறேன்; ஏனெனில், அவருடைய திருத்தத்தில், ‘மருத்துவ நோக்கங்களுக்குத் தவிர’ என்ற வார்த்தைகளை அவர் சேர்த்துக் கொள்ளவில்லை. என்னுடைய திருத்தத்துடன் திருத்தப்பட்டுள்ள வடிவத்தில் அவருடைய திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட்டால், அது சிறப்பாக அமையும் என்று நினைக்கிறேன். பட்டியல் 4ல் 86வது எண்ணில் குறிப்பிடப்பட்டுள்ள என்னுடைய திருத்தத்தை டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக் கொள்ள வேண்டுமென விரும்புகிறேன்.

திரு.துணைத்தலைவர் அவர்களே, பின்வரும் பிரேரணையை முன்மொழிகிறேன்:

> பிரிவு 38ல் இறுதியில் பின்வருபவை பயன்படுத்தப்பட வேண்டும்:-
>
> ‘‘மற்றும் மருத்துவ நோக்கங்களுக்குத் தவிர, போதை தரும் பானங்கள் மருந்துகளை அருந்துவதைத் தடைசெய்ய முயற்சி செய்ய வேண்டும்.’’

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, மேற்கொண்டு ஒரு திருத்தம் செய்ய வேண்டும் என்ற நிபந்தனைக்குட்பட்டு அதாவது‘மேலும்’ என்ற வார்த்தைக்குப் பின்னர் அவருடைய திருத்தத்தை ஆரம்பத்தில் ‘குறிப்பாக’ (பட்டியல் 4ல் 86) என்பது சேர்த்துக்கொள்ளப்படவேண்டும் என்ற

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VII, 1948 நவம்பர் 24, பக்கம் 555.
2. அதே நூல், பக். 566-67.

நிபந்தனையோடு பேராசிரியர் ஷிபன்லால் சாக்சேனாவின் திருத்தத்தை ஏற்றுக்கொள்கிறேன்.

**திரு. மகாவீர் தியாகி:** மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் எப்படி இத்திருத்தத்தை ஏற்றுக் கொள்ளுவார் என்பது எனக்குப் புரியவில்லை. விவாதிக்கப்படும் இத்திருத்தம் என்னுடையதாகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பேராசிரியர் ஷிபன்லால் சாக்சேனாவின் திருத்தத்தால் திருத்தப்பட்ட திரு. தியாகியின் திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்கிறேன் (சிரிப்பு).

**திரு. துணைத்தலைவர்:** திரு. தியாகி உரிமைகளுக்காகப் போராடுவதில் பிடிவாதக்காரர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** திரு.துணைத் தலைவர் அவர்களே, சொல்லப்போனால், இந்த உரிமை எனக்குச் சொந்தமானதாகும். ஏனென்றால் அவர் முன்மொழிந்த திருத்தத்தைத் தயாரித்துத் தந்தவன் நான்தான்! (மேலும் சிரிப்பு.)

**திரு. துணைத்தலைவர்:** அப்படியென்றால், இந்த விஷயம் ஒரு புதிய விளக்கம் பெறுகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ளுவதில் எவ்விதச் சிரமமும் அவைக்கு இருக்கும் என்று நான் எண்ணவில்லை. இதற்கு எதிராக இரண்டு கருத்துக்கள் கூறப்பட்டன. இவற்றில் ஒன்று கோல்காபூர் பிரதிநிதியாக அவையிலுள்ள பேராசிரியர் கண்டேகர் கூறிய கருத்தாகும். நெறிமுறைக் கோட்பாடுகள் கொள்கைகள் பற்றி விவரித்துக்கூறும் விதியின் கூறுகளில் இது ஒரு கூறு என்ற உண்மையினை திரு. கண்டேகர் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்று நிச்சயமாகக் கூறுவேன். எனவே, இக்கொள்கையின் அடிப்படையில் செயல்பட வேண்டுமென்ற கட்டாயம் அரசுக்கு இல்லை. இக்கொள்கையின் அடிப்படையில் செயல்பட வேண்டுமா, எப்போது அவ்வாறு செயல்பட வேண்டுமென்பது அரசும், மக்களும் முடிவு செய்ய வேண்டிய விஷயமாகும். எனவே, நெறிமுறைக் கோட்பாடு கொள்கைகளின்கீழ் அமலாக்குவதற்கான காலம் கனியவில்லை என்றும் அல்லது இக் கொள்கை படிப்படியாக அல்லது ஒரு பகுதியாக அமலாக்கப்பட

வேண்டுமென்றும் அரசு நினைத்தால் அவ்வாறு செயல்பட அரசுக்கு முழு சுதந்திரம் உண்டு. எனவே, இவ்விஷயத்தில் நமக்கு எவ்வித மன உறுத்தலும் இல்லை.

ஆனால், திரு. துணைத் தலைவர் அவர்களே, எனது நண்பர் திரு. ஜெய்பால் சிங்கின் பேச்சு எனக்கு ஆச்சரியத்தை அளித்தது. இந்த விஷயம் இத்தருணத்தில் விவாதிக்கப்படக் கூடாது என்றும், மலைவாழ்மக்கள் பிராந்திய ஆலோசனைக் குழுவின் அறிக்கையைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளும் வரை இதனை ஒத்திவைக்க வேண்டுமென்றும் அவர் கூறினார். அரசியல் சாசன வரைவை, குறிப்பாக 6வது இணைப்புப் பட்டியல் பத்தி 12 ஐ அவர் படித்திருந்தால், மதுவிலக்கு சம்பந்தப்பட்டவரை மலைவாழ் மக்களின் நிலைமையைப் பாதுகாக்க போதுமான முன் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளதை அவர் அறிந்திருக்க முடியும். ஒரு மாகாண அரசு அல்லது மத்தியஅரசு நிறைவேற்றிய எச்சட்டமும் தானாகவே அக்குறிப்பிட்ட மலைவாழ் மக்கள் வட்டாரத்திற்கான திட்டமாகும். முதலாவதாக இது சம்பந்தமாக சட்டம் இயற்றப்பட வேண்டும். இரண்டாவதாக, ஒரு மாநில அரசு அல்லது மத்திய அரசு நிறைவேற்றிய ஒரு குறிப்பிட்ட சட்டம் மலைவாழ் மக்கள் வாழும் ஒரு குறிப்பிட்ட வட்டாரத்திற்கு அமலாக்கப்படலாமா அல்லது அமலாக்கப்படக்கூடாதா என்று கூறும் அதிகாரம் இவ்வட்டாரங்களின் விவகாரங்களை நிருவாகம் செய்ய அரசியல் சாசனத்தின்படி அமைக்கப்பட்ட மாவட்ட மன்றங்கள் அல்லது வட்டார மன்றங்களுக்கு வழங்கப்பட்டுள்ளது. மேலும் மதுவிலக்கு பற்றிய சட்டம் குறித்தும் கூறப்பட்டுள்ளது. அரசியல் சாசன வரைவு பக்கம் 184ல் பத்தி 12ன் துணைப்பத்தியை இப்போது நான் வாசிக்கிறேன். அது கூறுவதாவது:

"இந்த அரசியல் சாசனத்தில் எது எவ்வாறிருப்பினும் (அ) ஒரு மாவட்ட மன்றம் அல்லது வட்டார மன்றம் சட்டங்களை இயற்று வதற்குரியவை என இந்த இணைப்புப் பட்டியலின் 3ஆம் பத்தியில் குறித்துரைக்கப்பட்டுள்ள விஷயங்களில் எதனையும் பொறுத்த மாநிலச் சட்டமன்றம் சட்டம் எதுவும், காய்ச்சி வழங்கப்படாத வெறியம் கலந்த மதுக் குடிவகை எதனையும் உட்கொள்வதைத் தடைசெய்கிற அல்லது கட்டுப்படுத்துகிற மாநிலச் சட்ட மன்றச் சட்டம் எதுவும், அத்தகைய மாவட்டத்தின் மீது அல்லது அத்தகைய வட்டாரத்தின் மீது அதிகார வரம்பு கொண்டுள்ள மாவட்ட மன்றம் பொது அறிக்கையின் வாயிலாக, இரு நேர்வுகளில் எதிலும், இவ்வாறு பணித்தாலன்றி, அந்த மாநிலத்திற்குள்ள தன்னாட்சி மாவட்டம் அல்லது தன்னாட்சி வட்டாரம் எதற்கும் பொருந்தாது; மேலும், அந்த மாவட்ட

மன்றம், அத்தகைய சட்டம் எதனையும் பொருத்து அவ்வாறு பார்க்கும் போது, அந்தச் சட்டத்தினை அத்தகைய மாவட்டத்திற்கோ வட்டாரத்திற்கோ அவற்றின் பகுதி எதற்குமோ நடைமுறைப்படுத்தப்படுகையில், அந்த மாவட்ட மன்றம் தக்கதெனக் கருதுகிற விஷயங்களுக்கு அல்லது மற்ற விஷயங்களுக்கு உட்பட்டு அது செல்லுபடியாகும் எனப் பணிக்கலாம்.

6வது இணைப்புப் பட்டியல் பத்தி 12ல் செய்யப்பட்டுள்ள முன்னேற்பாட்டினைக் காட்டிலும் அதிகமாக வேறு என்ன வேண்டுமென்று என்னுடைய நண்பர் திரு.ஜெய்பால் சிங் நினைக்கின்றார் என்பது எனக்குப் புரியவில்லை. ஆறாவது பட்டியலை அவர் படித்திருக்கமாட்டார் என்ற அச்சம் எனக்குள்ளது. அவர் அவ்வாறு படித்திருந்தால், நாட்டின் எப்பகுதிக்கும் மதுவிலக்குச் சட்டத்தை அரசு அமலாக்க முடியும் என்றாலும், மாவட்ட மன்றங்கள் அல்லது வட்டார மன்றங்களின் இசைவின்றி அச்சட்டத்தை மலைவாழ்மக்கள் வட்டாரங்களில் அமலாக்க அரசுக்கு அதிகாரம் இல்லை என்பதைப் புரிந்து கொண்டிருப்பார்.

**திரு. துணைத் தலைவர்:** மூன்று திருத்தங்கள் உள்ளன. அவைகளில் ஒன்று பட்டியல் 2ல் கண்ட 7ம் எண் திருத்தம் திரு. மகாவீர் தியாகியின் திருத்தமாகும். நான் சூழ்நிலையை சரியாகக் கணக்கிட்டு இருக்கிறேன் என்றால், அது விலக்கிக் கொள்ளப்பட்டதாகவே கருதலாம். நான் கூறுவது சரிதானே, திரு. தியாகி?

**திரு. மகாவீர் தியாகி:** என்னுடைய திருத்தத்தை விலக்கிக் கொள்ளவில்லை. பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா என்னுடைய திருத்தத்துடன் சேர்ப்பதற்கு விரும்பும் வார்த்தைகளை மட்டும்தான் நான் ஒத்துக்கொண்டுள்ளேன்.

**திரு. துணைத் தலைவர்:** உங்களுடைய திருத்தம் மீது தனியாக வாக்கெடுப்பு நடத்த வேண்டுமென்று நீங்கள் விரும்புகிறீர்களா என்பது எனக்குத் தெரிய வேண்டும்.

**திரு. மகாவீர் தியாகி:** ஆம்; உண்மையில் அப்படித்தான். முன்னர் கூறியபடி, மதுவை அறவே ஒழிக்க நான் விரும்புகிறேன். 'மருத்துவ காரணங்களுக்குத் தவிர'' என்ற வார்த்தைகளைச் சேர்த்துக் கொள்ள அவர் விரும்புகிறார். எனவே என்னுடைய திருத்தம் மூலத் திருத்தமாகும்.

**திரு. துணைத் தலைவர்:** எனக்கு நிலைமை புரிகிறது. பேராசிரியர் ஷிபன்லால் சாக்சேனாவால் திருத்தப்பட்டு, மேலும் டாக்டர் அம்பேத்கர் மாற்றியுள்ள மகாவீர் தியாகியின் திருத்தத்தை இப்போது வாக்கெடுப்பிற்கு விடுகிறேன்.

**திரு.மகாவீர் தியாகி:** ஓர் ஒழுங்குப் பிரச்சினை. டாக்டர் அம்பேத்கர் 'குறிப்பிட்ட' என்ற வார்த்தையை என்னுடைய அனுமதியின்றி சேர்த்து இருக்கிறார்.

**திரு. துணைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் சார்பில் உங்களுடைய அனுமதியை நான் கோருகிறேன்.

**திரு. மகாவீர் தியாகி:** திரு.துணைத் தலைவர் அவர்களே, அவருடைய திருத்தத்தையும் நான் ஏற்றுக் கொள்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** திருத்தப்பட்டு இருக்கும் இத் திருத்தம் வாக்கெடுப்பிற்கு விடப்படுகிறது.

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

*(திருத்தப்பட்ட வண்ணம் (விதி 38) அரசியல் சாசனத்துடன் சேர்த்துக் கொள்ளப்பட்டது).*

## விதி 38 - அ

[1]**பண்டிட் தாகூர் தாஸ் பார்கவா** (கிழக்கு பஞ்சாப்- பொது): [2]திரு. துணைத்தலைவர் அவர்களே, திருத்தம் எண் 100க்குப் பதிலாக இப்போது நான் முன்மொழியும் திருத்தம் எண் 72ன் வார்த்தைகள் பின்கண்டவாறு இருக்கும்: 'விதி 38 க்கான திருத்தங்கள் பட்டியலில் திருத்தம் எண் 100க்குப் பதிலாக பின்வருவது பயன்படுத்தப் படவேண்டும்:

> '38- அ. வேளாண்மையையும் கால்நடைகள் பராமரிப்பையும் நவீன, விஞ்ஞான அடிப்படையில் அமைக்க அரசு முயற்சி செய்ய வேண்டும்; குறிப்பாக ஆடுமாடுகளைப் பாதுகாத்து, நல்ல இனங்களை அபிவிருத்தி செய்யவேண்டும்; பசு மற்றும் இதர ஆடுமாடுகள், அதிலும் பிரதானமாக பால்தரும், சுமைஏற்றும் கால்நடைகள், அவற்றின் கன்றுகள் முதலியவை வதை செய்யப்படுவதைத் தடைசெய்ய வேண்டும்.''

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VII, நவம்பர் 24, 1948, பக். 568
2. இந்துஸ்தானி உரையின் மொழிபெயர்ப்பு

'முதலில் பணிவோடு ஒன்று கூற விரும்புகிறேன்; அதாவது இத்திருத்தம்....

**திரு.எஸ்.நாகப்பா** *(சென்னை: பொது)*: ஓர் ஒழுங்குப் பிரச்சினை. ஆங்கிலத்தில் சரளமாகப் பேசக்கூடிய என்னுடைய நண்பர் வேண்டுமென்றே பெரும்பான்மையான தென்னிந்திய உறுப்பினர்கள் புரிந்துகொள்ள முடியாதவாறு உருது அல்லது இந்துஸ்தானில் பேசுகிறார்.

**திரு. துணைத் தலைவர்:** மதிப்பிற்குரிய உறுப்பினர் தனக்கு இஷ்டமான மொழியில் பேசுவதற்கு முழு உரிமை உடையவர். ஆனால் ஆங்கிலத்தில்தான் பேச வேண்டுமென்று அவரைக் கட்டுப்படுத்த முடியாது என்றாலும், அவர் ஆங்கிலத்தில் பேசுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

**பண்டிட் தாகூர்தாஸ் பார்க்கவா:** பசு பற்றி என்னுடைய சொந்தமொழியான இந்தியில் பேச விரும்புகிறேன். நான் ஆங்கிலத்தில் பேச வேண்டுமென்று எனக்கு ஆணையிடக் கூடாது என்று கேட்டுக் கொள்கிறேன். பேசப்படும் விஷயம் முக்கியத்துவமுள்ளதால், சிரமமின்றி மிகவும் எளிதாக நான் என் கருத்துக்களைக் கூறக் கூடியவகையில் பேசுவதற்கு விரும்புகிறேன். எனவே, தயவுசெய்து இந்தியில் பேச என்னை அனுமதியுங்கள்.

[1]திரு துணைத்தலைவர் அவர்களே, இத்திருத்தம் பற்றி கூறும்போது, டாக்டர் அம்பேத்கர் குறிப்பிட்ட இதர திருத்தங்கள் போல் இத்திருத்தமும் அவருடைய தயாரிப்புதான் என்பதை அவை முன் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன்....

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பண்டிட் தாகூர்தாஸ் பார்க்கவாவின் திருத்தத்தை ஏற்றுக்கொள்கிறேன்.

**மாண்புமிகு துணைத் தலைவர்:** திருத்தங்கள் ஒவ்வொன்றின் மீதும் இப்போது வாக்கெடுப்பு நடைபெறும். பண்டிட் தாகூர்தாஸ்

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VII, நவம்பர் 24, 1948, பக். 580.

பார்க்கவாவின் திருத்தம் மீது இப்போது வாக்கெடுப்பு நடைபெறு கிறது. அதாவது பட்டியல் IIல் சேர்க்கப்பட்டுள்ள எண் 72.

*(பிரேரணை ஏற்றுக்கொள்ளப்பட்டது.)*

திருத்தப்பட்டுள்ள விதி 38 - (அ) அரசியல் சாசனத்துடன் இணைக்கப்பட்டது.

## விதி 39

[1] **திரு. துணைத் தலைவர்:** நிகழ்ச்சி நிரலில் கண்டுள்ள அடுத்த திருத்தத்தை இப்போது எடுத்துக்கொள்வோம். எண் 1003 முந்தைய திருத்தம் ஒன்று முடிவாகியுள்ளது. எண் 1004 ஏற்கனவே பரிசீலனை செய்யப்பட்டுள்ளது. 1005வது திருத்தத்தின் முதல் பகுதியை முன்மொழிய முடியாது. ஆனால் இரண்டாவது பகுதி அவ்வாறு செய்யலாம். (முன்மொழியப்படவில்லை).

விதி எண் 39 அரசியல் சாசனத்தின் ஓர் அங்கமாக அவை முன்வைக்கப்பட்டுள்ள பிரேரணையாகும். இதற்குப் பல திருத்தங் களைக் கொடுத்துள்ளார்கள். (திருத்தங்கள் எண் 1006, 1007 மற்றும் 1008 முன்மொழியப்படவில்லை.) எண் 1009 யை டாக்டர் அம்பேத் கரும் அவருடைய சகாக்களும் முன்மொழிந்துள்ளனர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, பின்வருவதை முன்மொழிகிறேன்:

> 'விதி 39ல் 'பாழாக்கப்படுவதிலிருந்து' என்ற வார்த்தைகளுக்குப் பதிலாக, 'உருக்குலையச் செய்தல்' என்னும் வார்த்தையைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

**பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா:** திரு. துணைத் தலைவர் அவர்களே, பின்வருவதை நான் முன்மொழிய அனுமதி கோருகிறேன்:

> ''விதி 39ல் 'பாழாக்கப்படுவதிலிருந்து' என்னும் வார்த்தைகளுக்குப் பின்னர், 'உருக்குலையச் செய்தல்'' என்னும் வார்த்தையைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்; மேலும் 'இருக்கலாம்' என்ற வார்த்தைக்குப் பின் விதியின் முடிவு வரையிலும் எல்லா வார்த்தைகளும் நீக்கப்பட வேண்டும்.''

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VII, நவம்பர் 24, பக்கம் 581.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் இதை ஏற்றுக் கொள்ள விரும்பும்போது, நீங்கள் ஏன் இதுபற்றி விளக்க வேண்டும்?

**பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா:** இதனை டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக் கொள்வதாகக் கூறுவது எனக்கு மகிழ்ச்சியளிக் கிறது. இந்த விதி நெறிமுறைக் கோட்பாடாக அமைய உள்ளதால், நாடாளுமன்றத்தின் சட்டங்கள் பற்றி இது குறிப்பிட வேண்டிய தில்லை. எனவே, 'நாடாளுமன்றம் நிறைவேற்றிய சட்டப்படி அத்தகைய நினைவுச் சின்னங்கள் அல்லது இடங்கள் அல்லது பொருள்கள் ஆகிய அனைத்தையும் அழியாது பாதுகாத்துப் பரா மரிக்க' என்ற வார்த்தைகளை நாம் நீக்கிவிட வேண்டும்.''

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இத்திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்கிறேன்.

★ ★ ★

**திரு. துணைத் தலைவர்:** திருத்தங்கள் அனைத்தையும் ஒவ் வொன்றாக வாக்கெடுப்பிற்கு விடுகிறேன்.

பிரேரணை ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**திரு. துணைத் தலைவர்:** பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா கொடுத்துள்ள திருத்தம் ஒன்று உள்ளது.

**பேகம் அய்ஸாஸ் ரசூல்:** (மத்திய மாகாணங்கள்: முஸ்லீம்): பேராசிரியர் சிபன்லால் சாக்சேனாவின் திருத்தத்தை டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக் கொண்டுள்ளாரா என்பதை அறிய விரும்பு கிறேன். ஏற்றுக்கொள்ளாவிட்டால், அதன் இரண்டாவது பகுதியை நான் எதிர்க்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** நான் அறிந்தவரை இரண்டாவது பகுதி இருப்பதாகத் தெரியவில்லை. சில வார்த்தைகளை நீக்குவது பற்றி அது குறிப்பிடுகிறது. முதல் பகுதி முன்னர் கூறப்பட்டதுதான்.

**பேகம் அய்ஸாஸ் ரசூல்:** அந்தப் பிரேரணையை நான் எதிர்க்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** மன்னிக்கவும்; இப்போது நீங்கள் கூறுவது காலம் கடந்ததாகும்.

பிரேரணை ஏற்றுக்கொள்ளப்பட்டது.

திருத்தப்பட்ட விதி 39 அரசியல் சாசனத்துடன் இணைக்கப் பட்டது.

★ ★ ★

## விதி 39- அ

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, பின்வருவதை முன்மொழிகிறேன்:

> 'விதி 39க்குப் பின்னர், பின்வரும் புதிய விதி சேர்க்கப்பட வேண்டும்:
>
> '39 - அ. இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வந்த மூன்றாண்டு காலத்திற் குள் அரசின் பொதுப்பணிகளில் ஆட்சித்துறையும், நீதித்துறையும் தனித் தனியாகப் பிரிக்கப்படும் நிலை எய்திட அரசு நடவடிக்கைகள் எடுக்க வேண்டும்.'

நான் முன்மொழிந்த இத்திருத்தத்தினை ஆதரித்து நீண்டதோர் அறிக்கையினை அளிக்க வேண்டிய அவசியமில்லை. ஆட்சித் துறையிலிருந்து நீதித்துறை பிரிக்கப்பட வேண்டுமென்பதுதான் இந்நாட்டின் நீண்டகால அபிலாஷையாகும். காங்கிரஸ் ஆரம்பிக்கப் பட்ட நாளிலிருந்து இக் கோரிக்கை எழுப்பப்பட்டு வந்துள்ளது. காங்கிரசின், தீர்மானங்கள் வலியுறுத்திய கோட்பாட்டை ஆட்சித் துறையில் அமலாக்க துரதிருஷ்டவசமாக பிரிட்டிஷ் ஆட்சி முன்வர வில்லை. இச்சீர்திருத்தத்தை நிறைவேற்ற வேண்டிய தருணம் இப்போது வந்துள்ளதாக நாம் கருதுகிறோம். இச்சீர்திருத்தத்தை நிறைவேற்றுவதில் உண்மையிலேயே சில இடர்ப்பாடுகள் இருக் கலாம்; இடர்ப்பாடுகளாகக் காணப்படும் இரண்டு குறிப்பிட்ட விஷயங்களை இத்திருத்தம் கணக்கிலெடுத்துக் கொண்டுள்ளது. முதலாவதாக, வேண்டுமென்றே இதனை ஓர் அடிப்படைக் கோட் பாடாக வைத்தால், அரசியலமைப்பு சாசனம் நிறைவேற்றப்பட்ட உடன் ஏககாலத்தில் ஆட்சித்துறையும், நீதித்துறையும் இருதுறைகளாகச்

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VII, நவம்பர் 24, பக்கம் 582.

சட்டப்படி பிரிக்கப்பட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டிருக்கும். எனவேதான் நெறிமுறைக்கோட்பாடு சம்பந்தப்பட்ட அத்தியாயத்தில் இவ்விஷயம் வேண்டுமென்றே சேர்த்துள்ளோம். இத்தகைய விஷயங்களில் ஏற்படக்கூடிய கால தாமதத்திற்கு இடமளிக்காத வகையில், இச்சீர்திருத்தம் மூன்று ஆண்டுகளுக்குள் நிறைவேற்றப்படவும் அந்த அத்தியாயத்தில் வகை செய்யப்பட்டுள்ளது. எனவே, இப்பிரேரணையை முன்மொழிகிறேன்.

## விதி 39 -அ

[1]**திரு. துணைத் தலைவர்** (டாக்டர் எச்.சி. முகர்ஜி): டாக்டர் அம்பேத்கரிடமிருந்து ஒரு திருத்தம் பற்றிய அறிவிப்பு எனக்கு வந்துள்ளது. டாக்டர் அம்பேத்கர், உங்கள் திருத்தத்தை முன்மொழிகிறீர்களா?

[1]***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்*** (பம்பாய்: பொது): திரு. துணைத் தலைவர் அவர்களே, பின்வருவதை முன்மொழிகிறேன்:

> 'விதி 39 - அ வில் காணப்படும் 'உறுதி செய்ய வேண்டும்'' என்பதிலிருந்து 'பிரித்தல்' வரையிலுள்ள வார்த்தைகள நீக்கிவிட்டு, அவற்றிற்குப் பதிலாக 'தனியாகப் பிரிப்பதற்கு' என்ற வார்த்தையைப் பயன்படுத்த வேண்டும்.

அவ்வாறு செய்தால் திருத்தப்பட்ட வடிவில் விதி 39 - அ பின்வருமாறு அமையும்:

> ''அரசின் பொதுப்பணிகளில் ஆட்சித் துறையினின்றும் நீதித்துறையைத் தனியாகப் பிரிப்பதற்கு அரசு நடவடிக்கைகள் மேற்கொள்ளுதல் வேண்டும்.''

விதி 39-ன் மூலப்படிவத்தில் கூறப்பட்ட மூன்று ஆண்டுக் காலத்தை நீக்கிவிடுவது இத்திருத்தத்தின் நோக்கமாகும். இத்திருத்தத்தை நான் கொண்டு வருவதற்கான காரணங்கள் வருமாறு: காலம் அல்லது செயல்முறை பற்றிய விஷயங்களை நெறிமுறைக் கோட்பாடுகளில் சேர்க்கக்கூடாது என்று அவையின் ஒரு பிரிவினர் எண்ணுகின்றனர். நெறிமுறைக் கோட்பாடுகள் கோட்பாடுகளை விவரிக்க வேண்டுமேயன்றி, நெறிமுறைக்கோட்பாடுகளைச் செயல்படுத்தும் விவரங்கள் பற்றிக் கூற வேண்டிய அவசியமில்லை.

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VII, நவம்பர் 24, பக்கம் 585-86.

விதி 39-அ-விலிருந்து, மூன்று ஆண்டுக் கால வரம்பு நீக்கப் பட வேண்டுமென்று நான் கூறுவதற்கு இதுவும் ஒரு காரணம்.

இத்திருத்தத்தைக் கொண்டு வர வேண்டிய நிலை ஏற்பட்ட தற்கான இரண்டாவது காரணம்: 'மூன்று ஆண்டுகள்' என்று கூறுவது அவையின் சில உறுப்பினர்களிடையே ஓரளவு கருத்து வேறுபாட் டினை ஏற்படுத்தியுள்ளது. மூன்று ஆண்டுக் காலம் என்றால், மூன்று ஆண்டு முடியும் வரை அரசு எவ்வித நடவடிக்கையும் எடுக்காது என்று சில உறுப்பினர்கள் கூறுகிறார்கள். இந்த விதியில் மூன்று ஆண்டுகள் என்று கூறப்பட்டால் மாகாண சட்டமன்றம் மூன்றாம் ஆண்டு வரும்வரை எவ்வித நடவடிக்கையும் எடுக்காது. மூன்று ஆண்டுகள் மிகவும் குறுகிய காலமாகும் என்பது மற்றொரு பிரி வினரின் கருத்து. மாகாணங்களைப் பொறுத்தவரை மூன்று ஆண்டு கள் போதுமான காலமாக இருக்கலாம். ஏனெனில் அங்கு ஆட்சித் துறை இயந்திரம் சிறப்பாக அமைந்துள்ளது. நீதித்துறையைப் பிரித்திடும் வகையில், அம்மாகாணங்களின் ஆட்சித் துறையைத் திருத்தவோ அல்லது மாற்றவோ முடியும். ஆனால், மாகாண அரசு களை மட்டுமல்லாமல் இந்திய சமஸ்தான அரசுகளையும் குறிக்கும் முறையில் 'அரசு' என்ற வார்த்தையை நெறிமுறைக் கோட்பாட்டில் நாம் பயன்படுத்தியுள்ளோம். நீண்டகாலமாக இந்திய சமஸ்தானங் களில் நடைபெற்ற ஆட்சித்துறை இத்தகைய விரும்பத்தக்க மாற்றம் ஏற்பட உகந்ததாக இருக்காது என்று வாதிடப்படுகிறது. அதனால், இந்திய சமஸ்தானங்களைப் பொறுத்தவரை, மூன்று ஆண்டுகள் என்பது மிகவும் குறுகிய காலமாகும். இத்தகைய அனைத்து விவா தங்களிலும் ஒரு வலுவான நியாயம் இழை ஓடுகிறது என்று சந்தேக மின்றிக் கூறலாம்; அதனை நாம் ஒதுக்கிவிட முடியாது. அரசின் பொது நிர்வாகத்திலிருந்து நீதித்துறையைப் பிரிக்க வேண்டுமென்ற கடமைப் பொறுப்பினை மாகாணங்கள் மீதும் இந்திய சமஸ்தானங் கள் மீதும் சுமத்தி, அவற்றுக்குக் கட்டளையிடும் வகையில் இந்த விதியில் சட்ட முறையில் உரிமைக் கட்டளை சார்ந்த வழிவகை இருந்தால் நாம் அனைவரும் கருத்தில் கொண்டுள்ள நோக்கம் நிறை வேறுவதற்கு இந்த விதி வழிவகுக்கும் என்று கருதப்பட்டது. இதன் நோக்கம், எங்கெங்கு இது சாத்தியமாகுமோ அங்கெல்லாம் கால தாமதமின்றி நிறைவேற்றப்பட வேண்டும்; எங்கு இக்கோட்பாட்டை உடனடியாக அமலாக்க முடியாதோ, அங்கெல்லாம் கட்டாயமாக நிறைவேற்றப்பட வேண்டிய கோட்பாடு இது என்று ஒத்துக் கொள்ளப்பட வேண்டும். காலம் கடத்துவது அரசியல் சாசனத்தின்

அடிப்படைக் கோட்பாடுகளுக்கு ஏற்புடையதாகாது. எனவே நான் முன்மொழிந்துள்ள இத்திருத்தம் இந்த அவையிலுள்ள பல்வேறு கருத்துக்களைக் கொண்டவர்களுக்கு ஏற்புடையதாகும். இத்திருத் தத்திற்கு அவை இசைவு அளிக்கும் என்று நம்புகிறேன்.

**பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா:** (ஐக்கிய மாகாணங்கள்: பொது): திரு. துணைத் தலைவர் அவர்களே, டாக்டர் அம்பேத்கர் ஏற்கனவே ஒரு திருத்தத்தைக் கொண்டு வந்துள்ளார்; அதற்கு அவர் புதிதாக விதி 39 - அ என்பதைச் சேர்த்துள்ளார். தனது திருத்தத்தையே மாற்றிக் கொள்ள ஒரு உறுப்பினருக்கு அனுமதி உண்டா?

**திரு. துணைத் தலைவர்:** ஆம்; அடிப்படை நோக்கங்களைக் கருத்தில் கொள்ள வேண்டுமேயன்றி சட்ட நுணுக்கங்களை அல்ல என்பதை நீங்கள் அனைவரும் மனதில் கொள்ள வேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறேன்.

**திரு. ஆர்.கே.சித்வா:** (மத்திய மாகாணங்கள் மற்றும் பீரார், பொது): டாக்டர் அம்பேத்கர் இத்திருத்தம் கொண்டு வந்தது குறித்தும், காலம் கடந்தாவது நல்ல ஆலோசனையும் நல்லெண்ணப் போக்கும் ஏற்பட்டுள்ளது பற்றியும் எனக்கு மிக்க மகிழ்ச்சி.

பிரேரணை ஏற்றுக்கொள்ளப்பட்டது.

விதி 39 - அ அரசியல் சாசனத்துடன் இணைக்கப்பட்டது.

★ ★ ★

[1]**திரு. முகமது தாகிர்** (பீகார்-முஸ்லீம்): திரு.துணை த்தலைவர் அவர்களே, பின்கண்டதை நான் முன்மொழிகிறேன். விதி 39க்குப் பின்னர், பின்வரும் புதிய விதி சேர்க்கப்பட வேண்டும்; இந்த விதி களுக்கு மறுபடியும் வரிசை எண்கள் கொடுக்கப்பட வேண்டும்:

> ''40. மசூதிகள், கோயில்கள், தேவாலயங்கள், குருத்துவாராக்கள் போன்ற வழிபாட்டுத் தலங்களையும் இடுகாடுகள் மயானங்கள் முதலியவற்றையும் பாதுகாத்து, பராமரித்துப் பேணிக்காப்பது அரசின் கடமையாகும்."

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VII, நவம்பர் 25, பக்கம் 593.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இத்திருத்தத்தை நான் ஏற்றுக் கொள்ளவில்லை.

**திரு. துணைத் தலைவர்:** திருத்தத்தை வாக்கெடுப்பிற்கு விடுகிறேன்.

திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

★ ★ ★

## விதி 40

[2]**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் எண். 1018.

**மாண்புமிகு பி.ஆர். அம்பேத்கர்:** திரு.காமத் ஒரு திருத்தம் கொண்டு வருவதாகத் தெரிகிறது.

**திரு. எச்.வி.காமத்:** டாக்டர் அம்பேத்கர் அவருடைய திருத் தத்தை முன்மொழிந்த பின்னர், என்னுடைய திருத்தத்தை முன் மொழிவேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, தற்போதுள்ள விதி 40க்குப் பதிலாக பின்வரு வதை மாற்றாகச் சேர்க்க வேண்டும்:

''40. அரசு பின்வரும் நடவடிக்கைகளை எடுக்க வேண்டும்.

(அ) சர்வதேச அமைதியையும் பந்தோபஸ்தையும் வளர்ப்பதற்கும்,

(ஆ) நாடுகளிடையே நேர்மையும் நன்மதிப்புணர்வும் தோய்ந்த உறவுகளைப் பேணுவதற்கும்,

(இ) ஒழுங்கமைவுள்ள மக்களினங்கள், தமக்குள் எழும் தொடர்புகளில் சர்வதேசச் சட்டத்தையும் உடன்படிக்கைக் கடமைப்பாடுகளையும் மதித்து நடப்பதை பேணிவளர்ப்பதற்கும் முனைந்து முயலுதல் வேண்டும்.

திரு. துணைத்தலைவர் அவர்களே, இத்திருத்தம் முதலில் வைக்கப்பட்ட விதியை எளிமையாக்குகிறது; ஒவ்வொரு கருத்தையும்

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VII, 1948 நவம்பர் 25, பக்கம் 594
2. அதே தொகுதி பக்கம் 595.

தனித்தனியாக வேறுபடுத்தி விதியைச் சில பாகங்களாகப் பிரிக்கிறது. இவ்வாறு செய்வதால் இந்த விதியைப் படிப்பவர்கள் விதி 40ன் நோக்கமாகக் கொள்ளப்பட்டது என்ன என்பதை முழுமையாகவும், தெளிவாகவும் புரிந்து கொள்ள முடியும். எனவே ஒரு நீண்ட உரை நிகழ்த்தி இவற்றை விளக்குவது என்பது அதீத செயலாகும்.

துணைத்தலைவர் அவர்களே, இப்போது இதனை முன்மொழிகிறேன்:

**திரு. துணைத் தலைவர்:** இதற்குச் சில திருத்தங்கள் உள்ளன. அத்திருத்தங்களை முன்மொழிந்தவர்களை வரிசைப்படி அழைக்கிறேன்.

திருத்தம் எண் 74. திரு. சர்வதே.

**திரு.வி.எஸ்.சர்வதே:** (குவாலியர் - இந்தூர் - மால்வா, மத்திய பாரத் ஐக்கிய சமஸ்தானங்கள்) திரு. துணைத்தலைவர் அவர்களே, இத்திருத்தத்திற்கு ஒரு திருத்தத்தை முன்மொழிகிறேன். என்னுடைய திருத்தம் வருமாறு:

> ''பட்டியலில் கண்ட திருத்தங்களில் திருத்தம் எண் 1018, விதி எண் 40ல் 'அரசு'' என்ற வார்த்தைக்குப் பின்னரும், உபவிதி (அ)க்குப் பின்னரும், உபவிதி (அ)க்கு முன்னரும், இப்புதிய துணை விதி சேர்க்கப்பட்டு, இப்போதுள்ள துணைவிதி இதற்கு ஏற்ற வகையில் மீண்டும் இலக்கமிடப்பட வேண்டும்:
>
> (அ) நீதி, கடமையுணர்வு ஆகியவற்றை குடிமக்கள் உள்ளங்களில் வளர்க்க''.

★ ★ ★

[1]**திரு. எச்.வி.காமத்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, பின்கண்டதை நான் முன்மொழிகிறேன்:

> ''விதி எண் 40க்குக் கொடுக்கப்பட்ட திருத்தங்கள் பட்டியலில் திருத்தம் 1018 ல் 'வேண்டும்' என்ற வார்த்தைக்குப் பின்னர், 'முயற்சி செய்ய' என்ற வார்த்தைகள் சேர்க்கப்படவேண்டும்; துணைவிதி (ஆ) க்குப் பின்னர் 'நாடுகிற' என்ற வார்த்தைகளும் துணைவிதி (இ)ல் 'முயற்சிசெய்ய' என்ற வார்த்தைகளும் நீக்கப்பட வேண்டும்.''

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VII, 1948, நவம்பர்25, பக்கம் 596.

**திரு. துணைத் தலைவர்:** தற்போதுள்ள விதி 40க்குப் பதிலாக பின்வருபவை சேர்க்கப்பட வேண்டும் என்பதுதான் இப்போதுள்ள பிரச்சினை:

இத்திருத்தம் சபையில் ஏற்றுக்கொள்ளப்பட்டால், அரசியல் சாசன வரைவுக் குழு தீட்டிய திருத்தம் பின்கண்டவாறு அமையும்:

("40.) அரசு -

(அ) சர்வதேச அமைதியையும் பந்தோபஸ்பதையும் வளர்ப்பதற்கும்;

(ஆ) நாடுகளுக்கிடையே நேர்மையும் நன்மதிப்புணர்வும் தோய்ந்த உறவுகளைப் பேணுவதற்கும்;

(இ) ஒழுங்கமைவுள்ள மக்களினங்கள் தமக்குள் எழும் தொடர்புகளில் சர்வதேச சட்டத்தையும் உடன்படிக்கைக் கடமைப்பாடுகளையும் மதித்து நடப்பதை பேணிவளர்ப்பதற்கும்;

(ஈ) சர்வதேசத் தகராறுகளுக்கு நடுவர் தீர்ப்பு மூலம் தீர்வு காண்பதை ஊக்குவிப்பதற்கும் முனைந்து முயலுதல் வேண்டும்.''

விதி 40ல் அமைந்துள்ள கோட்பாடுகளில் வழிகாட்டும் தன்மையினைக் குறிப்பிட்டுக் காட்டும் அல்லது வெளிப்படுத்தும் நோக்குடன் டாக்டர் அம்பேத்கர் கொண்டு வந்துள்ள திருத்தத்தின் வாசக அமைப்பு முறையில் சிறிது மாற்றம் செய்வதற்கு இத்திருத்தம் முயற்சி செய்கிறது.

[1]**திரு.துணைத்தலைவர்:** திரு.அய்யங்கார், முறைப்படி திருத்தத்தை முன்மொழிகிறீர்களா?

**திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்:** டாக்டர் அம்பேத்கரது திருத்தத்தின் இறுதியில் பின்கண்ட உபவிதியைச் சேர்க்க வேண்டும்:

'மற்றும் (ஈ) சர்வதேசத்தகராறுகளுக்கு நடுவர் மூலம் தீர்வு காண்பதை ஊக்குவிப்பதற்கு''.

பிரேரணை ஏற்றுக்கொள்ளப்பட்டது.

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, திரு.காமத்தின் மூன்று திருத்தங்களையும் ஏற்றுக்கொள்கிறேன். டாக்டர் சுப்பராயன், மதிப்பிற்குரிய என்

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், 1948, நவம்பர் 28, பக்கம் 595- 605
2. அதே தொகுதி பக்கம் 604

னுடைய நண்பர் திரு. அனந்தசயனம் அய்யங்கார் ஆகியோரின் திருத் தங்களையும் ஏற்றுக் கொள்கிறேன். வேறு எந்த திருத்தத்தையும் நான் ஏற்றுக்கொள்ளவில்லை.

பிரேரணை நிராகரிக்கப்பட்டது.

## விதி 7

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பின்வருமாறு முன்மொழிகிறேன்:

'விதி 7ன் முடிவில் பின்கண்ட வார்த்தைகள் சேர்க்கப்பட வேண்டும்':
"அல்லது இந்திய அரசின் கட்டுப்பாட்டின்கீழ்".

இந்தியாவின் அங்கமாக உள்ள பிராந்தியங்களைத் தவிர வேறு பிராந்தியங்களும் இருக்கக்கூடும். இருப்பினும், இந்திய அரசின் கட்டுப்பாட்டின்கீழ் அவை இருக்கலாம். எனவேதான் இத்திருத்தம் தேவை என்று கருதினோம். சட்ட உரிமைக் கட்டளை அடிப்படையில் அல்லது பொறுப்புணர்வின் கீழ் நிருவாகம் செய் வதன் காரணமாக ஒரு நாட்டின் பிராந்தியங்கள் பிற நாட்டிற்கு மாற்றிக் கொடுக்கும் பல நிகழ்ச்சிகள் சர்வதேச அரசியல் விவகாரங் களில் இப்போது நடைபெறுவதை நாம் பார்க்கிறோம்.

இந்தியக் குடிமக்களும் மற்றும் அவ்வாறு சட்ட உரிமைக் கட்டளை அல்லது பொறுப்பாண்மையின் கீழ் மாற்றப்பட்ட பிராந்தி யங்களிலுள்ள மக்கள் ஆகியோரைப் பொறுத்தமட்டில், அடிப்படை உரிமைகளை அனுபவிப்பதில் எவ்வித பாரபட்சமும் இருப்பது விரும்பத்தக்கதல்ல என்று கருதுகிறேன். எனவே, அத்தகைய பிராந்தி யங்களில் வாழும் குடிமக்களுக்கும் பொருந்தும் வகையில் அடிப்படை உரிமைக் கோட்பாடு விஸ்தரிக்கப்படுவதற்கு இத்திருத்தம் அமைவது விரும்பத்தக்கதாகும்.

★ ★ ★

[2]**திரு. துணைத்தலைவர்:** திரு. அலிபேக் எழுப்பிய கருத் துக்கள் பற்றி நாம் தெளிவுபெறும் முறையில் டாக்டர் அம்பேத்கர் விளக்கம் அளிக்குமாறு அவரைக் கேட்டுக்கொள்கிறேன்.

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், 1948, நவம்பர் 28, பக்கம் 607.
2. மேற்படி அதே நூல், பக். 610.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு.துணைத் தலைவர் அவர்களே, இத்திருத்தத்தை முன்மொழிந்த என்னுடைய நண்பரின் உரையை நான் உன்னிப்பாகக் கவனித்தாலும், அவர் என்ன விரும்புகிறார் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடிய வில்லை. இதை நான் கூறியாகத்தான் வேண்டும். விதி 7ஐ முற்றி லும் நீக்கிவிட வேண்டுமென்பதுதான் அவருடைய திருத்தத்தின் நோக்கமென்றால், இந்த விதி அரசியல் சாசனத்தின் ஓர் அங்கமாக ஏன் விளங்க வேண்டுமென்பதற்கான காரணங்களை என்னால் எளிதில் விளக்க முடியும்.

அடிப்படை உரிமைகளின் குறிக்கோள் இரண்டாகும். முத லாவதாக, ஒவ்வொரு குடிமகனும் இந்த உரிமையைக் கோரும் நிலையிருக்க வேண்டும். இரண்டாவதாக, ஒவ்வொரு அதிகார அமைப்பையும் அது கட்டுப்படுத்துவதாக இருக்க வேண்டும்.

அதிகார அமைப்பு என்ற வார்த்தைக்கு என்ன பொருள் என்பதை இப்போது விளக்க வேண்டும். சட்டம் இயற்றும் அதிகாரம் அல்லது விருப்புரிமை அதிகாரம் பெற்றுள்ள ஒவ்வொரு அதிகார அமைப்பையும் இங்கு குறிப்பிடுகிறேன்.

எனவே, அடிப்படை உரிமைகள் தெளிவாக இருக்க வேண்டு மென்றால், இந்திய அரசை மட்டுமின்றி, மாகாண அரசுகளையும் அவை கட்டுப்படுத்துவதாக இருக்க வேண்டும்; இந்திய சமஸ்தானங் களில் அமைந்துள்ள அரசுகளை மட்டுமன்றி, மாவட்ட, உள்ளாட்சி மன்றங்கள் நகராட்சி நிருவாகத்தையும், கிராம தாலுகா மன்றங் களையும் கூட அவை கட்டுப்படுத்த வேண்டும். தெளிவாகச் சொல்ல வேண்டுமென்றால், சட்டம் உருவாக்கிய அதிகார அமைப்பு, சட் டங்கள், விதிகள், துணை விதிகள் முதலியவற்றை உருவாக்கும் அதிகாரம் பெற்ற அமைப்புகள் ஒவ்வொன்றின் மீதும் அவை கட்டுப்பாடு செலுத்தும்.

இந்தக் கருத்து ஏற்றுக்கொள்ளப்பட்டால், சட்டம் உரு வாக்கிய அனைத்து அதிகார அமைப்பு மீதும் இத்தகைய ஒரு கடமைப் பொறுப்பு சுமத்தப்படுவதை அடிப்படை உரிமைகளை வேண்டுவோர் எவரும் ஆட்சேபனை செய்வார்கள் என்று எண்ண முடியாது. அப்படியெனில், நமது கருத்தினைத் தெளிவாக்க நாம் செய்யவேண்டுவது என்ன? அதற்கு இரண்டு வழிகள் உண்டு. விதி

7ல் நாம் செய்தது போல், 'அரசு' போன்ற ஒரு கூட்டு சொற்றொடரைப் பயன்படுத்துவது ஒரு முறை; அல்லது ''மத்திய அரசு, மாகாண அரசு, மாநில அரசு, நகராட்சி, உள்ளாட்சி மன்றம், துறைமுகப் பொறுப்புக்கழகம், அல்லது ஏதாவது ஒரு அதிகார அமைப்பு'' என்று ஒவ்வொரு முறையும் திரும்பத் திரும்பக் கூற வேண்டும். இது சிரமமானது மட்டுமல்ல; ஏதாவது ஒரு அதிகார அமைப்பைக் குறிப்பிடும்போது இச்சொற்றொடரைத் திரும்பத் திரும்பக் கூறுவது அறிவுடைமையாகாது. இந்தக் கூட்டுச் சொற்றொடரைப் பயன்டுத்தி வார்த்தைகளைச் சிக்கனப்படுத்துவதுதான் அறிவுடைய வழியாகும். இந்த விதியில் 'அரசு' என்ற வார்த்தையை நாம் ஏன் பயன்படுத்தி இருக்கிறோம் என்பதையும், இந்த விதி அரசியல் சாசனத்துக்கும் ஒரு பகுதியாக இருக்க வேண்டுமென்பதையும் என்னுடைய நண்பர் புரிந்துகொள்வார் என்று நம்புகிறேன்.

**திரு. துணைத்தலைவர்:** இத்திருத்தத்தை இப்போது வாக்கெடுப்புக்கு விடுகிறேன். முதலில் திரு.நசிருதீன் அகமதின் திருத்தம் எண் 21. திருத்தம் எண் 246க்கு இது ஒரு திருத்தமாகும்.

நம்முள் இப்போதுள்ள பிரேரணை இதுதான்:

''திருத்தங்கள் பட்டியல்வரிசை எண் 246 ஐப்பொறுத்தவரை விதி 7ல், ''இந்தியப் பிராந்தியத்திற்குள் அல்லது இந்திய அரசின் கட்டுப்பாட்டிற்கு கீழ் உள்ள மற்றும் அனைத்து உள்ளாட்சி அல்லது இதர அதிகார அமைப்புகள்'' என்ற வார்த்தைகள் நீக்கப்பட வேண்டும்.

திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

**திரு. துணைத் தலைவர்:** அடுத்த திருத்தம் எண் 246. இது டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்ததாகும்.

நம்முன் இப்போதுள்ள பிரேரணை இதுதான்: விதி 7ன் இறுதியில் பின்வரும் வார்த்தைகள் சேர்க்கப்பட வேண்டும்: ''அல்லது இந்திய அரசின் கட்டுப்பாட்டிற்குக்கீழ்.'' பிரேரணை ஏற்கப்பட்டது.

(இன்னும் இரண்டு திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன).

★ ★ ★

## விதி 8

[1]**திரு. துணைத் தலைவர்:** இன்னும் நமக்கு கால்மணி நேரம் தான் உள்ளது. அரசியல் சாசன வரைவின் விதி 8 மீது விவாதத்தைத் தொடரலாம்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா** (மேற்கு வங்காளம்: பொது): சபை நடவடிக்கையை இப்போது ஒத்திவைக்கலாம்.

**திரு. துணைத் தலைவர்:** நம்முடைய நேரம் பொன்னானது. கால்மணி நேரத்தை வீணாக்கக்கூடாது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, பின்கண்டதை முன்மொழிகிறேன்:

> 'விதி 8ல் துணைவிதி (3)க்குப் பதிலாக, பின்வருவது மாற்றாகப் பயன் படுத்தப்படவேண்டும்:
>
> '3 இந்த விதியில் -
>
> (அ) இந்தியா அல்லது அதனுடைய எப்பகுதியிலும் சட்டத்தின் வலிமை கொண்ட அவசரச் சட்டம், ஆணை, துணைவிதி, ஒழுங்குமுறை விதி, அறிவிக்கை, மரபு அல்லது வழக்காறு ஆகியவை சட்டம் என்னும் சொல்லில் உள்ளடங்கும்.
>
> (ஆ) இந்த அரசியல்சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னர் இந்தியப் பிராந்தியத்திலுள்ள சட்டமன்றம் அல்லது இதர தகுதிவாய்ந்த அதிகார அமைப்பால் நிறைவேற்றப்பட்ட அல்லது உருவாக்கப்பட்ட மற்றும் அதற்குமுன்னர் ரத்துச் செய்யப்படாமலுமுள்ள சட்டங்கள், அத்தகைய சட்டம் எதுவும் அல்லது அதன்பாகம் எதுவும் முற்றிலுமாக அல்லது குறிப்பிட்ட பகுதிகளிலோ அமலில் இல்லாமல் இருந்தபோதிலும் 'அமலிலுள்ள சட்டங்கள்' என்னும் சொற்றொடரில் அவை அடங்கும்.

திரு. துணைத் தலைவர் அவர்களே, இத்திருத்தம் கொண்டு வருவதற்கான காரணம் இதுதான்: விதி 8ல் இரண்டு சொற்றொடர்கள் உள்ளதைக் காணலாம். விதி 8ல் கண்ட உபவிதி(1)ல் 'அமலில் உள்ள சட்டங்கள்' என்னும் சொற்றொடர்கள் வருகின்றன; ஆனால் உப விதி (2)ல் 'எந்தச் சட்டமும்'' என்னும் வார்த்தைகள் வருகின்றன. இந்த

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VII, 1948, நவம்பர் 26, பக்கம் 640.

அவையில் சமர்ப்பிக்கப்பட்ட அரசியல் சாசன மூல வரைவில் சொல்லப்பட்டது எல்லாம் உபவிதி (3)ல் 'சட்டம்' என்ற வார்த்தைக்கு விளக்கம் கூறுவதுதான். 'அமலில் உள்ள சட்டம்'' என்ற சொற்றொடர் விளக்கப்படவில்லை. இக்குறைபாட்டை நீக்குவது தான் இத்திருத்தத்தின் நோக்கமாகும். உபவிதி (3) ஐ (அ) என்றும் (ஆ) என்றும் இரண்டு பிரிவுகளாகப் பிரித்துள்ளோம். மூல உப விதி (3)ல் இணைக்கப்பட்டிருந்ததற்கு (அ) 'சட்டம்'' என்னும் சொல் பொருள் விளக்கம் அளிக்கிறது; விதி 8ல் கண்ட உப விதி (1)ல் வரும். 'அமலில் உள்ள சட்டங்கள்'' என்னும் சொற்றொடருக்கு (ஆ) பொருள் விளக்கம் தருகிறது.

இதற்குமேல் விளக்கம் எதுவும் தேவை இல்லை என்று நினைக்கிறேன்.

★ ★ ★

[1]**திரு. நசிருதீன் அகமது:** என்னுடைய திருத்தத்தை முன்மொழிவதற்கு முன், டாக்டர் அம்பேத்கர் விரிவான திருத்தம் கொண்டு வந்திருப்பதால், தற்போதுள்ள திருத்தம் தகுந்த முறையில் அவருடைய திருத்தத்துடன் சரி செய்து கொள்ள வேண்டுமென்று தெரிவித்துக் கொள்கிறேன். திருத்தத்தின் இரண்டாவது பகுதியை மட்டும் முன்மொழிகிறேன்:

**திரு. துணைத் தலைவர்:** அவர் ஏற்றுக் கொள்கிறாரா, இல்லையா என்பதை முதலில் தெரிந்து கொள்ளுங்கள்.

**திரு. நசிருதீன் அகமது:** இதை நான் விவாதித்து, விளக்கினாலன்றி அவர் ஏற்றுக்கொள்ள மாட்டார். திரு.துணைத்தலைவர் அவர்களே, இத்திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும்.

பின்கண்டதை நான் முன்மொழிகிறேன்:

டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்துள்ள திருத்தம் எண் 206ல் வரும் ''இந்திய பிராந்தியத்தில் அல்லது அதன் எப்பகுதியிலும் சட்ட வலிமை பெற்றுள்ள வழக்கம் அல்லது வழக்காறு'' என்னும் வார்த்தைகள் நீக்கப்பட வேண்டும்.

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VII, 1948, நவம்பர் 26, பக்கம் 641.

**திரு. துணைத் தலைவர்:** முன் அறிவிப்பின்றி இத்திருத்தத்தை எவ்வாறு சேர்த்துக்கொள்ளமுடியும்? இது சரியானதாகாது. நீங்கள் ஓர் ஆலோசனைதான் கூறமுடியும்.

**திரு. நசிருதீன் அகமது:** மூலவிதிக்கு ஒரு திருத்தம் கொடுப்பதற்கு நான் முன்கூட்டியே அனுமதி கோரி அறிவிப்பு கொடுத்துள்ளேன். டாக்டர் அம்பேத்கர் திருத்தம் கொண்டு வந்துள்ள காரணத்தால், சில மாற்றங்களும் செய்ய வேண்டியதிருக்கும் என நினைக்கிறேன்.

**திரு. துணைத்தலைவர் :** அப்படியானால், சரி.

★ ★ ★

[1]**திரு. நசிருதீன் அகமது:** அன்புடன் இடைமறித்தது குறித்து எனக்கு மிகவும் மகிழ்ச்சிதான். என்னுடைய சிரமங்களை இது குறைக்கப் போவதில்லை. அரசு ஒரு வழக்கத்தை அல்லது வழக்காற்றை 'உருவாக்கும்' என்று கூற முடியுமா? வழக்கம் அல்லது வழக்காறு உள்ளிட்ட ஒரு சட்டத்தை அரசு உருவாக்க வேண்டியது உள்ளது என்ற எதார்த்த நிலையை நீங்கள் எதிர்பார்க்க வேண்டி உள்ளது.

**மாண்புமிகு திரு. பி.ஜி.கெர்:** உண்மைதான்; 'எப்போதெல்லாம் தேவைப்படுகிறது' என்று இதற்குப் பொருள்படும். சட்டத்தில் இது எப்போதும் இவ்விதமாகப் பொருள்படும். இடையில் பேசுவதற்கு மன்னிக்கவும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அனேகமாக நான் சில விவரத்தைக் கூறினால், அவர் தொடர்ந்து பேச வேண்டிய அவசியமில்லை என்பது அவருக்குப் புரியும். அதாவது, (3) (அ)ல் வரும் 'சட்டம்' என்ற சொல் 8 (1)ல் வரும் சட்டத்தைக் குறிக்கும் என்பதாகும்.

**திரு. நசிருதீன் அகமது:** 'வழக்கம் மற்றும் வழக்காறு' என்னும் வார்த்தைகளுக்கு சட்ட வலிமை உண்டு என டாக்டர் அம்பேத்கர் இடைமறித்து கூறியதற்கு நன்றி சொல்லுகிறேன்.

★ ★ ★

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VII, 1948 நவம்பர் 26, பக்கம் 642

[1]**திரு. துணைத் தலைவர்:** விதி 8 ஐ விவாதத்திற்கு எடுத்துக் கொள்வோமா? இதன் மீது பேச மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் யாராவது இருக்கிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய் : பொது): திரு. துணைத் தலைவர் அவர்களே, திரு.நசிருதீன் அகமத்தின் திருத்தம் சற்று குழப்பத்தை உண்டாக்கியுள்ளது. இதைத் தெளிவுபடுத்த வேண்டிய அவசியம் உள்ளது. இப்போதுள்ள அரசியல் சாசன வரைவு அறிவுக்கொவ்வாமை நிலையை உண்டாக்கியுள்ளதாக அவர் கூறுகிறார். அந்நிலையை மாற்றுவதுதான் அவருடைய திருத்தத்தின் நோக்கம் என்றும் அவர் சாதிக்கிறார், அவருடைய வாதத்தை நான் சரியாகப் புரிந்திருந்தால், அவருடைய வாதம் இதுதான்: சட்டம் குறித்து கருத்துவிளக்கம் அளிக்கும்போது வழக்கத்தை சட்டத்தில் சேர்த்து இருக்கிறோம்; வழக்கம் அவ்வாறு சேர்க்கப் பட்டிருப்பதால், எவ்வித சட்டத்தையும் உருவாக்க அரசுக்கு அதிகாரம் இல்லை என்றும் நாம் கூறுகிறோம். ஏனெனில் அவருடைய கூற்றுப்படி, வழக்கத்தை உருவாக்க அரசுக்கு அதிகாரம் இருக்கும்; ஏனெனில், நம்முடைய சட்ட விளக்கப்படி, வழக்கம் என்பது சட்டத்தில் அடங்கும். விதி 8ன் உப(3) 8வது விதியின் உபவிதி (2)க்கு மட்டு மல்லாது 8வது விதிக்கும் முழுமையாகவும் பொருந்தும் என்ற காரணத்தால் அத்தகைய வாக்கிய அமைப்பு தேவை இல்லை என நான் கருதி இருக்க வேண்டும். அவ்வாறு இருப்பதால், ஒருவர் முறையாக வாக்கியம் அமைப்பது அல்லது அமைக்க முடிந்தது 'சட்டம்' என்ற சொல்லை தனியுறழ்வுச் சொல்லாகப் பயன்படுத்துவதாகும்; அதனால், விதி 8, உபவிதி (1) ஐப் பொறுத்தவரை 'சட்டம்' என்பதில் வழக்கம் அடங்கும்; உபவிதி (2) ஐப் பொறுத்தவரை வழக்கம் 'சட்டம்' என்பதில் அடங்காது. என்னைப் பொறுத்தமட்டில் அவ்வாறு பொருள்கொள்வதுதான் முறையாகும். அவ்வாறு பொருள் கொண்டால் எனது நண்பர் குறிப்பிடும் அபத்தமான நிலை ஏற்படாது.

சட்ட விதிகளை முறையாக விளக்குவதில் வழக்கமில்லாத ஒருவர், என்னுடைய நண்பர் விளக்கம் அளிக்க முன்வருவது போல் தான் சட்ட வாக்கிய அமைப்பினை கூறுவார் என்பதை என்னால் முற்றிலும் புரிந்துகொள்ள முடியும்.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VII, 1948 நவம்பர் 26, பக்கம் 644-45.

எனவே, இச்சிரமத்தைத் தவிர்க்கும் நோக்குடன், விதி 8 ன் உபவிதி (3)க்கு நான் கொண்டு வந்துள்ள திருத்தத்தில் 'இந்த விதியில்' என்ற வார்த்தைகளுக்குப் பின்னர், பின்வரும் வார்த்தை களைச் சேர்த்துக்கொள்ள உங்களுடைய அனுமதியை வேண்டு கிறேன். நான் சேர்த்துக் கொள்ள விரும்பும் வார்த்தைகள் வருமாறு: 'சந்தர்ப்பம் வேறுவகையில் இருந்தாலன்றி'' இவற்றைச் சேர்ப்ப தால் விதி பின்கண்டவாறு அமையும்:

'இந்த விதியில் சந்தர்ப்பம் வேறுவகையில் இருந்தாலன்றி -

(அ) இந்திய பிராந்தியத்தில் அல்லது அதன் எந்தப் பகுதியிலும் சட்ட வலிமையுள்ள எவ்வித அவசரச் சட்டம், ஆணை, துணைச் சட்டம், விதி, ஒழுங்குமுறை, அறிவிக்கை, வழக்கம் அல்லது வழக்காறு சட்டம்' என்னும் சொல்லில் அடங்கும்;

(ஆ) இந்தச் சொற்றொடர்..........''

முழுவதையும் நான் வாசிக்க வேண்டியதில்லை.

ஆக வழக்கத்தை உள்ளடக்கும் வகையில் 'சட்டம்' என்னும் சொல் உபயோகப்படுத்தப்பட வேண்டுமென்று விதி 8 (1)ல் எழும் சந்தர்ப்பத்திற்கேற்ப தேவைப்பட்டால், அவ்வாறு அமைக்க முடியும். விதி 8ன் உபவிதி (2)ல் 'சட்டம்' என்னும் சொல்லில் வழக்கம் சேர்க்கப்படுவதாகப் பொருள் கொள்ள முடியாது. என்னுடைய நண்பர் தன்னுடைய திருத்தத்தில் குறிப்பிட்டுள்ள சிரமம் இதனால் நீங்கும் என்று கருதுகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** திருத்தங்கள் அனைத்தையும் ஒவ்வொன்றாக வாக்கெடுப்பிற்கு விடுகிறேன். பழைய பட்டியலில் கண்ட திருத்தங்களின் வரிசை எண்ணைத்தான் நான் குறிப்பிடு கிறேன்.

திரு.மக்பூப் அலிபெய்க் பெயரிலுள்ள 252 ம் எண் திருத்தம் மீது வாக்கெடுப்பு நடைபெறும். திருத்தம் இதுதான்:

''விதி 8 (2) வது உபவிதியில் கண்ட விலக்குக் கூற்றை நீக்கிவிட வேண்டும்.''

தீர்மானம் நிராகரிக்கப்பட்டது.

(திரு. லோகநாத் மிஷ்ராவின் பெயரிலுள்ள திருத்தம் எண் 259 நிராகரிக்கப்பட்டது).

★ ★ ★

**திரு. துணைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் திருத்தம் செய்துள்ள எண் திருத்தம் எண் 260 வாக்கெடுப்பிற்கு விடப்படுகிறது. திருத்தம் இதுதான்:

''விதி 8 உபவிதி (3) க்குப் பதிலாக பின்வருவதைச் சேர்த்துக்கொள்ள வேண்டும்."

'(3) இந்தவிதியில் சந்தர்ப்பம் வேறுவகையில் இருந்தாலன்றி,

(அ) இந்தியாவின் பிராந்தியத்திலும் அல்லது அதன் எந்தப் பகுதியிலும் சட்டவலிமையுள்ள எவ்வித அவசரச்சட்டம், ஆணை, துணைச் சட்டம், விதி, ஒழுங்குமுறை, அறிவிக்கை, வழக்கம் அல்லது வழக்காறு சட்டம் என்னும் சொல்லில் அடங்கும்.

(ஆ) இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னர் இந்திய பிராந்தியத்திலுள்ள சட்டமன்றம் அல்லது இதர தகுதிவாய்ந்த அதிகார அமைப்பால் நிறைவேற்றப்பட்ட அல்லது உருவாக்கப் பட்ட மற்றும் அதற்கு முன்னர் ரத்துச் செய்யப்படாமலுள்ள சட்டங்கள், அத்தகைய சட்டம் அல்லது அதன் பாகம் எதுவும் முற்றிலுமாக அல்லது குறிப்பிட்ட பகுதிகளில் அப்போது அமலில் இல்லாமல் இருந்தபோதிலும் 'அமலில் உள்ள சட்டங்கள்' என்னும் சொற்றொடரில் அவை அடங்கும்.

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

(மேலும் இரண்டு திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன.)

திருத்தப்பட்ட விதி 8 அரசியல் சாசனத்துடன் இணைக்கப் பட்டது.

## விதி 8-அ

[1]திரு. துணைத் தலைவர்: புதிய பட்டியலிலுள்ள திரு. எஸ்.என். மிஸ்ராவின் திருத்தம் எண்273, அடுத்த திருத்தம் ஆகும்.

**திரு. லோகநாத் மிஸ்ரா (ஒரிசா: பொது):** ஐயா, நான் முன் மொழிகிறேன்:

"8 ஆம் விதிக்குப் பிறகு புதிய விதி 8-ஆவை சேர்ப்பது.

**வாக்களிக்கும் உரிமையும் தேர்தலும்**

8-அ. (1) அரசியல் சாசனத்தின்படியோ அல்லது யூனியன் நாடாளுமன்றம் அல்லது ஒருவரது மாநிலச் சட்டமன்றத்தாலோ இயற்றப்பட்ட சட்டத்தினாலோ ஏதாவது காரணத்திற்காக உதாரணமாக நிலையாகத் தங்கியிராமை, மனக்கோளாறு, குற்ற நடவடிக்கை, கையூட்டு அல்லது சட்டவிரோதமான நடவடிக்கைகளின் அடிப்படையில் அவர் தடைசெய்யப்படாமலிருந்தால், 21 வயதுக்கு குறைவில்லாத இந்தியக் குடிமகன் ஒவ்வொருவரும் தேர்தலில் வாக்காளராக பதிவு செய்ய உரிமை பெற்றுள்ளனர்.

(2) அடுத்து முந்தைய உபவிதியில் விவரித்துள்ளபடியான வயது வந்தோர் வாக்குரிமையின் அடிப்படையில் தேர்தல்கள் நடைபெறும். ஆனால் அது நேரடியானதாக இல்லாமல் இருக்கலாம். ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையிலான வாக்காளர்களைக் கொண்ட பௌரா அல்லது கிராமப் பஞ்சாயத்து அல்லது சில கிராமங்கள், ஒரு சிறு நகரம் அல்லது அதன் பகுதி அல்லது சுய ஆட்சிப் பகுதி ஆரம்பநிலை உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அவர்கள் ஒன்றிய நாடாளுமன்றத்திற்கும் மாநில சட்டமன்றங்களுக்கும் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

(3) நாடாளுமன்றத்துக்கும் மாநிலச் சட்டமன்றங்களுக்கும் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களை திரும்ப அழைக்கும் உரிமை ஆரம்பநிலை உறுப்பினர்களுக்குண்டு.

(4) தேர்தலில் நிற்க வாக்காளருக்கு உரிமை உண்டு என்பதுடன், தேர்தல் செலவுகளை மாநில அரசே ஏற்றுக் கொள்ளும்.

(5) ஒவ்வொரு உறுப்பினரும் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். போட்டி வேட்பாளர் நிற்காவிடினும், மொத்த வாக்காளர்களில் 1/3 பங்கினரின் வாக்கினை பெற்றால்தான் வேட்பாளர் தேர்தலில் வெற்றி பெற்றதாக அறிவிக்கப்படுவார்.

★ ★ ★

[2]**திரு. அளகு ராய் சாஸ்திரி** (ஐக்கிய மாகாணங்கள்: பொது): திரு. தலைவர் அவர்களே, எனது நண்பர் முன்மொழிந்துள்ள திருத்தத்தை நான் எதிர்க்கிறேன்.

1. அ.நி.விவாதங்கள், தொகுதி XI, 29 நவம்பர், 1948, பக். 646.
2. இந்தி உரையின் மொழிபெயர்ப்பு

இங்கு எழுப்பப்பட்டுள்ள கேள்விக்கு அது எந்த வகையிலும் தொடர்பு இல்லாததே என் முதல் காரணமாகும். சட்டமன்றம் எப்படி உருவாக்கப்பட வேண்டும், சட்டமன்றத்தின் உறுப்பினர்களாக யார் இருக்க முடியும், அவர்களின் உரிமைகள் என்ன, அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய முறைகள் என்ன என்பவை விளக்கப்பட்டுள்ள வேறு பகுதிகளில் தேர்தல்கள் சம்பந்தமான விதிகள் கொடுக்கப்பட்டுள்ளன. இந்த விஷயங்களைப் பரிசீலிக்கும்போது இவை சம்பந்தமான இப்படிப்பட்ட திருத்தங்களை கொண்டு வரலாம். வரைவு அரசியல் சாசனத்தின் அடிப்படைகளுக்கு முற்றிலும் சம்பந்தமற்றது இந்தத் திருத்தம்.

இந்தத் திருத்தம் முற்றிலுமாக தள்ளுபடி செய்யப்படுவதுடன் ஒருபொழுதும் அது ஏற்றுக்கொள்ளப்படக் கூடாது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தத் திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்ளவில்லை.

லோக்நாத் மிஸ்ராவின் தீர்மானம் நிராகரிக்கப்பட்டது.

★ ★ ★

## விதி 9

[1]**திரு. துணைத் தலைவர்:** 313 ஆம் விதி வெறும் சொற்கள் மாற்றமே என்பதால் அனுமதிக்கப்படவில்லை. டாக்டர் அம்பேத்கர் அவர்களே, 314 ஆம் எண் திருத்தத்தை எடுத்துக் கொள்வோம்.

**திரு. எச்.வி. காமத்:** திரு. துணைத்தலைவர் அவர்களே, ஐயா இது வெறும் சொற்கள் மாற்றம் மட்டுமா அல்லது அனுமதிக்கப்படத் தகுதியில்லாத வழக்கமான திருத்தமா? 'மாநில வருவாய்கள்' என்ற வார்த்தைகளுக்குப் பதிலாக 'மாநிலங்களின் நிதியங்கள்' என்ற வார்த்தைகளை மாற்ற மட்டுமே அது வகை செய்கிறது.

**திரு. துணைத் தலைவர்:** அதை நான் கவனத்தில் எடுத்துக் கொள்கிறேன். டாக்டர் அம்பேத்கர் அவர்களே, தயவு செய்து நீங்கள் அந்தக் கேள்விக்கும் விளக்கம் அளிப்பீர்கள் அல்லவா?

1. அ.நி.விவாதங்கள், தொகுதி XI, 29 நவம்பர், 1948, பக். 653 -54.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிகிறேன்:

> *'9ஆம் விதியின் பிரிவு 1ன் இரண்டாவது பாராவின் (ஆ) துணை பிரிவில் உள்ள 'மாநிலங்களின் வருவாய்கள்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'மாநில நிதியங்கள்' என்ற சொற்களை மாற்றுவது.*

'மாநிலங்களின் வருவாய்கள்' என்பதற்குப் பதிலாக 'மாநில நிதியங்கள்' என்று மாற்றியமைக்க வரைவுக்குழு முடிவுக்கு வந்த தற்கான காரணம் சாதாரணமானதுதான். மிக நீண்ட காலமாக இந்தியாவில் நிருவாகத் துறையில் 'மாகாண அரசின் வருவாய்கள், மத்திய அரசின் வருவாய்கள்' என்ற சொற்றொடர்களையே கேட்டுப் பழகியுள்ளோம். மாவட்ட உள்ளாட்சி அமைப்புகள் அல்லது தாலுகா உள்ளாட்சி அமைப்புகள் சம்பந்தமாக பொதுவாக நாம் உள்ளாட்சி வருவாய்கள் என்று கூறாமல் உள்ளாட்சி நிதியம் என்றே குறிப் பிடுகிறோம். இந்தியா முழுவதுமுள்ள எல்லா மாகாணங்களிலும் இந்த கலைச்சொல்லே உபயோகத்தில் உள்ளது. இந்தப் பகுதியில் நாம் 'அரசு' என்று உபயோகப்படுத்துவது மத்திய அரசை மட்டு மின்றி மாகாண அரசுகளையும், இந்திய சமஸ்தானங்களையும் மாவட்ட உள்ளாட்சி மற்றும் தாலுகா உள்ளாட்சி போன்ற உள்ளாட்சி அமைப்புகளையும், அல்லது துறைமுக நிர்வாகங்களையும் உள் ளடக்கியது என்பது மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் நினைவில் இருக்கும். அந்த அமைப்புகளை பொறுத்தவரையில் நிதியம் என்பதே சரியான சொல்லாகும். மத்திய அரசு மற்றும் மாகாண அரசுகள் மட்டுமல்லாது மாவட்ட உள்ளாட்சி அமைப்புகள் மற்றும் தாலுகா உள்ளாட்சி அமைப்புகள் மீதும் இந்த அடிப்படை உரிமை களை கட்டாயமாக்குவதால், மத்திய அரசுக்கு மட்டுமின்றி 'அரசு' என்ற சொல்லின் விளக்கத்தில் அடங்கும் உள்ளாட்சி அமைப்பு களுக்கும் பொருத்தமான கலைச் சொல்லை உபயோகிப்பதே சரியான தாக இருக்கும். நான் கொண்டு வந்த திருத்தம் வெறும் சொல் மாற்ற மல்ல. சிறிது கருப்பொருளும் உள்ளதை என் மதிப்பிற்குரிய நண்பர் திரு. காமத் இப்பொழுது புரிந்து கொண்டிருப்பார் என்று நம்பு கிறேன்.

ஐயா, நான் முன்மொழிகிறேன்.

★ ★ ★

[1](மதிப்பிற்குரிய ஒன்றிரண்டு உறுப்பினர்கள் பேச எழுந்தனர்)

**திரு. துணைத் தலைவர்:** மதிப்பிற்குரிய உறுப்பினர்களின் விருப்பத்தை நிறைவேற்ற என்னால் முடியவில்லையெனில் நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும். அவையின் முழு ஒத்துழைப்பும் எனக்கு இப்பொழுது தேவைப்படுகிறது, டாக்டர் அம்பேத்கர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, கொண்டு வரப்பட்ட திருத்தங்களில் திரு. ருஃப் கொண்டுவந்த 280 ஆம் எண் திருத்தத்தை ஏற்றுக்கொள்கிறேன்.

**திரு. சியாமாநந்தன் சகாயா** (பீஹார்: பொது): முன்மொழியப் படாதத் திருத்தத்தைக் குறித்து மாண்புமிகு உறுப்பினர் தம்முடைய கருத்தைத் தெரிவிப்பாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** முன்மொழியப் படாதத் திருத்தங்கள் குறித்து என் கருத்தைத் தெரிவிக்க முடியாது என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

**திரு. சியாமாநந்தன் சகாயா:** குறிப்பிட்ட அந்த உறுப்பினரின் தவறல்ல அது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எனக்கு வேறு வழியில்லை. 'பிறப்பிடம்' என்ற சொல்லைச் சேர்த்துக் கொள் வதற்கான திரு. ருஃப் கொண்டு வந்த திருத்தத்தை ஏற்றுக் கொள் கிறேன். 270 ஆம் எண் திருத்தத்திற்கான திரு. சுப்பிரமணியத்தின் திருத்தத்தையும் (பட்டியல் 1 எண் 37) ஏற்றுக்கொண்டு, 9 ஆம் விதி யில் பிரிவு 16-ல் உள்ள 'குறிப்பாக' என்ற சொல்லை நீக்கிவிடு கிறோம்.

303 ஆம் எண் திருத்தத்தைப் பொறுத்தவரையில், தம் திருத் தத்திலுள்ள 'குண்ட்ஸ்' என்ற சொல்லை நீக்க அவர் ஒப்புக்கொண் டால் அவருடைய திருத்தத்தை ஏற்றுக்கொள்கிறேன்.

**திரு. குப்தாநாத் சிங்:** ஐயா, ஏற்கனவே அவ்வாறு செய்தாகி விட்டது.

1. அ.நி.விவாதங்கள், தொகுதி XI, 29 நவம்பர், 1948, பக். 660-664.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* நான் ஏற்றுக் கொள்ள முடியாத பல திருத்தங்களில் இரண்டைப் பற்றிக் கொஞ்சம் பேசுவது அவசியம் என நினைக்கிறேன். அதில் ஒன்று திரு. தகீர் கொண்டு வந்துள்ள திருத்தம் எண் 315. அதன்படி 9 ஆம் விதியில் உள்ள சட்ட விதிகளுக்கு எதிராக நடப்பது தண்டிக்கத்தக்க குற்ற மாகும். குறிப்பாக தீண்டப்படாதவர்களின் நிலையை, இதை முன் மொழிந்த என் நண்பர் தகீர் குறிப்பிட்டார். பொதுமக்கள் அனுபவிக் கும் வசதிகளை சமமான முறையில் தீண்டத்தகாதவர்கள் பெறுவதைத் தடுக்கும் நடவடிக்கைகளைக் குறிப்பிடுகையில் பொதுமக்கள் விழையும் இடங்களைத் தீண்டப்படாதவர்கள் உபயோகப்படுத்து வதை தடுக்கும் நடவடிக்கைகளைத் தண்டனைக்குள்ளாக்காவிடில் நமது சட்டங்களின் நோக்கத்தை அடைவதில் தோல்வியே அடை வோம். இந்த விஷயத்தைப் பொறுத்தமட்டில் அவருக்கும் இந்த அவையிலுள்ள மற்ற உறுப்பினர்களுக்குமிடையே எந்தவிதக் கருத்து வேற்றுமையும் இல்லை என்பதில் சந்தேகமில்லை. ஏனெனில் மற்ற சமூகங்கள் அனுபவிக்கும் அதே உரிமைகளை இந்த பரிதாபத்திற் குரிய வகுப்பினரும் அதே அளவில், யாரிடமிருந்தும் எந்தத் தடையு மின்றி பெறவேண்டும் என்பதே நம் எல்லோருடைய விருப்பமும் ஆகும். முக்கியமாக, தீண்டாமை சம்பந்தமான முக்கிய விதியான 11 ஆம் விதியின் சட்ட வழிவகைகள் இந்தக் குறிக்கோளை முற்றி லும் நிறைவேற்றியுள்ளதை அவர் காணவேண்டும். அதைக் குற்ற நடவடிக்கை என்று அறிவிப்பதை நாடாளுமன்றம் அல்லது மாநிலத் திற்கு விட்டுவிடுவதற்குப் பதிலாக அவர்களுடைய உரிமைகளில் எந்தத் தலையீடும் சட்டப்படி தண்டிக்கப்படக்கூடிய குற்றம் என்று அந்த விதியே கூறுகிறது. 9ஆவது விதியில் உள்ள சட்ட விதிமுறை களில் தலையிடும் நடவடிக்கைகளைப் பற்றி பொதுவாக ஒரு விதிமுறை அரசியல் சாசனத்தில் இருக்க வேண்டுமென்பது அவ ருடைய நோக்கமென்றால், இந்த மாதிரியான தலையீடுகள் சட்டப்படி தண்டிக்கக் கூடியவை என்று அறிவிக்கும் சட்டம் இயற்றுவதை கட்டாயமாக்கும் அரசியல் சாசனத்தில் உள்ள 27 ஆம் விதியை அவர் கவனத்திற்குக் கொண்டுவருகிறேன். நாடாளுமன்றத்துக்கு இந்த அதிகாரம் கொடுக்கப்பட்டிருப்பது ஏனென்றால் அடிப்படை உரிமைகள் சம்பந்தமான எந்த குற்ற நடவடிக்கைகளும் இந்திய எல்லைப் பரப்பு முழுவதும் ஒரே மாதிரியாக கையாளப்பட வேண்டு மென்ற எண்ணத்தால்தான். இந்த அதிகாரத்தை மாநிலங்கள் மற்றும் மாகாணங்கள் விருப்பப்படி ஒழுங்குபடுத்த விட்டுவிட்டால் நிலைமை

இப்படி இருக்காது. இந்த விஷயத்தைப் பொறுத்தமட்டில் அரசியல் சாசனத்தில், தேவையான அளவு சட்ட விதிமுறைகள் உள்ளன என்பதுடன் உண்மையிலேயே இதைவிட வேறு ஒன்றும் அவசியம் இல்லை என்று தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

பெண்கள், குழந்தைகள் என்ற சொற்களுடன், ஷெட்யூல்டு சாதிகள், ஷெட்யூல்டு பழங்குடியினர் என்ற சொற்களை இணைத்துக் கொள்ள வேண்டும் என்று பேராசிரியர் முன்மொழிந்துள்ள 323 ஆம் எண் திருத்தத்தைப் பொறுத்தவரையில், அதனால் நேர்மாறான விளைவுகளே ஏற்படும் என அஞ்சுகிறேன்.

ஷெட்யூல்டு சாதியினர் மற்றும் ஷெட்யூல்டு பழங்குடியினர்களைப் பொதுமக்களிடமிருந்து பிரித்து வைக்கக்கூடாது என்பதே நம் எல்லோரின் குறிக்கோளாக உள்ளது.

உதாரணமாக, சமுதாயத்தின் எல்லாக் குழந்தைகளுக்குமான பள்ளி ஒன்று கிராமத்தில் இருக்கும்போது, ஷெட்யூல்டு சாதியினருக்குத் தனியாக ஒரு பள்ளிக்கூடம் நிறுவுவதை நம்மில் எவரும் விரும்ப மாட்டார்கள் என நினைக்கிறேன். இந்தச் சொற்கள் சேர்க்கப்பட்டால், 'ஷெட்யூல்டு வகுப்பினருக்கு விசேஷ விதிமுறைகளை நாங்கள் இயற்றுவோம்' என்று கூற மாநிலங்களுக்கு ஊக்கம் அளிப்பது போல் ஆகும். பேராசிரியர் விரும்பியபடி அதில் திருத்தம் செய்தால், இப்படிக் கூறிக்கொண்டு இந்த விதியின் உள்ளே அவர்கள் ஒளிந்து கொள்வார்கள் என்று எனக்குத் தோன்றுகிறது. எனவே அது விரும்பக்கூடிய திருத்தம் என்று தோன்றவில்லை.

இப்பொழுது என் நண்பர் நாகப்பாவுக்கு விளக்கமளிக்கிறேன். இந்த விதியில் உபயோகப்படுத்தப்பட்டுள்ள சில சொற்களுக்கு அவர் என்னிடம் விளக்கம் கேட்டிருந்தார். 'கடை' என்ற சொல்லில் சலவை நிலையமும் மற்றும் முடிதிருத்தகமும் அடங்குமா என்பதே அவரது முதல் கேள்வி. 'கடை' என்ற சொல்லில் நிச்சயமாக முடிதிருத்தும் நிலையமும் சலவை நிலையமும் அடங்கும் என்பதில் எனக்குச் சிறிதுகூட ஐயமில்லை. பொது இயல்புகளைக் கொண்ட சொல்லாக கடைக்கு விளக்கம் தந்தால், சேவை ஏதாவது தேவைப்பட்டு வருபவருக்கு சேவை அளிக்கத் தயாராக இருப்பவர் சேவை வழங்கும் இடமே கடை என்பதைப் புரிந்து கொள்ளலாம். எனவே

சலவையாளர் தமது கடையில் அமர்ந்து கொண்டு ஒரு குறிப்பிட்ட முறையில் அதாவது வாடிக்கையாளரின் அழுக்குத் துணிகளை சலவை செய்து தரும் சேவையை வழங்கத் தயாராயுள்ளார். அதேபோன்று முடிதிருத்தும் நிலையத்தில் அமர்ந்திருப்பவர் நிலையத்தில் வரும் எவருக்கும் சேவை செய்யத் தயாராயுள்ளார்.

**மாண்புமிகு திரு. பி.ஜி. கேர்** *(பம்பாய்: பொது): மருத்துவ மனைகளும் மற்றும் வழக்குரைஞர்களின் அலுவலகங்களும் இதில் அடங்குமா?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நிச்சயமாக யார் சேவை வழங்கினாலும், அவை இதில் அடங்கும். பொது இயல்புகள் கொண்ட சொல்லாக அதை நான் உபயோகிக்கிறேன்.

நுழைவுக்கு அனுமதியளிப்பது என்ற குறுகிய பொருளில் 'கடை' என்ற சொல் உபயோகப்படுத்தப்படவில்லை என்பதை நான் சுட்டிக்காட்டியாக வேண்டும். சேவை அளிப்பதற்கான நிபந்தனைகளை ஒத்துக் கொண்டதன்பேரில், சேவைகள் வழங்கப்படும் பரந்த அர்த்தத்தில் அது உபயோகப்படுத்தப்படுகிறது.

'பொதுமக்கள் விழையும் இடங்கள்' என்பதில் சுடுகாடும் சேர்ந்துள்ளதா என்பதே என்னிடம் கேட்கப்பட்ட இரண்டாவது கேள்வி. மரணத்திற்குப் பிறகு தனக்கு என்ன நேரப்போகிறது என்பதைத் தெரிந்து கொள்ள யாருக்கும் அக்கறை இருக்காது என்பதால் சுடுகாட்டில் ஆர்வம் உள்ளவர்கள் ஒரு சிலரே இருக்கலாம் என்று நான் நினைத்திருக்கக்கூடும். ஆனால் என் நண்பர் திரு. நாகப்பா இந்த விஷயத்தில் ஆர்வமாக இருப்பதால், பொதுமக்கள் விழையும் இடங்கள் என்பதில் மயான பூமியும் அடங்கும் என்பதில் சந்தேகமில்லை என்பதைக் கூறியேயாக வேண்டும். ஆனால் மயான பூமி முழுவதுமாகவோ அல்லது பகுதியோ அரசின் செலவில் பராமரிக்கப்பட வேண்டும். நகராட்சி, உள்ளாட்சி அமைப்பு, தாலுகா நிர்வாகம் அல்லது மாகாண அரசு அல்லது கிராமப் பஞ்சாயத்து ஆகியவற்றால் பராமரிக்கப்படும் மயான பூமி இல்லை என்றிருக்கும் நிலையில், அங்கே யாருக்கும் உரிமையில்லை; ஏனெனில் அங்கே யாரும் உள்ளே செல்வதற்கான பொது இடம் எதுவும் இல்லை.

அரசோ அல்லது அரசின் நிதியிலிருந்தோ பராமரிக்கப்படும் மயான பூமி இருந்தால் ஒவ்வொருவருக்கும் அங்கு தனது உடலை புதைக்கவோ, எரிக்கவோ உரிமை உள்ளது.

பிறகு குளங்களில் குட்டைகளும் அடங்குமா என்று என் நண்பர் கேட்டார். நிச்சயமாக, இதற்கான பதில் 'ஆம்' என்பதுதான். அளவில் பெரிதான குளத்தில் குட்டையும் அடங்கத்தான் வேண்டும்.

ஆறுகள், ஓடைகள், கால்வாய்கள், நீர் ஆதாரங்கள் தீண்டப் படாதவர்களின் உபயோகத்திற்கு அனுமதிக்கப்படுமா என்று கேட்டார். கிணறுகள், ஆறுகள், ஓடைகள், கால்வாய்கள் நிச்சயமாக 9 ஆம் விதியின் கீழ் வரவில்லை. ஆனால் அவை 11 ஆம் விதியின்கீழ் வருகின்றன. அதன்படி மற்ற சமூகத்தினருக்கு ஒப்பான உரிமை களை தீண்டப்படாதவர்கள் அனுபவிப்பவதை தடை செய்வது குற்ற நடவடிக்கையாகும். எனவே எனது நண்பருக்கு என் பதில் என்னவெனில் ஆறுகள், ஓடைகள், கால்வாய்கள் போன்றவைகளை உபயோகிப்பதைக் குறித்து எந்தவித அச்சமும் அவருக்குத் தேவை யில்லை. ஏனெனில் இம்மாதிரி ஏதாவது தடைகள் இருப்பது தெரிய வந்தால் நாடாளுமன்றத்துக்கு 11 ஆம் விதியின் கீழ் சட்டம் எதுவும் நிறைவேற்ற முடியும்.

**திரு. எஸ். நாகப்பா:** நதியின் மார்க்கங்களை பற்றிய கருத்து என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தக் கட்டத் தில் இவ்விதியில் நான் எதையும் சேர்க்க முடியாது. ஆறுகள் மற்றும் கால்வாய்களைப் பொறுத்தமட்டில் 11 ஆம் விதியின் கீழ் போதுமான அளவு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன என்பதில் சந்தேகமில்லை.

**திரு. ஆர்.கே. சித்வா:** 'பொது' என்ற சொல்லிற்கான விளக்க மென்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என் நண்பர் இந்தியத் தண்டனைத் தொகுப்புச் சட்டத்திலிருந்து 'பொது' என்ற சொல்லின் பிற விளக்கங்களை எடுத்துரைத்தார். அதில் 'பொது' என்ற சொல் ஒரு குறிப்பிட்ட வகையைக் குறிக்கும் பொருளில்

உபயோகப்படுத்தப்பட்டுள்ளது. ஆனால் பொது என்ற சொல் இந்த இடத்தில் ஒரு விசேஷமான பொருளில் உபயோகப்படுத்தப்பட்டிருப்பதை அவரது கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். பொது இடம் என்பது மக்கள் அடிக்கடி செல்லும் இடமாகும். ஆனால் அது முழுவதுமாகவோ அல்லது பகுதியாகவோ அரசின் பராமரிப்பில் இருக்க வேண்டும். இந்தியத் தண்டனைச் சட்டத்தில் கொடுக்கப்பட்டுள்ள விளக்கத்திற்கும் இதற்கும் சம்பந்தமில்லை.

**திரு. மகாவீர் தியாகி** (ஐக்கிய மாகாணங்கள்: பொது): வெறும் சொல் மாற்றமே என்று கூறப்பட்ட திருத்தங்களின் நிலைமை என்னவாகும்? அவைகளில் சில அந்த குறிப்பிட்ட விதியில் அல்லது பிரிவில் சில அடிப்படையான மாற்றங்களை நோக்கமாகக் கொண்டுள்ளன என்று நான் அஞ்சுகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** அதைப் பொறுத்தவரையில் நான் ஒருவனே நீதிபதி. எனக்குத் தேர்ந்தெடுக்கும் அதிகாரத்தைக் கொடுத்துள்ளீர்கள். நான் அந்த அதிகாரத்தை எனக்குகந்த வழியில் உபயோகிக்கிறேன்.

**திரு. மகாவீர் தியாகி:** எனக்குத் தகவல் வேண்டும். உங்களுடைய முடிவையோ அல்லது உங்களது உரிமையையோ நான் எதிர்த்து வாதாடவில்லை. தேர்வு செய்யப்படாத திருத்தங்கள் பற்றிய அவையின் உணர்வு பரிசீலிக்கப்படுமா? இந்தத் திருத்தங்கள் வரைவுக் குழுவினால் அல்லது இதர அமைப்பு எதனாலாவது பரிசீலிக்கப்படுமா? தயவு செய்து, சிறு குழு ஒன்றை நீங்கள் அமைத்து, சொல் மாற்றமே உள்ளதாகக் குறிப்பிடப்படும் திருத்தங்களில் குறிப்பிட்ட விதி அல்லது பிரிவின் கருத்தில் மாற்றம் ஏதாவது இருக்கிறதா என்பதை அறிய வேண்டும். நீங்கள் கூறியதைக் குறித்து நான் வாதம் செய்யவில்லை. நீங்கள் தள்ளுபடி செய்துவிட்டதால் அவை எடுத்துக் கொள்ளப்படவில்லை. ஆனால் காற்புள்ளிகள், மற்றும் முற்றுப் புள்ளிகளுக்கும் கூட கொஞ்சம் மதிப்பு இருக்கிறது. என்னுடைய வேண்டுகோள் என்னவென்றால்...

**திரு. துணைத் தலைவர்:** ஒரு துணைக் குழுவை நியமிப்பதை விட வேறு ஒரு சிறந்த வழியை உங்களுக்குத் தெரிவிக்கலாமா? தங்கள் திருத்தங்களில் கொஞ்சம் கருப்பொருள் இருப்பதாக நினைப்

பவர்கள் நேரிடையாகவே வரைவுக் குழுவை அணுகட்டும். அப்படிச் செய்தால் அவர்களுக்கு போதிய கவனம் அளிக்கப்படுமென்று நிச்சய மாகக் கூறுகிறேன்.

**திரு. மகாவீர் தியாகி:** ஐயா எனக்கு இது மனநிறைவு அளிக் கிறது.

**திரு. முகமது தகீர்:** மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் நான் எழுப்பிய கேள்விகளுக்கு திருப்திகரமாக பதிலளித்ததால் திருத்தம் எண் 315ஐ திரும்பப் பெற அனுமதி வேண்டுகிறேன்.

*அவையின் அனுமதியுடன் திருத்தம் திரும்பப் பெறப்பட்டது.*

**திரு. துணைத்தலைவர்:** எஞ்சியுள்ள திருத்தங்களை அவை யின் வாக்களிப்புக்கு விடுகிறேன். முதல் திருத்தத்தை டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக் கொண்டுள்ளார்.

*(டாக்டர் அம்பேத்கரின் பரிந்துரைப்படி பின்வரும் திருத்தங்கள் ஏற்றுக் கொள்ளப்பட்டன.)*

*(1) ''திருத்தங்கள் பட்டியலில் உள்ள திருத்தம் எண் 276க்குப் பதிலாக பின்வருவதைச் சேர்த்துக் கொள்வது:*

*''விதி 9ன் பிரிவு (1)ன் இரண்டாவது பாரா, 1(அ) என்று குறிக்கப்படும், மற்றும் புதிதாக உருவாகும் பிரிவில் உள்ள குறிப்பாக' என்ற சொல் நீக்கப்படுகிறது.*

★ ★ ★

**திரு. துணைத் தலைவர்:** அடுத்தது எண் 280 ஆகும். இதை டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக் கொண்டுள்ளார் என்று நினைக்கிறேன். விஷயம் இதுதான்.

*(2) எண் 280-*

*''விதி 9ல் 'பாலினம்' என்ற சொல் வருமிடங்களிலெல்லாம் அதற்கடுத்து 'பிறந்த இடம்' என்ற சொற்களைச் சேர்க்க வேண்டும்.*

*(3) எண் 286 - (திரு. சி. சுப்பிரமணியத்துனடையது)*

*''விதி 9ன் பிரிவு (1)ன் (அ) உப பிரிவில் 'உணவு விடுதி சிற்றுண்டிச்சாலை' என்ற சொற்களுக்குப் பின் 'தர்மசாலா, முசாபிர்கானா' என்ற சொற்களைச் சேர்க்க வேண்டும்.*

*(4) எண் 303 - (திரு. குப்தாநாத் சிங்குடையது)*

விதி 9ன் பிரிவு (1)ன் இரண்டாவது பாராவில் உள்ள (ஆ) உப பிரிவில் 'கிணறுகள், குளங்கள்'' என்ற சொற்களுக்குப் பிறகு 'புனித ஸ்னானக் கட்டடங்கள்' என்ற சொற்களைச் சேர்க்க வேண்டும்.

(5) 314 -

விதி 9ன் பிரிவு (1)ன் இரண்டாவது பாராவின் (ஆ) உப பிரிவில் 'மாநிலத்தின் வருவாய்' என்ற சொற்களை எடுத்துவிட்டு பதிலாக 'மாநில நிதியங்கள்' என்று மாற்ற வேண்டும்.

(மற்ற திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன.)

திருத்தப்பட்ட விதி 9, அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

## விதி 10

[1]**திரு. துணைத் தலைவர்:** அடுத்த விதியை, புதிய விதி 9-அ-வைக் கவனிக்கலாமா? இங்குள்ள திருத்தங்கள், நெறிமுறைக் கோட்பாடுகள் என்ற முறையில் இருக்கின்றன, நான் அதை ஏற்கவில்லை. இப்பொழுது 10ஆம் விதியைப் பார்ப்போம்.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி** (சென்னை: பொது): இதை ஒத்தி வைக்கலாம் என்பதே என் கருத்து.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த விதியை ஒத்திவைக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** அப்படியென்றால் அடுத்துவரும் 10-அ விதியைப் பார்ப்போம்.

(திருத்தம் எண் 369 முன்மொழியப்படவில்லை.)

## விதி 11

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. நசிருதீன் அகமதின் திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்ள முடியாது.

---

1. அ.நி.விவாதங்கள், தொகுதி XI, 29 நவம்பர், 1948, பக். 664.
2. மேற்படி அதே நூல், பக். 669.

**திரு. துணைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் அவர்களே, திரு. ஷாவின் ஆலோசனைகளுக்குப் பதிலளிக்க விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர்:** இல்லை.

**துணைத் தலைவர்:** திருத்தம் எண் 372ஐ வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

விஷயம் இதுதான்:

''11ஆம் விதிக்குப் பதிலாக பின்வருவதை சேர்த்துக் கொள்வது:

''சமயம் அல்லது சாதி அடிப்படையில் எவரும் தீண்டப்படாதவராக நடத்தப்படவோ, கருதப்படவோ கூடாது. எந்த முறையிலாவது இதைப் பின்பற்றினால் அது சட்டப்படி தண்டிக்கப்படக்கூடிய குற்றமாகும்.

*(திரு. நசிருத்தீனின் திருத்தம் நிராகரிக்கப்பட்டது.)*

11ஆம் விதி ஏற்றுக் கொள்ளப்பட்டு, அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

**மதிப்பிற்குரிய உறுப்பினர்கள்:** ''மகாத்மா காந்திக்கு ஜே.''

*(இந்த விதியைப் பற்றி 6 உறுப்பினர்கள் பேசினார்கள். திரு. அம்பேத்கர் உரை ஏதும் நிகழ்த்தவில்லை.)*

## விதி 11 அ மற்றும் ஆ

★ ★ ★

**திரு. இஜட்.எச். லாரி** (ஐக்கிய மாகாணங்கள்: முஸ்லீம்): திரு. துணைத்தலைவர் அவர்களே, நான் முன்மொழிகிறேன்:

''11ஆம் விதிக்குப் பிறகு பின்வரும் புதிய விதியைச் சேர்க்க வேண்டும்.

''11-அ கடனுக்காக விதிக்கப்படும் சிறை தண்டனை நீக்கப்படுகிறது.

''11-ஆ வன்முறையுடன் கூடிய ராஜத்துரோகக் குற்றத்துக்கல்லாமல் மரண தண்டனை ஒழிக்கப்படுகிறது.''

ஐயா, இந்த இரண்டு உப பிரிவுகளும் மாறுபட்டவை. எனவே அவைகளைப் பரிசீலிக்கும்போதும், நிறைவேற்றும்போதும் இரண்

டையும் ஒன்றாக இந்த அவை ஏற்றுக்கொள்ளவோ, நிராகரிக்கவோ வேண்டியதில்லை. அவையின் விருப்பப்படி ஏதாவது ஒன்றை ஏற்றுக் கொண்டு மற்றதை நிராகரிக்கவோ, அல்லது இரண்டையுமே ஏற்றுக் கொள்ளவோ செய்யலாம்.

**திரு. துணைத் தலைவர்:** ஏன் தனித்தனியாக அதை முன் மொழியக்கூடாது?

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்: பொது): அந்தத் திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்ளவில்லை.

**திரு. துணைத் தலைவர்:** திருத்தத்தை நான் வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

## விதி 10

[2]**திரு. துணைத் தலைவர்:** நாம் இப்பொழுது 10 ஆம் விதியைப் பார்க்கலாம். அவையின் முன் உள்ள தீர்மானம் என்னவென்றால்,

10 ஆம் விதி அரசியல் சாசனத்தின் பகுதியாகிறது.

★ ★ ★

[3]**திரு. எச்.வி. காமத்:** ஐயா ஒரு விளக்கப் பிரச்சினை 'முதல் பட்டியலில் தற்காலிகமாகக் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலம் ஏதாவது'' என்ற சொற்கள் முதல் பட்டியலின் நான்கு பகுதிகளையும் குறிக் கின்றனவா என்பதை என் நண்பர் மதிப்பிற்குரிய திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யரிடமிருந்து தெரிந்து கொள்ளலாமா? முதல் பட்டியல் நான்கு பகுதிகளைக் கொண்டுள்ளது. மூன்று பகுதிகள் மாநிலங்களைக் குறிக்கின்றன. கடைசிப் பகுதி அந்தமான் நிக்கோபார்

---

1. அ.நி.விவாதங்கள், தொகுதி VII, 30 நவம்பர், 1948, பக். 672.
2. மேற்படி அதே நூல், பக். 672.
3. மேற்படி அதே நூல் பக். 678.

தீவுகளைக் குறிக்கிறது. மாநிலங்கள் எனின் பட்டியல் 1ல் 1, 11, 111 ஆம் பகுதிகளில் தற்காலிகமாக குறிப்பிடப்பட்டுள்ள மாநிலங்கள் ஆகும் என்று நாம் ஏற்கனவே நிறைவேற்றியுள்ள 1 ஆம் விதி உப பிரிவு (2)ல் குறிப்பிடப்பட்டுள்ளது. எனவே 1முதல் பட்டியலில் தற்காலிகமாகக் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலம் எதாவது என்பது முதல் பட்டியலின் நான்கு பிரிவிலும் குறிக்கப்பட்டுள்ள எல்லா மாநிலங்களையும் பிராந்தியங்களையும் குறிக்கிறதா என்பதை அவரிடமிருந்து தெரிந்து கொள்ளலாமா? அப்படியென்றால் இந்தத் தீர்மானத்தின் சொல்லாக்கம் மாற்றப்பட வேண்டும். முதலாவது பட்டியலின் முதல் நான்கு பிரிவுகளான I, II, III, IV பிரிவுகளில் உள்ள மாநிலம் அல்லது பிராந்தியங்களின் கீழ் என்று இந்த வாசகம் இருக்க வேண்டும். ஆனால் மாநிலம் என்ற சொல்லை மட்டுமே நீங்கள் வைத்துக் கொள்ள விரும்பினால் அப்பொழுது வாசகம் 'முதல் பட்டியலில் உள்ள I, II, III பிரிவுகளில் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலத்தில்' என்று இருக்கும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நாங்கள் எந்தப் பிரிவுகளையும் குறிப்பிடவில்லை என்பதை எளிதில் புரிந்து கொள்ளலாம். 'முதல் பட்டியல்' என்று மட்டுமே குறிப்பிட்டுள்ளோம், முதல் பட்டியலில் எல்லா மாநிலங்களும் அடங்கியுள்ளன.

**திரு. எச்.வி. காமத்:** 1 ஆம் விதி கூறுகிறது: ''தற்காலிகமாக முதல் பட்டியலில், I, II, III பிரிவுகளில் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலங்கள்'' என விதி எண் 1 கூறுகிறது. பிரிவு IVல் குறிப்பிடப்பட்டுள்ள பிராந்தியங்கள் நமது அரசியல் சாசனத்தின்படி மாநிலமல்ல.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** வேறுபாட்டைக் காணும் முயற்சியில் இறங்கக்கூடாது.

**திரு. எச்.வி. காமத்:** என்னுடைய கேள்விக்கு பதிலளிக்க முடியாதென்றால் நான் சொல்வதற்கு ஒன்றுமில்லை.

**திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர்:** நீங்கள் முதல் பட்டியலை நோக்கினால் இந்த அரசியல் சாசனத்தின் துவக்கத்திற்கு முன்பு ஆளுநரின் மாகாணங்கள் என்று அழைப்பவைகளை பிரிவு I குறிப்பிடுகிறது. இந்த அரசியல் சாசனத்தின் துவக்கத்திற்கு முன்பு டெல்லி, ஆஜ்மீர்-மேர்வார் மற்றும் பிற, தலைமை கமிஷனர்களின் மாகா

ணங்கள் என்று குறிப்பிடப்படுபவைகள் பிரிவு II கொண்டுள்ளது. இந்திய சமஸ்தானங்களை பிரிவு III குறிப்பிடுகிறது. 1 ஆம் விதியில் இந்த மூன்று வகைகளும் மாநிலங்கள் என்று விளக்கப்பட்டுள்ளன. பட்டியல் 1ன் பிரிவு IV அந்தமான் மற்றும் நிக்கோபார் தீவுகளைக் குறிக்கிறது. இவை மாநிலங்களல்ல, பிராந்தியங்களாகும்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, ஐயா, விவாதத்தின் போது எழுப்பப்பட்ட சில கேள்விகளுக்கு விடை அளிக்கும் முன் திரு. மிஸ்ராவின் திருத்தம் எண் 334ஐ நான் ஏற்றுக்கொள்ளவில்லை என்பதுடன் எனது நண்பர் நசிருத்தீனின் திருத்தங்கள் எண் 336 மற்றும் 337 ஆகிய இரண்டையும் ஏற்றுக்கொள்ளப் போவதில்லை என்பதை துவக்கத்தில் தெரிவித்துக் கொள்கிறேன். திரு. அனந்தசயனம் அய்யங்காரின் திருத்தம் எண் 77 ஆல் திருத்தம் செய்யப்பட்ட திரு. இமாம் கொண்டு வந்த திருத்தம் எண் 338ஐ ஏற்றுக்கொள்ளத் தயாராயிருக்கிறேன். என் நண்பர்கள் திரு. முன்ஷி மற்றும் திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யரின் திருத்தங்கள் எண் 81 மற்றும் 82 ஆல் திருத்தம் செய்யப் பட்ட திரு. கபூரின் 340 எண் திருத்தத்தையும் ஏற்றுக்கொள்கிறேன்.

334, 336, 337 எண்கள் திருத்தங்களைக் குறித்து என்னைப் பேச அழைக்கவில்லை என நினைக்கிறேன். விவாதத்தின்போது அதிகப் புயலைக் கிளப்பிய குடியிருப்புப் பிரச்சினை மற்றும் 10 ஆம் விதியின் (3) ஆம் பிரிவிலுள்ள 'பின்தங்கிய' என்ற சொல்லைப் பற்றியே என் உரையில் விளக்கவுள்ளேன். வரைவுக்குழு ஒருவேளை சில உறுப்பினர்களின் செல்வாக்கினால் ஓர் அரசியல் சாசனத்தை அளிப்பதற்குப் பதிலாக சட்ட வல்லுனர்கள் வேட்டையாட ஒரு வேட்டைக் களத்தைப் படைத்துள்ளது என்று வரைவுக்குழுவைப் பற்றி என் நண்பர் திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி குறைபட்டுக் கொண்டார். இந்த அரசியல் சாசனத்தின் மீதும் சட்ட விவாதங் களும், நீதித்துறை விளக்கங்களும் எழுப்பப்படாது என்று நான் கூறமுடியாது. சட்ட வல்லுனர்களின் வாதப் பிரதிவாதங்களுக்கு உட்படாமல் உலகில் எந்த அரசியல் சாசனமாவது இருந்ததாக ஒரு சந்தர்ப்பத்தையாவது காட்ட முடியுமா என்று என் நண்பர் திரு.

1. அ.நி.விவாதங்கள், தொகுதி VII, 30 நவம்பர், 1948, பக். 702.

டி.டி. கிருஷ்ணமாச்சாரியைக் கேட்டுக் கொள்கிறேன். அமெரிக்கா, கனடா மற்றும் இதர நாடுகளின் அரசியல் சாசனங்களைப் பற்றி மலை போல் குவிந்துள்ள சட்ட அறிக்கைகளைக் கவனிக்கும்படி அவரை முக்கியமாகக் கேட்டுக் கொள்கிறேன். எதிர்காலத்தில் இந்த அரசியல் சாசனம் சட்ட விளக்கத்திற்காக பெடரல் நீதிமன்றத்துக்குச் சென்றாலும் நான் வெட்கப்படப் போவதில்லை. அது ஒவ்வொரு வரைவுக் குழு மற்றும் அரசியல் சாசனத்தின் விதி என்றுதான் சொல்ல வேண்டும். இந்தப் பிரச்சினைக்காக நான் வருந்தப் போவதில்லை.

இப்பொழுது குடியிருப்பு என்ற சர்ச்சைக்குரிய பொருளைப் பற்றிப் பார்ப்போம். இந்தத் திருத்தத்தின் அடிப்படை நோக்கத்தை என் நண்பர் திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி போன்ற அறிவாளி ஒருவர் ஏன் புரிந்துகொள்ளத் தவறிவிட்டார் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** என் மாண்புமிகு நண்பர் அந்த விதியின் ஆரம்பத்திலேயே அந்த வார்த்தையைப் போடத் தவறிய அதே காரணத்தினால்தான்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என்னால் இதைச் சற்றும் புரிந்துகொள்ள முடியவில்லை. இந்தத் திருத்தத்தின் நோக்கத்தை விளக்குகிறேன். (மாகாணங்கள் மற்றும் இந்திய சமஸ்தானங்களின் உள்ளூர் அதிகார வரம்பு வழங்கப்பட நாம் திட்டமிட்டுள்ளதால், குறிப்பிட்ட ஒரு மாநிலத்தில் ஒரு குறிப்பிட்ட பதவியில் பணிபுரிய அங்கு குடியிருக்க வேண்டும் என்ற தகுதி அவசியமில்லை என்றாகிறது. ஏனெனில் குடியிருக்க வேண்டும் என்ற தகுதியை ஏற்படுத்தினால் இந்த அரசியல் சாசனத்தின்படி நாம் கொண்டு வந்துள்ள அல்லது கொண்டுவர உத்தேசித்துள்ள பொதுவான குடியுரிமையின் சமத்தன்மை கேள்விக்குறியாகிவிடும், இதுவே அவையிலுள்ள பலரின் கருத்தாக உள்ளது. எனவே என் கருத்துப்படி ஒரு மாநிலத்தில் பதவி எதையும் வகிப்பதற்கு அங்கு குடியிருக்க வேண்டுமென்ற தகுதி சரியானது அல்ல என்ற வாதம் முற்றிலும் சரியானதும் வலுவானதுமாகும்.) அதே நேரத்தில் பறவைகள் போன்று மாநிலத்துக்கு மாநிலம் பறந்து சென்று, ஒரு மாநிலத்தில் எந்தவித ஆதாரப்பிடிப்பும் இல்லாத ஒருவர், அங்கு நுழைந்து, பதவி ஒன்றுக்கு விண்ணப்பித்து, அதைப் பெற்று நல்ல வசதியுடன் வாழமுடியும். எனவே சில எல்லைக்

கோடுகள் அவசியமாகின்றன. இந்த விஷயத்தை ஆய்வு செய்த போது, குறிப்பிட்ட ஒரு பதவியில் அமர ஒரு குறிப்பிட்ட ஆண்டுகள் அங்கு வசித்திருக்க வேண்டுமென்ற தகுதி தேவை என்ற விதி பல மாகாணங்களில் நடைமுறைப்படுத்தப்பட்டுள்ளதைக் கண்டோம். எனவே திருத்தத்தில் முன்மொழியப்பட்டுள்ளதைப் போல் குடியிருப் பதை ஒரு தகுதியாக நிர்ணயிப்பது பொதுவாகச் சரியானது இல்லை. எனினும் விதிவிலக்காக எடுத்துக் கொள்வது அசாதாரணமானது அல்ல. பல்வேறு மாகாணங்களில் நடைமுறையிலுள்ள வழக்கத்தை மட்டுமே நாங்கள் பின்பற்றுகிறோம். எனினும், பதவிகளைப் பெறு வதற்கு சில காலம் அங்கு குடியிருந்திருக்க வேண்டும் என்ற தகுதியை பல மாகாணங்கள் அமல் செய்திருந்தாலும், இந்தக் கால அளவு பலவகைப்பட்டிருந்தது என்பதைக் கண்டோம். சில மாகாணங்கள் ஒருவர் அங்கே உண்மையிலே நிலையாகக் குடியிருப்பவராக இருக்க வேண்டுமென்று அறிவித்திருந்தது. அதன் பொருள் என்னவென்று தெரியவில்லை. மற்றவர்கள் பத்து வருடம் என்றும், வேறு சிலர் ஏழு வருடங்கள் என இப்படி விதித்திருந்தார்கள். எனவே ஒரு குறிப் பிட்ட கால அளவை தகுதியாகக் கொள்வது விரும்பப்பட்டாலும் அந்தத் தகுதிக்கான கால அளவு ஒரே சீராக இந்தியா முழுவதும் இருக்க வேண்டுமென்று விரும்பப்பட்டது. அந்த நோக்கம் நிறை வேற்றப்பட வேண்டுமானால் அதாவது தகுதிக்கான குடியிருக்கும் கால அளவு ஒரே சீராக இருக்க வேண்டுமென்றால் நாடாளுமன்றத் துக்கு அந்த அதிகாரத்தைக் கொடுப்பதன் மூலமே அந்த நோக்கத்தை நிறைவேற்ற முடியும். உள்ளூர் அமைப்புகளான மாகாணங்களுக்கோ அல்லது சமஸ்தானங்களுக்கோ அந்த அதிகாரத்தைக் கொடுப்பதன் மூலம் அல்ல. ஒரு குறிப்பிட்ட கால அளவு குடியிருப்பை வலியுறுத் துவதே இந்தத் திருத்தத்தின் அடிப்படையான நோக்கமாகும்.

என் நண்பர் திரு. காமத் எழுப்பிய கேள்வியைப் பொறுத்த வரை நான் அதை எடுத்துக் கொள்ளப் போவதில்லை. ஏனெனில் என் நண்பர் திரு. முன்ஷியும், வேறு ஒரு நண்பரும் அதைக் குறித்து விளக்கிவிட்டார்கள். திருத்தத்தின் மொழி அமைப்பு, அரசியல் சாசனத்தின் மற்ற விதிகளுக்கு இசைவாகவே இருக்கிறது என்பதை அவருக்குக் கூறிவிட்டார்கள்.

ஐயா, அடுத்து, 10 ஆம் விதியின் (3) பிரிவில் உபயோகப் படுத்தப்பட்டுள்ள 'பின்தங்கிய' என்ற சொல்லே இந்த அவையின் உறுப்பினர்களைக் கவலைக்குள் ஆழ்த்தியுள்ளது. அந்தக் கேள்விக்கு

இப்பொழுது வருவோம். இந்தக் குறிப்பிட்ட பிரிவில் 'பின்தங்கிய' என்ற சொல் உபயோகப்படுத்தப்பட்டிருப்பதின் முக்கியத்துவத்தையும், அவசியத்தையும் துல்லியமான உட்கருத்தையும் உறுப்பினர்கள் அறிந்துகொள்வதற்கு வசதியாக பொதுவான விளக்கங்களுடன் ஆரம்பிக்க விரும்புகிறேன். இந்தப் பொருள் குறித்த தங்கள் கருத்துக்களை உறுப்பினர்கள் பரிமாறிக் கொண்டால், மூன்றுவிதக் கண்ணோட்டங்கள் இருப்பதைக் காண்பார்கள். எல்லோரும் ஒத்துக் கொள்ளும் நடைமுறைசாத்தியமான முடிவுக்கு வரவேண்டுமென்றால் நாம் ஒரு சமரசத்திற்கு வருவது அவசியம். இந்த மூன்று கண்ணோட்டங்களில், முதலாவது, குடிமக்கள் யாவருக்கும் சமமான வாய்ப்புக்கள் இருக்க வேண்டுமென்பதாகும். ஒரு குறிப்பிட்ட பதவிக்குத் தகுதியான நபர் அந்தப் பதவிக்கு விண்ணப்பிக்கவும், தேர்வுக்கு அமரவும், அவர் அந்தப் பதவிக்கு தகுதியானவரா இல்லையா என்று சோதிக்கவும் எந்த வரம்பும் இருக்கக்கூடாது. சமத்துவான வாய்ப்புகள் என்ற இந்த கோட்பாட்டை செயல்படுத்துவதில் எந்தவிதத் தடங்கலும் இருக்கக்கூடாது என்பதே அவையின் பல உறுப்பினர்களின் விருப்பம். இந்த அவையின் ஒரு பகுதியினர் பெரும்பான்மையாகக் கொண்டுள்ள வேறு ஒரு கண்ணோட்டம், இந்தக் கோட்பாடு நடைமுறைப்படுத்தப்பட வேண்டுமென்றால் - அவர்கள் கருத்துப்படி இது முழுவதுமாக நிறைவேற்றப்பட வேண்டும். எந்த ஒரு சமுதாயத்திற்கோ வகுப்பினருக்கோ ஒதுக்கீடும் ஏதும் இருக்கக்கூடாது. எல்லா குடிமக்களும், தேவையான தகுதி பெற்றிருந்தால் அரசுப் பணிகளைப் பொறுத்த வரையில் அவர்கள் யாவரும் ஒரே சம நிலையில் வைக்கப்பட வேண்டும். நம்மிடம் காணப்படுவது இரண்டாவது கருத்தோட்டம் இதுதான். பிறகு நம்மிடையே ஒரு வலுவான கருத்துள்ளது. சமவாய்ப்பு அளிக்கப்பட வேண்டும் என்ற கொள்கை, கோட்பாட்டு ரீதியாகச் சரியானது என்றாலும் அதே நேரத்தில் இதுகாறும் நிர்வாகத் துறைக்கு வெளியேயிருந்த சில சமூகத்தினர்கள் அதில் சேர்வதற்கு சில விதிமுறைகள் செய்யப்பட வேண்டும். நான் கூறியபடி, முதலாவது, சம வாய்ப்பு அளிக்க வேண்டும். இரண்டாவதாக, நிர்வாகத் துறையில் சரியான வாய்ப்பில்லாத சில வகுப்பினர்களுக்கு ஒதுக்கீடு அளிக்கப்பட வேண்டும் என்ற முறையில், மூன்று கண்ணோட்டங்களுக்கிடையே சமரசம் உருவாக ஒரு விதிமுறையை உருவாக்க வேண்டியிருந்தது. இந்த மூன்று கருத்தோட்டங்களையும் இணைக்க வேண்டுமென்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் கவனத்தில் கொள்வார்கள் எனில் அரசியல் சாசனத்தின் 10 ஆம் விதி உப பிரிவு (3)ல் கொடுக்கப்பட்

டுள்ளதைத் தவிர வேறு வழிமுறை எதுவும் இருக்க முடியாது என்பதை அவர்கள் கண்டுகொள்வார்கள். சமவாய்ப்புகள் யாவருக்கும் இருக்க வேண்டுமென்ற கருத்துடையவர்களின் கண்ணோட்டம் 10 ஆம் விதி யின் உப பிரிவு (1)ல் கொடுக்கப்பட்டுள்ளதை அவர்கள் காண்பார்கள். அது ஒரு பொது இயல்பான கோட்பாடு. அதே நேரத்தில் நான் கூறியபடி இப்பொழுது வரலாற்றுக் காரணங்களினால் ஒரு வகுப் பினர் அல்லது சில வகுப்பினர்களின் கைகளில் அரசுப் பணிகள் இருக்கும் நிலைமையில் மாற்றம் ஏற்பட்டு அரசு பதவிகளில் மற்றவர்களுக்கும் வாய்ப்புக் கிடைக்க வேண்டும் என்ற கோரிக்கை களை இந்த வழிமுறை மூலமே அமைதிப்படுத்த முடியும். ஒருவேளை உதாரணமாக, அரசுப் பணிகளில் இதுவரை பணிக்கு அமர்த்தப் படாத வகுப்பினர்களின் கோரிக்கைகளை முழு அளவிற்கும் ஏற்றுக் கொண்டால், உண்மையில் என்ன நடக்குமென்றால் நாம் ஏற்றுக் கொண்டுள்ள சம வாய்ப்புக்கள் அளிக்கப்பட வேண்டுமென்ற முதல் கோட்பாட்டிற்கு முடிவு கட்டியவர்களாக ஆவோம். ஓர் உதாரணம் கொடுக்கிறேன். ஒரு சமூகத்திற்கு அல்லது சில சமூகங்களுக்கு அரசின் மொத்தப் பணிகளில் 70 விகிதாச்சாரம் ஒதுக்கப்பட்டது என்று வைத்துக் கொள்வோம். ஒதுக்கப்படாதது 30 சதமாக இருக்கும். சமவாய்ப்பு என்ற முதல் கோட்பாட்டின் பார்வையில் 30 சதமே பொதுவான விண்ணப்பதாரர்களுக்கு ஒதுக்கப்படும் என்றால் திருப்தி கரமாக இருக்குமா? என்னுடைய கருத்துப்படி இருக்காது என்பது தான். எனவே ஒதுக்கப்படும் இடங்கள் 10 ஆம் விதி (1) ஆம் பிரிவுக்கு இசைந்ததாக இருக்க வேண்டுமென்றால் குறைந்த அளவு இடங் களே ஒதுக்கப்பட வேண்டும். அப்பொழுதுதான் முதல் கோட்பாடு அரசியல் சாசனத்தில் உரிய இடத்தைப் பெற்றிருப்பதுடன் பய னுடன் செயல்படும். நாங்கள் இரண்டு விஷயங்களை, சமவாய்ப்பு மற்றும் அதே நேரத்தில் அரசுத் துறையில் பிரதிநிதித்துவம் இல்லாத இதுவரை வாய்ப்பளிக்கப்படாதவர்களின் கோரிக்கையை திருப்தி செய்வது ஆகிய இரு விஷயங்களையும் பாதுகாக்க வேண்டியுள்ளது. இந்த நிலைமையை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் புரிந்துகொண் டால், 'பின்தங்கிய' போன்றதொரு தகுதியைக் குறிக்கும் சொல்லை உபயோகிக்கவில்லை யென்றால், ஒதுக்கீடுக்காக செய்யப்பட்ட விதிவிலக்கு அந்த விதியையே இறுதியில் விழுங்கிவிடும். அந்த விதி யில் எதுவும் விஞ்சாது. 'பின்தங்கிய' என்ற சொல்லை சேர்க்கும் பொறுப்பை வரைவுக் குழு தன் தோளில் ஏற்றுக் கொண்டதற்கு இதுவே காரணம். இந்தச் சட்டமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட அடிப்படை உரிமையில் இது இடம்பெற்றிருக்கவில்லை என்பதை

ஒப்புக்கொள்கிறேன். தெளிவற்ற வரைவுகளை தயாரித்துள்ளார்கள் என்றும், சில சமயங்களில் பொருத்தமற்றவைகளாக அவை உள்ளன என்றும் மதிப்பிற்குரிய உறுப்பினர்களால் வரைவுக்குழு ஏளனம் செய்யப்பட்டுள்ளது. அரசியல் சாசன விதிகள் செயல்படுவதற்கு வழியின்றி, அதிகமான விதிவிலக்குகளை கொண்ட அரசியல் சாசனத்தை கொடுத்துள்ளார்கள் என்று வரைவுக்குழு மேலும் தாக்கப்பட்டிருக்கும். 'பின்தங்கிய' என்ற சொல் ஏன் உபயோகப்படுத்தப்பட்டது என்பதை நியாயப்படுத்துவதற்கு இதுவே போதும் என்று நினைக்கிறேன்.

சிறுபான்மையினரைப் பொறுத்த வரையில் 296 ஆம் விதியில் அதுபற்றி சிறப்பாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. சிறுபான்மையினருக்கு வழிமுறை ஏதாவது செய்யப்படும் என்று அதில் கூறப்பட்டுள்ளது. நிச்சயமாக நாம் விகிதாச்சாரம் எதையும் குறிப்பிடவில்லை. அந்தப் பிரிவிலிருந்தே இது தெளிவாக உள்ளது. ஆனால் எங்கள் கவனத்திலிருந்து சிறுபான்மையினரை முற்றிலும் நாங்கள் ஒதுக்கிவிடவில்லை. என்னிடம் யாரோ ஒருவர் கேட்டார், பிற்பட்ட வகுப்பினர் என்றால் என்ன? வரைவினைப் படிப்பவர் எவரும் ஸ்தல அரசே அதைத் தீர்மானிக்க விடப்பட்டுள்ளதைக் காண முடியும். அரசின் கருத்துப்படி எந்த சமூகம் பிற்பட்டிருக்கிறதோ அந்த சமூகமே பிற்படுத்தப்பட்ட சமூகமாகும். என் நண்பர் இந்த விதி நியாயப்படுத்தக்கூடியதா என்று கேட்கிறார். வறட்டுக் கொள்கை ரீதியிலான விடையை அளிப்பது கடினம்தான். தனிப்பட்ட முறையில் அது நியாயப்படுத்தக்கூடிய விஷயமே, ஸ்தல அரசு இந்தப் பிரிவில் பெரும் அளவிலான இடங்களை ஒதுக்கீடு செய்தது. அப்படியென்றால் பெடரல் நீதிமன்றம் மற்றும் உச்சநீதிமன்றம் சென்று, சமவாய்ப்பு அளிக்கும் விதியை பயனில்லாமல் செய்யும் அளவுக்கு ஒதுக்கீடு அளிக்கப்பட்டுள்ளது என்று ஒருவர் முறையிடலாம். அப்பொழுது அந்த மாநில அரசு நியாயமாகவும் விவேகத்துடனும் நடந்து கொண்டுள்ளதா என்பதைக் குறித்து நீதிமன்றம் ஒரு முடிவுக்கு வரும். நியாயமானவர் யார் விவேகமானவர் யார் என்ற கேள்வியை திரு. கிருஷ்ணமாச்சாரி எழுப்பினார்? இது நீதிமன்ற வழக்காடல் விஷயங்கள். நிச்சயமாக இது வழக்காடல் விஷயங்கள்தான். நியாயமான மனிதர்கள் விவேகமான மனிதர்கள் என்பது பற்றி பல சட்டங்களில் விளக்கப்பட்டுள்ளதை என் மதிப்பிற்குரிய நண்பர் தெரிந்திருப்பார். சொத்து மாற்றுச் சட்டத்தை அவர் பார்த்தாலே போதும். பல வழக்குகளில் ஒரு நியாயமான மனிதன் மற்றும் விவேகமான மனிதன்

என்ற சொற்கள் மிக அழகாக விளக்கப்பட்டுள்ளன. எனவே அதை விளக்க நீதிமன்றத்துக்கு எந்தக் கஷ்டமும் இருக்காது. எனவே நான் ஏற்றுக் கொண்டுள்ள திருத்தங்களை அவையும் ஏற்றுக்கொள்ளும் என நம்புகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** ஒவ்வொன்றாக திருத்தங்களை வாக்களிக்க விடப்போகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** 342 எண் திருத்தத்தை நான் ஏற்றுக் கொள்கிறேன் என்பதை தெரிவிக்க மறந்து விட்டேன்.

*(பின்வரும் திருத்தங்கள் டாக்டர் அம்பேத்கரால் ஏற்றுக்கொள்ளப் பட்டதுடன் அவையும் ஏற்றுக்கொண்டது.)*

''(i) 10 ஆம் விதியில் பிரிவு (1)ல் 'வேலை வாய்ப்பு விஷயங்கள்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'வேலை வாய்ப்பு விஷயங்கள் சம்பந்தமாக அல்லது அலுவலில் அமர்த்துவது சம்பந்தமாக' என்ற சொற்களைப் போட வேண்டும்.

(ii) 10 ஆம் விதியின் பிரிவு (2)ல் 'எதற்கும் தகுதியில்லாத' என்பதற்குப் பிறகு 'வேலைவாய்ப்பு அல்லது' என்ற சொற்களைச் சேர்க்கவும்.

(iii) 10 ஆம் விதியின் பிரிவு (2) 'பிறந்த இடம்' என்ற சொற்களுக்குப் பிறகு 'இந்தியாவில்' என்ற சொல்லைச் சேர்க்கவும்.

(ii) 10 ஆம் விதியின் பிரிவு (2)ல் 'பிறப்பு' என்ற சொல்லுக்குப் பிறகு 'குடியிருப்பு' என்ற சொல்லைச் சேர்க்கவும்.

''2(அ) முதல் பட்டியலில் தற்காலிகமாக குறிக்கப்பட்டுள்ள மாநிலம் ஒன்றின் அல்லது உள்ளாட்சி அல்லது வேறு அதிகார அமைப்பின் ஆட்சி எல்லைக்குள் ஒரு தரத்திலான அல்லது பலதரப்பட்ட வேலைவாய்ப்பு அல்லது பதவி அளித்தல் குறித்து அத்தகைய வேலை வழங்குவதற்கு அல்லது பதவி அளிப்பதற்கு முன்பு அந்த மாநிலத்திற்குள்ளோ ஒன்றிய எல்லைக்குள்ளோ குடியிருக்க வேண்டும் என்று கட்டாயம் எதையும் வலியுறுத்தும் சட்டத்தை நாடாளுமன்றம் இயற்றுவதற்கு இந்த விதியில் உள்ள எதுவும் தடை ஆகாது.

10 ஆம் விதியின் (2) ஆம் பிரிவுக்கு பின்வரும் புதிய பிரிவு சேர்க்கப்பட வேண்டும்:

(v) 10 ஆம் விதி (2) ஆம் பிரிவுக்குப் பிறகு 'தகுதியற்ற' என்ற சொல்லுக்குப் பிறகு 'அல்லது எதிராகப் பாகுபாடு' என்ற சொற்களைச் சேர்க்கவும்.

*(எஞ்சிய எட்டுத் திருத்தங்களும் நிராகரிக்கப்பட்டன.)*

திருத்தப்பட்ட 10 ஆம் விதி அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

## விதி 12

[1]**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** ஐயா, நான் முன்மொழிகிறேன்:

> "12 ஆம் விதியில் 1 ஆம் பிரிவில் பட்டம் என்ற சொல்லுக்குப் பிறகு 'ராணுவ அல்லது கல்வியில் புலமைக்காக அன்றி' என்ற சொற்களைச் சேர்க்க வேண்டும். ஐயா, திருத்தப்பட்ட 12 ஆம் விதி (1) ஆம் பிரிவு இப்படி இருக்கும்:
>
> ராணுவ அல்லது கல்வியில் புலமைக்காக அன்றி வேறு எந்த பட்டமும் அரசால் வழங்கப்படக்கூடாது.

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, என் நண்பர் திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி முன்மொழிந்த திருத்தத்தை ஏற்றுக் கொள்கிறேன்.

எனது நண்பர் திரு. நசிருத்தீன் அகமது முன்மொழிந்துள்ள திருத்தத்தின்படி 'ஏற்றுக்கொள்ளப்பட்டது' என்ற சொல்லுக்குப் பதில் 'அறிந்துகொள்ளப்பட்டது' என்ற சொற்களைச் சேர்க்க வேண்டும், ஒரு குடிமகன் பட்டம் ஒன்றை ஏற்றுக்கொண்டால் அந்தச் செயலை செல்லுபடியாகாமல் செய்யும் தண்டனைச் சட்ட விதிமுறை அரசியல் சட்டத்தில் என்ன இருக்கிறது? என்னுடைய பதில் மிகவும் எளிமையானதுதான். இந்த விதியின் சட்டப் பிரிவிற்கு மாறாக யாரேனும் ஒருவர் பட்டத்தை ஏற்றுக்கொள்ளும் நேர்வில் என்ன நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பதைக் குறித்து அரசியல் சாசனத்தின்படி நாடாளுமன்றம் தன் எஞ்சிய அதிகாரத்தின்படி தாராளமாகச் சட்டம் இயற்றலாம். அவை முன் அவர் வைத்த பிரச்சினைக்கு, இது போதுமான சட்டத் தீர்வாக இருக்கும் என்று நினைத்தேன்.

---

1. அ.நி.வி. தொகுதி VII, 30 நவம்பர், 1948, பக். 704.
2. அதே நூல் பக். 708-709.

நான் சரியாகப் புரிந்து கொண்டிருந்தால், திரு. காமத் எழுப்பிய இரண்டாவது விஷயம் இதுதான். நீதிமன்றம் சென்றால் இந்த உரிமை செல்லுபடியாகுமா என்பதே அவர் வினா. என்னுடைய பதில் மிகவும் எளிமையானதுதான். அது நீதிமன்றத்தில் வெற்றி பெறும் உரிமை அல்ல. பட்டங்களை நிராகரிப்பது என்பது குடியுரிமையை தொடர்ந்து அனுபவிப்பதற்கான ஒரு நிபந்தனை. அது ஒரு உரிமை அல்ல. குடிமகன் ஒருவருக்கு விதிக்கப்பட்டுள்ள நிபந்தனை அது, அதாவது அவர் இந்த நாட்டின் குடிமகனாகத் தொடர்ந்து இருக்கையில், சில நிபந்தனைகளுக்கு அவர் கட்டுப்பட்டாக வேண்டும். அவர் இந்தப் பட்டத்தை ஏற்றுக்கொள்ளக்கூடாது என்பது ஒரு நிபந்தனை. ஏனெனில் எவரேனும் 12 (1) அல்லது (2) விதியின் சட்டப் பிரிவுகளை மீறினால், சட்டப்படி அவர்களை என்ன செய்ய வேண்டுமென்று நாடாளுமன்றம் தீர்மானிக்கையில் சில தண்டனைகளுக்கு வழிவகை செய்யப்படலாம். அவருடைய குடியுரிமை பறிக்கப்படுவது, தண்டனைகளில் ஒன்றாக இருக்கலாம். எனவே, இந்த விதியைப் புரிந்து கொள்வதில் உண்மையிலேயே எந்த கஷ்டமும் இருக்க முடியாது. ஏனெனில் அது குடியுரிமையுடன் சேர்ந்த ஒரு நிபந்தனைதான்; ஆனால் ஒரு நீதிமன்றத்தால் ஏற்றுக்கொள்ளக் கூடிய உரிமையல்ல.

**திரு. எச்.வி. காமத்:** தற்போது ஏற்கனவே அளிக்கப்பட்டுள்ள பட்டங்களை அங்கீகரிப்பதைப் பற்றியதே என் கேள்வி.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என் நண்பர் திரு. நசிருத்தீன் அகமதுக்கு பதிலளிக்கையில் நான் கூறியது போல் நாடாளுமன்றம் அதன் விருப்பப்படி நடவடிக்கை எடுக்க முடியும். இந்தப் பட்டங்களை நாங்கள் ஏற்றுக் கொள்ள மாட்டோம் என்பது ஒரு நடவடிக்கையாக இருக்கலாம்.

**திரு. எச்.வி. காமத்:** இந்தக் கோட்பாட்டை டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக்கொள்ள விரும்புகிறேன். பிறகு நாடாளுமன்றம் அதன் விருப்பப்படி நடந்து கொள்ளட்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எவரும் பட்டம் எதையும் ஏற்றுக் கொள்ளக்கூடாது என்று அரசியல் சாசனம் கூறினால் இந்த சட்டவிதியை யாரும் மீறக்கூடாது என்று உத்தரவாதம்

செய்வது நாடாளுமன்றத்தின் கடமை என்பது அனைவரும் புரிந்து கொள்ளக் கூடியதே.

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்** (டாக்டர் எச்.சி. முகர்ஜி): இந்த அவையின் விருப்பத்தை நிறைவேற்ற நாம் முயற்சி செய்வோம்.

12 ஆம் விதி குறித்த விவாதத்தை முடித்து விட்டோம். டாக்டர் அம்பேத்கரும் பதிலளித்து விட்டார். அதைக் குறித்துத் திரும்பவும் பேச விரும்புவர்களுக்கு இடம் அளிக்க முடியாது என்று வருத்தத்துடன் கூறிக் கொள்கிறேன். ஒன்றன் பின் ஒன்றாக திருத்தங்களை வாக்களிப்புக்கு விடுகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** விஷயம் இதுதான்:

> 12 ஆம் விதியில் 'பட்டம்' என்ற சொல்லுக்குப் பிறகு 'ராணுவ அல்லது கல்வித் துறையில் சிறந்த புலமைக்காக அன்றி' என்ற சொற்களைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

திரு. கிருஷ்ணமாச்சாரியின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப் பட்டது. (மற்ற 4 திருத்தங்களும் நிராகரிக்கப்பட்டன.)

திருத்தம் செய்யப்பட்ட 12 ஆம் விதி அரசியல் சாசனத்தில் சேர்க்கப்பட்டது.

★ ★ ★

## 13 ஆம் விதி

[2]**மகபூப் அலி பேக் சாகிப் பகதூர்:** ... வரைவுக் குழுவின் தலைவருக்கு இந்தக் கேள்வியைக் கேட்கிறேன் இந்தச் சூழ்நிலைகளில், அதாவது சட்டமன்றம் அல்லது ஆட்சித்துறைப் பிரிவு (1)ல் குறிப்பிடப்பட்டுள்ள உரிமைகளை குறைக்க ஒரு சட்டத்தையோ

1 அ.நி.விவாதங்கள், தொகுதி XI, டிசம்பர் 1, 1948, பக். 711
2. அதே நூல் பக். 735.

ஆணையையோ பிறப்பிக்க அரசியல் சாசனத்தில் வழிவகை செய்யப் பட்டுள்ள நிலையில், அந்த ஆணையில் அல்லது சட்டத்தின் தகைமையை நீதிமன்றம் ஆய்வு செய்து சட்டம் எதையாவது செல்லாது என்றோ அல்லது ஏதாவது சட்டம் நியாயமற்றது என்றோ அறிவிக்கலாம். என்னுடைய கருத்துப்படி அவதூறு, கூட்டம் கூடுதல் சம்பந்தமாக சட்டமியற்றும் அதிகாரம் அரசுக்கு அரசியல் சாசனத் திலேயேத் தெளிவாகக் கொடுத்திருப்பதன் மூலம் நீதிமன்றத்தின் சட்ட அதிகாரம் நீக்கப்பட்டுள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்: பொது): ஐயா, என் மதிப்பிற்குரிய நண்பரை குறுக்கிடலாமென்றால், நான் அவருடைய கருத்தைப் புரிந்துகொண்டுள்ளேன். அதைப் பாராட்டு வதுடன் விஷயம் என்ன என்பதை அவருக்கு மனநிறைவு அளிக்கும் படி பதிலளிக்க தயாராய் உள்ளேன். எனவே விஷயத்தை மேலும் விரிவுபடுத்துவது அவசியமற்றது.

★ ★ ★

[1]**பண்டிட் தாகூர் தாஸ் பார்கவா:** ... அதேபோன்று அமைதி யான முறையில் ஆயுதமின்றி கூட்டம் கூடும் உரிமை உங்களுக்கு உள்ளது. மேலும் 1947ல் ஒரு சட்டம் நிறைவேற்றப்பட்டது. அதன்படி இந்த அமைதியான கூட்டத்தின் மீது எச்சரிக்கை எதுவும் கொடுக் காமல் ஆகாயத்திலிருந்து குண்டு வீசலாம் என்றுள்ளது. இந்த மாதிரியான அமைதியாகக் கூட்டம் கூடுவதற்கு எதிராக இன்று நம்மிடையே பல சட்ட விதிகள் உள்ளன. அதே போன்றுதான் கழகங்கள் மற்றும் சங்கங்கள் மீதான தடைகள் நிலையும் உள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தப் பிரிவு கள் குறித்து இவ்விதம் பொதுவான முறையில் உறுப்பினர் பேசலாமா?

**திரு. துணைத்தலைவர்:** இதைத்தான் உறுப்பினரின் கவனத் திற்குக் கொண்டு வர முயற்சிக்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது அவையின் நடைமுறையைத் தவறாகப் பயன்படுத்துவதாகும். இதை என்னால்

1 அ.நி.விவாதங்கள், தொகுதி XI, டிசம்பர் 1, 1948, பக். 738.

கூறாமல் இருக்க முடியாது. ஒரு திருத்தத்தைப் பற்றி பேசும்போது அந்தத் திருத்தத்தின் எல்லைக்குள் பேச்சு இருக்க வேண்டும். அந்த விஷயம் குறித்து மனம் போனப் போக்குப்படி பேச இந்த வாய்ப்பை அவர் பயன்படுத்தக்கூடாது.

**பண்டிட் தாகூர்தாஸ் பார்கவா:** நான் திருத்தம் குறித்தே பேசுகிறேன். ஆனால் டாக்டர் அம்பேத்கர் பேசும் முறையும் பாணியும் மிகவும் கண்டிக்கத்தக்கதாக உள்ளது.

**திரு. துணைத் தலைவர்:** தலைவரைத் தவிர எல்லோரும் சினம் அடைந்துவிட்டனர். (சிரிப்பு) திரு. பார்கவாவை இப்பொழுது தான் எச்சரித்தேன். டாக்டர் அம்பேத்கர் எழுந்தவுடன் அவரையும் எச்சரிக்க எண்ணினேன். அவர் உணர்ச்சியால் உந்தப்பட்டுள்ளார். இவ்வளவு தூரம் உணர்ச்சிவசப்படுவதற்கு எந்தக் காரணமும் எனக்குத் தெரியவில்லை. பல நாட்களாக அவர் அளவுக்கு மீறி வேலையில் ஈடுபட்டிருக்கிறார். அவருடைய நிலையை புரிந்து கொள்கிறேன். இந்த நிலையில் விஷயத்தை விட்டுவிடுமாறு அவையைக் கேட்டுக்கொள்கிறேன்.

இப்பொழுது பார்கவா நிலைமையைப் புரிந்து கொண்டிருப்பார் என நினைக்கிறேன்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் முன்மொழிகிறேன்:

"திருத்தம் 454ஐ பொறுத்தமட்டில்....."

**திரு. எச்.வி. காமத்:** ஒரு ஒழுங்குப் பிரச்சினை, 454 ஆம் திருத்தம் முன்மொழியப்பட்டு விட்டதா?

**திரு. துணைத் தலைவர்:** தயவு செய்து தொடருங்கள்.

1 அ.நி.விவாதங்கள், தொகுதி XI, டிசம்பர் 1, 1948, பக். 740 -42.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ''திருத்தங்கள் பட்டிய லிலுள்ள 454 ஆம் திருத்தத்தைப் பொறுத்தவரையில் -

(i) 13 ஆம் விதியின் பிரிவுகள் (3), (4), (5) மற்றும் (6)ல் 'நடைமுறையி லுள்ள சட்டங்கள் எதுவும்' என்ற சொற்களுக்குப் பிறகு 'விதிக்கின்ற அள விற்கு' என்ற சொற்களைச் சேர்த்துக் கொள்வதுடன், மேலும்

(ii) 13ஆம் விதியின் பிரிவு (6)ல் 'குறிப்பாக' என்ற சொல்லுக்குப் பிறகு, அதிகார அமைப்பு தேவைப்பட்ட அளவு வரையறை வகுப்பதற்கு அதிகார மளிப்பதற்கும் அல்லது அதை வகுப்பளிப்பதற்கு அரசு சட்டம் எதையும் நிறைவேற்றுவதற்கும் மேற்குறிப்பிட்ட பிரிவில் எதுவும் தடைசெய்யாது.

**சையத் அப்தூர் ருஃப் (அசாம்: முஸ்லீம்):** ஓர் ஒழுங்குப் பிரச்சினை, ஐயா, டாக்டர் அம்பேத்கரின் திருத்தம், 454 ஆம் திருத்தத்திற்கு திருத்தமாக இருக்க முடியாது என்று நினைக்கிறேன். 454ஆம் திருத்தம் (2) (3) (4) (5) மற்றும் (6) ஆவது பிரிவுகளை நீக்க வேண்டும் என்று கூறுகிறது. ஆனால் டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் அந்தப் பிரிவுகளில் சில சொற்களைச் சேர்க்க வேண்டு மென்று கூறுகிறது. எனவே அந்தத் திருத்தத்திற்கு திருத்தமாக இருக்க முடியாது.

**திரு. துணைத் தலைவர்:** மூல பிரிவுகளை நீக்காமல் வைத்துக் கொண்டு அதில் சில நிபந்தனைகளைச் சேர்க்கவே டாக்டர் அம்பேத் கர் உண்மையாக விரும்புகிறார் என்று எனக்குத் தோன்றுகிறது. எனவே அது சரியாக உள்ளது என்று விதிக்கிறேன்.

**திரு. எச்.வி. காமத்:** மூலத் திருத்தத்தை நிராகரிக்கும் விளைவே இதனால் ஏற்படும்.

**திரு. துணைத் தலைவர்:** தயவு செய்து உங்கள் இடத்தில் அமருங்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** 13 ஆம் விதி மற்றும் 8 ஆம் விதிகளைப் பொறுத்தமட்டில், 13 ஆம் விதியின் காப்பு வாசகங்களில் 'நடப்பிலுள்ள சட்டம்' என்ற சொற்றொடரை சில இடங்களில் காணலாம். அதுபற்றி நடைபெற்ற விவாதத்தில் நடப்பிலுள்ள சட்டம் குறித்து என்ன செய்ய உத்தேசிக்கப்பட்

டுள்ளது என்பதைப் பற்றி தவறான கருத்துகள் அதிகமாக எழுந்துள்ளன. அடிப்படையான விதி, 8 ஆம் விதியாகும். அரசியல் சாசனத்தில் இந்தப் பகுதியில் உள்ள அடிப்படை உரிமைகளுக்கு முரணாக உள்ள நடைமுறையிலுள்ள எந்தச் சட்டமும் செல்லுபடியாகாது என்று அது சந்தேகத்துக்கு இடமின்றி சுட்டிக்காட்டுகிறது. அது ஒரு அடிப்படையான கொள்கை. பயிற்சி பெற்ற வழக்குரைஞர் எவரையும் 13 ஆம் விதியின் உப பிரிவில் வரும் 'நடப்பிலுள்ள சட்டங்கள்' என்ற சொற்றொடரை விளக்கும்படி கேட்டால், அடிப்படை உரிமைகளுக்கு முரண்படாத நடப்பிலுள்ள சட்டங்கள் என்று விடை கூறுவார் என்பதில் எந்த ஐயப்பாடும் இல்லை. உப பிரிவுகளில் வரும் 'நடப்பிலுள்ள சட்டங்கள்' என்ற சொற்றொடர் அவ்வாறுதான் விளக்கப்படும் என்பதில் எந்த சந்தேகமுமில்லை. 8ஆம் விதியில் குறிப்பிடப்பட்டுள்ள சட்ட வரையறையை 'நடப்பிலுள்ள சட்டங்கள்' என்ற சொற்றொடர் வரும் இடங்களிளெல்லாம் திரும்ப எடுத்துச் செல்ல வேண்டியது அவசியமில்லை. சட்ட விளக்கத்திற்கான விதியின் படி, எந்தச் சட்டத்திற்கும் விளக்கம் பெற வேண்டுமென்றால் சம்பந்தப்பட்ட எல்லா பிரிவுகளையும் கணக்கிலெடுத்துக் கொண்டு, ஒன்றுக்கொன்று இசைவான வகையில் அந்தச் சட்டம் விளக்கப்பட வேண்டும். 8ஆம் விதியில் நடப்பிலுள்ள சட்டங்கள் அடிப்படை உரிமைகளுக்கு முரணாக இருக்கும் பட்சத்தில் செல்லுபடியாகதாகி விடும் என்ற சட்டக் கொள்கை 8 ஆம் விதியில் முற்றிலும் தெளிவாகக் கொடுக்கப்பட்டுள்ளது என்பதை வரைவுக்குழு உணர்ந்துள்ளது. 'நடப்பிலுள்ள சட்டங்கள்' என்ற சொற்றொடர் வரும் இடங்களிலெல்லாம் இந்த நிபந்தனையைக் குறிப்பிட வேண்டியது அவசியமில்லை என்று வரைவுக்குழு கருதியது. அந்தப் பிரிவை இந்த நோக்கில் பலர் பார்க்கவில்லை என்பதைக் காண்கிறேன். 'நடப்பிலுள்ள சட்டங்கள்' என்ற சொற்றொடரை அவர்கள் சந்திக்கும்போது 8 ஆம் விதியில் கொடுக்கப்பட்டுள்ள வரையறையை அவர்கள் மறந்து விடுகிறார்கள். சாதாரண மக்கள் இந்தத் தவறுதலான முடிவுக்கு வருவதைத் தடுக்க, (3) (4) (5) மற்றும் (6) உப பிரிவுகளுக்கு இந்தத் திருத்தத்தைக் கொண்டு வந்திருக்கிறேன். உதாரணத்திற்கு (3) உப பிரிவு என்னுடைய திருத்தத்துடன் எப்படி உள்ளது என்பதைப் படித்துக் காட்டுகிறேன்.

மேற்குறிப்பிட்டுள்ள பிரிவின் (ஆ) உட்பிரிவின் எதுவும், பொதுமக்கள் நலன் கருதி வேண்டிய தடைகளை விதிக்கின்ற நடப்

பிலுள்ள சட்டத்தின் செயல்பாட்டையோ அத்தகைய சட்டம் எதனை யும் அரசு இயற்றுவதையோ, தடை செய்வதில்லை.

திரு. பார்கவாவின் திருத்தத்தை ஏற்றுக்கொண்டு 'நியாயமான' என்ற வார்த்தையையும் சேர்த்துக் கொள்கிறேன்.

அந்த உப விதியால் வழங்கப்படும் உரிமையை அனுபவிப் பதில் பொதுமக்களின் நலன் கருதி நியாயமான தேவைப்படும் தடைகளை விதிக்க இப்பொழுது 'அது விதித்துள்ள அளவிற்கு' என்ற சொற்கள் விஷயத்தை முழுமையாக ஆக்கியதுடன், நியாய மான அளவு வரையறைகளை விதித்துள்ள அளவுக்கு நடப்பிலுள்ள சட்டத்திற்கு விலக்களிக்கப்பட்டுள்ளது என்பதில் சந்தேகத்திற்கு இடமில்லை. ஒரு குறிப்பிட்ட அளவில் நிலவிலுள்ள சட்டத்திற்கு விலக்களிக்கப்பட்டுள்ளது என்பதில் எவ்வித சந்தேகமும் இருக்க முடியாது. அடிப்படை உரிமைகளுடன் முரண்படாமல் இருப்பதால் தான் அந்தக் குறிப்பிட்ட அளவிற்கு அதற்கு விலக்களிக்கப்பட் டுள்ளது.

(6) ஆம் உப பிரிவு வேறுவிதமாகச் சொல்லாக்கம் செய்யப்பட்டுள்ளது. ஏனெனில் (3) (4) மற்றும் (5) உப பிரிவுகளில் உள்ள சொற்களிலிருந்து மாறுபட்ட சொற்கள் இதில் உபயோகப்படுத்தப்பட்டுள்ளன. அதன் உண்மை யான பொருள் என்ன என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் அதைப் படித்தே புரிந்து கொள்ளலாம்.

என் நண்பர் பண்டிட் தாகூர் தாஸ் பார்கவா வரைவுக்குழு விற்கு எதிராக கண்டனக் கணைகளை அள்ளி வீசினார். நிலவிலுள்ள சட்டங்கள் காலாவதியாகாமல் பார்த்துக் கொள்வதில் முறை தவறிய வழியில் கூட முயற்சித்துள்ளனர் என்று வரைவுக்குழுவைக் குற்றம் சாட்டியுள்ளார். வரைவுக்குழு என்ன செய்ய வேண்டுமென்று அவர் விரும்புகிறார் என்பது எனக்குப் புரியவில்லை. அரசியல் சாசனம் அமலுக்கு வரும் நாளிலிருந்து நடப்பிலுள்ள சட்டங்கள் யாவும் செல்லுபடியாகாமல் போய்விடும் என்று நாங்கள் நேரடி யாகக் கூற வேண்டுமென்று அவர் விரும்புகிறாரா?

**பண்டிட் தாகூர்தாஸ் பார்கவா:** முற்றிலும் அப்படி என்று சொல்ல முடியாது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அரசியலமைப்புச் சட்டத்தின் ஷரத்துக்களுக்கு தற்போதுள்ள சட்டங்கள் முரண்பட்ட வகையில் இருப்பின், அவை ரத்தாகுமென்று நாங்கள் கூறியுள்ளோம். இன்றுள்ள சட்டங்கள் தொடர்ந்து அமலில் இருப்பதன் அடிப்படையில்தான் இந்நாட்டின் நிருவாகம் நடைபெறும். இன்றுள்ள சட்டங்கள் யாவும் முற்றிலும், முழுமையாக ரத்துச் செய்யப்பட்டால் நிருவாகக் கட்டமைப்பு சிதறிவிடும்.

இப்போது, விதி 307 யை எடுத்துக்கொள்கிறேன். தற்போதைய சட்டங்கள் திருத்தப்பட்டாலன்றி அவை தொடர்ந்து இருப்பதற்கான ஷரத்துக்களை உருவாக்கி இருக்கின்றோம் என்று அவர் கூறினார். இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வந்தவுடன் சட்டமியற்றும் பிரத்தியேக அதிகாரம் நாடாளுமன்றத்திற்கு அல்லது சம்பந்தப்பட்ட பிராந்தியங்களிலுள்ள பல்வேறு சட்டமன்றங்களுக்கு உண்டு என்ற உண்மையினை சட்டம் அறிந்த எந்த மனிதரும் உணர்ந்து கொள்வர் என்று நினைத்தேன். இப்போதிலிருந்து மன்றம் நிறைவேற்றிய சட்டம் தவிர வேறு எந்தச் சட்டமும் அமலாகாது அல்லது அதற்கு சட்ட வலிமையோ அல்லது அனுமதியோ இருக்காது என்று விளக்கம் சொல்லுவீர்கள் என்றால், நிலைமை எவ்வாறு இருக்கும்? மத்திய சட்டமன்றம் அல்லது மாகாண சட்டமன்றம் முன்னர் நிறைவேறியுள்ள அனைத்துச் சட்டங்களும் தூள்தூளாகச் சிதறிவிடும் நிலமைதான் உருவாகும். ஏனெனில், இந்த அரசியலமைப்புச் சட்டத்தின் கீழ் சட்டம் இயற்றும் அதிகாரம் பெற்றுள்ள நாடாளுமன்றம் அல்லது மாநில சட்டமன்றங்கள் அவற்றை நிறைவேற்றாத காரணத்தால் அவற்றுக்குள்ள அதிகாரம் ஒழிக்கப்பட்டுவிட்டது. எனவேதான் முன்னர் நிறைவேற்றப்பட்ட எந்தச் சட்டமும், அது நாடாளுமன்றத்தால் நிறைவேற்றப்படவில்லை என்ற ஒரே காரணத்திற்காக ரத்துச் செய்யப்பட மாட்டாது என்று அரசியல் சாசனத்தில் ஒரு ஷரத்து இருக்கவேண்டும். அதன் காரணமாகத்தான் அரசியல் சாசனத்தில் விதி 307 சேர்க்கப்பட்டிருக்கிறது.

திரு. துணைத்தலைவர் அவர்களே, அடிப்படை உரிமைகளைப் பாதிக்காத தற்போதுள்ள சட்டங்களின் பிரிவு தொடர்ந்து அமலிலிருக்கும் என்று என்னுடைய திருத்தம் சுட்டிக்காட்டுகிறது;

எனவே, மதிப்பிற்குரிய பல உறுப்பினர்கள் விதி 13 யை விதி 8யுடன் சேர்த்துப் படித்துப் பொருள் கொள்ளுவதில் சிரமம் இருப்பதாக எண்ணுவதன் காரணமாக எழும் ஆட்சேபனையை என்னுடைய இத்திருத்தம் போக்கும் என்று அவைக்குத் தெரிவித்துக் கொள் கிறேன். என்னுடைய திருத்தம் நிலைமையைத் தெளிவுபடுத்து வதால், இதனை சபை ஏற்றுக்கொள்வதில் எவ்விதச் சிரமும் இருக்காது என்று நம்புகிறேன்.

இவ்விளக்கத்திற்குப் பின்னர் பல திருத்தங்கள் முன்மொழியப் படவில்லை.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, பின்கண்டதை முன்மொழிகிறேன்:

> 'விதி 13 துணைவிதி(4) ல் 'பொதுமக்கள்' என்ற வார்த்தைகளுக்குப் பதிலாக 'பொது அமைதி அல்லது நன்னடத்தை' என்ற வார்த்தைகளை உபயோகிக்க வேண்டும்.

இந்த வார்த்தைகள் அத்துணை விதியில் பொருத்தமற்றவை யேயாகும்.

**திரு. துணைத் தலைவர்:** 477 ஒரே மாதிரியாக உள்ளது. 479, 480 மற்றும் 486 இனங்காணப்பட்டுள்ளது.

திருத்தங்கள் எண் 479, 480 மற்றும் 480 முன்மொழியப் படவில்லை.

★ ★ ★

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, பின்கண்டதை முன்மொழிகிறேன்:

> ''விதி 13, துணைவிதி (5)ல் 'பழங்குடியினர்' என்ற வார்த்தைக்குப் பதிலாக 'ஷெட்யூல்டு' என்ற வார்த்தை பயன்படுத்தப்பட வேண்டும்.''

★ ★ ★

---

1. அ.நி.வி., தொகுதி 7, 1948, டிசம்பர் 1, பக்கம் 744.

[2]**திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்:** .... ஆனால், தற்போது டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக்கொள்ளும் திருத்தங்களைத் தவிர, மற்றவை ஏற்றுக்கொள்ளப்படக் கூடாது. அவை ஆட்சேபனைக் குரியவை; அரசியல் சாசனத்தில் அவற்றுக்கு இடமளிக்கக்கூடாது.

**திரு. சத்தியநாராயண சின்ஹா** (பீகார்:பொது): இப்போது இந்தப் பிரச்சினை பரிசீலிக்கப்பட வேண்டுமென்று விரும்புகிறேன்.

**திரு.துணைத் தலைவர்:** இச்சபையின் நடவடிக்கைகளை நான் எவ்வாறு நடத்துகிறேன் என்று என்னைப் பற்றி விசாரிக்கப் பட்டுள்ளது. அச்சமயத்தில் தகவல்கள் தர நான் மறுத்துவிட்டேன்; ஏனெனில் சபையை நான் நடத்திச் செல்வது பற்றிக் கூற எனக்குத் தனி உரிமை வேண்டுமென்று நான் கருதினேன். பேச விரும்பும் அனைத்து உறுப்பினர்களையும் திருப்தி செய்ய என்னால் இயல வில்லை என்பது எனக்குத் தெரியும்.

இப்போது என்னிடம் உறுப்பினர்கள் கொடுத்துள்ள 25 குறிப்பு கள் உள்ளன. அவர்கள் அனைவரும் பேசுவதற்கு ஆவலாக உள்ள னர். ஒவ்வொருவரும் விவாதத்திற்கு தன்னுடைய பங்கினை அளிப் பார் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. ஆனால், காலவரையின்றி விவாதங்கள் தொடர முடியாது. ஏனையோரைப் போலவே, தகுதி யுள்ளவர்களையும் என்னிடம் குறிப்புகள் கொடுக்க முடியாத திறமை யான உறுப்பினர்களையும் நான் கணக்கில் எடுத்துக் கொள்ள வில்லை. சபை உறுப்பினர்கள் அனைவரும் தங்கள் கருத்துக்களைக் கூற வாய்ப்பளிக்கவே நான் முயன்றுள்ளேன். இச்சபையின் விவா தங்களில் ஏற்கனவே பங்குபெற்ற உறுப்பினர்களின் பட்டியலை மாண்புமிகு உறுப்பினர்கள் உற்று நோக்கினால், ஒவ்வொரு மாகா ணத்தின் பிரதிநிதியும் பங்கு எடுத்துள்ளார் என்பதும், ஒவ்வொரு மாகாணத்தையும் சேர்ந்த சிறுபான்மையினர் பிரதிநிதிகளும் பங்கு கொண்டுள்ளனர் என்பதும் தெரியவரும். பண்டிட் எல்.கே. மைத்ரா என்ன கூறினாலும், வங்காளிகள் பெரும்பான்மையினர் என்பது என்னுடைய கருத்தாகும். என்னுடைய நோக்கில் பிரச்சினை முழுமை யாக விவாதிக்கப்பட்டுள்ளது. இருப்பினும், நான் எப்போதும் கூறி வருவது போல், இத்துடன் இந்த விவாதத்தை முடித்துக்கொள்ள சபை விரும்புகிறதா என்பதை அறிய விரும்புகிறேன்.

---

1. அ.நி.வி. தொகுதி 7, 1948, டிசம்பர் 1, பக்கம் 779-83.

**மாண்புமிகு உறுப்பினர்கள்:** ஆம்; ஆம்.

**திரு. துணைத் தலைவர்:** இப்போது டாக்டர் அம்பேத்கர் பதிலளிப்பார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (பம்பாய்: பொது):** திரு.துணைத்தலைவர் அவர்களே, விதி 13க்கு முன்மொழியப்பட்ட பல திருத்தங்கள் எண் 415, 453 ஆகியவற்றையும், 'நியாயமான' என்ற வார்த்தையைச் சேர்ப்பதற்காக பண்டிட் தாகூர்தாஸ் பார்கவா வின் திருத்தம் மூலம் திருத்தப்பட்டுள்ள பட்டியல் Iல் கூறப்பட் டுள்ள திருத்தம் எண் 49-ஐயும் ஏற்றுக்கொள்ள உத்தேசித்துள் ளேன்.

**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் எண் 415ஐ நீங்கள் எவ்வாறு ஏற்றுக் கொள்ள உத்தேசித்துள்ளீர்கள் என்பதை தயவு செய்து விளக்க முடியுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** 'இதை விதியின் இதர ஷரத்துக்கள் நிபந்தனைக்குட்பட்டு' என்ற வார்த்தையை நீக்கி விடும் திருத்தத்தை ஏற்றுக் கொள்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** அதன் பிறகு?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திருத்தம் எண் 86 மூலம் திருத்தப்பட்டுள்ள திருத்தம் எண் 453 மற்றும் 'நியாயமான' என்ற வார்த்தையைப் புகுத்தும் பண்டிட் தாகூர்தாஸ் பார்கவா வின் திருத்தம் மூலம் திருத்தப்பட்டு பட்டியல் Iல் கண்ட திருத்தம் எண் 49 ஐயும் ஏற்றுக்கொள்கிறேன்.

இதர திருத்தங்கள், அவற்றை முன்மொழியும்போது உறுப் பினர்கள் தங்கள் உரையில் எழுப்பியுள்ள கேள்விகள் பற்றிக் கூறும் போது, ஒரு சில கேள்விகளுக்கு மட்டும்தான் பதிலளிக்க வேண்டி யுள்ளது என நினைக்கிறேன்.

விதி 13 பற்றியும் துணைவிதி (1)ன் உபவிதி பற்றியும் பொதுவாகப் பெரிதும் விமர்சனம் செய்யப்பட்டது பற்றிச் சொல்ல வேண்டுமானால், விதியும், அதில் கண்ட திருத்தங்களும் ஒரு முழு

வடிவம் பெற்று, திருப்தி அளிப்பதாக உள்ளது என்பதை இச்சபை அறிய முடியும் என்று என்னால் கூறமுடியும். விதி 8 ன் முக்கியத் துவம் பற்றி நான் கொடுத்த விளக்கம், 'தற்போதுள்ள சட்டங்கள்' என்னும் சொற்றொடர் திருத்தம், 'நியாயமான' என்ற வார்த்தை யைப் புகுத்தியது ஆகியவை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் பேசிய போது சுட்டிக்காட்டிய தவறுகளை நீக்கிவிட்டன எனத் தீர்க்கமாக நம்புகிறேன். என்னுடைய நண்பர்கள் பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா, திரு.டி.டி.கிருஷ்ணமாச்சாரி மற்றும் அல்குராய் சாஸ்திரி ஆகியோரின் உரைகள் சபையை நம்பச் செய்திருக்குமென்றும் திருத் தங்களுடன் இப்போது அமைந்துள்ள விதியை ஏற்றுக்கொள்வதில் எவ்வித சிரமமும் இருக்காது என்றும் நினைக்கிறேன். எனவே, என்னுடைய நண்பர்கள் ஏற்கனவே கூறியதற்கும் அதிகமாக வேறு எதுவும் இந்த விதிக்கு ஆதரவாகக் கூற விரும்பவில்லை.

உண்மையில், இந்த விதிக்கு ஆதரவாக அவர்கள் கூறிய வாதங் களைக் காட்டிலும் சிறப்பான வாதத்தை முன்வைப்பது எனக்குப் பெரிதும் சிரமம்தான் என்பதை நான் உணர்ந்துள்ளேன்.

எனவே, இதர விஷயங்கள் பற்றிக் குறிப்பிட விரும்புகிறேன். அனேக கேள்விகளுக்கு என்னுடைய நண்பர் திரு. அனந்தசயனம் அய்யங்கார் பதிலளித்துள்ளார். நான் பதிலளிக்கவேண்டுமென்று என்னை நீங்கள் கேட்டுக் கொண்டிருக்காவிட்டால், அவருடைய உரையையே என்னுடைய உரையாகக் கணக்கிலெடுத்துப் பதிவு செய்திடுமாறு கூறியிருப்பேன். ஏனெனில், நான் பதிலளிக்க வேண்டி யிருந்த அனைத்துக் கேள்விகளுக்கும் அவரே பதிலளித்துவிட்டார்.

பேராசிரியர் ஷா எழுப்பிய பிரச்சினை சம்பந்தமாக சில தகவல்களைக் கூற வேண்டுமென்று கேள்விகளுக்குப் பதிலளிக்கும் போதே நான் நினைத்தேன். அதே கேள்வியைத்தான் நண்பர் பேரா சிரியர் கே.டி.ஷா குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். அதாவது, அடிப் படை உரிமைகள், பத்திரிகை சுதந்திரம் பற்றி எதுவும் கூறவில்லை என்பதாகும். நண்பர் திரு. அனந்தசயனம் அய்யங்கார் அளித்த பதில் முழுமையானதொன்றாகும். பத்திரிகை என்பது ஒரு தனிநபரை அல்லது ஒருகுடிமகனைக் குறிப்பிடுவது போன்றதுதான். குடிமகன் ஒருவன் தனது சொந்த முறையில் அனுபவிக்க முடியாத அல்லது அவனுக்கு அளிக்கப்படாத எந்தச் சிறப்பு உரிமைகளும் பத்திரிகை களுக்கு இல்லை. ஒரு பத்திரிகை ஆசிரியர் அல்லது நிர்வாகி

போன்ற அனைவரும் குடிமக்கள்தான்; எனவே, அவர்கள் பத்திரிகையில் எழுதும்போது, அவர்கள் பேச்சுரிமையைத்தான் பயன்படுத்திக் கொள்கின்றனர். எனவே என்னைப் பொறுத்தவரையில், பத்திரிகை சுதந்திரம் குறித்து தனியாக எதுவும் குறிப்பிடப்பட வேண்டிய அவசியமில்லை.

ஆயுதங்களை வைத்திருப்பது பற்றி நண்பர் திரு.காமத் மிகவும் உணர்ச்சிவயப்பட்டு காணப்பட்டார். இக்கேள்வி பற்றி நாம் எடுத்துள்ள நிலை மிகவும் தெளிவானதாகும். ஆயுதங்களை வைத்திருக்கும் உரிமை வேண்டுமென்று காங்கிரஸ் கட்சி கிளர்ச்சி செய்வது உண்மை; இது அனைவருக்கும் தெரிந்ததுதான். இதை யாரும் மறுக்க முடியாது. இது வரலாறு. அதே சமயம் காங்கிரஸ் கட்சி அத்தகைய தீர்மானங்களை நிறைவேற்றியபோது இருந்த சூழ்நிலைகள் இப்போது இல்லை என்பதை இச்சபை மறந்துவிடக் கூடாது.

**திரு. எச்.வி. காமத்:** வாதத்திற்கு இது மிகவும் வசதியாகக் கிடைத்துள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியர்கள் ஆயுதங்களை வைத்துக்கொள்ள அனுமதி மறுத்தது; சட்டம் ஒழுங்கு பாதுகாக்கும் அடிப்படையில் அல்ல; ஓர் அந்நிய ஆட்சியை அகற்றிவிடத் தங்களை ஒன்று திரட்டிக் கொள்ளாத வகையில் அடிமை ஆட்சியிலுள்ள குடிமக்கள் ஆயுதங்களை வைத்துக் கொள்ளும் உரிமை பெற்றவர்களாக இருக்கக்கூடாது என்ற அடிப்படையில்தான். இவ்வாறு அனுமதி மறுக்கப்பட்டது. அத்தகைய தீர்மானங்களை நிறைவேற்றுவதற்கான அடிப்படைக் காரணங்கள் இப்போது நீங்கிவிட்டன என்பது என்னுடைய கருத்தாகும். ஒவ்வொரு தனிமனிதனும் வன்முறைத் தாக்குதலுக்கு உதவும் பல்வகை ஆயுதங்களை அரசாங்கத்தின் கட்டுப்பாடின்றி தன் விருப்பம்போல் வாங்கிக்கொள்ளும் உரிமை பெற்றுஇருந்தால், இன்றைய சூழ்நிலையில் அரசாங்கம் தனது நிருவாகத்தை எவ்வாறு நடத்திச்செல்லும் என்பதை என்னால் நினைத்துக்கூடப் பார்க்க இயலவில்லை.

**திரு. எச்.வி. காமத்:** அந்த உரிமையைக் கட்டுப்படுத்தும் ஷரத்து உள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** *அந்த ஷரத்து என்ன செய்கிறது? அது என்ன கூறுகிறது? முறைப்படுத்தத்தான் ஷரத்தால் முடியும்; 'முறைப்படுத்துதல்' என்ற சொல் நிபந்தனை களை நிர்ணயம் செய்கிறது என்று சட்ட அடிப்படையில் பொருள் கொள்ளப்படுகிறது; குடிமகன் ஒருவன் ஆயுதங்களை வைத்துக் கொள்ளும் உரிமையை முற்றிலும் நீக்கிவிடும் நிபந்தனைகளாக அவை இருக்க முடியாது. எனவே, முறைப்படுத்துதல் மூலம், ஆயுதங்களை வைத்துக்கொள்ள விரும்பும் ஒரு குடிமகனை அந்த உரிமையைப் பயன்படுத்துவதிலிருந்து தடை செய்ய முடியாது.*

*எவ்வித வேறுபாடும் கருதாது எல்லாக் குடிமக்களுக்கும் அத்தகைய உரிமையை வழங்கும் கொள்கையில் எனக்கு ஐயம் உண்டு. உதாரணமாக, ஆயுதம் வைத்துக்கொள்ள ஒவ்வொரு குடிமக னுக்கும் உரிமை வேண்டுமென்று கூறும் திரு.காமத்தின் கருத்தினை ஏற்றுக்கொண்டால், இன்று குற்ற பரம்பரையினர் என்று கருதப் படும் பல்லாயிரக்கணக்கானவர்கள் ஆயுதங்களை வைத்துக்கொள்ள முடியும். வழக்கமாகக் குற்றம் இழைக்கும் பல்வகை குற்றப்பிரிவு கூட்டமும் ஆயுதம் தாங்கும் உரிமையைக் கோரவும் முடியும். குறிப் பிட்ட ஓரினத்தை ஒருவர் சேர்ந்தவர் என்ற காரணத்திற்காக, விலக்குக் கூறின் கீழ் ஆயுதம் வைத்துள்ள அவருக்கு உரிமை இல்லை என்று நீங்கள் சொல்லிவிட முடியாது.*

**திரு.எச்.வி. காமத்:** *டாக்டர் அம்பேத்கர் நாம் இங்கு விவா திக்கும் ஷரத்தை முழுமையாகவும், தெளிவாகவும் புரிந்து கொண் டிருந்தால், என்னுடைய திருத்தத்தின் விளைவு அவ்வாறு அமைந்து விடாது என்பது அவருக்கு புலனாகும்.*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** *இல்லை, நான் விட்டுக் கொடுக்க மாட்டேன். எனக்கு இப்போது அதிக நேர மில்லை. வரைவுக்குழுவின் முடிவை நான் விளக்கிக் கொண்டிருக் கிறேன். தங்கு தடையின்றி இந்த உரிமையை அனுமதிக்கக்கூடாது என்பது இப்போது பேசப்படும் விஷயம். ஆயுதம் வைத்துக் கொள்ளும் விஷயத்தைப் பொறுத்தவரை, நாம் வலியுறுத்துவது ஆயுதம் வைத்துக் கொள்வதல்ல; ஆயுதம் வைத்துக்கொள்ளும் ஒரு மனிதனுக்குள்ள பொறுப்பைத்தான்.*

*(மதிப்பிற்குரிய உறுப்பினர் ஒருவர்): (கேளுங்கள், கேளுங்கள்).*

நெருக்கடி நிலை உருவாகும்போது, போர் நடைபெறும் போது, உள்நாட்டு புரட்சி ஏற்படும்போது, நாட்டின் ஸ்திரத்தன்மையும், பாதுகாப்பும் ஆபத்தில் சிக்கி இருக்கும்போது, நாட்டைப் பாதுகாக்க ஆயுதம் தாங்கி வாருங்கள் என்று ஒவ்வொரு குடிமகனுக்கும் அழைப்பு விடுக்க அரசாங்கத்திற்கு உரிமை வேண்டும். உண்மையில், இத்தகைய கருத்தினைத்தான் நாம் வலியுறுத்த வேண்டும். இக்கருத்தை விதி17ன் விலக்குக்கூறின் மூலம் நாம் உறுதி செய்துள்ளோம்.

***திரு. எச்.வி. காமத்*** *(குறுக்கிட்டுப் பேச எழுந்தார்):.....*

***திரு. துணைத் தலைவர்:*** திரு.காமத் நீங்கள் குறுக்கிட்டுப் பேச வேண்டாம். உங்களுக்குப் போதுமான வாய்ப்பினை நான் அளிக்கவில்லை என்று நீங்கள் சொல்ல முடியாது.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** தனி நபர் சட்டத்தைப் பொறுத்தவரை ஒரே மாதிரியான உரிமையியல் சட்டத்தைக் கொண்டு வருவதை அல்லது அவ்வாறு செய்ய முயற்சி செய்வதை பணிக்கும் அரசியல் சாசனத்தின் நெறிமுறை கோட்பாடுகளில் ஒன்றைப் பற்றி நாங்கள் விவாதித்தபோது, இவ்விஷயம் முற்றிலுமாகவும், போதுமான வகையிலும் விவாதிக்கப்பட்டது என்று நினைக்கிறேன். இதுகுறித்து மேலும் எதுவும் கூறுவது அவசியமென்று நான் கருதவில்லை, ஆனால், அரசியல் சாசனத்தில் இத்தகைய விலக்கு துணைவிதி சேர்க்கப்பட்டால், சமுதாய நலம் பற்றிய எவ்விதச் சட்டத்தையும் நிறைவேற்றுவதில் சட்டமன்றங்களை அது செயல் இழக்கச் செய்யும் என்பதைக் கூற ஆசைப்படுகிறேன்.

இந்நாட்டில் பல்வேறு மதக்கருத்துக்கள் உள்ளன; அவை பிறப்பு முதல் இறப்பு வரை வாழ்வின் ஒவ்வொரு அம்சத்தையும் பாதிக்கின்றன. மதம் சம்பந்தப்படாதது எதுவுமில்லை; தனிநபர் சட்டத்தைப் பாதுகாக்க வேண்டுமென்றால், சமுதாய முன்னேற்ற விஷயங்களில் நாம் ஸ்தம்பித்து நிற்போம் என்பது எனது உறுதியான கருத்து. அத்தகைய சூழ்நிலையை நாம் ஏற்றுக்கொள்ள இயலும் என்று நான் கருதவில்லை. மதத்தின் இன்றியமையாத சாரமாக உள்ள சம்பிரதாயங்கள் தொடர்புள்ள நம்பிக்கைகள், சடங்குகளைத்

தாண்டிப்போகாத வகையில் மதம் பற்றிய விளக்கத்தை இனிமேல் வரையறுத்துக் கொள்வோம் என்று கூறுவது அசாதாரணமான தல்ல. பல்வகைச் சட்டங்கள், உதாரணமாக குத்தகை உரிமை சட்டம் அல்லது வாரிசு உரிமை சட்டம் போன்ற சட்டங்கள் மதத்தின் ஆளுகைக்குட்பட்டதாக இருக்க வேண்டிய அவசியமில்லை. ஐரோப்பாவில் கிறித்துவ மதம் உள்ளது; உலகிலுள்ள அனைத்து கிறித்துவர்களும் அல்லது ஐரோப்பாவின் எந்தப் பகுதியிலும் வாழும் கிறித்துவர்களும் ஒரேமாதிரியான மரபுரிமைச் சட்டத்தைப் பின்பற்ற வேண்டுமென்பதல்ல, அத்தகைய சட்டம் எதுவுமில்லை. வாழ்க்கை ஒவ்வொரு அம்சத்தையும் தொடுகின்ற முறையிலும், இவ்விஷயத்தில் சட்டமன்றங்கள் தலையிடுவதைத் தடுக்கின்ற விதத்திலும் மதத்திற்கு ஏன் இத்தகைய பரந்துவிரிந்த அதிகாரங்களை அளிக்க வேண்டுமென்று தனிப்பட்ட முறையில் எனக்கு விளங்கவில்லை. எது எப்படியிருப்பினும் நாம் சுதந்திரம் பெற்றிருப்பது எதற்கு? நமது அடிப்படை உரிமைகளுக்கு முரணான ஏற்றத்தாழ்வுகளும், நேர்மையற்ற முறைகளும், பாரபட்சமும், அடிப்படை உரிமைகளுக்கு முரண்பட்ட இன்ன பலகேடுகளும் நிறைந்துள்ள நமது சமுதாய அமைப்பினை சீர்திருத்துவதற்குத்தான் நாம் சுதந்திரம் பெற்றுள்ளோம். எனவே, அரசாங்கத்தின் அதிகார வரம்பிலிருந்து தனிநபர் சட்டம் விலக்கி வைக்கப்பட்டிருக்க வேண்டுமென்று சிந்தித்துப் பார்ப்பது யாருக்கும் இயலாத காரியமாகும். இவ்வாறு விளக்கிய பின்னர், அரசாங்கம் உரிமை கொண்டாடுவது எல்லாம் தனிநபர் விஷயத்தில் சட்டம் இயற்றத் தனக்கு உரிமை உண்டு என்று கூறுவதை இங்கு குறிப்பிட்டுக் காட்ட வேண்டும். தனிநபர் சட்டத்தை அரசாங்கம் அறவே நீக்கிவிட வேண்டுமென்ற கட்டாயமில்லை. இது சம்பந்தமாக சட்டமியற்ற அரசாங்கத்துக்கு அதிகாரம் உண்டு. எனவே, அரசாங்கத்திடம் அதிகாரமிருந்தால், முஸ்லீம்கள் அல்லது கிறித்துவர்கள் அல்லது இந்தியாவிலுள்ள இதர சமுதாய மக்கள் ஆட்சேபணை செய்யும் வகையில் அரசாங்கம் அந்த அதிகாரத்தைப் பயன்படுத்துமென்று எவரும் அச்சம் கொள்ளத் தேவை இல்லை.

இறையாண்மை என்பது வரையறையற்றது என்று நீங்கள் கூறினாலும் அது எப்போதும் ஒரு வரையறைக்குட்பட்டதுதான் என்பதை இப்பொருள்பற்றி பேசிய முஸ்லீம் உறுப்பினர்கள் உட்பட - அவர்களின் உரிமைகளை நாம் மதித்தாலும்கூட - நாம் அனைவரும்

நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். ஏனெனில், இறையாண்மை அதிகாரத்தைப் பயன்படுத்தும்போது வெவ்வேறு சமுதாயங்களின் உணர்வுகளையும் அது கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும்.

முஸ்லீம் சமுதாயம் கலகக்கொடிதூக்கும் வண்ணம் இந்த அரசாங்கமும் தனது அதிகாரத்தைப் பிரயோகிக்காது. அவ்வாறு செய்தால், அது ஒரு மோசமான அரசாங்கமாகத்தான் இருக்க வேண்டும். ஆனால் இவ்விஷயம் அதிகாரத்தைப் பிரயோகிப்பது பற்றியதே அல்லாமல், அதிகாரத்தைப் பற்றியது அல்ல என்பதை மறந்துவிடக் கூடாது.

திரு.துணைத்தலைவர் அவர்களே, ஆதிவாசிகள் பற்றி என்னுடைய நண்பர் திரு.ஜெய்பால் சிங் சில கேள்விகளைக் கேட்டார். ஐந்தாவது, ஆறாவது அட்டவணைகளை நாம் விவாதித்தபோது, இக்கேள்விகளை முறையாக கேட்கப்பட்டிருக்க வேண்டும். ஆனால், தற்போது இக்கேள்விகளை நாம் எழுப்பியுள்ளதாலும், தமக்குள்ள சில ஐயங்களுக்கு நான் விளக்கம் அளிக்க வேண்டுமென்று குறிப்பாக என்னிடம் அவர் கேட்டிருப்பதாலும், இத்தருணத்தில் இவ்விஷயம் பற்றிப் பேசுகிறேன். ஆதிவாசிகள் சம்பந்தப்பட்டவரை அரசியல் சாசனவரைவில் நாம் என்ன கூறியுள்ளோம் என்பதை சபை அறியும். இரண்டு வகையான பகுதிகள் உள்ளன. ஷெட்யூல்டு பகுதிகள் மற்றும் ஆதிவாசிகள் பகுதிகள், ஆதிவாசிகள் பகுதிகள் அஸ்ஸாம் மாகாணம் சம்பந்தப்பட்டவை. அஸ்ஸாம் தவிர இதர மாநிலங்களில் பரவிக் கிடக்கும் பகுதிகள் ஷெட்யூல்டு பகுதிகள். உண்மையில், இந்திய அரசாங்கச் சட்டத்தில் 'ஓரளவு' விலக்கப்பட்ட பகுதிகள்' என்று குறிப்பிடப்பட்டுள்ள பகுதிகளுக்கு அளிக்கப்பட்டுள்ள ஒரு வேறுபட்ட பெயரே தவிர இது வேறல்ல. இதற்கு அப்பாற்பட்டு வேறு எதுவும் இல்லை. ஷெட்யூல்டு பழங்குடியினர் தற்போது இரண்டு பகுதிகளிலும், அதாவது ஷெட்யூல்டு பகுதிகளிலும், ஆதிவாசிகள் பகுதிகளிலும் வாழ்கின்றனர். ஷெட்யூல்டு பகுதிகளிலும் ஆதிவாசிகள் பகுதிகளிலும் வாழ்கின்ற ஷெட்யூல்டு பழங்குடியினருக்கு இடையே உள்ள வித்தியாசம் இதுதான்: ஷெட்யூல்டு பகுதிகளில் வாழ்கின்ற ஷெட்யூல்டு பழங் குடியினர் ஐந்தாவது அட்டவணை பத்தி ஐந்தில் கண்டுள்ள ஷரத் துக்களின்கீழ் நிர்வகிக்கப்படுகின்றனர். அந்த அட்டவணைப்படி, நாடாளுமன்றம் அல்லது பிராந்திய சட்டமன்றம் இயற்றும் சட்டம் அல்லது

சட்டத்தின் ஒரு பகுதி அப்பகுதிக்குப் பொருந்தாது என்று மாநில ஆளுநர் அறிவிப்பு செய்தாலன்றி, அத்தகைய சாதாரண சட்டங்கள் தானாகவே அப்பகுதிக்குப் பொருந்தும். ஆதிவாசிகள் பகுதிகளில் வாழும் ஷெட்யூல்டு பழங்குடியினரைப் பொறுத்தவரை, நிலைமை சிறிது வேறுபட்டதாகும். சட்டங்களை நாடாளு மன்றமோ அல்லது ஸ்தல சட்டமன்றமோ இயற்றும் சட்டங்களை மாநில ஆளுநர் மலைவாழ்மக்கள் பகுதிக்கு விஸ்தரித்தாலன்றி, அவை பழங்குடியினர் பகுதிக்குப் பொருந்தாது. நிறைவேற்றிய சட்டம் ஒரு பகுதி விஷயத்தில் விலக்கப்பட்டால்தான் சட்டம் பொருந்தும்; இன்னொரு விஷயத்தில் விஸ்தரிக்கப்பட்டாலொழிய சட்டம் பொருந்தாது. இதுதான் உண்மை நிலைமை.

ஷெட்யூல்டு பழங்குடியினர் பற்றியும், 'ஆதிவாசிகள்' என்ற வார்த்தைக்குப் பதிலாக 'ஷெட்யூல்டு' என்ற வார்த்தையை நான் ஏன் பயன்படுத்தினேன் என்பது பற்றியும் இப்போது சொல்ல வேண்டும். அதுகுறித்து என்னுடைய விளக்கம் இதுதான்: நான் முன்னர் கூறியது போன்று 'ஷெட்யூல்டு பழங்குடியினர்' என்ற வார்த்தைக்கு குறிப்பிட்ட ஒரு பொருள் உண்டு; இரண்டு அட்டவணைகளில் நீங்கள் காண்பது போன்று, இந்த வார்த்தை பழங்குடி மக்கள் பிரிவைக் கணக்கிட்டுக் கூறுகிறது. 'ஆதிவாசி' என்ற வார்த்தை பொதுவான வார்த்தையாகும்; இதற்கு குறிப்பிட்ட, உரிமைப்படி சட்டம் சார்ந்த பொருள் இல்லை. அதாவது தீண்டப்படாதவர்கள் என்ற பொதுவான ஒரு வார்த்தை போன்றதாகும். 'தீண்டப்படாதோர்' என்ற வார்த்தையில் யாரும் எவரையும் சேர்த்துவிடலாம். இதற்கு குறிப்பிட்டுக் கூறக்கூடிய சட்டம் சார்ந்த பொருள் இல்லை. எனவேதான், 1935 - ஆம் ஆண்டு இந்திய அரசாங்க சட்டத்தில் 'தீண்டப்படாதோர்' என்ற வார்த்தைக்கு சட்டம் சார்புள்ள பொருள் கொடுக்கவேண்டியது அவசியமாயிற்று; நாட்டின் பல்வேறு பிராந்தியங்களிலும், பகுதிகளிலும் அந்த பகுதி மக்கள் தீண்டப்படாதோர் எனக்கருதும் சாதிகளைக் கணக்கெடுப்பு செய்வது மூலம்தான் அவ்வாறு செய்ய இயலுமெனத் தெரிந்தது. இதே கேள்வி ஆதிவாசிகள் சம்பந்தமாகவும் எழக்கூடும். ஆதிவாசிகள் யார்? இக்கேள்வி பொருத்தமானதுதான்; ஏனெனில் இந்த அரசியல் சாசனத்தின் மூலம் ஆதிவாசிகளுக்குச் சில உரிமைகளையும், தனிச் சலுகைகளையும் அளிக்கிறோம். எனவே, இவ்விஷயம் பற்றி நீதிமன்றத்தில் வழக்குத் தொடரப்படுமானால், ஆதிவாசிகள் யார் என்பதற்குத், திட்டவட்டமான முறையில் விளக்கம் தந்தாகவேண்டும். அதனால்,

'ஷெட்யூல்டு பழங்குடியினர்' என்ற வேறு ஒருவகை அல்லது மற்றொரு வார்த்தையைக் கண்டுபிடிக்க முடிவு செய்யப்பட்டது. அத்தலைப்பின்கீழ் ஆதிவாசிகள் கணக்கெடுப்பு நடத்த முடிவானது.

பொதுவாக ஆதிவாசிகள் என்று கூறப்படும் பல பழங்குடி இனங்களை எடுத்துக்கொண்டு, ஷெட்யூல்டு பழங்குடியினர் என்ற தலைப்பின் கீழ்வரும் இனங்களுடன் என்னுடைய நண்பர் திரு. ஜெய்பால் சிங் ஒப்பிட்டுப் பார்ப்பாரேயானால், ஆதிவாசிகள் என்று பொதுவாக அங்கீகரிக்கப்பட்டுள்ள எந்த இனமும் இந்தப் பட்டியலில் விட்டுவிடப்படவில்லை என்பதை அவர் அறிந்துகொள்ள முடியும். சில இடங்களில் சில தவறுகள் ஏற்பட்டிருக்கலாம். ஆதிவாசியாக இல்லாத ஓர் இனம் இந்த அட்டவணையில் இடம்பெற்று இருக்கலாம். உண்மையான ஆதிவாசி இனம் சேர்க்கப்படாமலிருக்கலாம்; இதுவரையிலும் ஆதிவாசி இனமாகக் கருதப்பட்ட ஓர் இனம் ஷெட்யூல்டு பழங்குடியினர் பட்டியலில் சேர்க்கப்படாவிட்டால், அரசியலமைப்புச் சாசன வரைவில் கண்டபடி, ஒரு திருத்தம் சேர்த்துள்ளோம். அதன்படி, இதுவரை பட்டியலில் சேர்க்கப்படாத குறிப்பிட்ட ஓர் இனத்தை அறிவிக்கை மூலம் பிராந்திய அரசாங்கம் சேர்த்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டுள்ளது. என்னுடைய நண்பர் திரு. ஜெய்ப்பால் சிங்கிற்கு இது திருப்தியளிக்குமென்று நம்புகிறேன்.

என்னிடம் அவர் கேட்டுள்ள மற்றொரு கேள்வி இதுதான்: ஷெட்யூல்டு பகுதியில் வாழும் ஒரு ஷெட்யூல்டு பழங்குடி இனத்தைச் சேர்ந்த ஒருவர் அல்லது ஆதிவாசிகள் பகுதியில் வாழும் ஒரு ஷெட்யூல்டு பழங்குடி இனத்தைச் சேர்ந்த ஒருவர், ஷெட்யூல்டு பகுதி மற்றும் ஆதிவாசிப் பகுதியில் அடங்காத இந்தியாவின் வேறு பகுதிக்கு இடம்பெயர்ந்து செல்லுகின்றனர் என்று வைத்துக் கொள்வோம். அவர் புதியதாக வந்து தங்கியுள்ள பகுதியைச் சேர்ந்த பிராந்திய அரசாங்கத்திடமிருந்து ஷெட்யூல்டு பகுதி அல்லது ஆதிவாசிப் பகுதியில் தங்கியிருந்தால் அவருக்குக் கிடைக்கும் அதே சலுகைகளை அவர் கோரமுடியுமா? இக்கேள்விகளுக்குப் பதிலளிப்பது எனக்கு சிரமமானதாகும். இதுபோன்ற ஒரு விஷயம் குறித்து முடிவு செய்யப்பட வேண்டிய வட்டாரத்தில் அந்த விஷயம் விவாதிக்கப் பட்டால் அரசியல் சாசனத்தில் ஒருவகை ஏற்பாட்டினைச் செய்து கேள்விக்கு நாங்கள் பதிலளித்திருக்க முடியும். இந்த அரசியல் சாசனத்தைப் பொறுத்தவரை ஷெட்யூல்டு பகுதி

அல்லது ஆதிவாசிகள் பகுதிக்கு வெளியே சென்று வாழும் ஒருவர் அவர் ஷெட்யூல்டு பகுதி அல்லது ஆதிவாசிகள் பகுதியில் வாழ்ந்த போது அனுபவித்த சலுகைகளைப் பெற உரிமை பெற்றவரல்ல. நான் அறிந்தவரை, ஷெட்யூல்டு பகுதி அல்லது ஆதிவாசிகள் பகுதிக்கான ஷரத்துகளைவேறு பகுதிகளில் அமலாக்குவது நடைமுறையில் சாத்தியமல்ல.

திரு. துணைத்தலைவர் அவர்களே, இந்தத் துணைவிதிக்கான திருத்தம் மீது பேசியபோது உறுப்பினர்கள் எழுப்பிய பல்வேறு கேள்விகளுக்கு நான் பதிலளித்துள்ளேன் என்று எண்ணுகிறேன். அவர்களின் சந்தேகங்கள் யாவும் நீங்கும்வகையில் நான் அளித்த விளக்கம் அவர்களுக்குத் திருப்தியளிக்குமென்று நம்புகிறேன். மாறுதல் செய்யப்பட்ட திருத்தத்தை சபை ஏற்றுக் கொள்ளுமென்று நினைக்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** முப்பது திருத்தங்கள் முன்மொழியப் பட்டுள்ளன. அவற்றை ஒவ்வொன்றாக வாக்கெடுப்பிற்கு விடுகிறேன்.

*(பின்வரும் திருத்தங்கள் டாக்டர் அம்பேத்கரால் ஏற்கப்பட்டு, சபையில் நிறைவேற்றப்பட்டன. மீதமுள்ள 28 திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன:)*

(i) ''விதி 13 துணைவிதி (1) ல் ''இந்த விதியின் இதர ஷரத்துக்களுக்குட் பட்டு'' என்ற வார்த்தைகள் நீக்கப்பட வேண்டும்.

(ii) விதி 13 உபவிதி(2) க்குப்பதிலாக பின்வருபவை சேர்க்கப்பட வேண்டும்:

''(2) இந்த விதியின் துணைவிதி (1) உபவிதி(அ) ல் கண்ட எதுவும் தற்போதுள்ள சட்டம் பின்னர் கூறப்படுவது சம்பந்தப்பட்டவரை செயல்படுவதைப் பாதிக்காது. அல்லது அவதூறு, பழித்தல், மானநட்டம் சம்பந்தமாக சட்டம் அல்லது நற்பண்பு அல்லது நன்னடத்தைக்கெதிராக குற்றம் புரிகின்ற அல்லது நாட்டின் பாதுகாப்பைக் கெடுக்கின்ற அல்லது நாட்டைக் கவிழ்த்து விட உந்துகின்ற எந்த விஷயம் குறித்தும் அரசாங்கம் எவ்விதச் சட்டமியற்றுவதைத் தடுக்காது?''

(iii) ''திருத்தங்கள் பட்டியலிலுள்ள திருத்தம் எண் 454 பற்றி.

(i) விதி 13 துணைவிதிகள் (3)(4)(5) மற்றும் (6) ஆகியவற்றில் ''தற்போதுள்ள சட்டங்கள்'' என்ற வார்த்தைகளுக்குப் பதிலாக, ''இது புகுத்துவது

வரையில்'' என்ற வார்த்தைகள் சேர்க்கப்பட வேண்டும்; மற்றும் (ii) விதி 13 துணைவிதி (6) இல் ''குறிப்பாக'' என்ற வார்த்தைக்குப் பிறகு, மேற்கூறிய துணைவிதியில் உள்ள எதுவும் தற்போதைய சட்டம் நிர்ணயிக்கின்ற வரையில் அல்லது நிர்ணயிக்க எந்தஒரு அதிகார அமைப்புக்கு அதிகாரம் அளிக்கும் வரையில், அல்லது அரசாங்கம் எவ்வித சட்டமியற்றுவதைத் தடுக்காது'' என்று வார்த்தைகள் சேர்க்கப்பட வேண்டும்''

(iv) விதி 13 துணைவிதிகள் (3),(4),(5) மற்றும் (6) ஆகியவற்றில் ''கட்டுப்பாடுகள்'' என்ற வார்த்தைக்கு முன்னர் ''நியாயமான'' என்ற வார்த்தை சேர்க்கப்பட வேண்டும்.

(v) விதி 13, துணைவிதி (4) ல் ''பொதுமக்கள்'' என்ற வார்த்தைகளுக்குப் பதிலாக ''பொது அமைதி அல்லது நன்னடத்தை'' என்ற வார்த்தைகளை உபயோகிக்க வேண்டும்.

(vi) விதி 13 துணைவிதி (5) ல் 'ஆதிவாசிகள்' என்ற வார்த்தைகளுக்குப் பதிலாக ''ஷெட்யூல்டு'' என்ற வார்த்தையை உபயோகிக்க வேண்டும்.

(vii) விதி 13 துணைவிதி (6)ல் ''நன்னடத்தை அல்லது சுகாதாரம்'' என்ற வார்த்தைகளுக்குப் பதில் ''பொதுமக்கள்'' என்ற வார்த்தைகளை உபயோகிக்க வேண்டும்.

அரசியல் சாசனத்துடன் விதி 13 சேர்க்கப்பட்டது.

★ ★ ★

## விதி 14

[1]**திரு.டி.டி.கிருஷ்ணமாச்சாரி** (சென்னை: பொது): திரு. துணைத் தலைவர் அவர்களே, அவைமுன் நான்வைக்க விரும்பும் விஷயம் ஒப்பிட்டுப் பார்க்கும்போது குறுகிய தன்மையுடையதுதான்.

நான் திருத்தம் கொண்டுவருவது சற்று காலதாமதமானது தான் என்பதை ஏற்றுக் கொள்கிறேன். துணைவிதியின் வாசகம் இவ்வாறு அமையவேண்டுமென்று விரும்புகிறேன்: 'ஒரே குற்றத்திற்கு யாரும் ஒரு முறைக்கு மேல் குற்றஞ்சாட்டப்பட்டுத் தண்டிக்கப்படக்கூடாது'. என்னுடைய நண்பர் மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் 'தண்டிக்கப்பட்டு' என்னும் சொல்லுக்கு முன்னால் 'குற்றஞ்சாட்டப்பட்டு' என்ற சொல்லை சேர்த்துக்கொள்ள ஒத்துக் கொண்டால், அவ்வாறு செய்ய தாங்களும், சபையும் அவரை அனு

1. அ:நி.ச.வி. தொகுதி 7, 1948, டிசம்பர் 2, பக்கம் 795 -97.

மதித்தால், அது ஒரு விவேகமான செயலாக இருக்கும் என்பதோடு வருங்கால அரசாங்கத்திற்கு ஏற்படக்கூடிய பல இன்னல்களையும் நீக்கும் இந்த ஆலோசனையை சபைமுன் வைக்க விரும்புகிறேன். எவ்வகையில் சபைக்குச் சரியென்று தோன்றுகிறதோ, அவ்வாறு இவ்விஷயத்தை விவாதிக்க வேண்டியதை சபைக்கு விட்டுவிடு கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** திரு.டி.டி.கிருஷ்ணமாச்சாரி கேட்கும் அனுமதியை சபை அளிக்க விரும்புகிறதா?

**மதிப்பிற்குரிய உறுப்பினர்கள்:** ஆம்.

**திரு. துணைத் தலைவர்:** திரு.டி.டி.கிருஷ்ணமாச்சாரி கூறிய திருத்தத்தை முன்மொழியுமாறு டாக்டர் அம்பேத்கரைக் கேட்டுக் கொள்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, இந்த திருத்தத்திற்கு முன்மொழியப்பட்ட திருத்தத்தைப் பொறுத்தவரை, திரு.டி.டி. கிருஷ்ணமாச்சாரியின் திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்ள தயாராக இருக்கிறேன். உண்மையைச் சொல்லப் போனால், இத்திருத்தம் தேவை இல்லை; ஆனால் 'தண்டிக்கப்பட்டு' என்ற வார்த்தை பலவகையில் பொருள் கொள்ளப் படும் என்ற சந்தேகங்கள் எழுந்ததால், 'குற்றஞ்சாட்டப்பட்டு மற்றும் தண்டிக்கப்பட்டு' என்ற வார்த்தைகளைச் சேர்த்துக் கொள்ளுவது விரும்பத்தக்கதுதான்.

என்னுடைய நண்பர் திரு. நசிருத்தீன் அகமது முன்மொழிந்த திருத்தங்கள் எண் 506 மற்றும் 509 பொறுத்தவரை.........

**திரு. நசிருதீன் அகமது:** அது திருத்தம் எண் 510 ஆகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** பரவாயில்லை. இதுபற்றிய நிலமையை நேற்று முழுவதும் நான் பரிசீலனை செய்தேன். இத்திருத்தங்களால் எவ்வித பயனுமில்லை என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. இருப்பினும், திரு.கரிமுதீன் முன்மொழிந்த திருத்தத்தை ஏற்றுக்கொள்கிறேன். அது ஒரு பயனுள்ள ஷரத்து;

அரசியல் சாசனத்தில் அது சேர்க்கப்படும். அவர் கூறிய துணைவிதி முழுவதையும் குற்றவியல் நடைமுறைச் சட்டத்தில் பார்க்கலாம். எனவே, இதில் புதியதாக எதுவுமில்லை. இந்நாட்டு சட்டமாக ஏற்கனவே இது அமைந்துள்ளது என்றும் கூட ஒருவகையில் கூற லாம். அவருடைய திருத்தத்திலுள்ள ஷரத்துக்களை வருங்காலத் தில் சட்டமன்றங்கள் ரத்துச் செய்யவும் முடியும். சட்டமன்றத்தின் அதிகார எல்லைக்கப்பால் இந்த ஷரத்துக்கள் இடம்பெறுவது மிகவும் விரும்பத்தக்கதாகும். எனவே, அவருடைய திருத்தத்தை ஏற்றுக்கொள்கிறேன்.

நண்பர் திரு. கக்கன் முன்மொழிந்த திருத்தம் எண் 513 பற்றி...

**மதிப்பிற்குரிய உறுப்பினர் ஒருவர்:** அது முன்மொழியப் படவில்லை.

**திரு. துணைத் தலைவர்:** திருத்தங்கள் எண் 505, மற்றும் 506 என்னவாயின?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திருத்தங்கள் 506, 510ஐ நான் ஏற்கவில்லையென்று ஏற்கனவே கூறியிருக்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் 505 பற்றி என்ன சொல்லு கிறீர்கள்? இதன் இரண்டாவது பகுதி பட்டியல் Vல் கண்ட திருத்தம் எண் 92 மூலம் மாற்றப்பட்டுள்ளது.. ஒருவேளை நீங்கள் அதை கவனிக்கவில்லையோ என்று தோன்றுகிறது. பண்டிட் தாகூர்தாஸ் பார்கவா பெயரில் அது உள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவர் முன் மொழிந்த திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** திருத்தங்கள் ஒவ்வொன்றாக வாக்கெடுப்பிற்கு விடுகிறேன். பட்டியல் Vல் கண்ட திருத்தம் எண் 92 மூலம் மாற்றப்பட்ட திருத்தம் எண் 505 டாக்டர் அம்பேத்கர் இதை ஏற்றுக்கொள்கிறார் எனத் தெரிகிறது, திருத்தம் இதுதான்:

''விதி 14 துணைவிதி(1)ல் 'கமிஷன் இருந்தபோது சட்டத்தின்கீழ்' என்ற வார்த்தைகளுக்குப்பதிலாக 'கமிஷன் இருந்தபோது அமலிலிருந்த சட்டத்தின் கீழ்' என்ற வார்த்தைகளைச் சேர்க்கவேண்டும்.''

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

(இரண்டு திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன.)

★ ★ ★

**திரு. துணைத் தலைவர்:** காஜி சையத் கரிமுதீன் முன் மொழிந்து, டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக்கொண்ட திருத்தம் எண் 512 இதுதான்:

விதி 14ல் பின்வருபவை துணைவிதி (4) ஆக சேர்க்கப்பட வேண்டும்:

''4. நியாயமற்ற சோதனைகள், பறிமுதல்கள் முதலியவற்றுக்கு எதிராக, தங்களுடைய உயிர், வீடுகள், ஆவணங்கள், அசையும் பொருள் உடமைகள் முதலியவை பாதுகாக்கப்படுவதற்கு மக்களுக்குள்ள உரிமை மீறப்படலாகாது; ஆணைமொழி அல்லது உறுதிமொழி போன்ற போதிய ஆதாரமில்லாமலும், மற்றும் சோதனை செய்யப்படும் இடம், நபர்கள் அல்லது பறிமுதல் செய்யப்படும்பொருள்கள் முதலிய விவரங்கள் குறிப்பிடப்படாமலும் எந்தப் பிடியாணையும் பிறப்பிக்கப்படலாகாது. இதனை ஆதரிப்போர் அதிகம் பேர் உள்ளனர் என்று நினைக்கிறேன்.

**திரு.டி.டி.கிருஷ்ணமாச்சாரி:** இல்லை; மறுப்போர்தான் அதிகம்.

**திரு. துணைத் தலைவர்:** அப்படியானால் இதனை மீண்டும் வாக்கெடுப்பிற்கு விடுகிறேன். ஆதரிப்போர்தான் அதிகம் என்று நினைக்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** அப்படியானால் கைககளை உயர்த்திக் காட்டும்படிக் கூறுகிறேன்.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** இல்லை ஐயா, எதிர்ப்போர்தான் அதிகம். (வாக்கெடுப்பு மணி ஒலிக்கிறது.)

**திரு. மகாவீர் தியாகி** (ஐக்கிய மாகாணங்கள்: பொது): தற்சமயம் இப்பிரச்சினையை ஒத்திவைக்குமாறு வேண்டுகிறேன். உறுப்பினர்கள், தங்களுக்குள் கலந்து பேசி முடிவுக்கு வருவதற்கு ஒரு சந்தர்ப்பம் தரலாம் என்று நினைக்கிறேன். பிரிட்டிஷ் காமன்ஸ்

சபைகூட சில சமயங்களில் ஒரு குழுவாகப் பிரிந்து, பல்வேறு தரப்பினர் தங்களுக்குள் கலந்துபேசி, ஒத்த கருத்து மூலம் ஒரு முடிவை எட்டிட வாய்ப்பளிக்கிறது.

**திரு. துணைத் தலைவர்:** இத்திருத்தம் மீது வாக்கெடுப்பு நடத்துவதை ஒத்திவைக்க நான் தயாராக இருக்கிறேன். ஆனால் எனக்குத் தேவையான அனுமதியை சபை அளிக்க வேண்டும். அமைதியாக இருக்க சபையை வேண்டிக்கொள்கிறேன். நல்லெண்ணம், கூட்டு முயற்சி மூலம் முடிவுகளை எய்த வேண்டிய விஷயங்களில் சபை இவ்வாறு நடந்து கொள்ளக்கூடாது. வாக்கெடுப்பு நடத்துவதை நான் ஒத்திவைக்க எனக்கு சபை அனுமதி அளிக்கிறதா?

**மாண்புமிகு பண்டிட் ஜவஹர்லால் நேரு:** திரு. துணைத் தலைவர் அவர்களே, இவ்விஷயம் குறித்து பல உறுப்பினர்கள் உள்ளங்களில் சிறிது குழப்பம் ஏற்பட்டிருப்பதாக வெளிப்படையதாகத் தெரிகிறது. இங்கு கூறப்பட்ட ஆலோசனைகள் சிறப்பானவையாகவும் விரும்பத்தக்கவையாகவும் உள்ளன. இந்த விஷயத்தை சற்றுப் பின்னர் எடுத்துக் கொள்ளலாம். இதர விஷயங்களை இப்போது விவாதத்திற்கு எடுத்துக் கொள்வோம். அவையின் விருப்பம்தான் இறுதியானது. திரு. துணைத் தலைவர் அவர்களே, தங்களின் ஆலோசனையை ஏற்றுக்கொள்ளலாமென்று சபைக்கு வேண்டுகோள் விடுக்கிறேன்.

**டாக்டர் பி.வி. கேஸ்கர்** (ஐக்கிய மாகாணங்கள்: பொது): வாக்கெடுப்பு மணி அடித்த பின்னர், அவ்வாறு செய்ய முடியுமா?

**திரு. துணைத் தலைவர்:** சட்டநுணுக்கங்களை நான் பெரிதாகக் கருதுவது இல்லை. இந்த இடத்திலிருக்கும் வரை விவேகத்தைத் தொடர்ந்து பயன்படுத்துவேன். மரபு நுணுக்கங்களைப் பற்றி எனக்கு அதிகம் தெரியாது. ஆனால், மனித உணர்வு பற்றிய அறிவாற்றல் சிறிது எனக்குள்ளது. நல்லெண்ணம்தான் மதிப்புடையது. வாக்கெடுப்பை ஒத்திவைக்க சபையின் அனுமதியைக் கோருகிறேன்.

**மதிப்பிற்குரிய உறுப்பினர்கள்:** அவ்விதமே நாங்கள் அனுமதிக்கிறோம்.

## விதி 16

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உதவித் தலைவர் அவர்களே, திரு. சுப்பிரமணியம் கூறியதை நான் சரியாகப் புரிந்து கொண்டிருந்தால் அவர் விதி 16 ஐ ஆட்சேபிக்கவில்லை என்றே அவர் உரையிலிருந்து புரிந்து கொள்கிறேன்; ஆனால், அவரது ஆட்சேபனையானது இந்த விதி இடம் பெறப்போகும் இடத்தைக் குறித்தே உள்ளது. இந்த விதி சம்பந்தப்பட்டவரை அதற்குப் பயன்பாடும் தேவையும் உள்ளது என்றபோதிலும் அடிப்படை உரிமைகளில் அது இடம் பெறக்கூடாது என்று கூறுகிறார். அவருடைய இரண்டாவது அம்சத்தைப் பொறுத்தமட்டில் அவர் கூறுவதை நான் சரியாக புரிந்து கொண்டிருந்தால் இந்த விதி 244வது விதிக்கு உட்பட்டிருக்க வேண்டுமென்றும், விதி 16 முற்றிலும் இல்லாது செய்யப்பட வேண்டுமென்றும், அவருடைய சொந்த வார்த்தைகளிலேயே சொல்வதென்றால் 244 வது விதியின் கீழ் கொடுக்கப்பட்ட அதிகாரங்கள் பயன்படுத்தப்படுமானால் அதனுடைய மிச்சம், மீதி என்று எதுவும் இருக்காது என்பதாகும். அவர் கூறியதை இவ்வாறு சரியாகவே சுருக்கிக் கூறுகிறேன் என்றே நினைக்கிறேன்.

இந்த 16வது விதியானது அடிப்படை உரிமைகள் பட்டியலில் இருக்கக்கூடாது என்ற வாதத்தை நான் முற்றிலும் புரிந்து கொள்கிறேன் என்பதோடு ஓரளவிற்கு திரு. சுப்பிரமணியம் கூறுவதோடும் உடன்படுகிறேன். ஆனால் இந்த விஷயம் அடிப்படை உரிமைகளில் சேர்க்கப்பட வேண்டிய தேவை ஏன் ஏற்பட்டது என்பதை நான் அவருக்கு விளக்குகிறேன். அரசியல் நிர்ணயசபை துவங்கியபொழுது சில வரம்பகளுக்குட்பட்டு நாம் துவங்கினோம் என்பதை எனது நண்பர் திரு.சுப்பிரமணியம் நினைவில் கொண்டிருப்பார். இந்த வரம்புகளில் ஒன்று என்னவென்றால் இந்திய மாகாணங்கள் இந்த ஒன்றியத்தில் மூன்றே மூன்று விஷயங்களில் - வெளிவிவகாரத்துறை, பாதுகாப்பு, மற்றும் தகவல் தொடர்புகள் - ஆகியவற்றை வைத்து மட்டுமே சேரும் என்பதாகும். வேறெந்தப் பிரச்சினையிலும் மத்திய நாடாளுமன்றம் அதனுடைய சட்டம் இயற்றும் மற்றும் நிர்வாக வரம்பை விரிவுபடுத்த அவை சம்மதிக்கவில்லை.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VII, டிசம்பர் 3, 1948, பக். 802-03.

ஆகவே, அரசியல் நிர்ணயசபையும் அதைப் போன்றே வரைவுக் குழுவும் மிகவும் கடுமையான வரம்பின் கீழ் வைக்கப்பட்டதை அவர் உணர்வார். இந்தியா முழுவதிலும் வாணிகமும் தொழிலும் சுதந்திரமாக இல்லையென்றால் ஓர் அகில இந்திய ஒன்றியத்தை உருவாக்குவது பயனற்றது என்பதுடன் எவ்வித நோக்கத்திற்கும் பயன்படாது என்பது ஒருபுறம் உணரப்பட்டது. அது பொதுவான கண்ணோட்டமாகும். மறுபுறத்தில் மாகாணங்கள் நிலைமை சம்பந்தப்பட்டவரை நான் ஏற்கனவே குறிப்பிட்டதுபோல அவை இந்தியா முழுவதிலுமுள்ள வாணிகத்தையும் தொழிலையும் மத்திய நாடாளுமன்றத்தின் சட்டம் இயற்றல் வரம்பிற்குட்பட்டதாக்க அவை தயாராக இல்லை என்பது தெரிந்தது. அல்லது வேறு வார்த்தை களில் சுருக்கமாக கூறுவதென்றால் வாணிகத்தையும் தொழிலை யும் முதலாவது பட்டியலில் சேர்த்திடுவதை அனுமதிக்க அவை தயாராக இல்லை. வாணிகத்தையும் தொழிலையும் நாடு முழு வதிலும் முதலாவது பட்டியலில் சேர்த்திடுவது நமக்கு சாத்தியப் பட்டிருந்தால், மற்றும் தொழில் சம்பந்தப்பட்டமட்டில் சட்டங்கள் இயற்றும் நிர்வாக அதிகாரத்தை நாடாளுமன்றம் பெற்றிருக்கு மானால் வாணிகத்தையும் தொழிலையும் அடிப்படை உரிமை களையும் 16 ஆவது விதியின்கீழ் கொண்டு வருவது தேவையானது என்று நாம் கருதியிருக்க மாட்டோம். அரசியல் நிர்ணய சபையின் துவக்கத்திலேயே சில அடிப்படையான அணுகுமுறைகள் காரண மாக கதவு அடைக்கப்பட்டு விட்டதால் நாடு முழுவதிலும் வாணிகம் மற்றும் தொழில் விஷயங்களில் ஒரே மாதிரியான தன்மையை சில தலைப்பின் கீழ் கொண்டுவரும் பொருட்டு அதற்கென சில இடத்தை தேட வேண்டியிருந்தது. வாணிகமும் தொழிலும் நாடு முழுவதிலும் சுதந்திரமாக இருக்க வேண்டுமென்ற நமது மக்களில் மிகப் பெரும்பான்மையோரின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்கு நாம் கண்ட ஒரே வழி அதை அடிப்படை உரிமைகளின் கீழ் கொண்டு வருவது என்பதுதான். அவக்கேடாக காணப்பட்ட போதிலும் வாணி கத்தையும், தொழிலையும் அடிப்படை உரிமைகளின் கீழ் கொண்டு வருவதைத் தவிர நமக்கு முன்பு வேறெந்த வழியும் இல்லை என்று நாம் கருதியதுதான் இதற்குக் காரணம்; கோட்பாட்டு ரீதியாகப் பார்க்கும்பொழுது இந்த விஷயமானது அடிப்படை உரிமைகள் சம்பந்தப்பட்டதல்ல என்பதை நான் ஏற்றுக்கொண்டாலும், வாணி கத்திற்கும் தொழிலுக்கும் அடிப்படை உரிமைகளில் நாம் ஏன் இடம் கொடுத்தோம் என்பது எனது நண்பர் சுப்பிரமணியத்திற்கு திருப்தியளிக்கும் என்று நான் கருதுகிறேன்.

வாணிகமும் தொழிலும் 244 ஆவது விதிக்கு உட்பட்டதாக ஆக்கப்படுவதால் நாம் நடைமுறையில் அடிப்படை உரிமையை நாசப்படுத்தி விட்டோம் என்று கூறும் மற்றொரு வாதம் சம்பந்தப்பட்டமட்டில் எனது நண்பர் சுப்பிரமணியம் 244 ஆவது விதியை படித்திருக்கமாட்டார் அல்லது அந்த விதியை தவறாகப் படித்திருப்பார் என்று நான் உறுதியாகக் கூறமுடியும் என்றே நினைக்கிறேன். 244 ஆவது விதிக்கு ஒரு வரம்பிற்குட்பட்ட வாய்ப்பே உண்டு. அது செய்வதெல்லாம் மாகாணங்களுக்கிடையிலான வாணிகம் மற்றும் தொழில் சம்பந்தப்பட்ட பிரச்சினைகள், வேறொரு மாகாணத்தில் தயாரிக்கப்பட்டு அனுப்பப்படும் பொருள்கள், அல்லது அங்கிருந்து அனுப்பப்படும் பொருள்கள் மீது சில கட்டுப்பாடுகளை விதிப்பது போன்றவை குறித்து மாகாண சட்டசபைகளுக்கு அதிகாரங்களை தருவதாகும்; ஆனால், இந்த சட்டமானது அந்த மாகாணத்திற்குள் தயாரிக்கப்படும் பொருள்களுக்கும் மாகாணத்திற்கும் வெளியிலிருந்து இறக்குமதி செய்யப்படும் பொருள்களுக்குமிடையில் எவ்வித ஏற்றத்தாழ்வையோ, பாகுபாட்டையோ காண்பிக்கக்கூடாது. இது ஒரு மிகவும் வரம்பிற்குட்பட்ட சட்டம் என்பதை அவர் ஏற்றுக்கொள்ளுவார் என்று இப்பொழுது உறுதியாக நம்புகிறேன். அது வாணிகம் மற்றும் தொழில் உரிமையையும் நாடு முழுவதிலும் சுதந்திரமாக சென்றுவரும் உரிமையையும் நிச்சயம் எடுத்துக் கொள்ளவில்லை.

**திரு. சி. சுப்பிரமணியம்:** பொது நலத்திற்கேற்ப எந்த ஒரு மாகாணமும் வாணிகம், தொழில் அல்லது பரிவர்த்தனை போன்ற சுதந்திரத்தின் மீது இத்தகைய நியாயமான கட்டுப்பாடுகளை விதிப்பது சட்டப்பூர்வமானது என்று துணைவிதி கூறுகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஆம், ஆனால் நியாயமான கட்டுப்பாடுகள் என்பது வாணிகத்தின் சுதந்திரத்தையும் சமத்துவத்தையும் முற்றிலும் நாசம் செய்வது என்று பொருளாகாது, அது அவ்வாறு அர்த்தமாகாது.

ஆகையால் ஐயா, அந்த விதியானது முற்றிலும் சரியாக இருக்கிறது என்று கூறுவதோடு அதை அவையின் ஏற்புக்காக முன் வைக்கிறேன்.

விதி 16 ஏற்கப்பட்டது என்பதுடன் அரசியல் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

## விதி 17

[1]**திரு. துணைத் தலைவர்:** நாம் தற்பொழுது விதி 17க்கு வருகிறோம்.

தீர்மானமானது சபை முன்புள்ள 17 ஆவது விதி அரசியல் சாசனத்தில் இடம்பெற வேண்டும் என்பதாகும்.

இந்த விதிக்கு ஏராளமான திருத்தங்கள் உள்ளன, தற்பொழுது அவை எடுத்துக் கொள்ளப்படும். என்னுடைய பட்டியலில் முதலில் இருப்பது எண் 543. அது எதிர்மறையானது என்பதால் நிராகரிக்கப் படுகிறது.

இந்தத் திருத்தத்திற்கு ஒரு திருத்தம் இருக்கிறது. அதாவது 5ஆவது பட்டியலில் திரு. ராம்சந்திர உபாத்தியாயா பேரில் உள்ள எண் 93.

(திரு. காமத்தின் குறுக்கீடு)

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, எந்தத் திருத்தங்களை ஏற்கத் தயாராக உள் ளேன், எந்தத் திருத்தங்களை ஏற்க இயலாது என்பதை துவக்கத் திலேயே கூற விரும்புகிறேன்.

முன்மொழியப்பட்ட திருத்தங்களில் 559 ஆம் எண்ணுள்ள பேராசிரியர் கே.டி.ஷாவின் திருத்தத்தை மட்டும் ஏற்கத் தயாராக உள்ளேன்; அது 17வது விதியின் துணைவிதி (2)ல் 'என்ற அடிப் படையில் பாகுபாடு' என்ற வார்த்தைகளுக்குப் பின்னர் 'மட்டும்' என்ற வார்த்தையை அறிமுகப்படுத்துகிறது. மீதமுள்ள திருத்தங் களை ஏற்க இயலாது என்று அஞ்சுகிறேன். திருத்தங்கள் சம்பந்தப் பட்ட மட்டில் நான் ஏற்கனவே குறிப்பிட்டது போல 'தேவதாசிகள்' என்ற வார்த்தையை பேராசிரியர் கே.டி.ஷா அறிமுகப்படுத்துவதை நான் ஏற்க இயலாது! 'தேவதாசிகள்' என்ற வார்த்தையை சேர்க்க

1. அ.நி.வி. தொகுதி VII, டிசம்பர் 3, 1948, பக். 803.
2. மேற்படி தொகுதி பக்கங்கள் 812-13

வேண்டும் என்ற அவருடைய வாதங்களுக்கு இந்த விவாதத்தில் பங்கெடுத்த இதர உறுப்பினர்கள் பதிலளித்து இருக்கிறார்கள் என்று நான் கருதுவதாலும், இந்த வாதங்களுக்கு ஏற்கனவே பதிலளித்து இருப்பதாலும் நான் கூடுதலாக ஏதாவது சொல்வதால் உபயோகர மான பலனெதுவும் இருக்குமென்று நான் நினைக்கவில்லை.

மரியாதைக்குரிய என்னுடைய நண்பர் எச்.வி. காமத்தின் திருத்தம் சம்பந்தப்பட்டமட்டில் அவர் 'பொதுமக்கள்' என்ற வார்த்தைக்குப் பதிலாக 'சமூகம் மற்றும் தேசிய' என்ற வார்த்தை களைப் போட விரும்புகிறார். 'பொதுமக்கள்' என்ற வார்த்தை 'தேசிய' அதைப்போல 'சமூக' என்ற இரு வார்த்தைகளை கொண்டிருக்குமள விற்கு பரந்ததாக உள்ளது என்று நான் கருதியதால் ஒரு வார்த்தை யில் நோக்கம் தெளிவாக வெளிப்படும்பொழுது இரண்டு வார்த்தை களைப் பயன்படுத்துவது தேவையற்றது என்று கருதினேன்; எடுக்க வேண்டிய சரியான நடவடிக்கை இதுதான் என்பதை அவர் ஏற்றுக் கொள்ளுவார் என்று கருதுகிறேன்.

மரியாதைக்குரிய என்னுடைய நண்பர் தாமோதர் ஸ்வரூப் சேத் கொடுத்த திருத்தம் சம்பந்தப்பட்ட மட்டில் அது தேவை யற்றது என்று எனக்குப்படுவதால் நான் அதை ஏற்கவில்லை. சர்தார் பூபிந்தர் சிங் மான் கொடுத்த திருத்தம் சம்பந்தமட்டில் விதி17 துணைவிதி (2) ன் விதிகளின் கீழ் அரசாங்கம் எங்கெல்லாம் கட்டாய உழைப்பை திணிக்கிறதோ அங்கெல்லாம் அத்தகைய கட்டாய உழைப்பிற்கு அரசாங்கம் பணம் கொடுக்க வேண்டுமென்று ஒரு விதி ஏற்படுத்த விரும்புகிறார். கட்டாய சேவைக்கு தேவைப் படும் அரசாங்கத்தின் அதிகாரம் மீது இத்தகையதொரு வரம்பை விதிப்பது சரியானது என்று நான் தற்பொழுது கருதவில்லை.

அரசாங்கம் கோரும் கட்டாய சேவை என்பது, இந்தப் பிரிவின் செயல்பாட்டின் கீழ்வரும் பிரஜை தன்னுடைய வாழ்க்கைக்கான வருவாயைத் தேடப் போதுமான நேரம் ஒதுக்குவதைத் தடுக் காமல், சிலமணி நேரத்திற்கு மட்டும் எனக் கட்டுப்படுத்தப்படுவது முற்றிலும் சாத்தியமே; உதாரணத்திற்குச் சொல்வதென்றால் இத்தகைய கட்டாய உழைப்பு 'ஓய்வுநேரங்கள்' என்பதோடு கட்டுப் படுத்தப்படலாம்; அல்லது அவருடைய வாழ்க்கைக்கான ஊதியத்திற் காக அலையாத நேரங்கள் என்பதோடு கட்டுப்படுத்தப்படலாம்;

இந்தக் கட்டாய உழைப்பிற்கு எவ்வித நட்டஈடும் தரமுடியாது என்று அரசாங்கம் கூறுவது முற்றிலும் நியாயமானதே ஆகும்.

இந்தப் பிரிவில் நட்டஈடு தராதது விமர்சிப்பதற்கான தள மாகாது என்பதைக் காணமுடியும்; ஏனென்றால் துணைவிதி (2)ல் தெரிவிக்கப்பட்டுள்ள அடிப்படைக் கருத்து என்பது இதுதான்: எப் பொழுதெல்லாம் கட்டாய உழைப்பு அல்லது கட்டாய சேவை கோரப்படுகிறதோ அப்பொழுது அனைவரிடமிருந்தும் அது கோரப்பட வேண்டும் என்பதுடன் அரசாங்கம் அனைவரது சேவை யையும் கோரி அதற்காக ஊதியம் எதுவும் தரவில்லை என்றாலும், அது பெரும் ஏற்றத்தாழ்வுக்கு வழிவகை செய்கிறது என்று நான் கருதவில்லை. ஐயா! இந்த விஷயம் நிச்சயமற்ற நிலையில் இருப் பதால் தற்பொழுதுள்ள விதியில் இருப்பது போல் அதை அப் படியே விட்டுவிடுவது விரும்பத்தக்கது என்ற கருதுகிறேன்.

**திரு. எச்.வி.காமத்:** ஐயா, ஒரு விளக்கம். என்னுடைய திருத்தத்திற்கு டாக்டர் அம்பேத்கருடைய ஆட்சேபனை அது ஒரு வார்த்தைக்குப் பதிலாக இரண்டு வார்த்தைகளை கொண்டிருக் கிறது என்ற அடிப்படையில் மட்டும்தானா? அவ்வாறானால் ‘பொதுமக்கள்’ என்ற வார்த்தைக்குப் பதிலாக ‘சமூக’ அல்லது ‘தேசிய’ என்ற வார்த்தைகளைப் போட்டால் நான் மகிழ்ச்சியடை வேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இரண்டையும் உள்ளடக்கிய ஒரு விரிந்த சொற்றொடரைப் பயன்படுத்துவது நல்லது.

**திரு. ரோஹிணி குமார் சௌத்ரி: (அஸ்ஸாம்- பொது):** ஐயா, கியானி குருமுக்சிங் முஸாபிர் முன் மொழிந்த விபசாரம் சம்பந்த மான 548 வது திருத்தத்தை மாண்புமிகு உறுப்பினர் ஏற்றுக் கொள்ளு கிறாரா என்பதை நான் அறியலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது முன் மொழியப் படவில்லை என்று நினைக்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** அது முன்மொழியப்படவில்லை. நான் திருத்தங்களை ஒன்றன் பின் ஒன்றாக வாக்கெடுப்பிற்கு விடு கிறேன். காஜி சையத் கரிமுதீன் பெயரில் உள்ள 544 ம் எண்ணுள்ள திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

*திரு. தாமோதர் ஸ்வரூப் சேத் பெயரில் உள்ள திருத்தம் எண் 545 நிராகரிக்கப்பட்டது.*

*பேராசிரியர் கே.டி.ஷா பெயரிலுள்ள திருத்தம் எண் 546ம் நிராகரிக்கப்பட்டது.*

*சர்தார் பூபிந்தர் சிங் பெயரிலுள்ள திருத்தம் எண் 560 திரும்பப் பெறப்பட்டது. (திரு.காமத் பெயரிலுள்ள திருத்தம் எண் 556 ம் நிராகரிக்கப்பட்டது.)*

*பேராசிரியர் கே.டி.ஷா பெயரிலுள்ள திருத்தம் எண் 559 டாக்டர் அம்பேத்கரால் ஏற்றுக்கொள்ளப்பட்டு நிறைவேற்றப் பட்டது. 'விதி 17 துணைவிதி (2)ல் 'என்ற அடிப்படையில் பாகுபாடு' என்ற வார்த்தைகளுக்குப் பின்னர் 'மட்டும்'' என்ற வார்த்தை சேர்க்கப் படும்.*

*திருத்தப்பட்ட விதி 17 ஏற்கப்பட்டது என்பதுடன் அரசியல் சாசனத்தில் சேர்க்கப்பட்டது.*

## விதி 18

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** *திரு. தாமோதர் ஸ்வரூப்பின் - 564 எண்ணுள்ள திருத்தத்தை நான் ஏற்கவில்லை. அந்தத் திருத்தம் நிராகரிக்கப்பட்டது.*

*விதி 18 ஏற்கப்பட்டது என்பதுடன் அரசியல் சாசனத்தில் சேர்க்கப்பட்டது.*

## விதி 19

[2]**திரு. துணைத் தலைவர்:** *டாக்டர் அம்பேத்கர் திருத்தம் 596.*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** *(பம்பாய்: பொது): ஐயா, நான் முன்மொழிகிறேன்:*

---

*1. அ.நி.வி., தொகுதி VII, 1948, டிசம்பர் 3, 1948, பக்கம் 815.*
*2. மேற்படி அதே நூல், பக். 826.*

'விதி 19 துணைவிதி (2)ல் 'சேர்க்கக்கூடாது'' என்ற வார்த்தைக்குப் பதிலாக 'தடுத்தல்'' என்பது பதிலியாக சேர்க்கப்பட வேண்டும்'' இதர விதிகளில் நாம் உபயோகித்ததைப் போன்று மொழிப் பொருத்தத்திற்காக மட்டும் இவ்வாறு செய்யப்படுகிறது.

★ ★ ★

[1]**மாண்புமிகு திரு.கே. சந்தானம்:** ஐயா, ஒரே மாதிரியான உரிமை வழக்கு விசாரணை முறை சட்டத் தொகுப்பை உருவாக்க முயற்சிக்கும்படி மாநிலங்களை கேட்டுக்கொள்ளும் வழிகாட்டும் கோட்பாட்டை நிறைவேற்றியுள்ளோம்; இந்தக் குறிப்பிட்ட திருத்தம் அந்த வழிகாட்டும் கோட்பாட்டிற்கு நேர் எதிரானது. அந்த அடிப்படையில் கூட இதன் தொடர்பில் இது முற்றிலும் பொருத்தமற்றது என்று கருதுகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர், இந்த விஷயத்தில் நீங்கள் ஏதேனும் கூற விரும்புகிறீர்களா? திரு.சந்தானம் முன்வைத்துள்ள காரணங்களை வைத்து இந்த திருத்தம் முறையானதா அல்லது இல்லையா என்பது குறித்து உங்களுடைய கருத்தை நான் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. ரங்காவுடன் இங்கே நான் மற்றொரு திருத்தத்தை விவாதித்துக் கொண்டிருக்கிறேன், ஆகவே....

**மாண்புமிகு திரு.கே. சந்தானம்:** தனி நபர் சட்டம் குறித்த திருத்தம் எண் 612 முன்மொழிய அனுமதி கோரப்படுகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** வழிகாட்டும் கோட்பாடுகளை நாம் விவாதித்தபோதும், மற்றொரு நாளில் மற்றொரு திருத்தத்தை விவாதித்தபோதும் இந்த விஷயத்தை ஏற்கனவே முடித்து விட்டோம்.

★ ★ ★

[2]**திரு. துணைத் தலைவர்:** என்னுடைய பட்டியலில் 15 திருத்தங்கள் இருக்கின்றன, அவைகளில் பெரும்பாலானவை இந்த அவையில் முன்மொழியப்பட்டவை. அவைகள் இந்த குறிப்பிட்ட

1. அ.நி.வி., தொகுதி VII, 1948, டிசம்பர் 6, 1948, பக்கம் 829-30.
2. மேற்படி அதே நூல், பக். 838

விதி குறித்து பல்வேறு கோணங்களில் கருத்தோட்டங்களை தரு கின்றன என்று நினைக்கிறேன். ஏழு அல்லது எட்டு உறுப்பினர்கள் தங்கள் கருத் தோட்டங்களை இங்கே வெளிப்படுத்தியுள்ளனர். இந்த விதி போதுமான அளவிற்கு விவாதிக்கப்பட்டுள்ளது என்று கருது கிறேன். பதிலளிக்கும்படி டாக்டர் அம்பேத்கரை அழைக்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, இந்த விதிக்கு ஆதரவு தெரிவித்து பல்வேறு உறுப்பினர்கள் பேசியுள்ளதற்கும் அதிகமாக நான் கூறுவதற்கு ஒன்று மில்லை. நான் சொல்லவேண்டியதெல்லாம் திருத்தம் எண் 609ஐ மட்டுமே நான் ஏற்கத் தயாராக இருக்கிறேன் என்பதுதான்.

**திரு. எச்.வி. காமத்:** ''நான் எதிர்க்கிறேன், நான் சொல்வ தற்கு ஒன்றுமில்லை'' என்று டாக்டர் அம்பேத்கர் கூறுவது மட்டும் போதுமா என்று நான் கேட்கலாமா? இந்த சபைக்கு நியாயம் வழங் கும் விதத்தில் திருத்தங்கள் மீதும், விவாதத்தின்பொழுதும் எழுப்பப் பட்ட அம்சங்களுக்கு அவர் பதிலளிக்க வேண்டும் என்று கருதுகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** பல்வேறு திருத்தங்களை நிராகரித் ததற்கான காரணங்களை கொடுக்கும்படி டாக்டர் அம்பேத்கரை கட்டாயப்படுத்த முடியாது என்று அஞ்சுகிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது:** (மேற்கு வங்கம்: முஸ்லீம்:) திரு. துணைத்தலைவர் அவர்களே, மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக்கொண்டுள்ள திருத்தம் எண் 609 என்பது வெறும் வாய்மொழி திருத்தம் என்று கூறலாமா?

**திரு. துணைத் தலைவர்:** அது அவை குறிப்புகளில் பதிவு செய்யப்படும். இப்பொழுது நாம் திருத்தங்களை ஒன்றன் பின் ஒன்றாக ஆராய்வோம்.

*(பின்வரும் திருத்தம் டாக்டர் அம்பேத்கரால் ஏற்கப்பட்டு சபையால் நிறைவேற்றப்பட்டது.) மொத்தத்தில் 12 திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன என்பதுடன் ஒரு திருத்தம் திரும்பப் பெறப்பட்டு விட்டது.)*

*''விதி 19, துணைவிதி(2) இல் 'சேர்க்கப்படக்கூடாது'' என்ற வார்த்தைக்குப் பதிலாக ''தடுக்கப்பட வேண்டும்'' என்ற வார்த்தை போடப்பட வேண்டும்.*

இந்தத் திருத்தம் ஏற்கப்பட்டது.

★ ★ ★

[1]திரு. துணைத்தலைவர்: திருத்தம் வருமாறு:

''விதி 19 துணைவிதி (2) உபவிதி (ஆ) '' இல் உள்ள 'எந்த வகுப்பு அல்லது பிரிவு'' என்ற வார்த்தைகளுக்குப் பதிலாக 'அனைத்து வகுப்புகள்' மற்றும் பிரிவுகள் எனப் போடப்பட வேண்டும்.''

டாக்டர் அம்பேத்கர் அவர்களே, இதை ஏற்றுக் கொள் கிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர்:** ஆம்! ஐயா!

**திரு. துணைத் தலைவர்:** இந்தத் திருத்தம் டாக்டர் அம்பேத் கரால் ஏற்றுக்கொள்ளப்பட்டு விட்டது.

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

( எண் 596 மற்றும் 609 திருத்தங்களினால் திருத்தப்பட்ட விதி 19 நிறை வேற்றப்பட்டது என்பதுடன் அரசியல் சாசனத்தில் சேர்க்கப்பட்டது.)

## விதி 14 (தொடர்கிறது)

★ ★ ★

[2]**திரு. துணைத்தலைவர்:** விதி 14க்கு மீண்டும் செல்வோம். என் நினைவிற்கு எட்டியபடி என்னுடைய குறிப்புகளைத் தவறாக வைத்து விட்டதற்கு வருந்துகிறேன். விதி 14ல் பல திருத்தங்கள் ஒன்றன்பின் ஒன்றாக வாக்கெடுப்பிற்கு விடப்பட்டன என்பதுடன் இரண்டு திருத்தங்கள் மட்டுமே பரிசீலனைக்கு எடுக்கப்பட்டன. அவை குறித்துப் பரிசீலிப்பதை நாம் ஒத்தி வைத்தோம் என்பது சபைக்குத் தெரியும். ஒரு திருத்தமானது காஜி சையத் கரீமுத்தினால் முன்மொழியப்பட்ட 512ம் எண் திருத்தமாகும்; மற்றோர் ஆலோ சனையாகும் அது டி.டி.கிருஷ்ணமாச்சாரியின் ஆலோசனையென்று நான் கூறினால் சரியாக இருக்குமா? திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி அவர்களே, எனக்கு அதைப் பற்றி சற்று விளக்குவீர்களா? அது ஒரு ஆலோசனையா, அல்லது ஒரு குறுகிய அவகாச திருத்தமா?

---

1. அ.நி.வி., தொகுதி VII, 1948, டிசம்பர் 6, 1948, பக்கம் 839.
2. மேற்படி அதே நூல், பக். 840.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** அது ஒரு குறுகிய அவகாச திருத்தம்.

**திரு. துணைத் தலைவர்:** அது என்னால் அனுமதிக்கப் பட்ட, ஒரு குறுகிய அவகாச திருத்தம். இவை இரண்டு மட்டும் வாக்கெடுப்பிற்கு விடப்பட வேண்டும்.

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கரால் ஏற்றுக் கொள்ளப்பட்ட திரு. கிருஷ்ணமாச்சாரியின் திருத்தத்திற்கு நாம் வருவோம்.

**திரு. எச்.வி. காமத்:** ஒவ்வொரு முறையும் டாக்டர் அம் பேத்கர் ஏற்றுகொள்கிறார் அல்லது நிராகரிக்கிறார் என்று கூறுவது தேவைதானா?

**திரு. துணைத் தலைவர்:** சில நேரங்களில் அது தேவை. எப்பொழுதும் அல்ல. திருத்தத்தை இப்பொழுது வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

திருத்தம் வருமாறு:

> 'விதி 14 துணை விதி 2இல் 'இருந்தாக வேண்டும்' என்ற வார்த்தைக்குப் பின்னால் 'குற்றம் சாட்டப்பட வேண்டும். மற்றும்' என்ற வார்த்தைகள் சேர்க்கப்பட வேண்டும்.

திருத்தம் நிறைவேற்றப்பட்டது.

திருத்தப்பட்டபடி விதி 14 அரசியல் சாசனத்தில் சேர்க்கப் பட்டது.

★ ★ ★

## விதி 15 (தொடர்ச்சி)

[2]**திரு. துணைத் தலைவர்** (டாக்டர் எச்.சி. முகர்ஜி): விதி 15 மீதான பொதுவான விவாதத்தை நாம் இப்பொழுது மீண்டும் தொடர்வோம்.

---

1. அ.நி.வி., தொகுதி VII, 1948, டிசம்பர் 6, 1948, பக்கம் 842.
2. மேற்படி அதே நூல், பக். 859.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** (பம்பாய்: பொது) ஐயா, இந்த விஷயத்தை சற்றுத் தாமதமாக எடுக்க தங்களை நான் வேண்டிக் கொள்ளலாமா?

**திரு. துணைத் தலைவர்:** சபையின் விருப்பம் அதுதானா?

**மதிப்பிற்குரிய உறுப்பினர்கள்:** ஆமாம்.

## விதி 20

**திரு. துணைத் தலைவர்:** அவ்வாறானால், நாம் அடுத்ததாக 20வது விதிக்குச் செல்வோம்.

சபையின் முன்னுள்ள திருத்தம் வருமாறு:

''அந்த விதி 20 அரசியல் சாசனத்தின் பகுதியாக இருக்கும்.''

நான், தொடர்ச்சியாகப் பல திருத்தங்களைப் பெற்றுள்ளேன்; அவற்றைப் படிக்கிறேன். 613 ஆம் எண்ணுள்ள திருத்தமானது அனுமதிக்கப்படாததால் அது தோற்கடிக்கப்பட்டதாகக் கருதப் படுகிறது. எண்கள் 614 மற்றும் 616 இரண்டும் ஏறத்தாழ ஒரே மாதிரி யாக உள்ளன; 614 ஆம் எண் திருத்தம் பிரேரேபிக்கப்படலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பின்வருமாறு பிரேரேபிக்கிறேன்:

> 'விதி 20ன் துவக்கத்தில் பொது அமைதி, ஒழுக்கம் மற்றும் ஆரோக்கியத்திற்கு உட்பட்டு' என்பது சேர்க்கப்படவேண்டும்.

இவை விதி 20க்கும் பொருந்தக் கூடியவையாக இருக்க வேண்டும்; ஏனென்றால் மதம் சம்பந்தப்பட்ட இந்த விஷயங்களில் முழுஉரிமைகள் அளிப்பது அதன் நோக்கமல்ல. பொது அமைதி, ஒழுக்கம், சுகாதாரம் ஆகியவற்றின் பொருட்டு எப்போதெல்லாம் தேவைப்படுகிறதோ அவற்றின் விளக்கங்களையும் ஒழுங்குபடுத்தும் உரிமை அரசுக்கு இருப்பது அவசியம்.

**திரு. துணைத் தலைவர்:** 616ஆம் எண் திருத்தம் வாக்கெடுப்புக்கு விடப்பட வேண்டும் என்று வலியுறுத்தப்படுமானால்

அவ்வாறே செய்கிறேன். இந்த விஷயம் பற்றிய உறுப்பினர் எவரும் ஏதேனும் சொல்ல விரும்புகிறாரா?

★ ★ ★

(திருத்தம் எண் 616 முன்மொழியப்பட்டது.)

[1]**திரு. தாஜமுல் ஹுசேன்:**

"சமய நோக்கங்களுக்காகவும் (அ) அறப்பணிகளுக்காகவும் நிறுவனங்களை அமைத்துக்கொள்வதற்கும் பராமரிப்பதற்கும் ஒவ்வொரு சமயத்துக்கும் அல்லது அதன் எந்த ஒரு பிரிவுக்கும் உரிமை இருக்க வேண்டும்."

இவைதான் துல்லியமாக இந்த விதியில் இடம்பெற்றுள்ள சொற்கள். இச்சொற்கள் அப்படியே இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன். அவை நீக்கப்படுவதை நான் விரும்பவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் சொல்லுவதற்கு எதுவும் இல்லை.

**திரு.துணைத்தலைவர்:** இப்போது திருத்தங்களை ஒன்றன் பின் ஒன்றாக வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

திருத்தம் வருமாறு:

'விதி எண் 20-ன் தொடக்கத்தில் 'பொது அமைதி, ஒழுக்கம், சுகாதாரம் ஆகியவற்றுக்கு உட்பட்டு' என்ற சொற்கள் சேர்க்கப்பட வேண்டும்.

திருத்தம் ஏற்கப்பட்டது.

(ஏனைய நான்கு திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன.)

திருத்தப்பட்ட விதி 20 அரசியல் சாசனத்தில் இணைக்கப் பட்டது.

## புதிய விதி 20-அ

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திருத்தம் எண் 632 அல்லது திருத்தம் எண் 633ஐ நான் ஏற்றுக்கொள்ளவில்லை.

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VII, டிசம்பர் 7, 1948, பக். 863.
2. மேற்படி அதே நூல், பக். 866.

*திரு.எச்.ஜே. கண்டேகர்:* (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார்): ஐயா, நான் பேச விரும்புகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** மிகவும் நேரமாகிவிட்டது. திருத் தங்களை இப்போது வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

(பின்கண்ட இரண்டு திருத்தங்களும் நிராகரிக்கப்பட்டன.)

(1) 'விதி எண் 21ல் ''எது'' என்ற சொல்லுக்குப்பின்னர் 'முழுவதுமாகவோ அல்லது பகுதியாகவோ'' என்ற சொற்கள் சேர்க்கப்பட வேண்டும்.''

(2) 'விதி எண் 21ல்'' ''அதிலிருந்து கிட்டும் வருமானங்கள் ''என்னும் சொற் களுக்குப் பதிலாக ''எந்த வருமானமும்'' என்ற சொற்கள் இடம்பெற வேண்டும்.''

விதி எண். 21 அரசியல் சாசனத்தில் இணைக்கப்பட்டது.

## விதி 22

[1]**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் எண் 645 டாக்டர் அம்பேத்கர் பெயரில் உள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பின் கண்டவாறு முன்மொழிகிறேன்:

''விதி 22-ன் துணை விதி (1)ல் [1]''அரசால்'' என்னும் சொல் நீக்கப்பட வேண்டும்''.

எத்தகைய ஐயப்பாடும் எழும் சாத்தியக்கூறை அகற்றுவதே இந்தத் திருத்தத்தின் நோக்கம். தற்போது உள்ளது போல் 'அரசு'' என்னும் சொல் நகலில் விட்டு வைக்கப்படுமானால், மதக் கல்வி அளிப்பதற்கு அரசைத் தவிர இதர அமைப்புகளை இந்த விதி அனு மதிக்கிறது என்று பொருள் கொள்வதற்கு வழிவகுக்கும். மதக் கல்வி அரசால் அல்லது வேறு எந்த அமைப்பால் அளிக்கப்படும் விஷயம் எப்படியிருந்தாலும் அரசு நிதியிலிருந்து முற்றிலுமாகப் பராமரிக்கப் படும் எந்த ஒரு நிறுவனமும் மதக்கல்வி நோக்கத்திற்குப் பயன் படுத்தப்படக் கூடாது என்பதே இந்த விதியின் அடிப்படைக் கோட் பாடாகும்.

★ ★ ★

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VII, டிசம்பர் 7, 1948, பக். 871.

**திரு. துணைத் தலைவர்:** இதர உறுப்பினர்களின் கருத்துகளுக்கும் மிகுந்த மதிப்பளித்து அவர்களைப் பேசுவதற்கு அனுமதிக்க நான் பெரிதும் விரும்பினாலும், பேசுவதற்கு ஏராளமான உறுப்பினர்கள் இருப்பதைக் காண்கிறேன். பன்னிரண்டு திருத்தங்கள் வாக்கெடுப்புக்கு விடப்படவேண்டியுள்ளது. ஒன்பது திருத்தங்கள் முன்மொழியப்பட்டுள்ளன; ஏற்கெனவே ஆறு உறுப்பினர்கள் உரையாற்றியுள்ளனர் என்று நினைக்கிறேன். இந்த விதி குறித்து போதிய அளவு விவாதம் நடைபெற்றிருக்கிறது என்றே உணர்கிறேன். இப்போது டாக்டர் அம்பேத்கரைப் பேசுமாறு அழைக்கிறேன்.

[1]**பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா:** (மேற்கு வங்கம், பொது): ஒன்று அல்லது இரண்டு விவரங்களைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். உரை ஏதும் நிகழ்த்தப் போவதில்லை. சில விஷயங்கள் குறித்து விளக்கம் பெறவே விரும்புகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** ஏற்கனவே என் முடிவை அறிவித்து விட்டேன். குறிப்பாக நீங்களும் நானும் ஒரே மாகாணத்தைச் சேர்ந்தவர்கள் என்பதால் மேற்கொண்டு உரைகள் ஏதும் நிகழ்த்தப்படுவதை என்னால் அனுமதிக்க இயலாது.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** நாம் ஒரே மாகாணத்தைச் சேர்ந்தவர்கள் என்பதற்கும் இதற்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. குறிப்பிட்ட ஒரு விஷயம் குறித்து விளக்கம் பெறவே விரும்பினேன்.

**திரு. துணைத் தலைவர்:** எனது தீர்ப்பு முடிவானது, பண்டிட்ஜி, இப்போது டாக்டர் அம்பேத்கரைப் பேசுமாறு அழைக்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, இங்கு முன்மொழியப்பட்டுள்ள திருத்தங்களில் விதி எண் 661லிருந்து உபவிதி (3) நீக்கவேண்டும் என்று திரு.கபூர் கொண்டு வந்திருக்கும் திருத்தத்தை மட்டுமே என்னால் ஏற்க முடியும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஏனைய திருத்தங்களை ஏற்க இயலாது என்பதை வருத்தத்தோடு கூறிக்கொள்கிறேன்.

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VII, டிசம்பர் 7, 1948, பக். 882-86.

இந்த அவையில் பலதரப்பட்ட கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டுள்ள நிலைமையில், இந்த விதியின் நோக்கம் என்ன என்பதைச் சற்று விரிவாக இங்கு விளக்குவது உசிதமாக இருக்கும். அவையில் முன்மொழியப்பட்டுள்ள பல்வேறு திருத்தங்களைக் கணக்கிலெடுத்துக் கொண்டு பார்க்கும்போது மூன்று வெவ்வேறு விதமான கருத்துகள் நிலவுவது தெளிவாகத் தெரிகிறது. இவற்றில் சென்னையைச் சேர்ந்த என்னுடைய நண்பர் இஸ்மாயில் தெரிவித்துள்ள கருத்தும் ஒன்றாகும். மதக்கல்வி அளிப்பதற்கு எந்தத் தடையும் இருக்கக் கூடாது என்று அவர் கூறுகிறார்.

அவர் வலியுறுத்தும் ஒரே வரம்பெல்லாம் இத்தகைய மத போதனைக் கூட்டங்களில் யாரும் கட்டாயமாக கலந்துகொள்ளும்படி நிர்ப்பந்திக்கப்படக் கூடாதென்பதுதான். அவரை நான் சரியாக புரிந்து கொண்டிருப்பேனேயாகில் அந்தக் கருத்திற்காகத்தான் அவர் நிற்கிறார் என எனக்குத் தோன்றுகிறது. எனது நண்பர் திரு. மான் மற்றும் திரு. தாஜமுல் ஹுசேன் பிரதிநிதித்துவப்படுத்தும் மற்றொரு கருத்தும் நம்முன் உள்ளது. அவர்களுடைய கருத்துப்படி மதக் கல்வி என்பது இருக்கவே கூடாது. கல்வி நிறுவனங்களிலும் இருக்கக் கூடாது என்பதாகும். பின்னர் மூன்றாவது கருத்தோட்டம் உள்ளது; பேராசிரியர் கே.டி.ஷாவினால் வெளிப்படுத்தப்படும் அக்கருத்தானது முற்றிலும் அரசாங்க நிதியினால் பராமரிக்கப்படும் அமைப்புகளில் மதக்கல்வி அனுமதிக்கப்படக்கூடாது என்பது மட்டுமல்ல, ஓரளவு அரசாங்க நிதியினால் பராமரிக்கப்படும் கல்வி நிறுவனங்களில் கூட அது அனுமதிக்கப்படக் கூடாது என்பதாகும்.

தற்பொழுதுள்ள நிலையில் நகல் உரியபொருளைக் குறிக்கிறது என்று உரிமையோடு நான் இப்பொழுது கூறமுடியும்; அது, சபைக்கு ஏற்புடையதாக இருக்குமென நம்புகிறேன். என் நண்பர் திரு.இஸ்மாயில் வலியுறுத்திய அம்சங்களை ஏற்பதற்கு எதிராக மூன்று முக்கிய காரணங்கள் உள்ளன என்று எனக்குப்படுகிறது; அதாவது, மதக் கல்விக்கு தடைஎதுவும் இருக்கக்கூடாது, மதக் கல்வி அளிக்கப்பட வேண்டும் என்று அவரது வாதத்திற்கு எதிரான காரணங்களை மிகச் சுருக்கமாகக் கூறுகிறேன்.

முதலாவது காரணம் இதுதான். வரி மூலம் பெறப்படும் பொதுநிதி எந்தவொரு குறிப்பிட்ட சமூகத்தின் நலனுக்காகவும் பயன்படுத்தப்படக்கூடாது என்று விதி 21ல் பொதிந்துள்ள நிலைபாட்டை

நாம் ஏற்றுக்கொண்டுள்ளோம். உதாரணத்திற்குச் சொல்வதென்றால், ஒரு குறிப்பிட்ட மதவழிப்பட்ட கல்வியை நாம் அனுமதித்தோமானால், அதாவது, ஒரு மாவட்ட அல்லது ஸ்தல போர்டு ஏற்படுத்தியுள்ள பள்ளியில், அங்கே பெரும்பாலான மாணவர்கள் இந்துக்கள் என்பதால் மதவழிப்பட்ட கல்வி அளிப்பது என்பது அத்தகைய நடவடிக்கை விதி 21ல் அடங்கியுள்ள ஷரத்துகளுக்குக் கெதிரானதாகப் போகும். மாவட்ட போர்டானது, அந்த போர்டு உள்ள பகுதிக்குள் வாழும் ஒவ்வொரு நபரிடமிருந்தும் வரிவசூல் செய்கிறது. பொதுவான வரியாக இருக்கக்கூடிய அதிலிருந்து மாவட்ட அல்லது ஸ்தலபோர்டு பள்ளிகளில் பெரும்பான்மை சமூகத்தைச் சேர்ந்த பிள்ளைகளுக்கு மட்டும் மதக் கல்வி அளிப்பதென்பது விதி 21ஐ தவறாகப் பயன்படுத்துவதாகும்; ஏனென்றால் இந்தப்பள்ளிகளில் அளிக்கப்படும் இந்து மதவழிப்பட்ட கல்வியில் பங்கேற்பதில் அக்கறையில்லாத முஸ்லீம் சமூகத்தைச் சேர்ந்த பிள்ளைகளோ அல்லது வேறெந்த சமூகத்தைச் சேர்ந்த பிள்ளைகளோ மாவட்ட ஸ்தல போர்டின் நிதிக்கு பணமளிக்கும்படி மாவட்ட ஸ்தல போர்டு நடவடிக்கையால் நிர்ப்பந்திக்கப்பட்டே தீருவார்கள்.

இரண்டாவது சிக்கல், அதாவது இந்நாட்டில் நாம் பெரும் எண்ணிக்கையிலான பல்வேறு மதங்களைப் பெற்றுள்ளோம் என்பது முதலாவதாகச் சொல்லப்பட்ட சிக்கலை விட மிகவும் கடினமானதாகும். உதாரணத்திற்குச் சொல்வதென்றால், வெவ்வேறு மதநம்பிக்கைகள் கொண்டுள்ள பல்வேறு மக்களைக் கொண்டுள்ள பம்பாய் போன்ற ஒரு நகரை எடுத்துக்கொள்வோம். பம்பாய் நகரில் அந்நகரின் மாநகராட்சியால் பராமரிக்கப்படும் ஒரு பள்ளி இருக்கிறதென்று வைத்துக்கொள்வோம். அத்தகையதொரு பள்ளி இந்து மதத்தில் நம்பிக்கை கொண்டுள்ள இந்துக்களின் பிள்ளைகளையும், அதேபோன்று கிறித்தவ பாரசீக சமூகங்களைச் சேர்ந்த மாணவர்களையும் கொண்டிருக்கும். இந்த விஷயத்தை மேலும் நுணுகி ஆராய்ந்து பார்த்தால் அங்கு இந்துக்கள் மீண்டும் பல்வேறு வகைப்பட்டவர்களாக பிரிந்துகிடப்பதைக் காணலாம்; அங்கே, சனாதன இந்துக்கள், வேதமதத்தை நம்பும் வேதஇந்துக்கள், புத்தர்கள், சமணர்கள், இந்துக்களிடையே சைவர்கள், வைஷ்ணவர்கள் இருக்கிறார்கள். இத்தகைய குழந்தைகள் அனைவரையும் சமமானவர்களாகக் கருதி அனைத்துப் பிரிவினருக்கும் மதவழிப்பட்ட கல்வியை கல்வி நிலையம் அளித்தாக வேண்டாமா? இத்தகையதொரு கடமையை அரசாங்கத்திடம் ஒப்படைப்பது என்பது சாத்திய

மற்றதைச் செய்யும்படி அதை வலியுறுத்துவதாகவே எனக்குத் தென்படுகிறது.

இது தொடர்பாக நான் குறிப்பிட விரும்பும் மூன்றாவது விஷயமானது, துரதிருஷ்டவசமாக இந்நாட்டில் உள்ள மதங்கள் வெறும் சமூகத்தன்மை அற்றவையாக இல்லை என்பது மட்டு மல்ல, அவற்றின் பரஸ்பர உறவுகள் சம்பந்தப்பட்டவரை அவை சமூக விரோதமானவையாகவும் உள்ளன. ஒரு மதம் தனது போதனைகள் மட்டுமே முக்திக்கான ஒரே சரியான வழியைக் காட்டுகிறது என்றும், ஏனைய அனைத்து மதங்களும் தவறான வழியையே காட்டுகின்றன என்றும் உரிமை பாராட்டப்படுகிறது. இஸ்லாம் கோட்பாட்டை நம்பாத எவரொருவரும் [1]காபிர் என்றும், அவர் முஸ்லீம்களின் சகோதர அணுகுமுறையைப் பெற உரிமை யற்றவர் என்றும் முஸ்லீம்கள் நம்புகின்றனர். கிறித்தவர்களும் அதைப் போன்றதொரு நம்பிக்கையையே கொண்டுள்ளனர். குறிப் பிட்ட ஒரு மதத்தின் உண்மையான தன்மையையும் வேறொரு மதத்தின் தவறான தன்மையையும் குறித்த இத்தகைய கருத்து மாறுபாடுகள் பள்ளிக்கூடத்தில் அருகருகே கொண்டு வரப்படுவதன் மூலம் அந்த நிறுவனத்தின் அமைதியான சூழ்நிலையை நாம் கணிசமான அளவுக்குப் பாதிப்புக்குள்ளாக்குகிறோம் என்றே எனக்குத் தென்படுகிறது. ஆகையால், அரசாங்கக் கல்வி நிலையங்களில் எவ்வித மதக் கல்வியும் இருக்கக் கூடாதென்று விதி 22 (1)-ல் வரை யறுத்திருப்பதன் மூலம் என் கருத்துப்படி நாம் முழு பாதுகாப்பான பாதையில் பயணம் செய்துள்ளோம் எனக் கூறுகிறேன்.

அடுத்து இரண்டாவது துணை விதியைப் பொறுத்தமட்டில் அது போதுமான அளவு நன்றாகப் புரிந்து கொள்ளப்படவில்லை எனக் கருதுகிறேன். தன்னுடைய சொந்த குழந்தைகளின் கல்வி அல்லது கலாசார விஷயங்களில் முன்னேற்றம் ஏற்படுத்துவதற்காக கல்வி நிறுவனங்களைத் துவக்கியுள்ள ஒரு சமூகத்தினர் தங்களுடைய நிறுவனம் அரசாங்கத்திடமிருந்து சில உதவி பெற்றபோதிலும் தங்க ளுடைய நிறுவனத்தில் மதக் கல்வி அனுமதிக்கப்பட வேண்டுமென்ற அவர்களது கோரிக்கை சம்பந்தமாக சமரசம் செய்ய நாம் முயற்சித் தோம். அரசாங்கமானது விரும்பினால் உதவியளிக்கவும், இல்லை யேல் உதவியளிக்காமல் இருக்கவும் முடியும் என்பதில் ஐயமில்லை.

1. மூலத்தை அச்சிடும்பொழுது 'பக்கீர்' என்று தவறுதலாக அச்சிடப்பட்டுள்ளது.

நாம் விதித்துள்ள ஒரே வரம்பென்பது, அந்த நிறுவனமும் ஒரு சமூகத்தவரால் நடத்தப்பட்டுப் பராமரிக்கப்படுகிறது, ஒரு பொதுவான அமைப்பினால் பராமரிக்கப்படவில்லை என்ற அடிப்படையில் தன்னுடைய மானிய-உதவி நியதியின்கீழ் உதவி கோர அந்த நிறு வனத்தை அரசாங்கம் தடுக்காது என்பதுதான் . நாம் மேலும் ஒரு தகுதியை சேர்த்திருக்கிறோம்; அதாவது அந்த நிறுவனம் மதக் கல்வி அளிக்க முழுச் சுதந்திரம் பெற்றுள்ளது, அத்தகையதொரு கல்வியை அளிக்க அரசாங்கம் தரும் மானியம் ஒரு தடையாக இருக்காது எனும்பொழுதே, அந்த நிறுவனமானது இதர சமூகங் களைச் சேர்ந்த குழந்தைகளின் பெற்றோர்களின் சம்மதத்தைப் பெற்றாலொழிய அந்தக் குழந்தைகளுக்கு மதக் கல்வி அளிக்கக் கூடாது அல்லது அவர்கள் மீது அதனைத் திணிக்கக்கூடாது. அது ஒரு சாதகமான விதி எனக் கருதுகிறேன். அது இரண்டு செயல்பாடு களைப் புரிகிறது.

**திரு. எச்.வி. காமத்:** ஒரு விளக்கம் தேவை. ஒரு சமூகத்தைச் சேர்ந்த அல்லது ஒரு சிறுபான்மையினரைச் சேர்ந்தவர்களால் தங்களது சொந்த குழந்தைகளுக்காக நடத்தப்படும் நிறுவனங்கள் மற்றும் பள்ளிகள் குறித்து என்ன சொல்லுகிறீர்கள் ? அதாவது அனைத்துச் சமூகங்களைச் சேர்ந்தவர்களும் சேர்ந்து ஒன்றாகப் படிக்கும் பள்ளியாக இல்லாமல், ஒரு சமூகம் தன்னுடைய சொந்த மாணவர்களுக்காக மட்டுமே நடத்தும் பள்ளிக்கூடம் பற்றி என்ன கூறுகிறீர்கள்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** எனது நண்பர் திரு. எச்.வி.காமத் இதர விதியையும் படித்தாரானால், ஒரு விஷ யத்தைக் காண்பார்: அதாவது ஒரு நிறுவனம் ஒரு சமூகத்தால் பராமரிக்கப்பட்டாலும் அல்லது இல்லையென்றாலும் பண உதவி பெறும்; ஆனால் இதற்கு ஒரு நிபந்தனை உண்டு; அதாவது தனது பள்ளியை அனைத்து சமூகத்தவர்களுக்கும் திறந்து வைக்க வேண்டும் என்பதே அந்நிபந்தனை. இந்த விதியை அவர் படிக்கவில்லை என்று தோன்றுகிறது.

எனவே, உபவிதி (2) ன்படி நாம் உண்மையில் இரட்டை நோக்கங்களை அடைந்திருக்கிறோம். ஒன்று, தனது சமய அல்லது கலாசார வாழ்வை முன்னேற்றுவதற்காக தன்னுடைய நிறுவனங் களை ஏற்படுத்தியுள்ள ஒரு சமூகத்திற்கு, அது நடத்தும் பள்ளியில்

இத்தகைய கல்வி அளிக்க நாம் அனுமதி தந்துள்ளோம். ஆனால் அந்தப்பள்ளியில் படிக்கும் இதர சமூகங்களைச் சேர்ந்த குழந்தை களை, சம்பந்தப்பட்ட பெற்றோர்கள் சம்மதம் தெரிவித்தாலொழிய மதக் கல்வி போதனையில் கலந்து கொள்ள வேண்டும் என்று கட்டாயப்படுத்தக் கூடாது; ஏனெனில் எது குறிப்பிட்ட சமூகத்தின் மதக் கல்வி என்பது ஐயத்திற்கிடமில்லாதது, வெளிப்படையானது. ஏற்கனவே நான் கூறியபடி, இத்தகைய இரட்டை நோக்கத்தை நாம் அடைந்துள்ளோம்; மதக்கல்வி அளிக்க விரும்புகிறவர்கள் தங்க ளுடைய நிறுவனங்களை உருவாக்கிக் கொள்ள சுதந்திரம் பெற்றி ருக்கிறார்கள் என்பதோடு, இதன் பொருட்டு அரசாங்கத்திடமிருந்து அவர்கள் உதவி கோரமுடியும்; மதக் கல்வி அளிக்க முடியும்; ஆனால் இதர சமூகத்தினர் மீது மதக் கல்வியை நிர்ப்பந்திக்க முடியாது. ஆகையால், இந்த விதியின் மூலம் மதக்கல்வி என்பதை நாம் முற்றி லும் தடுத்துவிட்டோம் என்று கூறுவது முறையாகாது. மதக்கல்வி என்பது சில நிபந்தனைகளுக்குட்பட்டு அதனுடைய நோக்கம் மற்றும் குறிக்கோள்களுக்கேற்ப கற்பிக்க ஒவ்வொரு சமூகத்திற்கும் சுதந்திரம் உண்டு. இங்கு தடுக்கப்பட்டுள்ளதெல்லாம் அரசாங்கமே முற்றிலும் மக்கள் பணத்திலிருந்து பராமரிக்கக்கூடிய நிறுவனங் கள் மதக்கல்வி போதிக்க சுதந்திரம் கிடையாது என்பதேயாகும்.

**பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா:** மாண்புமிகு உறுப்பின ரிடம் ஒரு கேள்வி கேட்கலாமா? உதாரணத்திற்கு, கல்கத்தாவி லுள்ள சமஸ்கிருத கல்லூரி போன்று முற்றிலும் அரசாங்கத்தால் நிர்வகிக்கப் படக்கூடிய ஒரு கல்வி நிலையம் இருப்பதாக வைத்துக் கொள்வோம். அங்கு வேதங்கள் கற்றுக் கொடுக்கப்படுகின்றன; ஸ்மிருதிகள் கற்றுத் தரப்படுகின்றன; கீதை சொல்லிக் கொடுக்கப் படுகிறது; உபநிஷத்துக்கள் கற்பிக்கப்படுகின்றன. அதைப் போன்றே வங்காளத்தின் பல பகுதிகளில் சமஸ்கிருதக் கல்வி நிலையங்கள் உள்ளன; அங்கே இந்த விஷயங்கள் போதிக்கப்படுகின்றன. விதி 22 (1) ல் முற்றிலும் அரசாங்க நிதியினால் பராமரிக்கப்படும் நிறு வனத்தில் மதக்கல்வி தரக்கூடாது என்று நீங்கள் கூறியிருக்கிறீர்கள். இவை, முற்றிலும் அரசாங்க நிதியினால் பராமரிக்கப்பட்டு வருபவை. நான் கேட்க விரும்புவதெல்லாம், வேதங்கள், ஸ்மிருதிகள் அல்லது சாஸ்திரங்கள் அல்லது உபநிஷத்துக்கள் போதிப்பதென்பது மதக் கல்வி போதிப்பது என்ற பொருளுக்குள் வரும் என்று கருதப்படுமா? அவ்வாறானால் இத்தகைய நிறுவனங்கள் அனைத்தும் மூடப்பட வேண்டியிருக்கும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நல்லது, எனது நண்பர் திரு.மைத்ரா குறிப்பிடும் நிறுவனங்களின் தன்மை குறித்து எனக்குச் சரியாகத் தெரியாது என்பதால் இக்கேள்விக்குப் பதிலளிப்பது எனக்கு முற்றிலும் சிரமமானது.

**பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா:** கீதை, உபநிஷத்துக்கள், வேதங்கள் போன்றவை அரசாங்க சமஸ்கிருதக் கல்லூரிகளிலும் பள்ளிகளிலும் போதிக்கப்படுவதை உதாரணத்துக்கு எடுத்துக் கொள்ளுங்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மதக் கல்வி என்பது ஆராய்ச்சி மற்றும் படிப்பு என்பதிலிருந்து பிரித்துப் பார்க்கப் படவேண்டுமென்பதே எனது சொந்தக்கருத்து. அவை முற்றிலும் வெவ்வேறு விஷயங்கள். மதக்கல்வி என்பது இதுதான். உதாரணத்திற்கு, இஸ்லாம் மதம் சம்பந்தப்பட்ட மட்டில் நீங்கள் ஒரு கடவுளை நம்பவேண்டும், பைகம்பரை, தூதரை கடைசி தூதராகக் கருத வேண்டும் என்றெல்லாம் கூறப்படுகிறது. வேறு வார்த்தைகளில் சொல்வதென்றால், இதனை நாம் சமயக் கோட்பாடு என்கிறோம். சமயக் கோட்பாடு என்பது கல்வியிலிருந்து முற்றிலும் மாறுபட்டது.

**திரு. துணைத் தலைவர்:** இங்கு ஒரு நிமிடத்திற்கு நான் தலையிடலாமா? கல்கத்தா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த கல்லூரிகளின் ஆய்வாளர் என்றமுறையில் நான் சமஸ்கிருதக் கல்லூரியை பார்வையிடுவது வழக்கம். அங்கு மாணவர்கள் பல்கலைக்கழகம் நிர்ணயித்துள்ள பாடங்களைப் படிப்பதோடு மட்டுமல்லாமல், இவற்றிற்கு அப்பாற்பட்ட சமஸ்கிருத இலக்கியப் புத்தகங்களையும் புனிதமானவையாகக் கருதப்படும் சமஸ்கிருத நூல்களையும் படிப்பார்கள். இந்த விஷயம் பண்டிட் மைத்ராவுக்கே தெரியும். ஆனால் இது ஒரு பொழுதும் மதக்கல்வியாக கருதப்படவில்லை; மாறாக, கலாசாரம் குறித்த ஒரு பாடமாகவே கருதப்படுகிறது.

**பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா:** எனது கருத்து இதுதான். அது ஆராய்ச்சி சம்பந்தப்பட்டது அல்ல. அது வெறும் மதக்கல்வி அல்லது பல்வேறு மதங்களைப் பற்றிய ஆய்வே தவிர வேறல்ல.

இங்கு ஒன்று கேட்க விரும்புகிறேன். கீதை மற்றும் உபநிஷத்துக்களை குறித்த விளக்க உரைகள் மதக்கல்வி அளிப்பதாக கருதப்

பட முடியுமா? உபநிஷத்துகளை விளக்குவதென்பது ஆராய்ச்சி சம்பந்தப்பட்ட விஷயமல்ல.

**திரு. துணைத் தலைவர்:** அது மாணவர்களுக்கு போதிக்கும் பிரச்சினை சம்பந்தப்பட்டதாகும். சமஸ்கிருத கல்லூரியில் ஒரு முஸ்லீம் மாணவர் இருந்ததை நானறிவேன்.

**திரு. எச்.வி. காமத்:** ஒரு விளக்கம் தேவை. ஒரு குறிப்பிட்ட சமூகத்தினர், அந்த சமூகத்தைச் சேர்ந்த மாணவர்களுக்காக மட்டுமே நடத்தும் பள்ளிகளில் மதக்கல்வி கட்டாயமாக இருக்கக்கூடாது என்று எனது நண்பர் டாக்டர் அம்பேத்கர் கருதுகிறாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது அவர் களிடம் விடப்படுகிறது. கட்டாயமாக்கப்பட வேண்டுமா அல்லது இல்லையா என்பது அந்த சமூகத்தினிடம் விடப்படுகிறது. நாம் செய்யவேண்டியதெல்லாம் அந்த சமூகத்தினர் நடத்தும் பள்ளி களில் படிக்கும் அந்த சமூகத்தைச் சாராத குழந்தைகள் அந்த மதக் கல்வியை கட்டாயம் படிக்கவேண்டும் என்று கூறுவதற்கு உரிமை இல்லையென வரையறை செய்வதேயாகும்.

**பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா:** 'மதக் கல்வி' என்ற வார்த்தையை நீங்கள் விளக்கியவிதம் அரசியல் சட்டத்தில் இடம் பெறவேண்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த விஷயம் நீதிமன்றங்கள் முன்பு வரும்பொழுது அதனை அவை முடிவு செய்யும்.

**திரு. நசிருத்தீன் அகமது:** துணை விதி (3)ஐ நீக்க வேண்டும் என்பதை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று மாண்புமிகு உறுப் பினர் கூறுகிறார். அது ஒரு விளக்கக் குறிப்பு மட்டுமே. அவ்வாறு அந்தத் துணைவிதி நீக்கப்பட்டால் கூட, அதில் அடங்கியுள்ள கோட்பாடு பயன்படுத்தப்படுவதை அது சாத்தியமற்றதாக்கிவிடுமா எனக் கேட்க விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** துணைவிதி (3) உண்மையில் தேவையற்றது என்றே நான் கருதுகிறேன். அது ஒரு

குறிப்பிட்ட சமூகத்தினர் நடத்தும் பள்ளி சம்பந்தப்பட்டது. பள்ளி நேரம் முடிந்தபின்பு அந்த சமூகத்தினர் தாங்கள் விரும்புகிறபடி அதனை பயன்படுத்திக்கொள்ளலாம். இது சம்பந்தமாக அரசியல் சட்டத்தில் எவ்வித வழிவகை ஏற்பாடும் இருக்கக்கூடாது.

ஐயா, மற்றொரு விஷயம் சம்பந்தமாக இங்கு குறிப்பிட விரும்புகிறேன்; பேராசிரியர் கே.டி.ஷா குறிப்பிட்ட அந்த விஷயம் அரசாங்கம் எந்த நிறுவனங்களில் தர்மகர்த்தாவாக பொறுப்பேற்கிறதோ அந்த நிறுவனங்களில் மதக் கல்வியைத் தொடர அந்த விதி அனுமதிப்பது குறித்ததாகும். பேராசிரியர் ஷா எழுப்பிய பிரச்சினையில் சத்தும் சாரமும் இருப்பதாக நான் கருதவில்லை. இந்நாட்டு வரலாற்றின் துவக்கப்பகுதியில் மதக் கல்வி போதிக்கும் நோக்கத்துடன் நிறுவனங்கள் உண்டாக்கப்பட்டன என்பதையும், அவற்றை உருவாக்கியவர்களால் சில காரணங்களால் அவற்றை நடத்த இயலாத நிலையில் அவைகளுக்குமான தர்மகர்த்தாவாக அரசாங்கம் அவற்றை எடுத்துக்கொண்டது என்பதையும் அவர் உணர்வார் என நினைக்கிறேன். தர்மகர்த்தா பொறுப்பை ஏற்றால் அந்தப் பொறுப்பை அனைத்து அம்சங்களிலும் பூர்த்தி செய்ய வேண்டும் என்பது இப்பொழுது தெளிவானது. இத்தகைய அமைப்புகளை அரசாங்கம், ஏற்கனவே எடுத்துக்கொண்டு, அவற்றின் தர்மகர்த்தா பொறுப்பை ஏற்றிருந்தால் இதுவரை நீங்கள் மதக் கல்வி கொடுத்திருந்தாலும்கூட இனி இந்த நிறுவனங்களில் அதைத் தரக் கூடாது என நீங்கள் அரசாங்கத்திடம் கூறமுடியாது. அது கடமைப் பொறுப்பை மீறும் குற்றம் மட்டுமன்றி, அத்தகைய குற்றத்தைச் செய்யும்படி நிர்ப்பந்திப்பதுமாகும். எனவே, விதி (20)-ன் உபவிதி (1)ல் உள்ள மூலக் கோட்பாட்டுக்கு இது ஓரளவு ஏற்புடையதல்ல என்ற போதிலும், நிலைமையை தெளிவாக்கிக் கொள்ளும் பொருட்டு விரும்பத்தக்கதும், தேவையுமாகும் என்று நாங்கள் கருதுகிறோம். ஐயா, தற்பொழுதுள்ள நிலையில் இது திருப்திகரமானது என்பதுடன் ஏற்கக் கூடியதுமாகும் என நம்புகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** நான் இப்பொழுது இந்த திருத்தங்களை ஒவ்வொன்றாக வாக்கெடுப்பிற்கு விடுகிறேன்.

மொத்தத்தில் 12 திருத்தங்கள் தோற்கடிக்கப்பட்டன. கீழே கொடுத்துள்ள திரு.கபூரின் ஒரேயொரு திருத்தம் டாக்டர் அம்பேத்கரால் ஏற்கப்பட்டு நிறைவேற்றப்பட்டது:

அத்திருத்தம் வருமாறு:

'விதி 22ன் துணை விதி (3) நீக்கப்படுகிறது.'[1]

திருத்தப்பட்டநிலையில் விதி 22 ஏற்கப்பட்டதுடன் அரசியல் சாசனத்தில் சேர்க்கப்பட்டது.

## விதி 22 -அ (புதிய விதி)

[1]**பேராசிரியர் கே.டி. ஷா:** ஐயா, பின்வருமாறு முன்மொழிகிறேன்:

> 'விதி 22க்குப் பின்வரும் புதியவிதி சேர்க்கப்படவேண்டும். '22-(அ) மத அமைப்புகளின் தலைவர்களுக்குள்ள அனைத்து சலுகைகளும், காப்புரிமைகளும், விதிவிலக்குகளும் ரத்து செய்யப்பட வேண்டும்.

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, இந்தத் திருத்தமானது அதனுடைய நோக்கத்திற்காக பாராட்டத்தக்கது என்றாலும் அந்தத் திருத்தம் அவசியமானதுதானா என்பது எனக்குத் தெரியாது. முதலாவது, இத்தகைய அனைத்துவித சிறப்பு பட்டங்களையும் அரசாங்கம் இனிமேல் மதப் பிரமுகர்களுக்கு வழங்க முடியாது; ஏனென்றால், எந்த ஒரு சிறப்புப் பட்டமும் வழங்கக்கூடாது என்பது அடிப்படை உரிமைகளில் ஏற்கனவே சேர்க்கப்பட்டுவிட்டது. இரண்டாவதாக, என்னுடைய மரியாதைக்குரிய நண்பர் அறிந்திருப்பதுபடி ஒரு மனிதர் தனக்குத்தானே அளித்துக் கொள்ளும் பட்டம் அமுல்படுத்தப்பட வேண்டுமென்று யாரும் வழக்குத் தொடர முடியாது. ஒரு குறிப்பிட்ட மனிதர் தன்னை சங்கராச்சாரியர் என்று அழைத்துக் கொள்ளும்போது, மற்றொரு நபர் அவரை சங்கராச்சாரியார் என்று அழைக்க மறுத்தால் இதனை எதிர்த்து வழக்குத் தொடர எவ்வித உரிமையும் கிடையாது. உரிமை இயல் விசாரணை முறைச் சட்டத் தொகுப்பு 9வது பிரிவில் இது தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளது; அதாவது, ஒரு கௌரவம் என்று நீங்கள் கூறுவதை அமுலாக்க வேண்டுமென்று எந்த வழக்கும் தொடர முடியாது. சொல்லப் போனால் அந்த கௌரவத்திற்குப் பின்னால் ஏதேனும் சில

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VII, டிசம்பர் 7, 1948, பக். 888.
2. மேற்படி அதே நூல், பக். 891.

ஊதியங்களோ அல்லது சொத்து போன்றவையோ இருந்தால் அது வேறு விஷயம்; ஆனால், வெறும் கௌரவம் என்பது மட்டுமே எந்த ஒரு நடவடிக்கையும் எடுப்பதற்கான அடிப்படையாகாது.

வசதிகள் சம்பந்தப்பட்டமட்டில் அவர்களில் சிலர் அவற்றை அனுபவிக்க கூடும்; அவற்றை நிறுத்திவிடுவது ஆட்சித் துறைக்கு மற்றும் சட்டமன்றத்தின் அதிகாரத்துக்கு நிச்சயம் உட்பட்ட தாகும். என்னுடைய மரியாதைக்குரிய நண்பர் திரு. சௌத்ரி சொன்னது முற்றிலும் உண்மை; சில வழக்குகளில் குற்றவியல் நடுவர் அழைப்பாணைகளை அனுப்பியிருக்கிறார். இதர வழக்கு களில் சம்பந்தப்பட்ட மனிதர் உயர்ந்த அந்தஸ்துடையவராக இருந் தால் அழைப்பாணைகளை அனுப்புவதற்குப் பதிலாக அவர் ஒரு கடிதத்தை அனுப்புகிறார். சிலர் நீதிமன்றங்களில் ஆஜராகும் பொழுது நிற்கும்படி செய்யப்படுகிறார்கள். ஆனால், அதேசமயம் வேறுசிலருக்கு அமர நாற்காலி அளிக்கப்படுகிறது. இவை அனைத்தும் கௌரவம் சம்பந்தப்பட்ட விஷயங்கள் என்பதுடன் அவை முற்றி லும் சட்டமன்றம் மற்றும் அரசாங்கத்தின் வரம்புக்குட்பட்டவை. ஒரு பிரஜைக்கும் மற்றொரு பிரஜைக்குமிடையில் ஏற்றத்தாழ்வு, வேறுபாடு அல்லது பாரபட்சம் காண்பிக்கப்படுமானால் அத்தகைய போக்குகளைச் சட்டமன்றமும் நிர்வாகமும் அகற்ற முடியும். எனவே, இந்தத் திருத்தம் தேவையற்றது என்று கருதுகிறேன்.

*(பேராசிரியர் ஷாவினுடைய தீர்மானம் நிராகரிக்கப்பட்டது.)*

★ ★ ★

## விதி 23 (தொடர்ச்சி)

[1]**திரு. துணைத் தலைவர்** (டாக்டர் ஹெச்.கே. முகர்ஜி): இரண்டு திருத்தங்கள் முன்மொழியப்பட்டுள்ள விதி 23 குறித்த விவாதத்தை இப்பொழுது நாம் தொடங்குவோம். திருத்தம் எண் 677 தேசியமொழி மற்றும் எழுத்துவடிவம் சம்பந்தப்பட்டது. எனவே அது ஒத்திவைக்கப்படுகிறது. திருத்தங்கள் எண்கள் 678, 679, 680 மற்றும் 681 (முதல் பகுதி) ஆகியவை ஒரே தன்மை கொண்டவை யாக இருப்பதால் அவற்றை ஒன்றாக ஆராயலாம். திருத்தம் எண் 678ஐ பிரேரேபிக்க அனுமதி தருகிறேன்.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VII, டிசம்பர் 8, 1948, பக். 895.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். (பம்பாய்: பொது):** ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

''விதி 23ன் துணைவிதி(1)ல் ''எழுத்து மற்றும் கலாசாரம்'' என்ற வார்த்தை களை ''எழுத்து அல்லது கலாசாரம்'' என்று மாற்றியமைக்கப்பட வேண்டும்.

இங்கு செய்யப்படும் ஒரே ஒரு மாற்றம் 'மற்றும்' என்பதை 'அல்லது' என்ற மாற்றுவதுதான். இந்த மாற்றத்திற்கான அவசியம் மிகத் தெளிவானது என்பதால் அதுகுறித்து ஏதாவது சொல்ல வேண்டிய தேவை எனக்கிருப்பதாக நான் கருதவில்லை.

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் எண் 679.

**திரு. எச்.வி. காமத்** (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார் பொது): டாக்டர் அம்பேத்கர் என்னை முந்திக் கொண்டு விட்டார். எனவே நான் எண் 679 ஐ முன்மொழியவில்லை.

**திரு. துணைத்தலைவர்:** திருத்தம் எண். 680ஐ நீங்கள் வலியுறுத்துகிறீர்களா?

**திரு. முகமது இஸ்மாயில் சாகிப்** (சென்னை முஸ்லீம்): ஆம்.

**திரு. துணைத் தலைவர்:** 681 னுடைய முதல் பகுதியை வாக்கெடுப்புக்கு விட வேண்டுமென்று நீங்கள் விரும்புகிறீர்களா?

**பேராசிரியர் கே.டி.ஷா** (பீகார்: பொது): முதல் பகுதிக்கு டாக்டர் அம்பேத்கர் திருத்தம் கொண்டுவந்திருக்கிறார். ஆகையால் இரண்டாவது பகுதியை முன்மொழிய விரும்புகிறேன்.

★ ★ ★

[2]**திரு. ஜெயபால்சிங்** (பீகார்: பொது): திரு.துணைத் தலைவர் அவர்களே, இந்த விதியை வரவேற்பதில் நான் பெரிதும் மகிழ்ச்சி

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VII, டிசம்பர் 7, 1948, பக். 895.
2. மேற்படி அதே நூல், பக். 907.

யடைகிறேன்; அதிலும் டாக்டர் அம்பேத்கரினால் அது தக்க முறையில் திருத்தப்பட்டுள்ளது என்பதுடன் அவருடைய திருத்தம் அவையினால் ஏற்கப்படுமென நம்புகிறேன். ஐயா, இந்த விதி இந்தியாவிற்கு ஒரு புதிய சகாப்தத்தைத் தொடங்கிவைக்கும் என எனக்குத் தோன்றுகிறது.

★ ★ ★

[1]*திரு. துணைத் தலைவர்:* டாக்டர் அம்பேத்கர்.

*பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா* (ஐக்கிய மாகாணங்கள்: பொது): ஐயா, நான் சில விஷயங்களைக் கூற விரும்புகிறேன்.

*திரு. துணைத் தலைவர்:* விவாதம் நீடித்துக் கொண்டே போவதை நான் அனுமதிக்க முடியாது. மேலும் இவ்விஷயத்தில் எனது முடிவே இறுதியானது.

*பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா:* பேசுவதற்குச் சிலரை அனுமதித்துவிட்டு மற்றவர்களை அனுமதிக்காதது முறையல்ல.

*திரு. துணைத் தலைவர்:* இது முறையற்றதாகக் கருதப்படுவதை நான் அறிவேன். டாக்டர் அம்பேத்கர்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஐயா, விதி 23க்குத் தரப்பட்டுள்ள திருத்தங்களில் திருத்தம் எண் 26க்கு பண்டிட் தாகூர்தாஸ் பார்கவா கொடுத்துள்ள திருத்தம் எண் 687 ஐ ஏற்றுக் கொள்கிறேன். பண்டிட் தாகூர்தாஸ் பார்கவா முன்மொழிந்துள்ள திருத்தம் எண் 31க்கான திருத்தம் எண் 690ஐயும் ஏற்கத் தயாராக உள்ளேன். முன்மொழியப்பட்டுள்ள இதர திருத்தங்களில் திரு. லாரியினால் முன்மொழியப்பட்ட திருத்தம் எண் 676 மற்றும் 714 ஆகிய இரண்டு திருத்தங்களுக்கு மட்டும் நான் பதிலளிக்க வேண்டிய தேவை உள்ளது. நான் பதிலளிக்கும்போது இவ்விரு திருத்தங்களிலிருந்து எழக்கூடிய பிரச்சினைகளை பிரித்துப் பார்ப்பது விரும்பத் தக்கது என்று கருதுகிறேன்.

திருத்தம் எண் 676 சிறுபான்மையினரின் கலாசார உரிமைகள் சம்பந்தப்பட்டது; அதேசமயத்தில் மற்றொரு திருத்தம் எண் 714 சிறுபான்மை வகுப்பினர் துவக்கக் கட்டத்தில் தாய்மொழியில்

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VII, டிசம்பர் 7, 1948, பக். 922-25.

கல்வி பெறுவதற்கான அடிப்படை உரிமை அரசியல் சட்டத்தில் பொதிந்துள்ளதா என்ற பிரச்சினையை எழுப்பியுள்ளது. முதலாவது பிரச்சினை சம்பந்தப்பட்டமட்டில், எனது நண்பர் திரு.லாரியும், இதைப்போன்றே எனது நண்பர் மௌலானா ஹஸரத் மோஹனி யும் இந்த சபையால் நிறைவேற்றப்பட்ட அடிப்படை உரிமையில் உள்பொதிந்துள்ள மூலக்கருத்தை வரைவுக்குழு மாற்றிவிட்டதாக குற்றஞ்சாட்டினார்கள். அடிப்படை உரிமைகள் குழுவின் 18வது பத்தியின் தொனியை வரைவுக்குழு மாற்றிவிட்டது முற்றிலும் உண்மையே; ஆனால் வரைவுக்குழு அந்த தொனியை மாற்றியதற்கு போதுமான நியாயம் உள்ளது எனக் கூறுவதற்கு எனக்கு எவ்விதத் தயக்கமும் கிடையாது.

இந்த சபைக்கு நான் கூறிக்கொள்ளவிரும்பும் முதலாவது விஷயம் அடிப்படை உரிமைகளின் 18வது பத்தியின் தொனியை மாற்றுவது அவசியமென்று வரைவுக்குழு கருதியதற்கு காரணம் என்ன என்பதுதான். மூல அடிப்படை உரிமைகளிலிருந்த பத்தியைப் படித்தபொழுது ''சிறுபான்மையினர்'' என்ற சொற்றொடர், சட்ட மன்றத்தில் பிரதிநிதித்துவம், அரசுப் பணிகளில் பிரதிநிதித்துவம் போன்ற சில அரசியல் பாதுகாப்பு காரணங்களுக்காக நாம் பயன் படுத்தும் ''சிறுபான்மையினர்'' என்ற பொருளில் பயன்படுத்தப்பட வில்லை எனத் தெரியவந்தது. அந்தச் சொற்றொடர் சிறுபான்மை யினரைச் சுட்டிக்காட்டும் அதன் மரபான பொருளில் மட்டுமே பயன்படுத்தப்படவில்லை; மாறாக சிறுபான்மையினர் என்ற பொருளில் இல்லாத சிறுபான்மையினரை, அதாவது கலாசார மற்றும் மொழிவழிப்பட்ட பொருளில் சிறுபான்மையினராக உள்ள வர்களைக் குறிப்பதற்கும் அது பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்த 23வது விதி சம்பந்தமாக இங்கு ஓர் உதாரணத்தைக் கூறலாம். சென்னையிலிருந்து ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையிலான நபர்கள் சில காரணங்களுக்காக பம்பாய்க்கு வருகிறார்கள்; அவர்கள் சிறுபான்மையினர் ஆவர். அதைப் போன்றே, ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையிலான மகாராஷ்டிரர்கள் மகாராஷ்டிரத்திலிருந்து வங்காளத்தில் போய் அங்கே தங்குகிறார்கள் என வைத்துக் கொள்வோம்; அப்போது சிறுபான்மையினர் என்ற சொல்லுக் குரிய பொருளில் இல்லாவிட்டாலும் அவர்கள் வங்காளத்தின் கலாசார மற்றும் மொழிவழிப்பட்ட சிறுபான்மையினர் ஆவர். இந்த விதி கலாசாரம், மொழி மற்றும் எழுத்து போன்ற விஷயங் களில் சிறுபான்மையினர் என்ற மரபான பொருளில் குறிப்பிடப்

படுவர்களுக்கு மட்டுமன்றி, தற்பொழுது நான் விவரித்தபடி அந்தப் பொருளின் விரிந்தளவிலான கண்ணோட்டத்தின்படியான சிறுபான்மையினர்களாக உள்ளவர்களுக்கும் பாதுகாப்புத் தருவதை நோக்கமாகக் கொண்டது. அந்தக் காரணத்தினால்தான் ''சிறுபான்மை யினர்'' என்ற சொற்றொடரை நாங்கள் கைவிட்டோம்; ஏனென்றால் விதி 18 ஐ இந்த சபை நிறைவேற்றியபோது ''சிறுபான்மை யினர்'' என்ற சொற்றொடருக்குரிய பொருளில் சிறுபான்மையினராக உள்ளவர்களுக்கு கலாசாரப் பாதுகாப்பு கொடுப்பதை இந்த சபை நோக்கமாகக் கொண்டிருந்த நிலையில் அந்த சொற்றொடர் ஒரு குறுகிய நோக்கில் விளக்கப்படக்கூடும் என்று நாங்கள் உணர்ந்தது தான் அந்த சொற்றொடரை கைவிட்டதற்கான காரணமாகும். ஒரு மாகாணத்திலிருந்து மற்றொரு மாகாணத்திற்குப் போகும் மக்கள் அங்கேயே நிரந்தரமாகத் தங்கிவிடுவதில்லை என்ற சாதாரண காரணத்தை வைத்துத்தான் பாதுகாப்புத்தேவை என உணரப்பட்டது. அவர்கள், தாங்கள் வெளியேறிய மாகாணத்தோடு தங்களுக்குள்ள தொடர்பை முற்றிலும் துண்டித்துக் கொள்வதில்லை; மாறாக தங்கள் தொடர்புகளை தொடர்ந்து வைத்திருக்கிறார்கள். திருமணம் போன்ற காரியத்திற்காக தங்களுடைய மாகாணத்திற்கு அவர்கள் திரும்பிச் செல்கிறார்கள். இதர பல்வேறு காரியங்களுக்காகவும் அவர்கள் மாகாணத்திற்குச் செல்கிறார்கள்; அவர்கள் ஸ்தல சட்ட மன்றத்தின் அதிகாரத்தின் கீழிருக்கும் நிலையில் தங்களுடைய கலாசாரத்தைப் பாதுகாப்பதற்கான வாய்ப்பை ஸ்தல சட்டமன்றம் மறுக்கும்பொழுது, இந்தப் பாதுகாப்பு அவர்களுக்கு அளிக்கப்பட வில்லையென்றால், இத்தகைய கலாசார சிறுபான்மையினர், தங்களுடைய மாகாணத்திற்கு திரும்பிச் சென்று அவர்களுடைய சொந்த மண்ணின் மக்களோடு கலப்பது அவர்களுக்கு மிகுந்த சிரமமாகி விடும். ஒரு மாகாணத்திலிருந்து மற்றொரு மாகாணத்தில் குடி பெயர்வது சம்பந்தமான நிலைமையைச் சமாளிக்கும் பொருட்டு இத்தகையதொரு விதி நமது அரசியல் சாசனத்தில் சேர்க்கப்படுவது விரும்பத்தக்கது என நாங்கள் உணர்ந்தோம்.

விதி 23ஐ படிக்கும்பொழுது, மற்றொரு விஷயத்தையும் நாம் மனத்தில் கொள்ள வேண்டும்; அது அரசாங்கத்தின் மீது எவ்வித கடமையையோ அல்லது சுமையையோ சுமத்தவில்லை என்பதுதான் அந்த விஷயம். உதாரணமாக, சென்னை மக்கள் பம்பாய்க்கு வரும்பொழுது தமிழ் மொழியிலோ அல்லது தெலுங்கு மொழியிலோ அல்லது வேறெந்த மொழியிலோ அவர்கள் கல்வி

கற்பதற்கு பம்பாய் அரசாங்கம் எந்தவொரு திட்டத்திற்கும் பணம் அவசியம் தர வேண்டுமென்று அது கூறவில்லை. அரசாங்கத்தின் மீது எவ்வித சுமையையும் அது சுமத்தவில்லை. விதி 23 ஒரே ஒரு நிபந்தனையை மட்டும் விதிக்கிறது; அதாவது தங்களுடைய மொழி, எழுத்து மற்றும், கலாசாரத்தைப் பாதுகாக்க விரும்பும் ஒரு கலாசார சிறுபான்மையினர் இருப்பார்களேயானால் அரசாங்கமானது ஸ்தல அல்லது வேறுவகைப்பட்ட எந்தக் கலாசாரத்தையும் சட்டப்படி அவர்கள் மீது திணிக்கக்கூடாது என்று அது வலியுறுத்துகிறது. ஆகையால் இந்த விதியை உண்மையில் ஒரு விரிந்த அளவிலான கண்ணோட்டத்தில் நோக்கவேண்டும் என்பதுடன் நம்முடைய அரசியல் சாசனத்தில் நாம் சிறுபான்மையினர் என்ற வழக்கமான பொருளில் அழைப்பவர்களுக்கு மட்டுமே இது பொருந்துவது ஆகாது என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும். துணை விதியில் இருந்த சிறுபான்மையினர் என்ற வார்த்தையை நாங்கள் எடுத்துவிட்டோம்.

''சிறுபான்மையினர்'' என்ற இந்தச் சொற்றொடரை விட்டுவிடும் அதேசமயம் அடிப்படை உரிமை விதியில் உறுதி செய்யப்பட்டிருந்த பாதுகாப்பை மிகப் பெருமளவிற்கு மேம்படுத்தியிருக்கிறோம் என்பதை எனது நண்பர் திரு.லாரி கவனிக்கத் தவறிவிட்டார் என்று கருதுகிறேன். அடிப்படை உரிமைகள் விஷயத்தில் மூலவிதியானது அரசாங்கம் அவர்களுடைய கலாசாரத்தையும், எழுத்து மற்றும் அவர்களுடைய மொழியையும் பாதுகாக்க வேண்டும் என்ற ஒரு வகையான கடமையை மட்டும் அதன்மீது சுமத்தியிருக்கிறது. மூலவிதியானது இத்தகைய பல்வேறு சமூகங்களுக்கு எவ்வித அடிப்படை உரிமையையும் அளிக்கவில்லை. அது கடமையை மட்டும் சுமத்தியதுடன் மொழி, கலாசாரம் மற்றும் எழுத்து போன்ற இந்த உரிமைகளில் சில கட்டுப்பாடுகளைத் திணிப்பதற்கான உரிமை அரசாங்கத்துக்கு உள்ள போதிலும் ஒடுக்குமுறைத்தனமானது என்று கருதப்படக்கூடிய எந்தவொரு சட்டத்தையும் இயற்றக்கூடாது என்று கூறியுள்ளது; அதாவது வேறுவிதமாகச் சொன்னால், இந்த விஷயங்களைப் பாதிக்கும் ஒரு சட்டத்தை இயற்றும் உரிமை அரசாங்கத்திற்கு இல்லையென்று கூறாமல் அந்தச் சட்டமானது ஒடுக்குமுறையானதாக இருக்கக் கூடாது என்று மட்டுமே கூறியுள்ளது. மூலவிதியில் குறிப்பிடப்பட்டிருக்கும் பாதுகாப்பானது மிகவும் உறுதியற்றது என்று இப்பொழுது நான் திட்டவட்டமாகக் கூறமுடியும். அது அரசாங்கத்தின்

நல்லெண்ணத்தைச் சார்ந்திருந்தது. விதி 23ல் கூறப்பட்டிருப்பது போல் தற்பொழுதுள்ள நிலைமை என்னவென்றால் நாம் அதை அடிப்படை உரிமையாக மாற்றிவிட்டோம்; ஓர் அரசாங்கம் இந்த விதியின் ஷரத்துகளுக்கு முரண்பட்டவகையில் ஏதாவது சட்டம் இயற்றுமானால் அந்தச் சட்டம் நாம் ஏற்கனவே நிறை வேற்றியுள்ள விதி 8ன்படி செல்லாதது ஆகிவிடும்.

என்னுடைய நண்பர் திரு. லாரியும், மௌலானாவும் மூல விதியில் காணப்பட்டதைவிட ஒரு பெரும் முன்னேற்றம் ஏற்பட்டுள்ளதை அவர்கள் கண்ணோட்டத்திலிருந்து காணமுடியும். வரைவுக்குழு செய்த மாற்றங்களின் விளைவாக எவ்வித சீர்கேடும் ஏற்பட்டு விடவில்லை என்று நிச்சயமாகக் கூறமுடியும்.

அடுத்த பிரச்சினைக்கு வரும்பொழுது, கல்வியை தாய் மொழியில் கற்கும் உரிமை ஓர் அடிப்படை உரிமையென்று அரசியல் சாசனத்தில் விளக்கமாகத் தெளிவுபட கூறியிருக்கக்கூடாதா என்ற கேள்வி எழுகிறது; இங்கு ஒரு விஷயத்தைச் சொல்ல விரும்புகிறேன்; அதாவது, ஆரம்பக் கல்வி என்பது பயனுள்ளதாகவும் எதார்த்தமாகவும் இருக்க வேண்டும் என்றால் அது குழந்தையின் தாய்மொழியில் அளிக்கப்பட வேண்டும் என்பது குறித்து விவேக மிக்க சிந்தனை கொண்ட மனிதரிடையே எவ்விதக் கருத்து வேறுபாடும் எழும் என்று நான் நினைக்கவில்லை. இல்லையென்றால் ஆரம்பக் கல்வி என்பது மதிப்பற்றதாகவும், அர்த்த மற்றதாகவும் ஆகிவிடும். இது அணுவளவும் சர்ச்சைக்கு இடமற்ற உண்மை. இவ்வாறு கூறுவதற்கு அரசாங்கத்தின் அனுமதியைப் பெறுவது அவசியம் என்று நான் நினைக்கவில்லை. இது அனைவரும் ஏற்றுக்கொண்ட கருத்து; அது எதார்த்தமானதும் ஆகும்; எனவே இந்தக் கோட்பாடு குறித்து எவ்வித சர்ச்சையும் இருக்க முடியாது. ஆனால் இதை நாம் சட்டமாக்குவதா அல்லது அரசியல் சாசனத்தில் சேர்ப்பதா என்பதுதான் இங்குள்ள பிரச்சினை. இந்த விஷயத்தை அரசியல் சாசனத்தின் ஒரு திட்டவட்டமான விதியாக வைப்பதில் எனக்கு ஓரளவு சிரமம் இருக்கிறது என்பதை நான் ஒளிவுமறைவின்றி அப்பட்டமாகச் சொல்லியாக வேண்டும். இத்தகையதொரு அடிப்படை உரிமையை நடைமுறைப் படுத்துவதில் உள்ள சிரமமானது திரு.கரிமுத்தீன் முன்மொழிந்த திருத்தத்தால் ஓரளவு மட்டுப்படலாம் அல்லது அகற்றப்படலாம் என்று மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் பண்டிட் குன்ஸ்ரு

கூறினார். இப்படிப்பட்ட மாணவர்கள் கணிசமான எண்ணிக்கை யில் இருந்தால் இந்தக் கோட்பாட்டை செயல்படுத்த முடியும் என்பதே நண்பர் திரு. கரிமுத்தீன் திருத்தத்தின் சாரமாகும். ஆனால் நண்பர் திரு. கரிமுத்தீனுடைய திருத்தமானது உண்மையில் சிர மத்தைப் போக்கவில்லை. மாறாக இந்தக் கோட்பாட்டை ஏற் பதற்கான வழியில் இடையூறாகவே உள்ளது என்பதை அவரது கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். முதலாவதாக, கணிச மான எண்ணிக்கை என்பதை யார் தீர்மானிப்பது? இது சம்பந்தமாக இங்கு ஒரு விளக்கம் தருகிறேன். இந்த விஷயம் நிருவாகத் துறை யிடம் விடப்பட நேரிடுவதாக வைத்துக் கொள்வோம்; அந்த நிருவாகத்துறை ஓர் ஆரம்பப் பள்ளியில் 49 சதவீத குழந்தைகள் கல்வி கற்க முன்வந்தால் மட்டுமே அதை ஒரு கணிசமான எண் ணிக்கையாகக் கருத முடியும் என்று விதி செய்வதாக வைத்துக் கொள்வோம்; அத்தகைய அதிகாரம் நிருவாகத் துறையிடம் விடப் படுவது அவருக்கு திருப்தியளிக்குமா? அதன்பின் இந்த , விஷ யத்தை நீங்கள் நியாயம் கோரும் விஷயம் என்றாக்கி அதை அடிப்படை உரிமை என்று அறிமுகப்படுத்தும்பொழுது அது ஐயத் திற்கிடமின்றியிருக்குமா? எந்தவொரு அடிப்படை உரிமையும் நியாயம் கோரும் விஷயம் என்றிருந்தாலொழிய அது அடிப்படை உரிமையாகாது; ஒரு குறிப்பிட்ட பள்ளியில், ஒரு கணிசமான எண் ணிக்கையிலான மாணவர்கள் உள்ளனரா அல்லது இல்லையா என்பதை, நீதிமன்றம தீர்மானிப்பதற்காக, ஒரு நீதிமன்றத்திற்கு அதனைக் கொண்டு செல்வது நியாயமானதா, முறையானதா, விரும்பத்தக்கதா? இந்தச் சிரமத்திலிருந்து விடுபட வேறெந்த வழி யையும் நாம் காணவில்லை. ஒன்று ''கணிசமான'' என்ற வார்த்தைக்கு விளக்கம் தருவதை நிருவாகத்துறையிடம் அல்லது நீதித்துறை யிடம் விட்டுவிட வேண்டும்; எனது கருத்துப்படி இவ்விருமுறை களில் எதுவும் சிறுபான்மையினர் தங்களுடைய நோக்கத்தை அடைவதற்கான வழியாகத் தெரியவில்லை. எனவே, நான் கூறி கொள்ள விரும்புவதெல்லாம் இது அனைவராலும் ஏற்றுக்கொள்ளப் பட்ட ஒரு கோட்பாடு; எந்தவொரு மாகாண அரசாங்கமும் கணிசமான பகுதி மக்களின் கல்வி உரிமைகள் சம்பந்தமான விஷயத்தில் பெரும் பாதிப்பையே ஏற்படுத்தும் என்ற உண்மையை நாம் கவனத்தில் கொள்ளவேண்டும் என்பதுதான். ஆகையால், திருத்தப் பட்டபடி இந்த விதி சபையினால் ஏற்கப்பட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

★ ★ ★

*(இதைத் தொடர்ந்து பின்கண்ட திருத்தங்கள் ஏற்கப்பட்டன. 6 திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன.)*

1. *விதி 23 துணைவிதி (1)ல் ''எழுத்துமற்றும் கலாசாரம்'' என்ற வார்த்தைகளுக்குப் பதிலாக ''எழுத்து அல்லது கலாசாரம்'' என்பது சேர்க்கப்பட வேண்டும்.*
2. *விதி 23 துணைவிதி (3)ல் ''சமூகம்'' என்ற வார்த்தை எங்கெல்லாம் வருகிறதோ அங்கெல்லாம் அது நீக்கப்பட வேண்டும்.*
3. *விதி 23 துணைவிதி(2)க்குப் பதிலாக பின்வரும் வார்த்தைகள் இடம் பெறவேண்டும்:*

   *''அரசாங்கத்தால் நடத்தப்படக்கூடிய அல்லது அரசாங்க நிதியிலிருந்து உதவிபெறுகிற எந்தவொரு கல்விநிறுவனத்திலும் மதம், இனம், சாதி, மொழி அல்லது அவைகளில் ஏதாவது ஒன்றின் அடிப்படையில் எந்தவொரு பிரஜைக்கும் அனுமதி மறுக்கப்படக்கூடாது.''*

*விதி 23, துணைவிதி(3)ன் உபவிதிகள் (அ) மற்றும் (ஆ) ஆகியவை புதிய விதி 23-(அ) என்று எண் மாற்றியமைக்கப்பட வேண்டும்.''*

*(திருத்தப்பட்டபடி விதி 23 ஏற்கப்பட்டு அரசியல் சாசனத்தில் சேர்க்கப்பட்டது.)*

★ ★ ★

## விதி 24

[1]**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி** (சென்னை: பொது): இந்த விதி இப்பொழுது விவாதத்திற்கு எடுக்கப்படக்கூடாது, பின்னர் எடுத்துக்கொள்ளலாம் என்பதுதான் இந்த சபையின் மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் பலரது விருப்பமாகும்; ஏனென்றால் இந்த விதி சம்பந்தமாக சமரச ஏற்பாட்டிற்கு வருவதற்காக நாங்கள் உண்மையிலேயே பல திருத்தங்களை ஆராய்ந்து வருகிறோம். எனவே இது விஷயத்தில் டாக்டர் அம்பேத்கர் என்னைப் பொறுத்துக் கொள்ள வேண்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்: பொது): ஆம், ஐயா, விதி 24 நிறுத்தி வைக்கப்படலாம்.

**திரு. துணைத் தலைவர்:** சபையின் விருப்பம் அதுதானா?

1. அ.நி.விவாதங்கள், தொகுதி VII, டிசம்பர் 9, 1948, பக்கம் 930.

**மதிப்பிற்குரிய உறுப்பினர்கள்:** ஆம்.

**திரு. இஜட்.எச். லாரி** (ஐக்கிய மாகாணங்கள்: முஸ்லீம்): அவ்வாறானால் விதி 15ன் விஷயம் என்ன?

**திரு. துணைத் தலைவர்:** அந்த விதியைப் பற்றிய பரிசீலனை தற்போதைக்கு நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது.

★ ★ ★

## விதி 25

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இந்த விதி என்னுடைய மாண்புமிகு நண்பர் திரு.கரிமுத்தீன் குறிப்பிட்ட இதர பல ஷரத்துக்களுடன் சம்பந்தப்பட்டிருப்பதை வைத்து இந்த விதியை தற்பொழுது ஆராய்வது சாத்தியமில்லை என்று நான் நினைக்கவில்லை; ஏனென்றால் 285லோ அல்லது இதர விதி களிலோ இது சம்பந்தமாக நாம் சிலமாற்றங்கள் செய்வதாக வைத்துக் கொள்வோம்; அப்போது அதைத் தொடர்ந்த மாற்றங் களை விதி 25ல் நாம் சுலபமாகச் செய்ய முடியும். எனவே அது ஒரு தடையாக இராது. ஆகையால் பின்னால் செய்யப்படப் போகிற மாற்றங்களுக்கு எவ்வித பாதிப்பும் இல்லாமல் இந்தக் கட்டத்தில் விதி 25ஐ பரிசீலிப்பது முற்றிலும் சாத்தியமே. இதனைத் தொடர்ந்த விதிகளில் சில மாற்றங்களைச் செய்வதாக வைத்துக் கொண்டால் அது.....

**காஜி சையது கரிமுத்தீன்:** அவ்வாறானால் இதை ஏன் ஒத்திவைக்கக்கூடாது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இல்லை, ஒத்தி வைக்க இயலாது.

**திரு. துணைத் தலைவர்:** இந்தத் திருத்தத்தை வாக்கெடுப் புக்கு விடப்போகிறேன்; ஏனென்றால் அது ஏற்கப்பட்டால், பின் இதர அனைத்து திருத்தங்களையும் பரிசீலிப்பது ஒத்திப்போடப் படும்.

---

1. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி VII, டிசம்பர் 9, 1948, பக்கம் 931.

**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் வருமாறு:

> "நகல் அரசியல் சட்டத்தின் XIவது பகுதி பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படும் வரை இந்தத் துணைவிதியைப் பரிசீலிப்பது ஒத்திப் போடப் பட வேண்டும்."

திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

★ ★ ★

[1]**திரு. நசிருத்தீன் அகமது:** ஒருவேளை அச்சுப் பிழையாக இருக்கலாம். எனக்குத் தெரியாது. அச்சுப்பிழை இல்லையென்றால் அது மிகவும் தெளிவற்றதாக இருக்கிறது என்ற விமர்சனத்திற்கு உள்ளாகும்.

என்னுடைய மனத்திலுள்ள ஒரே ஒரு விஷயம் தகுந்த வழிமுறைகள் மூலம் உச்சநீதிமன்றத்தை அணுகுவதற்கான உரிமை உத்தரவாதப்படுத்தப்பட வேண்டும் என்பதுதான். மக்கள் வேறு நீதிமன்றங்களை அணுக அனுமதிக்கப்பட வேண்டுமென்று நான் விரும்புகிறேன். ஓர் அடிப்படை உரிமை இங்கே உத்தரவாதம் செய்யப்பட்டால், எந்தவொரு ஏழை மனிதனும் உச்சநீதிமன்றத்தை அணுகும்படி நிர்ப்பந்திக்கப்பட்டால்......

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உபவிதி (3) ஐ பாருங்கள்.

**திரு.நசிருத்தீன் அகமது:** அந்த உப-விதியானது இந்த விஷயத்தை வேறுசில குறிப்பிட்ட நீதிமன்றங்கள் பரிசீலிப்பதற்கு அதிகாரமளிக்கிறது; ஆனால் நான் அதை மேலும் பொதுவான தாக்க விரும்புகிறேன்; எந்தவொரு நீதிமன்றத்தில் எழுப்பினாலும் அமுல்படுத்தும் அளவுக்கு அடிப்படை உரிமைகள் தகுதி வாய்ந் தவையாக இருக்க வேண்டும்.

**திரு. எச்.வி. காமத்:** ஒரு குறிப்பிட்ட வழக்கில் எந்த வகை யான நீதிப் பிரேரணைகளை, உத்தரவுகளை அல்லது செய் விதி களை தீர்மானிப்பதற்கு உச்சநீதிமன்றத்துக்கு விடாமல் அந்தக் குறிப்

1. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி VII, டிசம்பர் 9, 1948, பக்கம் 931.

பிட்ட [1]நீதிப்பேராணைகளைப் பற்றி இங்கு கூறுவது அவசியம் என்று டாக்டர் அம்பேத்கார் ஏன் நினைக்கிறார் என்பதை அவர் நமக்குக் கௌரவம் கருதி அல்லது வேறெந்த நோக்கமும் கொண்டிராமல், விதியின் இந்த உபபிரிவில் இத்தகைய குறிப்பிட்ட நீதிப் பேராணைகளைக் குறிப்பிட வேண்டுமென்று வலியுறுத்துவதற்கான திருப்திகரமான அல்லது தக்க காரணங்களை அவர் கூறுவார் என நம்புகிறேன்.

**மாண்புமிகு பி.ஆர்.அம்பேத்கர்:** [1]ஐயா, திரு.எம்.ஏ. பெய்க் இந்த சபையில் இல்லை என உணர்கிறேன். திருத்தம் 789-ஐ முன் மொழிய என்னை அனுமதிப்பீர்களா? இந்தத் திருத்தத்தை நான் ஏற்கப்போகிறேன். அதுமுறையாக முன்மொழியப்பட வேண்டும்.

**திரு. நசிருத்தீன் அகமது:** சபை அனுமதிக்குமானால், அந்தத் திருத்தத்தை நான் முன்மொழிய விரும்புகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** இதை முன்மொழிய திரு. நசிருத்தீன் அகமதிற்கு அவை அனுமதியளிக்கிறதா?

**மாண்புமிகு உறுப்பினர்கள்:** ஆம்.

**திரு. நசிருத்தீன் அகமது:** ஐயா, நான் பின்வருமாறு பிரேரேபிக்கிறேன்:

> ''விதி 25 துணைவிதி(2)ல் நீதிப்பேராணைகள் என்ற தன்மையில் உள்ள'' என்னும் சொற்கள் ''அல்லது நீதிப்பேராணைகள் தன்மையிலுள்ளவை உள்ளிட்டு என்பதாக மாற்றியமைக்கப்பட வேண்டும்.''

ஐயா, இந்த அவையில் என்னுடைய வாழ்வில் ஒரு முக்கியமான தினமாகும்; இந்த ஒரு திருத்தம்தான் ஏற்கப்பட போகிறது. இந்தத் திருத்தமானது என்னுடைய வளர்ப்புக்குழந்தை; அதனால் தான் மாண்புமிகு உறுப்பினர் இதை ஏற்கப் போகிறார் என்று கருதுகிறேன். இதற்கு மேற்கொண்டு விளக்கம் தேவையில்லை.

1. அ.நி.விவாதங்கள், தொகுதி VII, டிசம்பர் 9, 1948, பக்கம் 933

**திரு. எச்.வி. காமத்:** ஓர் ஒழுங்குப் பிரச்சினை. திருத்தம் பிரேரேபிக்கப்படும் நேரத்திலேயே அது ஏற்கப்படப் போகிறது என்று என் நண்பர் கூறுவது சரிதானா?

**திரு. நசிருத்தீன் அகமது:** அது ஏற்கப்படப் போகிறது என்ற வதந்தியைக் கேட்டேன்.

**திரு. துணைத் தலைவர்:** வாய்மொழி திருத்தங்கள் என்றளவில் எண் 791 மற்றும் 792க்கு அனுமதி இல்லை.

*(திருத்தம் எண் 793 பிரேரேபிக்கப்படவில்லை)*

**திரு. துணைத் தலைவர்:** எண்கள் 794, 795 மற்றும் 799 ஆகியவை ஒரே மாதிரியானவை என்பதால் அவை ஒன்றாக பரிசீலிக்கப்படும். 794 பிரேரேபிக்கப்பட அனுமதிக்கப்படுகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நகல் தயாரிக்கும் பொழுது சில வார்த்தைகளில் தற்செயலாக நுழைந்துவிட்ட தவறுகளில் உங்கள் அனுமதியுடன் ஒன்றிரண்டு திருத்தங்களைச் செய்கிறேன். ஐயா, இந்தத் திருத்தங்களுடன் என்னுடைய திருத்தம் பின்வருமாறு இருக்கும்:

> 'தற்பொழுதுள்ள 25 உபவிதி(3)க்குப் பதிலாக பின்வரும் துணைவிதி சேர்க்கப்பட வேண்டும்:
>
> இந்த விதியின் துணைவிதிகள் (1) மற்றும்(2) ன்படி உச்சநீதிமன்றத்திற்கு வழங்கப்படும் அதிகாரத்திற்கு பாதிப்பில்லாதபடி நாடாளுமன்றமானது எந்தவொரு நீதிமன்றமும் இந்த விதியின் துணைவிதி (2) ன் கீழ் உச்சநீதிமன்றம் பிரயோகிக்கும் அதிகாரங்கள் அனைத்தையும் அல்லது ஏதாவது ஒன்றையும் பிரயோகிக்க சட்டமியற்றி அதிகாரமளிக்கலாம். இந்த துணை விதிகள் (1) மற்றும் (2) ஐ சேர்க்கக்காரணம் துணைவிதிகள் (1) மற்றும் (2) உயர்நீதிமன்றம் சம்பந்தப்பட்டவையாக இருப்பதாலேயாகும்.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, இந்த விதிக்கு முன்மொழியப்பட்டுள்ள திருத்தங்களில் 789 ஆம் எண் திருத்தத்தை மட்டுமே என்னால் ஏற்றுக் கொள்ளமுடியும்; இந்தத் திருத்தம் திரு. பெய்க்கின் பேரில் உள்ளது; ஆனால் திரு. நசிருத்தீன் அகமதுதான் அதை உண்மையில் முன்

1. அ.நி.விவாதங்கள், தொகுதி VII, டிசம்பர் 9, 1948, பக்கம் 933

மொழிந்திருக்கிறார். அதனை நான் ஏற்றுக்கொள்கிறேன். ஏனென்றால் நகலின் வாசக அமைப்பை அது பெரிதும் மேம்படுத்தியுள்ளது. ஏனைய திருத்தங்களில் திரு. தாஜாமுல் ஹுசேன் முன்மொழிந்த 801 ஆம் எண் திருத்தத்தையும் அதேபோன்று திரு. கரிமுத்தீன் முன்மொழிந்த 802 ஆம் எண் திருத்தத்தையும் முதலில் எடுத்துக் கொள்கிறேன். இந்த இரண்டு திருத்தங்களிடையே ஒற்றுமை காணப்படுகிறது. திரு.தாஜாமுல் ஹுசேன் முன்மொழிந்துள்ள திருத்தத்தின் நோக்கம் இந்த விதியிலிருந்து உபவிதி (4) ஐ அறவே நீக்கிவிட வேண்டும் என்பதாகும்; திரு.கரிமுத்தீன் முன்மொழிந்துள்ள திருத்தத்தின் நோக்கம் 'கலகமோ அல்லது படையெடுப்போ நடைபெறும் பட்சத்தில்' என்னும் சொற்களைப் புகுத்தி, உபவிதி (4)ன் வாசக அமைப்பை ஓர் வரையறைக்குட்படுத்துவதாகும்.

இப்போது, ஐயா, துணைவிதி (4) நீக்கப்பட வேண்டும் என்ற வாதத்தைப் பொறுத்தவரையில், அது மிகவும் மட்டுமீறிய, அதீதமான கோரிக்கையாகும். எவரது உணர்ச்சிகளையும் புண்படுத்தாத முறையில் இதனைக் கூறுகிறேன். ஒரு தனிநபர் தனது சொந்த ஆளுமையை வளமும் செழுமையும் படுத்திக் கொள்வதற்கு அவருக்கு ஓரளவு பாதுகாப்பும் சுதந்திரமும் இருக்கும்பொருட்டு அரசு சில அடிப்படை உரிமைகளை அவருக்கு உத்திரவாதம் செய்ய வேண்டும் என்பதில் ஐயமில்லை; ஆனால் அதேசமயம் சில சந்தர்ப்பங்களில் அரசு நிலைத்திருப்பதற்கே அபாயம் ஏற்படும்போது, இந்த உரிமைகள் ஓரளவு கட்டுப்படுத்தப்படுவது அவசியம் என்பது தெள்ளத் தெளிவு. அமைதி நிலவும் காலத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டது. நெருக்கடி நிலை காலத்தில் அரசு நீடிப்பதே அபாயத்திற்குள்ளாகிறது; நெருக்கடி நிலையின்போது அரசு தன்னைப் பாதுகாத்துக் கொள்ள இயலாதுபோனால் தனி நபரும் தனது வாழ்க்கை ஆபத்துக்குள்ளாவதைக் காண்பார். எனவே, அரசு நெருக்கடி நிலையிலிருந்து, மீளவும், தனது பாதுகாப்பில் தனி நபருக்குள்ள உரிமையைப் போன்றே உத்தரவாதம் செய்யப்படுவது மிகவும் அவசியம், முக்கியம். நெருக்கடி நிலைகாலத்தில் அரசு தனி நபர்களது உரிமைகளைக் கட்டுப்படுத்துவதன் மூலம் தன்னைப் பாதுகாத்துக்கொள்வதற்கு வழிவகை செய்யாத எந்த அரசியல் சாசனமும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. அடிப்படை உரிமைகள் உத்தரவாதம் செய்யப்பட்டுள்ள எந்த அரசியல் சாசனத்தை வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள்; நெருக்கடி நிலையின்போது இந்த உரிமைகளைத் தற்காலிகமாக நிறுத்தி வைப்பதற்கு

அதில் வகை செய்யப்பட்டிருப்பதை நீங்கள் காண்பீர்கள். எனவே, துணைவிதி(4)ஐ இது கோட்பாடு சம்பந்தப்பட்ட விஷயமாதலால், இந்தத் திருத்தத்தை முன்மொழிந் தவரின் கோரிக்கையை என்னால் ஏற்கமுடியாது; அதனை எதிர்க்க வேண்டியவனாக இருக்கிறேன்.

இனி, இதுகுறித்துச் சற்று விளக்கமாகப் பேச விரும்புகிறேன். என்னுடைய நண்பர் திரு.தாஜாமுல் ஹுசேன் அடிப்படை உரிமைகளைப் பற்றிக் கூறும் அத்தியாயத்தில் அடங்கியுள்ள பல்வேறு விதிகளைக் குறிப்பிட்டுப் பேசும்போது ஒரு பயங்கரமான படப் பிடிப்பைத் தந்தார். குடிநீர் எடுத்துக் கொள்வதற்கு உரிமை இருக்கிறது. எந்தக் கடைக்குள்ளும் பிரவேசிப்பதற்கு உரிமை இருக்கிறது, குளிப்பதற்குச் செல்ல சுதந்திரம் இருக்கிறது என்றெல்லாம் அடுக்கிக்கொண்டே போனவர் திடீரென்று ஒரு வெடிகுண்டைத் தூக்கிப்போட்டார். அதாவது, துணைவிதி (4) நடைமுறைக்கு வந்தால் எத்தகைய தங்கு தடையுமின்றி கிணற்றுக்குச் சென்று குடிநீர் அருந்துவது, சாலையில் நடந்துசெல்லுவது, திரைப்பட அரங்குக்கோ நாடக அரங்குக்கோ போவது போன்ற சர்வசாதாரண உரிமைகள் எல்லாம் அரசியல் சாசனத்தின் அடிப்படை உரிமைகள் பகுதி உத்திரவாதம் செய்துள்ள இந்த உரிமைகள் யாவும் மறைந்துவிடும் என்று கூறினார். என்னுடைய நண்பர் திரு.தாஜாமுல் ஹுசேன் இந்த விநோதமான கருத்தை எங்கிருந்து பெற்றார் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவசர நிலை பிரகடனத்தைப் பிறப்பிப்பதற்கு குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் அளிப்பது சம்பந்தமான விதி 279 ஐ அவர் பார்த்தாரேயானால் இந்த உரிமைகளைத் தற்காலிகமாக நிறுத்தி வைப்பதை அனுமதிக்கும் அதிலுள்ள துணைவிதி(4) விதி 13 ஐ குறிப்பிடாததையும் காண்பார். நெருக்கடி நிலைமை சமயத்தில் குடியரசுத் தலைவர் பிறப்பிக்கக்கூடிய பிரகடனத்தின்கீழ் தற்காலிகமாக நிறுத்தி வைக்கக்கூடிய உரிமைகள் மட்டுமே அந்த 13 ஆவது விதியில் அடங்கியுள்ளன; மற்ற அனைத்து விதிகளும் அவற்றின் மூலம் உத்தரவாதம் செய்யப்பட்டுள்ள உரிமைகளும் அப்படியே இருக்கும்; அவை எவ்வகையிலும் பாதிக்கப்பட மாட்டா. எனவே, அவை முன் அவர் வைக்கும் வாதம் விதி எண் 279ல் அடங்கியுள்ள ஷரத்துகளுக்கு முற்றிலும் அப்பாற்பட்டதாக இருக்கிறது.

**திரு. எச்.வி. காமத்:** 280 ஆம் எண் விதி விஷயம் என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது செய்வதெல்லாம் பரிகாரத்தைத் தற்காலிகமாக நிறுத்தி வைப்பதுதான். இந்தப் பரிகாரங்களின் தன்மை பற்றிய பொதுவான பிரச்சினை குறித்து விவாதிக்கும்போது அது பற்றிப் பேசலாமென்று இருக்கிறேன். ஆதலால் இங்கு அதுகுறித்து எதுவும் கூறப்போவதில்லை.

திரு. கரிமுத்தீன் மேற்கொண்டுள்ள நிலையை எடுத்துக் கொண்டால், துணைவிதி (4) ஐ கலகம், அல்லது படையெடுப்பு போன்ற வழக்கங்களுக்கு அதனை வரம்புக்குட்படுத்த முயலுகிறார். 275 ஆம் விதியைக் கவனமாகப் படிப்பாரேயானால் 275 ஆம் எண் விதியில் அடங்கியுள்ள ஷரத்துகளுக்கும் அவர் முன்மொழிந்துள்ள திருத்தத்துக்கும் இடையே உண்மையில் அடிப்படையான வேறுபாடு எதுவுமில்லை. 275 ஆம் எண் விதி நெருக்கடி நிலை பிரகடனத்தை வெளியிட குடியரசுத் தலைவருக்கு அளித்துள்ள அதிகாரம் யுத்தம் அல்லது உள்நாட்டு கலகம் போன்ற சந்தர்ப்பங்களுக்கு மட்டுமே பொருந்தும்.

**காஜி சையத் கரிமுத்தீன்:** யுத்த அபாயம் ஏற்பட்டிருந்தால் கூட இது பொருந்துமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நிச்சயமாக, யுத்தம் மூண்டால்தான் அவசரநிலை ஏற்படும் என்பதல்ல - யுத்த அச்சுறுத்தல் நிலைமையும் நெருக்கடி நிலைமை ஏற்பட்டிருப்பதாகக் கருதப்படும். எனவே, 275 ஆம் எண் விதியின் வாசகத்தை திரு.கரிமுத்தீன் திருத்தத்துடன் ஒப்பிட்டுப் பார்த்தால், குடியரசுத் தலைவர் எதைச் செய்ய 275 ஆம் எண் விதி அனுமதிக்கிறதோ அதற்கும் திரு. கரிமுத்தீன் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டால் குடியரசுத் தலைவர் எதைச் செய்ய அது அனுமதிக்கிறதோ அதற்கும் இடையே வேறுபாடு ஏதும் இல்லை என்பதை அவர் காண்பார். ஆதலால் 801 மற்றும் 802 ஆம் திருத்தங்கள் அவசியமில்லை என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். என்னைப் பொறுத்தவரையில், 801 ஆம் எண் திருத்தம் நான் வலியுறுத்தும் கோட்பாட்டுக்கு முற்றிலும் முரணானதாக உள்ளது.

திரு.காமத்தின் 787 ஆம் எண் திருத்தத்தையும், பட்டியல் IIIல் 34 ஆம் எண் திருத்தத்தையும், 43 ஆம் திருத்தத்தால் திருத்தப்பட்ட என்னுடைய நண்பர் திரு. காமத்தின் 783 ஆம் எண் திருத்தத்தையும்

எடுத்துக்கொள்கிறேன். தற்போது விதி செய்வது போல் பல்வேறு நீதிப் பேராணைகளைக் குறிப்பிட்டுக் கூற வேண்டிய அவசிய மில்லை, அதற்குப் பதிலாக உச்சநீதிமன்றம் சந்தர்ப்ப சூழ்நிலைமை களைப் பொறுத்து உகந்ததெனக் கருதும் பரிகாரங்களை வகுத்துத் தரும் பொறுப்பை அதனிடமே விட்டுவிடலாம் என்று என் னுடைய நண்பர் திரு.காமத் யோசனை தெரிவித்துள்ளார். திரு. காமத் இந்த விதியை மிகக் கவனமாகப் படித்திருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. இவ்வாறு அவர் இந்த விதியை கவனமாகப் படித்திருந்தால், பொது அதிகாரம் வழங்குவதற்கும், அதேபோல் குறிப்பிட்ட பரிகாரங்களைப் பரிந்துரைப்பதற்கும் இந்த நகலில் என்ன செய்யப்பட்டுள்ளது என்பதைத் தெரிந்துகொண்டிருப்பார். இந்த விதியின் வாசகம் மிகத் தெளிவாக இருக்கிறது :

''இந்தப் பகுதி வழங்கியுள்ள உரிமைகளைச் செயல்படுத்துவதற்கான உரிய நடவடிக்கைகள் மேற்கொள்வது சம்பந்தமாக உச்சநீதிமன்றத்தை அணுகும் உரிமை உத்தரவாதம் செய்யப்பட்டுள்ளது.

நீதிப் பேராணைகள் வடிவத்தில் கட்டளைகளை அல்லது நெறியுறுத்தல் களை அல்லது நீதிப்பேராணைகளைப் பிறப்பிப்பதற்கு உச்சநீதிமன்றத் துக்கு அதிகாரம் இருக்க வேண்டும்.''

இவை முற்றிலும் பொதுவான, விரிவான வாசகக் கருத்துக் கூறுகள்.

**திரு. எச்.வி. காமத் :** விளக்கத்தின் பொருட்டு ஒரு விஷ யத்தை இங்கு குறிப்பிட விரும்புகிறேன். என்னுடைய நண்பர் திரு. பெய்க்கின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டால், இந்தத் துணைவிதி பின்வருமாறு அமைந்திருக்கும்:

''ஆட்கொணர்விக்கும் நீதிப்பேராணைத் தன்மையிலுள்ள நீதிப்பேராணைகள் உட்பட நெறியுறுத்தல்களை அல்லது உத்தரவு களை அல்லது நீதிப்பேராணைகளைப் பிறப்பிக்கும் அதிகாரம் உச்சநீதிமன்றத்துக்கு இருக்கும்.''

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம், ''நெறியுறுத் தல்கள் மற்றும் ஆணைகள்'' என்னும் சொற்கள் அதில் உள்ளன.

**திரு. எச்.வி. காமத்:** மற்றும் ''நீதிப்பேராணைகள்.''

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம்.

ஆணைகளையும் நெறியுறுத்தல்களையும் பிறப்பிக்கும் அதிகாரங்கள் உச்சநீதிமன்றத்துக்கு இருக்கின்றன; எனினும் இந்தக் குறிப்பிட்ட நீதிப் பேராணைகளைக் குறிப்பிடுவது உசிதமாக இருக்கும் என்று அரசியல் சாசன வரைவு கருதிற்று. இப்போது, இந்தக் குறிப்பிட்ட நீதிப்பேராணைகளைக் குறிப்பிடுவது மிகவும் அவசியம் என்பது தெள்ளத் தெளிவு. இந்த நீதிப்பேராணைகள் பிரிட்டனில் பல ஆண்டுக் காலமாகவே நடைமுறையில் இருந்து வருகின்றன. அவற்றின் இயல்பும் அவை வழங்கும் பரிகாரங்களும் ஒவ்வொரு வழக்குரைஞருக்கும் நன்கு தெரியும்; அப்படியிருக்கும்போது, இது விஷயத்தில் புதிதாக எதையும் கண்டுபிடிப்பது மிகவும் கற்பனை வளமிக்க ஒரு மனிதனுக்குக் கூட சாத்தியமில்லை என்றும், அதேபோல், அநேகமாக ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நடைமுறையில் செயல்பட்டு ஒவ்வொரு ஆங்கிலேயனுக்கும் அதாவது சுதந்திரத்தைப் பாதுகாப்பது சம்பந்தமாக முழு மனநிறைவை அளித்து வந்துள்ள நீதிப்பேராணைகளை மேலும் செழுமைப்படுத்துவது இயலாத காரியம் என்றும் நாங்கள் கருதினோம். எனவே, நேர்மையின்மைக்கும் எவரும் தவறாகப் புரிந்து கொள்வதற்கும் இடம் தராத முறையில் பிரிட்டிஷ் சட்டவியலில் அடங்கியுள்ள இந்த நீதிப்பேராணைகளை அரசியல் சாசனத்தில் அவற்றின் பெயர்களோடு குறிப்பிடுவது அவசியம் என்றும், உச்சநீதிமன்றம் விரும்பினால் வேறேதேனும் வகையில் நீதி வழங்குவதற்கு அதற்குள்ள உரிமை பங்கம் ஏற்படாமல் இதைச் செய்ய வேண்டும் என்றும் நாங்கள் முடிவுசெய்தோம். ஆதலால் இந்த விஷயத்தில் திரு.காமத் குறை கூறுவதற்கு எத்தகைய அடிப்படையும் இல்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த விதியின் கீழ் அளிக்கப்படும் அதிகாரங்களைப் பயன்படுத்தும்போது, வழக்கு விவரங்களை ஆழமாக ஆராய்வதற்கு நீதிமன்றத்துக்குச் சுதந்திரம் இருக்க வேண்டும் என்று என்னுடைய நண்பர் திரு. சர்வதே கூறினார். இந்த நீதிப் பேராணைகளின் வீச்சையும் இயல்பையும் திரு. சர்வதே தவறாகப் புரிந்துகொண்டிருக்கிறார் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. எனவே, இந்த நீதிப்பேராணைகளின் இயல்பை விவரித்தமைக்காக நான் சமாதானம் ஏதும் கூறுவதற்கு அவசியம் இல்லை என்றே கருதுகிறேன். பிரிட்டிஷ் சட்டத்தொகுதியைப் பற்றி ஏதேனும் தெரிந்

திருக்கும் எவரும் இந்த விதியில் குறிப்பிடப்பட்டிருக்கும் நீதிப் பேராணைகள் இரண்டு வகைப்பட்டவை என்பதை உணர்ந்து, புரிந்து கொள்வர். ஒரு வகையில் ''சிறப்புரிமை கொண்ட நீதிப் பேராணைகள்'' என்றும் இன்னொரு வகையில், ''செயல்முறை நீதிப் பேராணைகள்'' என்றும் அவை அழைக்கப்படுகின்றன. 'செய்க' என்னும் நீதிப்பேராணை, 'செய்யற்க' என்னும் நீதிப்பேராணை, 'ஆவணக்கட்டுரை அனுப்புக' என்னும் நீதிப்பேராணை ஆகியவற்றை இரு சந்தர்ப்பங்களிலும் பயன்படுத்தமுடியும். அது சிறப்புரிமை நீதிப்பேராணையாகவோ அல்லது வழக்காடுபவரால் ஒரு வழக்கிலோ அல்லது சட்ட நடவடிக்கைகளிலோ பயன்படுத்தப்பட முடியும். இந்த விதியில் குறிப்பிடப்பட்டிருக்கும் இந்த நீதிப் பேராணைகளின் முக்கியத்துவம் அவை சிறப்புரிமை நீதிப்பேராணைகள் என்பதில்தான் அடங்கியுள்ளது; பாதிக்கப்பட்டவரால் வழக்கோ சட்டநடவடிக்கையோ மேற்கொள்ளப்படாமலேயே இந்த நீதிப் பேராணைகள் மூலம் பரிகாரம் தேடமுடியும். சாதாரணமாக, நீதிமன்றத்திலிருந்து எத்தகைய உத்தரவும் பெறுவதற்கு முன்னர் முதலில் வழக்குத் தொடரவேண்டும்; அந்த உத்தரவு செயலாற்றும் ஆணையாகவோ, தடையாணையாகவோ, செயலுறுத்தும் ஆணையாகவோ அல்லது இவ்வகைப்பட்ட வேறு எதேனும் ஆணையாகவோ இருக்கக்கூடும். ஆனால் இந்த விதியைப் பொருத்தவரையில், எந்த வழக்கும் தொடராமலேயே நீதிமன்றத்துக்கு நேரடியாகச் சென்று, நீதிப்பேராணைக்கு விண்ணப்பித்துக் கொள்ள முடியும். இடைக்காலப் பரிகாரம் அளிப்பதே உண்மையில் இந்த நீதிப்பேராணையின் நோக்கம். உதாரணமாக, ஒருவர் கைது செய்யப்படுகிறார் என்று வைத்துக் கொள்வோம்; அப்போது பாதிக்கப்பட்ட நபர் எத்தகைய வழக்கும் தொடராமலேயே அல்லது அவரைக் கைது செய்த அதிகாரிக்கு எதிராக எத்தகைய சட்ட நடவடிக்கையும் மேற்கொள்ளாமலேயே தம்மை விடுவிக்கக்கோரி நீதிமன்றத்தில் விண்ணப்பித்துக் கொள்ள முடியும். இதன் பொருட்டு அவர் முதலில் சம்பந்தப்பட்ட அதிகாரிக்கு எதிராக வழக்குத்தொடரவோ அல்லது சட்ட நடவடிக்கைகள் மேற்கொள்ளவோ வேண்டிய அவசியம் இல்லை. சிறப்புரிமை நீதிப்பேராணை வேண்டி விண்ணப்பித்துக் கொள்ளும் இவ்வகையான சந்தர்ப்பத்தில் நீதிமன்றம் செய்யக்கூடியதெல்லாம் கைது செய்யப்பட்டிருப்பது சட்டப்படி நடைபெற்றிருக்கிறதா என்பதை உறுதிப்படுத்திக் கொள்வதுதான். ஒருவர் கைதுசெய்யப்பட்டிருக்கும் சட்டம் தீயதா அல்லது நல்லதா,

அது அரசியல் சாசனத்தின் எந்த விதிக்கும் முரண்பட்டதாக இருக் கிறதா என்பவை போன்ற பிரச்சினைகளை எல்லாம் ஆராய்வதில் இந்தக் கட்டத்தில் நீதிமன்றம் ஈடுபடாது. ஆட்கொணர்விக்கும் நீதிப்பேராணை நடவடிக்கைகளில் நீதிமன்றம் விசாரித்தறிவதெல் லாம் கைது நடவடிக்கை சட்டப்படி மேற்கொள்ளப்பட்டிருக் கிறதா என்பதைத்தான், மற்றபடி சட்டத்தின் தகுதிகளைப் பற்றிய ஆய்வில் அது இறங்காது. ஒருவர் உண்மையில் கைது செய்யப் பட்டு வழக்கு விசாரணை ஆரம்பமாகி விடும்போது, இந்த நட வடிக்கைகளின்போதுதான், வழக்கு சம்பந்தப்பட்ட விவரங்களை ஆழ்ந்து ஆராய்ந்து, ஒருவர் எந்தச் சட்டத்தின்கீழ் கைது செய்யப் பட்டிருக்கிறாரோ அந்த சட்டம் நல்ல சட்டமா அல்லது தீய சட்டமா என்ற முடிவுக்கு வருவதற்கு நீதிமன்றம் உரிமை பெற்றிருக்கிறது. இதன்பின்னர் இது அரசியல் சாசனத்தின் விதிகளை மீறுவதாக இருக்கிறதா என்பதை ஆராயும் பணியில் நீதிமன்றம் ஈடுபடும். எனவே, என்னுடைய நண்பர் திரு.வி.எஸ் சர்வதே முன்மொழிந் துள்ள திருத்தம் இங்கு பொருத்தமற்றது என்பது தெள்ளத் தெளிவு. அவர் 115 ஆம் எண் திருத்தத்தைப் படித்துப் பார்ப்பாரேயானால், இதே போன்ற நீதிப் பேராணைகளுக்கு அதில் வழிவகை செய்யப் பட்டிருப்பதைக் காண்பார். ஆனால் நடைபெற்ற நிகழ்ச்சிகள் மற்றும் சட்டம் சம்பந்தப்பட்ட விஷயங்கள் குறித்துத்தான் இந்த நீதிப் பேராணைகள் பிறப்பிக்கப்பட முடியும். இவை நீதிமன்றங்களால் நிச்சயமாகப் புலனாய்வு செய்யப்படும்.

இப்போது ஐயா, இந்த விதியைப் பற்றிப் பேசியவர் களில் பெரும்பாலோர் இந்த விதியின் முக்கியத்துவத்தையும் தனிச் சிறப்பையும் உணர்ந்திருப்பது எனக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளிக் கிறது. இந்த அரசியல் சாசனத்திலேயே மிக முக்கியமான விதி எது, அதிலும் குறிப்பாக எந்த விதி இல்லையென்றால் இந்த அரசியல் சாசனமே செல்லாததாகிவிடும் என்று கருதப்படக்கூடிய விதி எது என்று என்னைக் கேட்டால், இந்த விதியைத் தவிர வேறு எந்த விதியையும் நான் குறிப்பிடமாட்டேன். இதனை இந்த அரசியல் சாசனத்தின் உயிர்மூச்சு, இதயம் என்று கூறலாம்; இதன் முக்கியத்துவத்தை சபை உணர்ந்திருப்பது குறித்து மகிழ்ச்சி அடைகிறேன்.

எனினும் இந்த விதி பற்றிப் பேசிய உறுப்பினர்கள் போதிய அளவு உணர்ந்துகொள்ளத் தவறிய விஷயம் ஒன்று உள்ளது. என்

உரையை முடித்து என் இருக்கையில் அமர்வதற்கு முன்னர் அதனைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். இந்த விதியில் குறிப்பிடப் பட்டிருக்கும் நீதிப்பேராணைகள் ஒருவகையில் புதியவை ஒன்று மல்ல. ஆள்கொணர்விக்கும் நீதிப்பேராணை நமது குற்றவியல் விசாரணை முறைச் சட்டத் தொகுப்பில் இடம்பெற்றிருக்கிறது. செயலுறுத்தும் நீதிப்பேராணையை குறித்த வகைப் பரிகாரச் சட்டத்தில் காணலாம்; இங்கு நாம் குறிப்பிட்ட இதர சில நீதிப் பேராணைகளும் நமது பல்வேறு சட்டங்களில் காணக்கிடக் கின்றன. ஆனால் இந்த நீதிப்பேராணைகள் சம்பந்தமாக இப்போ துள்ள நிலைமைக்கும் இந்த அரசியல் சாசனம் ஏற்கப்பட்ட பிறகு ஏற்படக்கூடிய நிலைமைக்கும் இடையே ஒரு முக்கிய வேறுபாடு இருக்கிறது. நமது பல்வேறு சட்டங்களில் தற்போது இடம்பெற்றிருக்கும் நீதிப்பேராணைகள் சட்டமன்றத்தின் தயவை முற்றிலும் எதிர்பார்த்திருக்கும் நிலையில் இருக்கின்றன. ஆட் கொணர்விக்கும் நீதிப்பேராணை சம்பந்தமான ஒரு ஷரத்தைக் கொண்டுள்ள நமது குற்றவியல் விசாரணை முறைச் சட்டத் தொகுப்பை இப்போதைய சட்டமன்றத்தால் திருத்த முடியும். இதேபோன்று நமது குறித்தவகைப் பரிகாரச் சட்டத்தையும் திருத்த முடியும்; இவ்வாறே, ஒரேவிதமான மனோபாவம் கொண்ட பெரும் பான்மையினரைக் கொண்ட எந்த ஒரு சட்டமன்றத்தாலும் ஆட் கொணர்விக்கும் நீதிப்பேராணைகளையும் செயலுறுத்தும் நீதிப் பேராணையையும் எத்தகைய சிக்கலும் சிரமுமின்றி ரத்து செய்து விடமுடியும். ஆனால் இந்த விதியில் குறிப்பிடப்பட்டிருக்கும் நீதிப்பேராணைகளை இனிமேல் எந்தச் சட்டமன்றத்தாலும் அகற்ற முடியாது. மேலும், சட்டமன்றம் பெரிய மனது வைத்து ஒரு சட்டத்தை இயற்றி அதன் மூலம் இந்த நீதிப்பேராணைகளைப் பிறப்பிக்கும் அதிகாரத்தை உச்ச நீதிமன்றத்துக்கு வழங்க வேண்டும் என்பதில்லை. அரசியல் சாசனமே இந்த உரிமைகளை உச்சநீதி மன்றத்துக்கு அளித்துள்ளது. சட்டமன்றத்தால் அரசியல் சாசனமே திருத்தப்பட்டாலொழிய இந்த நீதிப் பேராணைகளை ரத்து செய்ய முடியாது. இது தனி நபரின் பந்தோபஸ்துக்கும் பாதுகாப்புக்கும் வழங்கப்படக்கூடிய மிகப் பெரிய பாதுகாப்புகளில் ஒன்று என்பது எனது கருத்தாகும். ஆதலால் இந்த அரசியல் சாசனம் வழங்கி யுள்ள சுதந்திரங்களை, உரிமைகளை பெரும்பான்மை இருக்கும் காரணத்தால் எந்தச் சட்டமன்றமும் நீக்கிவிட முடியும் என்று நாம் அகற்ற வேண்டிய அவசியம் இல்லை.

ஐயா, இங்கு மற்றொரு விஷயத்தையும் குறிப்பிடவிரும்பு கிறேன். நெறிப்படுத்தும் கோட்பாடுகள் குறித்தும், அடிப்படை உரிமைகள் குறித்தும் இந்த சபையில் நடைபெற்ற விவாதங்களின் போது பல உறுப்பினர்கள் நிகழ்த்திய உரைகளைச் செவிமடுத்துக் கேட்டேன். அப்போது, நமது அடிப்படை உரிமைகள், அல்லது நெறிப்படுத்தும் கோட்பாடுகளில் நாம் ஒரு குறிப்பிட்ட உரிமை யையோ அல்லது கொள்கையையோ வகுத்தளிக்க நாம் தவறி விட்டோம் என்று அநேக உறுப்பினர்கள் குறை கூறினர். உறுப் பினர்கள் தங்கள் திருத்தங்கள் மூலம் வலியுறுத்திய இத்தகைய பிரக டனங்கள் செய்யப்பட்டுள்ள ரஷ்ய அரசியல் சாசனத்தையும் ஏனைய பல நாடுகளின் அரசியல் சாசனங்களையும் உதாரணமாக சுட்டிக் காட்டினர். ஆனால் உரிமைகள் சம்பந்தமாக பிரிட்டன் மேற்கொண் டுள்ள முறையையே நான் ஆதரிக்கிறேன்; இதில் திருத்தங்கள் கொண்டு வந்துள்ள எந்த உறுப்பினரதும் மனத்தைப் புண்படுத்தும் நோக்கம் எனக்கில்லை. பிரிட்டன் கைக்கொண்ட முறை தனித் தன்மை வாய்ந்தமுறை, மிகவும் காரியசாத்தியமான, முழுநலம் வாய்ந்தமுறை, அரசியல் சாசனத்தின் மூலம் பரிகாரம் அளிக்கப் படாத எந்த உரிமையும் இருக்கமுடியாது என்று பிரிட்டிஷ் சட்ட வியல் வலியுறுத்துகிறது. பரிகாரம்தான் ஓர் உரிமையை எதார்த்த மாக்குகிறது. பரிகாரம் இல்லையென்றால் உரிமையும் இருக்க முடியாது. எனவே, படாடோபமிக்க பொதுமைப்பாடுகள் தொனிக் கின்ற, ஆனால் எந்த ஒரு பரிகாரத்தின் மூலமும் இதற்கு அரசியல் சாசனம் வழிவகை செய்திடாத எண்ணற்ற வெறும் பிரகடனங்களை நமது அரசியல் சாசனத்தின் மீது சுமத்த நான் விரும்பவில்லை. அரசியல் சாசனம் ஏராளமான விழைவுகளையும் விருப்பங்களை யும் கொண்டதாக இருப்பதைவிட நமது உரிமைகளின் வீச்செல்லை ஒரு வரையறைக்குட்பட்டதாக இருப்பதும், பரிகாரங்களைத் தெளிவுபட எடுத்துரைப்பதன் மூலம் அவற்றை நடைமுறை சாத்திய மானவையாக ஆக்குவதும் சாலச்சிறந்தது. நாம் வழங்கும் பரிகாரங் களை இந்த அரசியல் சாசனத்தின் ஓர் அடிப்படையான பகுதி யாக இந்த சபை காண்பது குறித்து நான் பெரிதும் மகிழ்ச்சி அடை கிறேன். ஐயா, இந்த வார்த்தைகளுடன் இந்த விதியை சபைக்குப் பரிந்துரைக்கிறேன்.

**திரு. எச்.வி. காமத்:** ஐயா, எனக்கு ஒரு விஷயம் தெரிய வேண்டும். இப்போது நாம் சட்டரீதியான அடிப்படை உரிமைகள் பற்றியும், உச்சநீதிமன்றத்தால் அவை உத்தரவாதம் செய்யப்படு

வதைப் பற்றியும் விவாதித்துக் கொண்டிருக்கிறோம். இதில் விதி 280 ஐ நம் துணைக்கு அழைத்துக் கொண்டிருக்கிறோம். இத்தகைய நிலைமையில், 'இந்த விதியால் உத்தரவாதம் செய்யப்படும் உரிமைகள் முழுமையாகவோ பகுதியாகவோ நிறுத்தி வைக்கப் படக்கூடாது'' என்று கூறுவதோ அல்லது சட்ட வல்லுநர்கள் தெரிந் தெடுக்கும் இவை போன்ற வேறு சொற்களைப் பயன்படுத்து வதோ மிகவும் உகந்ததாக இருக்குமல்லவா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** "நிறுத்தி வைக்கப் படக்கூடாது'' என்பது இரண்டுக்குமே பொருந்தும். அவற்றைத் தனித் தனியாகக் குறிப்பிட்டுக் கூற வேண்டிய அவசியமில்லை.

திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

★ ★ ★

**திரு. துணைத் தலைவர்:** அடுத்த திருத்தம்.

**திரு. துணைத் தலைவர்:** திரு. காமத்தின் பெயரில் உள்ள 787ஆம்.... திருத்தம்

**திரு. எச்.வி. காமத்:** இது விஷயம் பற்றி டாக்டர் அம்பேத்கர் விளக்கம் அளித்துள்ள நிலைமையில் எனது திருத்தத்தை வலியுறுத்த நான் விரும்பவில்லை.

சபையின் அனுமதியுடன் திருத்தம் திரும்பப் பெற்றுக் கொள்ளப்பட்டது.

**திரு. துணைத் தலைவர்:** திரு. மகபூப் அலி பெய்க்கின் பெயரில் உள்ளதும், ஆனால் நசிருத்தீன் அகமதால் முன்மொழியப் பட்டதுமான திருத்தம் எண் 789க்கு இப்போது வருவோம்.

திருத்தம் வருமாறு:

''விதி 25ன் துணைவிதி (2)ல் உள்ள ''நீதிப்பேராணைகளின் தன்மை கொண்ட'' என்ற சொற்களுக்குப் பதிலாக'' அல்லது நீதிப்பேராணைகளின் தன்மை கொண்டவை உட்பட நீதிப்பேராணைகள்'' என்ற சொற்கள் இடம் பெறவேண்டும்.

திருத்தம் ஏற்கப்பட்டது.

**திரு. துணைத் தலைவர்:** அடுத்து, டாக்டர் அம்பேத்கர், திரு.மாதவராவ், திரு.சாதுல்லா ஆகியோரின் பெயரிலுள்ள திருத்தம் எண் 794ஐ பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளலாம்.

திருத்தம் வருமாறு:

''விதி 25-ன் தற்போதைய துணைவிதி (3)க்குப் பதிலாகப் பின்கண்ட துணைவிதி இடம்பெற வேண்டும்.

2. இந்த விதியின் துணைவிதியை(1) மற்றும் (2) உச்சநீதிமன்றத்துக்கு அளித்துள்ள அதிகாரங்களுக்குப் பங்கம் ஏற்படாத வகையில், நாடாளு மன்றம் சட்டம் இயற்றி, வேறுஎந்த நீதிமன்றமும் இந்த விதியின் துணை விதி (2) ன் கீழ் உச்சநீதிமன்றம் பெற்றுள்ள எல்லா அதிகாரங்களையுமோ அல்லது அவற்றில் எந்த ஓர் அதிகாரத்தையோ தனது அதிகார வரம்பின் ஸ்தல வரையறைக்குள் செலுத்த அனுமதிக்கலாம்.''

திருத்தம் ஏற்கப்பட்டது.

**திரு. துணைத் தலைவர்:** பட்டியல் 1ல் திரு. சர்வதேயின் பெயரிலுள்ள திருத்தம் எண் 43ஐ இப்போது பரிசீலனைக்கு எடுத்துக் கொள்வோம்.

**திரு. வி.எஸ். சர்வதே:** அதனை வலியுறுத்த நான் விரும்ப வில்லை.

சபையின் அனுமதியோடு திருத்தம் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம். சபையின் அனுமதியோடு திருத்தம் திரும்பப் பெற்றுக் கொள்ளப்பட்டது.

(ஏனைய நான்கு திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன.)

திருத்தப்பட்டபடி விதிஎண் 25 ஏற்கப்பட்டு அரசியல் சாச னத்தில் இணைத்துக் கொள்ளப்பட்டது.

## விதி எண். 26

[1]**திரு.துணைத்தலைவர்:** அடுத்து நாம் 26 ஆம் எண் விதிக்கு வருவோம். சபையின் முன்னுள்ள தீர்மானம் வருமாறு:

---

1. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி VII, டிசம்பர் 9, 1948, பக்கம் 955.

*26 ஆம் எண் விதி அரசியல் சாசனத்தின் பகுதியாகிறது.*

*திருத்தம் எண் 809 எதிர்மறை இயல்பு கொண்டது; ஆதலால் அனுமதிக்கப்படவில்லை.*

*(திருத்தம் 810 நிராகரிக்கப்பட்டது.)*

*811 மற்றம் 812 ஆம் எண் திருத்தங்கள் ஒரேமாதிரியான உட்பொருள் கொண்டவை. அவை ஏறத்தாழ ஒரே மாதிரியானவை.*

***டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *ஐயா. பின்கண்டவாறு முன் மொழிகிறேன்:*

> *'விதி எண் 26ல் உத்தரவாதம் செய்கிறது' என்ற சொற்களுக்குப் பதிலாக 'வழங்கப்படுகிறது' என்னும் சொற்கள் இடம்பெற வேண்டும்.*

*இந்தப் பகுதி உரிமைகளை உத்தரவாதம் செய்யவில்லை, மாறாக அவற்றை வழங்க மட்டுமே செய்கிறது. எனவே, சொல் லமைதி ஒரே மாதிரியாக இருக்கும்பொருட்டு இந்தத் திருத்தத்தை முன்மொழிந்திருக்கிறேன்.*

*(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் மட்டுமே ஏற்றுக்கொள்ளப் பட்டது. திருத்தப்பட்ட 26 ஆம் எண் விதி ஏற்கப்பட்டு அரசியல் சாசனத்தில் இணைக்கப்பட்டது).*

## விதி 27

[1]***திரு. துணைத் தலைவர்:*** *திருத்தங்கள் 817-ம் 818-ம் கூட்டாக பரிசீலிக்கப்பட வேண்டும்; முதலில் திருத்தம் 817 ஐ முன்மொழி யலாம்; டாக்டர் அம்பேத்கரின் பெயரில் உள்ளது.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *ஐயா, நான் பின்கண்டவாறு முன்மொழிகிறேன்:*

> *'விதி 27-ன் துணைவிதி (அ) வுக்குப் பதிலாக பின்கண்டது இடம்பெற வேண்டும்:*
>
> *'(அ) விதி 10-ன் துணைவிதி(2அ), விதி(6) விதி 25-ன் துணைவிதி (3) விதி 26 ஆகியவற்றின்படியான எந்த விஷயங்கள் சம்பந்தமாகவும் நாடாளு மன்ற சட்டத்தால் வழிவகை ஏற்பாடு செய்யப்படவேண்டும், மற்றும்''*

---

*1. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி VII, டிசம்பர் 9, 1948, பக்கம் 956-58.*

விதி எண் 10-ன் இந்தக் கூடுதல் துணை விதி(2அ)வை அறிமுகப்படுத்துவதன் நோக்கம் இது இந்த சபையால் ஏற்கப்பட்ட ஒரு புதிய துணை விதியாக இருப்பதேயாகும். ஆதலால் இந்தத் துணைவிதியை இந்த விதியில் குறிப்பிடுவது அவசியமாகிறது.

**திரு. துணைத் தலைவர்:** இந்தத் திருத்தத்துக்கு ஒரு திருத்தம் உள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திருத்தப்பட்டபடி அதனை ஏற்கனவே முன்மொழிந்து விட்டேன்.

**திரு. துணைத் தலைவர்:** அப்படியா, (818 ஆம் எண் திருத்தம் முன்மொழியப்படவில்லை.)

819 ஆம் எண் திருத்தம் ஒரு வாய்மொழித் திருத்தம் மட்டுமே யாகும். எனவே 820 ஆம் எண் திருத்தத்தை முன்மொழியலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, அந்தத் திருத் தத்தை நான் முன்மொழிகிறேன்:

> ''இத்தகைய விஷயங்களுக்கு ஏற்பாடு செய்வதற்காகவும் இத்தகைய செயல்களுக்குத் தண்டனை விதிப்பதற்காகவும்'' என்னும் சொற்களுக்குப் பதிலாக 'இந்த விதியின் துணைவிதி(ஆ) வில் குறிப்பிடப்பட்டிருக்கும் செயல்களுக்குத் தண்டனை நிர்ணயிப்பதற்காக' எனும் சொற்கள் இடம்பெற வேண்டும்.''

★ ★ ★

**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் எண்கள் 822 ம், 823 ம் ஒரே உட்பொருள் கொண்டவை. திருத்தம் எண் 822ஐ இப்போது முன் மொழியலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** 27 ஆம் எண் விதிக் கான வரம்புரைக்கும் விளக்கத்துக்கும் பதிலாகப் பின்வருவது இடம்பெற வேண்டும்:

> வரம்புரையாக: இந்த விதியின் துணைவிதி (அ) வில் குறிப்பிடப்பட் டிருக்கும் எந்த விஷயங்கள் சம்பந்தமாகவும் அல்லது இந்த விதியின் துணை விதி (ஆ) வில் குறிப்பிடப்பட்டிருக்கும் எந்தச் செயலுக்கும் தண்டனை நிர்ணயிப்பது சம்பந்தமாகவும் இந்தியாவின் ஆட்சிப்பரப்பில் அல்லது

*அதன் ஏதேனும் ஒரு பகுதியில் இந்த அரசியல் சாசனம் செயல்படத் தொடங்கு வதற்கு முன்னர் நடப்பில் இருந்த எந்தச் சட்டமும் அப்போதைய விதிமுறைகளுக்கு உட்பட்டு, நாடாளுமன்றத்தில் மாற்றப்படும் வரை அல்லது ரத்துசெய்யப்படும்வரை அல்லது திருத்தப்படும்வரை தொடர்ந்து நடப்பில் இருந்து வரவேண்டும்.*

*'விளக்கம் - இந்த விதியில் இடம்பெற்றிருக்கும் 'நடப்பிலுள்ள சட்டம்' எனும் சொற்றொடர் இந்த அரசியல் சாசனத்தின் 307 ஆம் விதியில் உள்ளபடி அதே பொருள் கொண்டதாக இருக்கும்.''*

*(பட்டியல் எண் Iல் உள்ள திருத்தம் எண் 50-ம், பட்டியல் எண் IVல் உள்ள திருத்தம் எண் 65-ம், திருத்தம் எண் 823-ம் முன் மொழியப்படவில்லை.)*

***திரு. துணைத் தலைவர்:*** *இப்போது இந்த விதியை விவாதத் திற்கு எடுத்துக் கொள்ளலாம்.*

*(இந்தக் கட்டத்தில் திரு.காமத் பேசுவதற்கு எழுந்தார்.)*

***திரு. துணைத் தலைவர்:*** *நாம் கலைவதற்கு முன்னர் என் பணியைச் செய்து முடிக்க என்னை அனுமதிப்பீர்கள் என்று நம்பு கிறேன். 1 மணி வரை அவையை ஒத்திவைக்கிறேன்.*

***திரு. எச்.வி. காமத்:*** *திரு.துணைத் தலைவர் அவர்களே, நமது பணி முடிய வேண்டும் என்று உங்களைப் போலவே நானும் ஆவலாக இருக்கிறேன். டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்த அவரது திருத்தம் எண் 820 பற்றி அவரிடமிருந்து சிறிது விளக்கம் பெற விரும்புகிறேன். இந்த விதியில் தற்போது காணப்படும் சொற் களுக்குப் பதிலாக அவர் முன்மொழிந்துள்ள சொற்கள் ஏன் இடம் பெற வேண்டும் என்பதை என்னால் தெளிவாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. அவரது திருத்தம் ஏற்றுக்கொள்ளப் படுமானால், துணைவிதி(ஆ) வில் குறிப்பிடப்பட்டுள்ள செயல்களுக்குத் தண் டனையை நிர்ணயிக்கும் அதிகாரம் மட்டுமே நாடாளுமன்றத்துக்கு இருக்கும் என்று ஆகிவிடும். அப்படியானால் துணைவிதி (அ) வழங்கும் அதிகாரத்தின் கீழ்வரும் எந்த விஷயங்கள் சம்பந்தமாக வும் சட்டங்கள் இயற்றுவதற்கு நாடாளுமன்றத்துக்குள்ள அதிகாரம் என்ன ஆவது? இந்த விதியின் துணைவிதி(அ) வழங்கும் அதி காரத்தை தமது திருத்தத்தின் மூலம் எடுத்துவிட அவர் உத்தேசித் திருக்கிறாரா? அவரது திருத்தத்தின் உண்மையான உட்பொருள்*

என்ன, இத்தகைய பாணியில் இந்தத் துணைவிதி(அ) ஏன் திருத்த வேண்டும் என்பதைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** 27ஆம் எண் விதியில் அடங்கியுள்ள திட்டத்தை திரு.காமத் புரிந்து கொள்ளாத தற்காக வருந்துகிறேன். இந்த விதி மூன்று கோட்பாடுகளைத் தன்னுள் கொண்டுள்ளது. இவற்றுள் முதலாவது கோட்பாடு வருமாறு:

எந்த ஓர் அடிப்படை உரிமையையும் செயல்படுத்துவதற்கு எந்தெந்த சந்தர்ப்பத்தில் சட்டம் இயற்ற வேண்டுமென்று இந்த அரசியல் சாசனம் நிர்ணயித்துக் கூறுகிறதோ அதன்படி சட்டம் இயற்றுவதற்கும், அதேபோல் அடிப்படை உரிமைகளில் குறுக் கிடும் ஒரு செயலை தண்டனைக் குரியதாக்குவதற்கு சட்டம் இயற்று வதற்குமான உரிமை நாடாளுமன்றத்துக்கு மட்டுமே உண்டு; அதிகாரத்தைப் பகிர்ந்து கொள்ளும் பட்டியலின்படி இத்தகைய சட்டம் மாநில சட்டமன்றத்தின் அதிகார வரம்புக்குள் இருந் தாலும் இந்த உரிமை பாதிக்கப்பட மாட்டாது. அடிப்படை உரிமை களின் இயல்பும், அவை மீறப்படும் போது அளிக்கப்படும் தண்டனை களின் தன்மைகளையும் இந்தியா முழுவதிலும் ஒரே மாதிரியாக இருக்க வேண்டும் என்பதே இதன் நோக்கம். எனவே, இந்தக் குறிக்கோள் எய்தப்பட வேண்டுமானால் அதாவது அடிப்படை உரிமைகள் ஒரே மாதிரியானவையாக இருக்க வேண்டுமானால், இந்த அதிகாரம் நாடாளுமன்றத்தால் மட்டுமே பிரயோகிக்கப்பட வேண்டும். அப்போதுதான இவ்விரு விஷயங்களில் ஒரேசீரான தன்மை நிலவ முடியும்.

இரண்டாவது விஷயம். அடிப்படை உரிமைகள் மீறப்படு வதற்குத் தண்டனைகள் வழங்கும் சட்டங்கள் ஏற்கனவே இருக்கு மானால், நாடாளுமன்றம் இவற்றை விடச் சிறந்த சட்டங்கள் இயற்றும் வரை, அவை தொடர்ந்து செயற்பட்டுவரும். இதுதான் இந்த விதியில் பொதிந்துள்ள முழுத் திட்டமாகும். 27ஆம் விதியில் செய்யப்பட்டுள்ள வகைமுறை ஏற்பாடுகளைப் புரிந்து கொள்வதில் எந்தச் சிரமும் இருக்கும் என்று நான் நினைக்கவில்லை.

**திரு. எச்.வி. காமத்:** டாக்டர் அம்பேத்கர் என்னைச் சரியாகப் புரிந்து கொள்ளாததற்காக வருந்துகிறேன் (சிரிப்பு).

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** இது முற்றிலும் சகஜமே.

***திரு. துணைத் தலைவர்:*** திரு.காமத் அவர்களே, இது உங்களுக்கும் பொருந்தக்கூடுமல்லவா?

★ ★ ★

***திரு. எச்.வி.காமத்:*** திரு. துணைத் தலைவர் அவர்களே, உங்களை விழித்தே பேசுகிறேன். எப்போதும் இவ்வாறுதான் செய்து வருகிறேன். இங்கு எழும் சிக்கல் இதுதான். தற்போது உள்ளபடி, இந்த விதியின் துணைவிதி (அ) நாடாளுமன்றத்துக்கு மட்டுமே அதிகாரம் வழங்குகிறது. இதை நான் தட்டிக் கேட்கவில்லை. இது விஷயத்தில் நாடாளுமன்றத்துக்கு மட்டுமே அதிகாரம் இருக்கவேண்டும் என்பதை ஒப்புக்கொள்கிறேன். இவற்றில் எந்த விஷயம் சம்பந்தமாகவும் சட்டங்கள் இயற்ற நாடாளுமன்றத்துக்கு அதிகாரம் இருக்கவேண்டும் என்று இங்கு கூறுகிறார்கள். தவிரவும் இந்த அரசியல் சாசனம் நடைமுறைக்கு வர ஆரம்பித்ததும் நாடாளுமன்றம் பல்வேறு சட்டங்களை இயற்றத் தொடங்க வேண்டும் என்றும் சொல்லுகிறீர்கள். இப்போது வேண்டும் என்றும் சொல்லுகிறீர்கள். இப்போது டாக்டர் அம்பேத்கர் அவர்களே, 82ஆம் எண் திருத்தத்தின் மூலம் இதில் பிற்பகுதியை மாற்ற விரும்புகிறீர்கள். 'இத்தகைய விஷயங்களுக்கு வகைசெய்யும்'' என்னும் சொற்களை நீக்கிவிட்டு, தண்டனை சம்பந்தமான வரம்புரையை மட்டும் வைத்துக் கொள்ள விரும்புகிறீர்கள். அப்படியானால் இத்தகைய விஷயங்களுக்கு எவ்வாறு சட்டங்களை இயற்றுவது? இந்தப் பகுதியை நீக்கிவிட நீங்கள் ஏன் விரும்புகிறீர்கள்? தண்டனை சம்பந்தமான பகுதியை மட்டும் ஏன் அப்படியே வைத்துக் கொள்கிறீர்கள்? இதுதான் நான் எழுப்பியுள்ள பிரச்சினை. ஆனால் டாக்டர் அம்பேத்கர் இதனுடன் சம்பந்தப்படாத பிரச்சினைக்குப் பதில் அளித்திருக்கிறார்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** துணைவிதி (அ)வுக்கு நான் ஒரு திருத்தத்தை முன்மொழிந்திருக்கிறேன் என்றால், குறிப்பிட்ட விஷயங்களில் மட்டும் தண்டனை வழங்கும் அதிகாரம் நாடாளுமன்றத்துக்கு அளிக்கப்பட்டிருப்பதே இதற்குக் காரணம். சட்டங்கள் இயற்றுவதற்கு குறித்தவகையில் நாடாளுமன்றத்துக்கு

அதிகாரம் வழங்கும் எந்த விதிகளையும் பற்றிய குறிப்பு எதுவும் துணைவிதி (அ)ல் இடம்பெறாததை என்னுடைய நண்பர் காமத் காணலாம். இந்த விஷயத்தைத் தெளிவுபடுத்துவதற்காகவே, விதி 10-ன் துணைவிதி 2 (அ), விதி 16, விதி 25-ன் துணைவிதி (3), விதி 26 ஆகியவற்றை இங்கு குறிப்பிடுவது உசிதமாக இருக்கு மென்று கருதுகிறேன். ஏனென்றால் இவைதான் நாடாளுமன்றத் தால் பிரத்தியேகமாகக் கையாளப்படும் விதிகளாகும்.

**திரு. துணைத் தலைவர்:** இப்போது திருத்தங்களை வாக் கெடுப்புக்கு விடுகிறேன். திருத்தங்கள் யாவும் டாக்டர் அம்பேத் கரின் பெயரில் இருக்கின்றன.

(டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்த திருத்தங்கள் 817, 820 மற்றும் 822 ஏற்கப்பட்டன. திருத்தப்பட்ட விதி 27 அங்கீகரிக்கப் பட்டு, அரசியல் சாசனத்தில் இணைக்கப்பட்டது).

## விதி 27-அ

[1]**திரு. துணைத்தலைவர்:** பேசுவதற்கு விரும்பும் பல உறுப் பினர்கள் இருக்கிறார்கள் என்பதையும், இந்தப் பொருள் பற்றிப் பேசுவதற்கு அவர்கள் முற்றிலும் தகுதிவாய்ந்தவர்கள் என்பதை யும் நான் நன்கு அறிவேன்; ஆனால் இது குறித்துப் போதுமான அளவு விவாதித்துவிட்டோம் என்று கருதுகிறேன். ஆதலால் டாக்டர் அம்பேத்கரைப் பேசுமாறு அழைக்கிறேன். மதிப்பிற்குரிய உறுப் பினர்களின் விருப்பத்தை நிறைவேற்ற இயலாமைக்காக வருந்து கிறேன். எனினும் நாள்தோறும் ஓரளவு முன்னேற்றம் காணவேண்டி யவர்களாக நாம் இருக்கிறோம் என்பதை உறுப்பினர்கள் உணர்ந்து கொண்டிருப்பார்கள் என்று நம்புகிறேன்.

**திரு. லோக்நாத் மிஸ்ரா** (ஒரிசா, பொது): ஆனால் பல விஷ யங்கள் பரிசீலிக்கப்படாமல் விடப்பட்டுப் போயுள்ளனவே.

**திரு. துணைத் தலைவர்:** டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:

1. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி VII, டிசம்பர் 9, 1948, பக்கம் 967-68.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய், பொது): திரு.துணைத்தலைவர் அவர்களே, இங்கு ஒரு விஷயத்தைக் குறிப்பிட விரும்புகிறேன். நெறிப்படுத்தும் கோட்பாடுகள் சம்பந்தமான விதிகளில் ஒன்றைப் பற்றி நாம் விரிவாக விவாதித்து ஏற்றுக் கொண்டதை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் நினைவில் வைத்திருப்பார்கள் என்று நம்புகிறேன். நிருவாகத் துறையையும் நீதித்துறையையும் பிரிப்பது சம்பந்தமான ஓர் இனத்தை நெறிமுறைக் கோட்பாடுகளில் இணைப்பதற்கு எனது தூண்டுதலின்பேரில் ஒரு முயற்சி மேற்கொள்ளப்பட்டது. ஆரம்பத்தில் இது குறித்து முன்மொழிவுரையில் மூன்று வருடங்கள் எனக் காலக்கெடு நிர்ணயிக்கப்பட்டிருந்தது. பின்னர், நடைபெற்ற விவாதத்தின் விளைவாகவும், இந்தக் கோட்பாட்டைச் செயல்படுத்துவதில் உள்ள சிரமங்கள், சிக்கல்கள் அனைத்தும் சுட்டிக்காட்டப்பட்டதன் விளைவாகவும் இந்தக் காலக்கெடுவை நீக்கிவிடவும், நீதித்துறையிலிருந்து நிருவாகத் துறையைப் பிரிப்பதற்கு நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளும்படி மாகாண அரசாங்கங்களை நிர்ப்பந்திக்கவும் முடிவு செய்யப்பட்டது. அச்சமயம் எல்லா விஷயங்களும் தீர்க்கமாக, தெளிவாக அலசி ஆராயப்பட்டன. அப்போது நான் பேசியதைத் திரும்பவும் இங்கு கூறவேண்டிய அவசியம் இல்லை என்று நினைக்கிறேன். நீதித்துறையிலிருந்து நிருவாகத்துறை பிரிக்கப்பட வேண்டும் என்பது குறித்து எத்தகைய சர்ச்சையும் எழவில்லை.

அடுத்து, நிருவாகத் துறையை சட்டமன்றத் துறையிலிருந்து பிரிப்பதைப் பொறுத்தவரையில், இத்தகைய பிரிவினை அமெரிக்க அரசியல் சாசனத்தில் இடம் பெற்றிருக்கிறது என்பது உண்மையே; ஆனால் அமெரிக்க அரசியல் சாசனத்தின் இந்தக் குறிப்பிட்ட வகையுரை பற்றிய, அதாவது ஷரத்து பற்றிய சில அண்மைய விமர்சனங்களை என்னுடைய நண்பர் பேராசிரியர் ஷா படித்திருப்பாரேயானால், அமெரிக்க அரசியல் சானத்தின் ஓர் அங்கமாக உள்ள இந்த நெளிவு சுழிவற்ற கடுமையான பிரிவினை குறித்து பல அமெரிக்கர்களே பெரிதும் அதிருப்தியடைந்திருப்பதைக் கவனித்திருப்பார். அமெரிக்க அரசியல் சாசனத்தை ஆராய்ந்த அரசியல் சாசன வல்லுநர்களில் பலர் முன்வைத்துள்ள பரிந்துரைகளில் ஒன்று நிருவாகத் துறைக்கும் சட்டமன்றத்துக்குமுள்ள பிரிவினையை முற்றிலுமாக ஒழித்துக்கட்டி, அமெரிக்காவிலுள்ள நிலையை பிரிட்டனிலுள்ள நிலைக்கு இணையானதாகக் கொண்டு வருவதாகும். பிரிட்டனில் நிருவாகத் துறைக்கும் சட்டமன்றத்துக்கும் இடையே

எத்தகைய வேறுபாடோ, பிரிவினையோ இல்லை. நிருவாகத்துறை உறுப்பினர்கள் பிரதிநிதிகள் சபையிலோ அல்லது செனட்டிலோ அமர்வதற்கு வகைசெய்யும் ஒரு ஷரத்து அமெரிக்க அரசியல் சாசனத்தில் இடம்பெற வேண்டும் என்று பரிந்துரைக்கப்படுகிறது; வாக்கெடுப்பு போன்ற சட்டமன்றத்தின் எல்லா நடவடிக்கைகளிலும் இவர்களால் ஈடுபட முடியாது போனாலும், அவையில் எழும் கேள்விகளுக்குப் பதிலளிக்கவும், சட்டம் சம்பந்தப்பட்ட நடவடிக்கைகளில் பங்கெடுத்துக் கொள்ளவும், அவை முன்வரும் எந்த ஒரு குறிப்பிட்ட விஷயம் பற்றியும் விவாதிக்கவும் முடியும். இந்தக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, நிருவாகத் துறைக்கும் சட்டமன்றத் துறைக்கும் இடையே முழுப் பிரிவினை நிலவுவதால் கிட்டக் கூடிய அனுகூலம் பற்றி அமெரிக்கர்களே பெரிதும் ஐயப்படத் தொடங்கியிருப்பது தெரியவரும். நாடாளுமன்றப் பணி மிகவும் சிக்கலானது; பெரிதும் பரந்து விரிந்தது; இத்தகைய நிலைமையில், நாடாளுமன்றத்தில் அமர்ந்திருக்கும் நிருவாகத்துறை உறுப்பினர்களின் நேரடி வழிகாட்டுதலும் முன்முயற்சியுமின்றி நாடாளுமன்ற உறுப்பினர்களால் தங்களது சட்டமன்றப்பணிகளை ஆற்றுவது என்பது மிகவும் கடினம்; இது குறித்து எனக்கும், பல அரசியல் விஞ்ஞான ஆய்வாளர்களுக்கும் துளிகூட ஐயமில்லை. சட்டம் இயற்றும் நடவடிக்கைகள் பற்றிய விவாதங்களில் நிருவாகத்துறை உறுப்பினர்கள் நாடாளுமன்ற உறுப்பினர்களுடன் சேர்ந்து பங்கு கொள்வதில் ஒரு முக்கிய அனுகூலமுண்டு; அதாவது சிக்கலான விஷயங்களில் நிருவாகத்துறை உறுப்பினர்களிடமிருந்து அவசியமான வழிகாட்டுதலை அவர்கள் பெறமுடியும். எனவே, நிருவாகத் துறையை சட்டமன்றத் துறையிடமிருந்து பிரிக்கும் அமெரிக்க முறையை நாம் பின்பற்றவில்லையென்றால் அதனால் நமக்கு மிகப்பெரும் இழப்பு ஏற்படும் என்று நான் நினைக்கவில்லை.

நிருவாகத் துறையை நீதித்துறையிலிருந்து பிரிக்கும் பிரச்சினையைப் பொறுத்தவரையில், ஏற்கனவே நான் கூறியது போல் இதில் நம்மிடையே எந்தக் கருத்து வேறுபாடும் இல்லை; இந்தக் கோட்பாடு நாம் குடியரசுத் தலைவர் ஆட்சிமுறையை ஏற்கப் போகிறோமா என்பதை எவ்வகையிலும் சார்ந்திருக்கவில்லை என்பது எனது தெள்ளத்தெளிவான கருத்து; ஏனென்றால் நாடாளுமன்ற ஆட்சி முறையில் கூட நீதித்துறையை நிருவாகத் துறையிலிருந்து பிரிப்பது என்பது ஓர் ஏற்றுக்கொள்ளப்பட்ட கோட்பாடாகும்; சற்று முன்னர் நாம் அங்கீகரித்து இப்போது, நெறிப்படுத்தும் கோட்பாடு

களின் ஒரு பகுதியாகிவிட்ட விதியின் மூலம் நம்மையே இந்தக் கோட்பாட்டுக்கு அர்ப்பணித்துக் கொண்டுவிட்டோம். ஆதலால் இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்வது சாத்தியமல்ல என்று கருது கிறேன்.

*(பேராசிரியர் ஷாவின் திருத்தம் நிராகரிக்கப்பட்டது.)*

★ ★ ★

## *விதி 41*

[1]***திரு. துணைத் தலைவர்:*** *டாக்டர் அம்பேத்கரின் செயல் பாட்டுக்கான காரணங்களை நீங்கள் விவரிக்கத் தேவையில்லை.*

***திரு.எச்.வி.காமத்:*** *டாக்டர் அம்பேத்கரை உந்தித் தூண்டிய காரணங்களையும், இது சம்பந்தமான எனது சொந்தக் கருத்தையுமே கூற விரும்பினேன். சென்ற ஆண்டு, 'ராஷ்டிரபதி' என்ற சொல்லைக் கொண்ட ஒரு விதியை இந்த சபை ஏகமனதாக ஏற்றது. அப்படி யிருக்கும்போது அரசியல் சாசன வரைவிலிருந்து 'ராஷ்டிரபதி' என்ற சொல்லை டாக்டர் அம்பேத்கரும் வரைவுக் குழுவிலுள்ள அவருடைய சகாக்களும் ஏன் நீக்கினார்கள் என்று தெரியவில்லை.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *திரு. துணைத் தலைவர் அவர்களே, பேராசிரியர் கே.டி.ஷா தமது திருத்தத்தை முன்மொழியும்போது எழுப்பிய பிரச்சினைகளை எடுத்துக் கொள் வதற்கு முன்னர், திரு.காமத்தின் ஒரு சிறு விமர்சனத்திற்குப் பதில் அளிக்க விரும்புகிறேன். ஒன்றிய அரசியல் சாசனக் குழுவின் அறிக்கையில் வாசகத்தை எத்தகைய அவசியமும் இல்லாமல் வரைவுக்குழு மாற்றிவிட்டது என்று திரு.காமத் குற்றப்பத்திரிக்கை வாசித்துள்ளார். குழுவின் அறிக்கை பத்தி 1ல் குடியரசுத்தலைவர் என்ற சொல்லை அடுத்து அடைப்புக்குறிகளில் இருந்த ''ராஷ்டிர பதி'' என்ற சொல்லை அகற்றி விட்டமைக்காக வரைவுக் குழுவைப் பெரிதும் குறைகூறினார். ஐயா, வரைவுக்குழுவின் இந்தச் செயல் பாடு ''ராஷ்டிரபதி'' என்னும் சொல்லுக்கோ அல்லது அரசியல் சாசனத்தில் உள்ளவேறு எந்த இந்திப் பதத்துக்கோ எவ்வகையிலும் எதிரானதல்ல. இந்தச் சொல்லை நாங்கள் ஏன் அகற்றினோம்*

*1. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி VII, டிசம்பர் 10, 1948, பக்கம் 973-74.*

என்பதற்கு காரணம் இதுதான்: வரைவுக்குழு உருவாக்கப்பட்ட அதே சமயத்தில் அரசியல் நிர்ணயசபையின் தலைவர் மற்றொரு குழுவையும் அமைத்திருக்கிறார் என்று எங்களிடம் கூறப்பட்டது. இன்னும் சொல்லப்போனால் அரசியல் சாசனத்தை இந்தியிலும் அதேபோல் இந்துஸ்தானியிலும் தயாரிப்பதற்காக இவ்விரு குழுக்களும் அமைக்கப்பட்டன. இவ்வாறு, ஓர் அரசியல் சாசன வரைவு இந்தியிலும் இன்னொரு அரசியல் சாசன வரைவு இந்துஸ்தானியிலும் இருக்கப் போவதாலும், ''ராஷ்டிரபதி'' என்பது ஆங்கிலச் சொல் அல்லவென்பதாலும், நாங்கள் ஆங்கிலத்தில் அரசியல் சாசனத்தைத் தயாரித்துக் கொண்டிருந்ததாலும் ''ராஷ்டிரபதி'' என்ற சொல்லை அந்தக் குழுக்களின் உறுப்பினர்கள் கையாள்வதற்கு விட்டுவிடுவதே உகந்தது, உசிதமானது என்று நாங்கள் நினைத்தோம். அப்படியிருக்கும்போது, காங்கிரஸின் பேச்சுப் பாங்கில் ''ராஷ்டிரபதி'' என்னும் இந்தச் சொல் பல ஆண்டுகளாகப் பயன்படுத்தப்பட்டு வருவது உங்களுக்குத் தெரியாதா என்று என்னுடைய நண்பர் இப்போது என்னைக் கேட்கிறார். இதுமுற்றிலும் உண்மை என்பது எனக்குத் தெரியும்; பல இடங்களில் ''ராஷ்டிரபதி'' என்னும் இந்தச் சொல் பயன்படுத்தப்பட்டிருப்பதை நான் வாசித்திருக்கிறேன் என்பதிலும் ஐயமில்லை. ஆனால் இது சட்ட முறைப்பட்ட ஒரு சொல்லாகி விட்டதா என்பது எனக்குத் தெரியாது; இதுபற்றி திட்டவட்டமாக எதுவும் கூற முடியாது. ஆதலால் நண்பர் திரு. காமத்துக்குப் பதிலளிப்பதற்கு முன்னர், ஒன்று இந்தியிலும் மற்றொன்று இந்துஸ்தானியிலும் தயாரிக்கப்பட்டுள்ள இரண்டு அரசியல் சாசன வரைவுகளை ஒப்பிட்டுப் பார்ப்பது நலம் என்று நினைக்கிறேன். இப்போது, இந்த இரண்டு குழுக்களும் பயன்படுத்தியுள்ள மொழிநடையை ஒப்பிட்டுப் பார்ப்போம். இந்துஸ்தானியிலுள்ள வரைவிலிருந்து வாசிக்கிறேன்; அது பின்வருமாறு கூறுகிறது:

''ஹிந்த்கா ஏக் பிரசிடெண்ட் ஹோகா...''

''ராஷ்டிரபதி'' என்னும் சொல் இங்கு பயன்படுத்தப்படவில்லை.

அடுத்து, இந்தக்குழு தயாரித்துள்ள வரைவைப் பார்த்தால், 41 ஆவது விதியில் பயன்படுத்தப்பட்டிருக்கும் சொல் (பிரதான்) என்பது. இங்கு ''ராஷ்டிரபதி' யைக் காணோம்.

திரு. எச்.வி. காமத்: ஆனால் நான் எழுப்பிய பிரச்சினை என்னவென்றால் இந்த சபை அங்கீகரித்த விதியில் ''ராஷ்டிரபதி'' என்னும் சொல் இடம் பெற்றிருந்தது என்பதுதான், இந்தி அல்லது இந்துஸ்தானிக் குழுக்களின் அறிக்கைகள் சபையின்முன் இல்லை. நான் விரும்புவதெல்லாம் இங்கு பரிசீலிக்கப்பட்டுவரும் அரசியல் சாசனவரையில் இந்தச் சொல் இடம்பெற வேண்டும் என்பதுதான்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உருது வரைவில் பயன்படுத்தப்பட்டுள்ள சொல் 'சர்தார்'' என்பதாகும் என்று சற்று முன்னர்தான் எனக்குத் தகவல் வந்தது (சிரிப்பு).

அடுத்து, ஐயா, பேராசிரியர் கே.டி.ஷாவின் திருத்தம் உருப் படியான முறையில் எழுப்பியுள்ள பிரச்சினைக்கு வருகிறேன். பேரா சிரியர் கே.டி.ஷாவின் திருத்தம், அவரை நான் சரியாகப் புரிந்து கொண்டிருக்கிறேன் என்றால், இந்த அரசியல் சாசன வரைவின் அடிப்படைக் கோட்பாட்டிலிருந்து, உள்ளுறை சாரத்திலிருந்து முற்றிலும் வேறுபட்டதாகும். ''தலைமை நிருவாகி மற்றும் அரசுத் தலைவர்'' என்ற பதப்பிரயோகத்தை பேராசிரியர் கே.டி.ஷா பயன் படுத்துகிறார். இந்தச் சொற்களைப் பயன்படுத்தியிருப்பதன் மூலம் அமெரிக்கக் குடியரசுத் தலைவர் நிருவாக முறையை அவர் ஆதரிக் கிறார் என்பதிலும், இந்த அரசியல் சாசன வரையில் குறிப்பிடப் பட்டுள்ள நாடாளுமன்ற நிருவாக முறையை அவர் எதிர்க்கிறார் என்பதிலும் எள்ளளவும் ஐயமில்லை. என்னுடைய நண்பர் பேரா சிரியர் ஒன்றிய அரசியல் சாசனக்குழுவின் அறிக்கையைப் படித்துப் பார்ப்பாரேயானால் அந்தக் குழுவின் அறிக்கையில் தெரிவிக்கப் பட்டுள்ள யோசனைகளை வரைவுக்குழு பின்பற்றியிருப்பதைக் காண்பார். குடியரசுத் தலைவர் நிருவாகத் துறையின் தலைவராக இருக்கும் அதேசமயம், அவர் அமைச்சரவையின் வழிகாட்டுதலின் படி நடந்து கொள்வார்; அரசியல் சாசனம் வழங்கியுள்ளதாகக் கருதப் படும் அதிகாரத்தைப் பயன்படுத்தும் விஷயத்தில் அனைத்து நட வடிக்கைகளிலும் அமைச்சரவையின் ஆலோசனை அவரைக் கட்டுப் படுத்தும். அவ்வாறின்றி எவருடைய ஆலோசனைக்கும் கட்டுப் படாத தனி முதல் உயர் அதிகாரம் படைத்த ஆட்சித் தலைவராக அவர் இருக்க முடியாது; இதுதான் நாடாளுமன்ற ஆட்சிமுறை என்பது. அமெரிக்காவில் பல்வேறு நிர்வாகத் துறைக்குப் பொறுப் பான அமைச்சர் அந்தஸ்திலுள்ள செயலாளர்கள் இருக்கிறார்கள் என்பதிலும், அவர்கள் நிருவாகத்தை நடத்துகிறார்கள் என்பதிலும்

ஐயமில்லை; தங்கள் நிர்வாகத்தின் கீழ் எழும் விஷயங்கள் சம்பந்த மாக ஜனாதிபதிக்கு ஆலோசனை வழங்கவும் செய்கிறார்கள். எனினும் கோட்பாட்டளவில், செயலாளர்களின் ஆலோசனையை ஏற்பதற்குக் கட்டுப்பட்டிருக்கவில்லை. இதனால்தான் அமெரிக்க ஜனாதிபதி ஆட்சித் துறையின் பிரதான தலைவர் என்று வருணிக்கப் படுகிறார். அமெரிக்க ஆட்சி முறையை நாம் ஏற்றுக்கொள்ள வில்லை. நாடாளுமன்ற ஆட்சி முறையைத்தான் ஏற்றுக் கொண் டிருக்கிறோம். எனவே, அமைச்சரவையின் ஆலோசனையின் பேரில் செயல்பட வேண்டும் என்ற கடமைப் பொறுப்பை குடியரசுத் தலைவர் மீது சுமத்தியுள்ள அரசியல் சாசன வரைவின் 61ஆவது விதி குறித்து முதலில் ஒரு முடிவு எடுக்காமல் பேராசிரியர் கே.டி.ஷா எழுப்பியுள்ள பிரச்சினைக்குத் தீர்வு காண இயலாது என்பது இந்தக் கட்டத்தில் எனது பணிவான கருத்தாகும். குடியரசுத் தலைவர் தமது அமைச்சரவையின் ஆலோசனைக்குக் கட்டுப்பட வேண்டுமா, வேண்டாமா ? இதுதான் இங்குள்ள முழுப் பிரச்சினையே. அமைச் சரவையின் ஆலோசனைக்குக் குடியரசுத் தலைவர் கட்டுப்பட வேண்டியதில்லை என்று நாம் முடிவு செய்தால், அப்போது பேரா சிரியர் கே.டி.ஷாவின் திருத்தத்தை ஏற்றுக்கொள்வது சாத்திய மாகலாம். ஆனால் இந்தக் கட்டத்தில் இவ்விஷயம் முடிவெடுக்க முடியாத நிலையில், முதிரா நிலையில் இருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். விதி 61ஐ நீக்கிவிட நாம் ஒப்புக் கொண்டால் பேராசிரியர் கே.டி.ஷா செய்துள்ள பரிந்துரைக்கு ஏற்ப பயன் விளைவுள்ள மாற்றங்களைச் செய்யவும் நாம் தயாராக இருப்போம் என்பதை ஒப்புக்கொள்கிறேன். எனினும் இந்தக் கட் டத்தில் இது அவசரப்பட்ட நடவடிக்கை, இதனைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளக்கூடாது என்பது என் திட்டவட்டமான கருத்து.

**திரு. துணைத் தலைவர்:** இப்போது திருத்தத்தை வாக் கெடுப்பிற்கு விடப் போகிறேன். திருத்தம் எண் 1036-ன் முதல் பகுதி பேராசிரியர் கே.டி. ஷாவின் பெயரில் உள்ளது.

தீர்மானம் நிராகரிக்கப்பட்டது.

விதி 41 ஏற்கப்பட்டு அரசியல் சாசனத்தில் இணைத்துக் கொள்ளப்பட்டது.

## விதி 42

[1]**திரு.அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர்** (சென்னை: பொது): திரு.துணைத்தலைவர் அவர்களே, பேராசிரியர் ஷாவின் திருத்தத்தை சபை ஏற்றுக்கொள்ளுமானால், இதற்கு முன்னர் பல சந்தர்ப்பங் களில் இந்த சபையின் பல்வேறு குழுக்களும் அரசியல் நிர்ணய சபையும் ஆழ்ந்து ஆராய்ந்து பரிசீலித்து எடுத்த முடிவிலிருந்து பின்வாங்குவதையே அது குறிக்கும்....

★ ★ ★

.....குழந்தைப் பருவத்திலுள்ள ஜனநாயகம், இன்றைய நிலைமைகளில், சட்டமன்றத் துறைக்கும், நிர்வாகத் துறைக்கும் இடையேயான நிரந்தரப் பிரிவையும், ஓயாத சண்டையையும், சச்சரவையும் தாக்குப்பிடித்து நிற்க முடியாது. சட்டமன்றத் துறைக் கும் நிர்வாகத்துறைக்கும் இடையே சச்சரவையும் தாக்குப் பிடித்து நிற்க முடியாது. சட்டமன்றத் துறைக்கும் நிர்வாகத் துறைக்கும் இடையே சச்சரவு ஏற்படுவதைத் தடுப்பதும், அரசு அமைப்பின் பல்வேறு அங்கங்களிடையே ஒத்திசைவையும் நல்லிணக்கத்தையும் வளர்ப்பதுமே இப்போதைய அரசமைப்பு முறையின் நோக்கமாகும். இதுவே ஓர் அரசியல் சாசனத்தின் பிரதான குறிக்கோள். எனவே ஜனாதிபதி ஆட்சி முறைக்குப் பதிலாக அமைச்சரவை ஆட்சி முறையை இந்த அவையும் பல்வேறு குழுக்களும் தேர்ந்தெடுத்த தற்கு இவையே காரணங்கள், அமைச்சரவை ஆட்சிமுறை குறித்து புகழோ புகழ் என்று தலைமீது தூக்கி வைத்துக்கொண்டு கொண் டாட வேண்டிய அவசியம் ஏதுமில்லை; பேகாட்டின் கருத்துப்படி இது சட்டமன்றத் துறைக்கும் நிருவாகத் துறைக்கும் இடையே உள்ள ஒரு 'ஹைபென்' அதாவது இணைப்புக்குறி. ஜனநாயக அமைப்புச் செயல்படத் தொடங்கும் ஆரம்பக் கட்டங்களில் இன்றைய நிலைமையில் நமதுநாட்டில் சட்டமன்றத் துறைக்கும் நிருவாகத் துறைக்குமிடையே நெருக்கமான இணைப்பு, ஒற்றுமை நிலவுவது இன்றியமையாதது. வரலாற்றுக் காரணங்களால் அமெரிக்காவில் ஜனாதிபதி ஆட்சிமுறை சிறந்த முறையில் செயல்பட்டு வருகிறது

1. அ.நி.விவாதங்கள், தொகுதி VII, டிசம்பர் 10, 1948, பக்கம் 994.

என்றாலும் நமது நாட்டில் நிலவும் காரணங்களால் ஒன்றிய அரசியல் சாசனக்குழுவும் இந்த சபையும் அமைச்சரவை ஆட்சி முறையையே தேர்ந்தெடுத்துள்ளன. அமெரிக்காவில் ஜனாதிபதிக்கு மிகப்பெரும் நன்மதிப்பும் மரியாதையும் இருக்கிறது என்பதில் ஐயமில்லை; ஆனால் இதற்கு ஜனாதிபதி ஆட்சிமுறை மட்டுமே காரணமல்ல; அமெரிக்கா வற்றாத வரையாத செல்வத்தை மலை மலையாகக் குவித்திருப்பதும் இதற்குக் காரணமாகும். இத்தகைய காரணங்களால் இப்போதுள்ள நிலைமையில் இந்த அரசியல் சாசனத்தை நான் ஆதரிக்கிறேன்; பேராசிரியர் ஷாவின் திருத்தத்தை எதிர்க்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** முன்மொழியப் பட்ட எந்தத் திருத்தத்தையும் நான் ஏற்றுக்கொள்ள முடியாமைக்கு வருந்துகிறேன். துணைவிதி பற்றிய பொதுவான விவாதத்தைப் பொறுத்தமட்டிலும், என்னுடைய நண்பர்கள் திரு. முன்ஷியும், திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யரும் கூறியதற்குமேல் பயனுள்ள வேறு எதையும் நான் கூறமுடியும் என்று நினைக்கவில்லை.

**திரு. துணைத்தலைவர்:** திருத்தங்களை ஒன்றுக்குப் பின் மற்றொன்றாக வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

ஐந்து திருத்தங்கள் அனைத்தும் நிராகரிக்கப்பட்டன (42 ஆவது விதி அரசியல் சாசனத்தில் சேர்க்கப்பட்டது.)

## 43 வது விதி

[1]**திரு. துணைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர், மற்றும் பிறருடைய பெயரில் இருக்கிற 1063 வது எண் திருத்தத்தை நான் வாக்கெடுப்புக்கு விடப்போவதில்லை. ஏனெனில், சற்றுமுன் முன் மொழியப்பட்ட 1064 வது எண் திருத்தத்துடன் அது ஒன்றுபோல் இருக்கிறது.

டாக்டர் அம்பேத்கர் அவர்களே, இதை நீங்கள் ஏற்றுக் கொள்கிறீர்களா?

1. அ.நி.விவாதங்கள், தொகுதி VII, டிசம்பர் 10, 1948, பக்கம் 994.

**மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர்** (பம்பாய்- பொது): ஆம், ஐயா.

**திரு. துணைத் தலைவர்:** இனி, நான் அதை வாக்கெடுப்புக்கு விடப் போவதில்லை. திரு.கோகுல்பாய் தௌலத்ராம் பட்டின் பேரிலுள்ள எண் 1064 திருத்தத்திற்கான ஒரு திருத்தம் பிரேரணை செய்யப்படவில்லை, ஏனெனில் அந்த மதிப்புமிகு உறுப்பினர் சபையில் இல்லை.

1065, 1066 எண்களை உடைய திருத்தங்கள் வெறும் சொல் வேறுபாடு மட்டுமே கொண்டவையாக இருப்பதால் அவற்றை முன்மொழிய நான் அனுமதி மறுக்கிறேன்.

**திரு. எஸ். நாகப்பா** (சென்னை-பொது): ஐயா, எண் 1069 திருத்தத்தை நான் முன்மொழியவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு.துணைத் தலைவர் அவர்களே, நான் பின்வருவதை முன்மொழிகிறேன்:

> ''43 ஆவது விதிக்குப் பின்வரும் விளக்கம் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்:-
>
> ''விளக்கம் - இந்த விதியிலும், இதைத்தொடர்ந்த விதியிலும் 'ஒரு மாநிலத்தின் சட்டப்பேரவை'' என்ற சொற்றொடரின் பொருள், சட்ட மன்றம் இரு அவைகளைக் கொண்டிருக்கும் மாநிலத்தில் சட்டமன்றத்தின் கீழ்சபையாகும்.''

இந்தத் திருத்தம் செய்யப்பட வேண்டியது விரும்பத்தக்கதாகும். ஏனெனில், ஒரு மாநிலத்தில் இரு சட்டப் பேரவைகள் இருக்கக்கூடும். எனவே, இந்தத் திருத்தம் செய்யப்படாவிட்டால், மேல்சபையின் உறுப்பினரும் குடியரசுத் தலைவர் தேர்தலில் பங்கெடுத்துக் கொள்வதற்கு உரிமைஏற்படும். அது நமது நோக்கமல்ல. மக்களின் வாக்குகளினால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் மட்டுமே குடியரசுத் தலைவர் தேர்தலில் பங்கெடுத்துக் கொள்வதற்கு உரிமை பெற்றவர்களாக இருக்க வேண்டுமென்று நாங்கள் விரும்புகிறோம். அதனால்தான் இந்தத் திருத்தம்.

**திரு. துணைத் தலைவர்:** திரு. முகம்மது தாஹிர் இப்பொழுது, இந்தத் திருத்தத்திற்கான தனது எண் 23 திருத்தத்தை முன்மொழியலாம்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஐயா, திரு. துணைத்தலைவர் அவர்களே, முன்மொழியப்பட்ட திருத்தங்களில் 1064 எண் திருத்தத்தை மட்டுமே நான் ஏற்றுக்கொள்ள முடியும். பிற திருத்தங்களை ஏற்றுக்கொள்ள முடியாததற்கு மிகவும் வருந்துகிறேன்.

ஐயா, இப்பொழுது, இந்த விதியின்மீதான பொது விவாதத்தைப் பார்க்கும்போது, மிகவும் முக்கியமான திருத்தம், பேராசிரியர் கே.டி.ஷாவினுடைய திருத்தமாகும்; வயது வந்தவர்களின் வாக்குகளைக் கொண்டு குடியரசுத் தலைவர் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்று அது முன்மொழிகிறது. என்னுடைய மதிப்பீட்டின்படி, இந்த விஷயம், மூன்று கருத்து நிலைகளிலிருந்து பரிசீலனை செய்யப்பட வேண்டிய அவசியமுள்ளது. முதலாவதாக, வாக்காளர் தொகுதியின் அளவு என்ற கண்ணோட்டத்திலிருந்து இதைப் பரிசீலனை செய்ய வேண்டும். பேராசிரியர் ஷாவின் யோசனையை நாம் ஏற்றுக் கொண்டால், குடியரசுத் தலைவர் தேர்தலில் ஈடுபட வேண்டியிருக்கும் மொத்த வாக்காளர்களைப் பற்றிய சில புள்ளி விபரங்களை இந்த சபையின் முன் சமர்ப்பிக்க விரும்புகிறேன்.

கிடைத்துள்ள புள்ளிவிபரங்களின்படி, ஆளுநர்களின் மாகாணங்கள் மற்றும் கமிஷனர்களின் மாகாணங்கள் ஆகியவற்றின் மொத்த மக்கட் தொகை சுமார் 22,81,63,637. சமஸ்தானங்களின் மொத்தமக்கட்தொகை 8,88,08,434. இவற்றின் மொத்தக்கூட்டுத் தொகை இந்தியாவின் பிரதேசத்திற்கு சுமார் 31 கோடியே 10 லட்சமாகிறது. வயது வந்தோர் வாக்குரிமை அடிப்படையில், குடியரசுத் தலைவர் தேர்தலில் பங்கெடுத்துக்கொள்ள உரிமை பெற்ற மக்கள், மொத்தமக்கட்தொகையில் சுமார் 50 சதமாக இருக்கும்

---

1. அ.நி.விவாதங்கள், தொகுதி VII, டிசம்பர் 10, 1948, பக்கம் 994.

என்று கருதிப் பார்த்தால், வாக்காளர்கள் 15 கோடியே 85 லட்சமாக இருப்பார்கள். அமெரிக்கக் குடியரசுத் தலைவர் தேர்தலில் ஈடுபடும் வாக்காளர்கள் பற்றிய புள்ளிவிபரங்களைக் கொடுக்கிறேன். அமெரிக்காவில் மொத்த வாக்காளர்கள் - எனக்குத் தெரிந்தவரை, தவறு இருந்தால் திருத்திக் கொள்கிறேன் - சுமார் 7.5 கோடியாகும். நான் ஏற்கனவே கொடுத்த புள்ளிவிபரத்தை அதாவது 15 கோடியே 85 லட்சம் - மதிப்புமிகு உறுப்பினர்கள் நினைவுபடுத்திக் கொண்டால் - 15 கோடியே 85 லட்சம் மக்கள் பங்கெடுத்துக் கொள்ள வேண்டியிருக்கும் ஒரு தேர்தலின் அசாத்தியமான தன்மையை அவர்கள் உணர்வார்கள் என்று நினைக்கிறேன். எனவே, வாக்காளர்களின் அளவு, என்னுடைய மதிப்பீட்டின்படி, குடியரசுத் தலைவர் தேர்தல் விஷயத்தில் வயது வந்தோர் வாக்குரிமை அடிப்படையை நாம் ஏற்றுக்கொள்ள முடியாமல் செய்கிறது.

வயது வந்தோர் வாக்குரிமைப் பிரச்சினை சம்பந்தமாக மனதில் கொள்ள வேண்டிய இரண்டாவது பிரச்சினை நிர்வாக இயந்திரமாகும். 15 கோடியே 85 லட்சம் வாக்காளர்கள் வாக்குச் சாவடிகளுக்கு வாக்களிக்க வரும்போது வெவ்வேறு வாக்குச்சாவடிகளில் இருக்கச் செய்வதற்குத் தேவையான ஊழியர்களை ஏற்பாடு செய்வதற்கு இந்த நாட்டினால் சாத்தியமாகுமா? பல வேட்பாளர்கள் தேர்தலுக்கு நிற்க மாட்டார்கள் என்றும், அதிகாரபூர்வமற்ற அமைப்புகளை நியமிப்பதற்கு அவர்கள் விரும்ப மாட்டார்கள் என்றும் நிச்சயமாகக் கருதுகிறேன். இதற்கான எளிய காரணம், அதிகாரபூர்வமற்ற அமைப்பு அரசின் கட்டுப்பாட்டின் கீழ் இருக்காது, அது ஊழலுக்கும், லஞ்சத்திற்கும், தில்லுமுல்லுகளுக்கும், மற்றும் பிற விரும்பத்தகாத செல்வாக்குகளுக்கும் ஆட்படக்கூடும். எனவே, தேர்தலுக்கான இயந்திரம் (ஏற்பாடுகள்) முற்றிலும் அரசு நிர்வாக இயந்திரத்தினாலேயே வழங்கப்பட வேண்டியிருக்கும். 15.85 கோடி வாக்காளர்கள் பங்கெடுத்துக் கொள்ளவிருக்கும் தேர்தலை நடத்துவதற்கு போதிய அதிகாரிகளை இந்தப் பணியில் ஈடுபடுத்த இந்திய அரசுக்கோ அல்லது மாநில அரசுகளுக்கோ சாத்தியமா? இது முற்றிலும் அசாத்தியமானதாகத் தோன்றுகிறது. ஆனால் இந்த இரண்டு விஷயங்களைத் தவிர, வயதுவந்தோர் வாக்குரிமை அடிப்படையை நிராகரிப்பதற்கு முடிவு செய்ததில், வரைவுக்குழு மற்றும் ஒன்றியக் குழுவுக்கு ஆதார அடிப்படையாக உள்ள ஒரு

முக்கியமான விஷயம் அரசியல் சாசனத்தில் குடியரசுத் தலைவரின் நிலைமையாகும். அமெரிக்கக் குடியரசுத் தலைவர் அமெரிக்கா வின் அனைத்து நிர்வாக அதிகாரத்தையும் தன்னிடம் கொண்ட வராக இருக்கிறார். அவருடைய அதேநிலைமையில் நம்முடைய குடியரசுத் தலைவரின் நிலைமை இருக்குமேயானால், நேரடித் தேர்தலுக்கு ஆதரவான வாதத்தை நான் புரிந்து கொண்டிருக்க முடியும். ஏனெனில், எங்கெல்லாம் அமெரிக்காவின் குடியரசுத் தலைவரைப் போன்று, அதே மிகப் பெருமளவான அதிகாரங்கள் ஒரு நபரிடம் வழங்கப்படுகிறதோ, அங்கு அத்தகைய நபர் மக்க ளால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்பது கோட் பாடாகும். ஆனால் இந்திய ஒன்றியத்தின் குடியரசுத் தலைவரின் நிலைமை என்ன? அரசியல் சாசனத்தின் இதர விதிகளைப் பேரா சிரியர் கே.டி.ஷா பரிசீலனை செய்வாரேயானால், அவர் பெயரள விலானவர் (figurehead) மட்டுமே என்பதை உணர்வார். அமெரிக்கா வின் குடியரசுத் தலைவரைப் போன்று அதே நிலையில் அவர் இல்லை. நமது இந்திய அரசியல் சாசனத்தின் கீழான எந்த அலு வலரையும் அமெரிக்கக் குடியரசுத் தலைவருடன் ஒப்பிட வேண்டு மானால், அவர், பிரதம மந்திரியே தவிர, இந்திய ஒன்றியத்தின் குடியரசுத் தலைவரல்ல. பிரதம மந்திரியைப் பொறுத்தமட்டிலும், அவர், வயதுவந்தோர் வாக்குரிமை அடிப்படையில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்று அரசியல் சாசனத்தில் ஐயத் திற்கிடமற வகை செய்யப்பட்டுள்ளது. குடியரசுத் தலைவருக்கு உண்மையில் செயல்படுத்தும் அதிகாரங்கள் ஏதுமில்லை என்று நான் குறிப்பிட்ட உண்மையை கவனத்தில்கொண்டு பார்க்கும்போது, குடியரசுத்தலைவர் வயதுவந்தோர் வாக்குரிமை அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்படவேண்டுமென்று கூறுவோரின் கடைசிவாதமும் அடிபட்டுப் போகிறது என்று எனக்குத் தோன்றுகிறது. எனவே, வாக்காளர்களின் அளவு, இவ்வளவு பரந்த அளவில் தேர்தலை நிர்வகிப்பதற்குத் தேவையான நிர்வாக இயந்திரத்தின் பற்றாக்குறை, மற்றும் நமது குடியரசுத் தலைவர், அமெரிக்கக் குடியரசுத் தலை வருக்குள்ள எத்தகைய நிர்வாக அதிகாரங்களையும் பெற்றிராத நிலை ஆகியவற்றை கவனத்தில் எடுத்துக்கொண்டு பார்க்கும்போது வயது வந்தோர் வாக்குரிமை அடிப்படையில் குடியரசுத் தலைவர் தேர்ந் தெடுக்கப்பட வேண்டுமென்ற பிரச்சினையை விவாதிப்பது அவசியமற்றது என்று சமர்ப்பிக்க விரும்புகிறேன்.

*அரசியல் சாசன வரைவில் வழங்கப்பட்டுள்ள எங்களுடைய பிரேரணைகள், இது சம்பந்தமான தேவைகளுக்குப்போதுமானவை என்று நான் கருதுகிறேன். அவர் (குடியரசுத்தலைவர்) மாநிலங்களவை சட்டப்பேரவைகளின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். அவர்கள் ஏற்கனவே வயதுவந்தோர் வாக்குரிமை அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள். மேலும் நாடாளுமன்றத்தின் இரு அவைகளாலும் குடியரசுத்தலைவர் தேர்ந்தெடுக்கப்படுவார். நாடாளுமன்றத்தின் கீழ் அவையும் நேரடியாக வயதுவந்தோர் வாக்குரிமை அடிப்படையில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது. மேலவை, மாநில சட்டமன்றக் கீழவைகளால் தேர்ந்தெடுக்கப்படுகிறது. அந்தக் கீழவைகளும் வயதுவந்தோர் வாக்குரிமை அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட் டவையே. எனவே இந்த விவரங்களையெல்லாம் கவனத்தில் கொண்டு பார்க்கும்போது, பேராசிரியர் கே.டி.ஷாவின் திருத்தம் பொருத்தமற்றது என்று கருதுகிறேன். எனவே இந்தத் திருத்தத்தை எதிர்க்கிறேன்.*

***திரு. துணைத் தலைவர்:*** *இப்பொழுது நான் திருத்தங்களை ஒவ்வொன்றாக வாக்கெடுப்புக்கு விடுகிறேன்...*

*மொத்தத்தில 5 திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன.*

*கீழ்வரும் திருத்தங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டன:*

*"43வது விதியின் (அ) துணை விதியில் "உறுப்பினர்கள்" என்ற சொல்லுக்குப் பதிலாக, "தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள்" என்ற சொற்களை சேர்த்துக் கொள்ள வேண்டும்."*

*டாக்டர் அம்பேத்கர் பெயரிலுள்ள 1070வது திருத்தம்:*

*"43வது விதிக்குப் பின்வரும் விளக்கம் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்:*

*"விளக்கம் - இந்த விதியிலும் இதற்கு அடுத்த விதியிலும், "ஒரு மாநிலத்தின் சட்டப்பேரவை என்றால் - சட்டமன்றம் இரு அவைகளைக் கொண்டுள்ள இடங்களில், சட்டமன்றத்தின் கீழ்சபை என்று பொருள்படும்."*

*43வது விதி, திருத்தப்பட்ட வடிவத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்டு, அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.*

★ ★ ★

## 15 வது விதி

[1]**திரு. துணைத் தலைவர்:** இந்த அவையின் அனுமதியுடன், விட்டுப்போன ஒரு விதியைப் பற்றி கூறவிரும்புகிறேன். அதாவது விதி 15. இந்த அவையின் விவாதங்கள் என்முன் இருக்கின்றன; அதிலிருந்து - கடந்த டிசம்பர் 6ல் இது பரிசீலனை செய்யப்பட்டது - பொதுவிவாதம் முடிவடைந்து விட்டதென்று தோன்றுகிறது. இதற்கு பதிலளிக்குமாறு நான் டாக்டர் அம்பேத்கரைக் கேட்டுக்கொண்டேன். அந்த சமயத்தில், ஒருவகையான உடன்பாட்டுக்கு வருவதற்கு முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டுமென்று ஆலோசனை கூறப்பட்டது. ஏனெனில் அப்பொழுதுதான், சில திருத்தங்களை முன்மொழிந்தவர்கள் திருப்தி உணர்வைப் பெறுவார்கள். இப்பொழுது நிலைமை என்ன என்று எனக்குத் தெரியாது; ஆனால் மேற்கொண்டு நாம் காத்திருக்க முடியாது. டாக்டர் அம்பேத்கர் அவர்களே, நிலைமையை நீங்கள் தெளிவுபடுத்துவீர்களா? எந்த உடன்பாடும் எட்டப்பட வில்லையென்றால், விவாதத்திற்கு பதில் அளிக்குமாறு உங்களை கேட்டுக்கொள்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, 15வது விதி சம்பந்தமாகவும், ''சட்டப்படியான நடைமுறை'' என்ற சொற்களை நீக்கிவிட்டு ''உரிய நடைமுறை'' என்ற சொற்களை சேர்த்துக் கொள்ள வேண்டுமென்றும் எனது நண்பர் பண்டிட் பார்கவா முன்மொழிந்துள்ள திருத்தம் சம்பந்தமாகவும் நான் ஓரளவு இக்கட்டான நிலைமையில் இருக்கிறேன் என்பதை ஒத்துக் கொள் கிறேன்.

கடந்த தடவை நடைபெற்ற விவாதத்தைக் கூர்ந்து கவனித்த எவருக்கும், இரு கூர்மையான கருத்தோட்டங்கள் வெளிப்பட்டன என்பது மிகவும் தெளிவாகத் தெரியும். ஒரு கருத்தோட்டம், இந்த விதியில் ''உரிய சட்டப்படியான நடைமுறை'' என்றிருக்க வேண்டும் என்று கூறுகிறது. அவ்வாறில்லாவிட்டால் இந்த விதி சட்டப்படி செல்லாத ஒன்றாகிவிடும். மற்றையக் கருத்தோட்டம் என்னவெனில், தற்போதுள்ள சொற்றொடரே இந்த நோக்கத்திற்குப் போதுமானதாகும் என்பதாகும். ''உரிய நடைமுறை'' என்றால் திட்டவட்டமாக எதைக் குறிக்கிறது என்பதை இப்பொழுது நான் விளக்குகிறேன்.

1. அ.நி.விவாதங்கள், தொகுதி VII, டிசம்பர் 13, 1948, பக்கம் 999 -1001.

''உரிய நடைமுறை'' என்ற பிரச்சினையானது சட்டப் பேரவைக்கும் நீதித்துறைக்கும் இடையிலான உறவுமுறையை எழுப்புகிறது என்று கருதுகிறேன். ஒரு சமஷ்டி அரசியல் சாசனத்தில், சட்டப் பேரவையால் இயற்றப்பட்ட எந்தக் குறிப்பிட்ட சட்டமும், குறிப்பிட்ட சட்டப் பேரவைக்கு அரசியல் சாசனத்தினால் வழங்கப் பட்ட சட்டமியற்றுவதற்கான அதிகாரங்கள் சம்பந்தமாக, சட்டத் திற்குப் புறம்பானதா, அல்லது சட்டத்திற்கு உட்பட்டதுதானா என்று முடிவு செய்வதற்கு நீதித்துறைக்கு எப்போதும் உரிமை உண்டு. ஒரு குறிப்பிட்ட சட்டப்பேரவை இயற்றிய ஒரு சட்டம். அரசியல் சாசனத்தினால் அதற்கு வழங்கப்பட்டுள்ள அதிகாரத்தின் எல்லை வரம்பை மீறுமானால், அத்தகைய சட்டம் சட்ட விரோதமானது, மற்றும் செல்லுபடியாகாததாகும். எல்லா சமஷ்டி அரசியல் சாசனங் களிலும் மாமூலமாக நடைபெறுவது இதுதான். ஒரு சமஷ்டி அரசியல் சாசனத்தில் ஒவ்வொரு சட்டமும் - மத்தியில் நாடாளு மன்றத்தினால் இயற்றப்பட்டதாயினும், அல்லது ஒரு சட்டப் பேரவை யினால் இயற்றப்பட்டதாயினும் சரி, சட்டத்தை இயற்றும் சட்ட மன்றத்தின் அதிகாரத் தகுதிக் கண்ணோட்டத்திலிருந்து, எப்போதும் நீதித்துறையின் பரிசீலனைக்கு உட்பட்டதாகும். என்னுடைய கருத் தின்படி 'உரிய நடைமுறை' துணைவிதியானது, மற்றொரு காரணத் தின் பேரில், சட்டப் பேரவையினால் இயற்றப்பட்ட சட்டத்தைக் கேள்வி கேட்பதற்குரிய அதிகாரத்தை நீதித்துறைக்கு வழங்கும். அந்தக் காரணமானது, அந்த சட்டம் தனிநபரின் உரிமைகள் சம்பந்த மான சில அடிப்படையான கோட்பாடுகளுக்கு இசைவானதாக இருக்கிறதா என்பதேயாகும். வேறு சொற்களில் கூறுவதெனில், அந்த சட்டம், சட்டப் பேரவையின் அதிகார வரம்புக்கு மீறியதா என்ற காரணத்தின்பேரில் மட்டுமன்றி, அந்த சட்டம் நல்ல சட்டம்தானா என்ற காரணத்தின் பேரிலும் கேள்வி கேட்பதற்குரிய அதிகாரத்தை - சட்டத்தை இயற்றுவதற்குரிய சட்டப்பேரவையின் அதிகாரங்கள் என்ற பிரச்சினைக்கு அப்பாற்பட்டு - நீதித்துறை பெற்றிருக்கும். சட்டப்பேரவையின் அதிகார வரம்பு சம்பந்தப்பட்ட வரையிலும் அந்தச்சட்டம் முற்றிலும் செம்மையானதாகவும், செல்லத்தக்கதாக வும் இருக்கக்கூடும். ஆனால், அது ஒரு நல்ல சட்டமாக இல்லாம லிருக்கக்கூடும், அதாவது, அது சில அடிப்படையான கோட்பாடு களை மீறும்நிலையில் அந்த சட்டத்தை செல்லத்தக்கதல்ல என்று அறிவிப்பதற்கு, நீதித்துறைக்கு கூடுதல் அதிகாரம் இருக்கும். இந்த விஷயத்தைப் பரிசீலனை செய்யும்போது எழும் கேள்வி இதுதான்: பல்வேறு சட்டமன்றங்கள் இயற்றும் சட்டம், அந்த அமைப்பு களுக்கு வழங்கப்பட்டுள்ள அதிகாரங்களுக்கு இசைவானதுதானா

என்று ஆய்வு செய்வதற்குரிய அதிகாரம் நீதித்துறைக்கு வழங்கப் பட்டிருக்கிறது என்பது குறித்து நமக்கு ஐயமில்லை. 'உரிய நடைமுறை' என்ற சொற்றொடர் புகுத்தப் பட்டிருப்பதனால் தற்போது எழுப்பப்பட்டுள்ள கேள்வி, அரசினால் இயற்றப்படும் சட்டங்களை- அவை சில அடிப்படையான கோட்பாடுகளை மீறுகின்றன என்ற காரணத்தின்பேரில் கேள்வி கேட்பதற்குரிய கூடுதல் அதிகாரம் நீதித்துறைக்கு வழங்கப்பட வேண்டுமா என்பதுதான்.

இது சம்பந்தமாக இரு கருத்துக்கள் உள்ளன. ஒரு கருத்து இதுதான்: மனிதனின் அடிப்படை உரிமைகளை, அதாவது, ஒவ்வொரு தனிமனிதருக்கும் பொருந்தக்கூடிய அடிப்படை உரிமை களை மறுக்கின்ற எந்த சட்டத்தையும் இயற்றாமலிருப்பதற்கு சட்டப் பேரவையை நம்பலாம்; எனவே, இதன் விளைவாக, 'உரிய நடைமுறை' என்ற சொற்றொடர் புகுத்தப்படுவதிலிருந்து எந்த அபாயமும் எழாது. மற்றொரு கருத்து என்னவெனில்: சட்டப் பேரவையை நம்புவது சாத்தியமில்லை; சட்டப் பேரவை தவறு செய்யக்கூடும். மனவெழுச்சியினால், கட்சி துவேஷத்தினால், கட்சிக் கண்ணோட்டங்களினால் அது இழுத்துச் செல்லப்படக்கூடும். ஒரு பிரஜையின் தனிப்பட்ட உரிமைகளை பாதுகாக்கின்ற அடிப்படைக் கோட்பாடுகள் என்று கருதப்படுகின்றவற்றை ரத்து செய்யக் கூடிய ஒரு சட்டத்தை சட்டப்பேரவை இயற்றக்கூடும். எனவே நாம் இரு இக்கட்டான நிலைமைகளில் வைக்கப்பட்டுள்ளோம். ஒன்று, சட்டப் பேரவையின் சித்தத்தின் மீது தீர்ப்புக் கூறும் அதிகாரத்தை, சட்டப்பேரவை இயற்றிய சட்டத்தை, அது சட்டப் பேரவை அடிப்படைக் கோட்பாடுகளுக்கு இசைவான, நல்ல சட்ட மல்ல என்ற காரணத்தின்பேரில், கேள்வி கேட்கும் அதிகாரத்தை நீதித்துறைக்கு வழங்குவது. இது ஒரு விரும்பத்தக்க கோட்பாடா? இரண்டாவது நிலை என்னவெனில், கேடுவிளைவிக்கும் சட்டங் களை இயற்றக்கூடாது என்பதில் சட்டப்பேரவையின் மீது நம் பிக்கை வைப்பதாகும். எந்தத் திட்டவட்டமான முடிவுக்கும் வருவது மிகவும் சிரமமானது. இரு தரப்பிலும் அபாயங்கள் உண்டு. என்னைப் பொறுத்தமட்டிலும், கட்சி நபர்கள் நிரம்பிய ஒரு சட்டப்பேரவை, ஒரு தனிமனிதனின் வாழ்வையும் சுதந்திரத்தையும் பாதிக்கும் வகை யில், சில அடிப்படையான கோட்பாடுகள் என்று நாம் கருதுகின்ற வற்றை ரத்துசெய்கின்ற அல்லது மீறுகின்ற சட்டங்களை இயற்று கின்ற சாத்தியப்பாட்டை முற்றாக நான் விலக்கிவிட முடியாது. அதேசமயத்தில், எவ்வாறு சமஷ்டி நீதிமன்றத்தில் அல்லது உச்சநீதி மன்றத்தில் உட்கார்ந்துகொண்டு, சட்டப் பேரவை இயற்றும் சட் டங்களை ஆய்வு செய்பவர்களை, தமது சொந்த மனச்சாட்சியினால்

உந்தப்பட்டவர்கள், அல்லது ஓரவஞ்சனை அல்லது துவேஷத்தினால் செயல்படுபவர்களை, எந்தச் சட்டம் நல்லது அல்லது எந்த சட்டம் கெட்டது என்பதை நிர்ணயிப்பதற்கு நம்ப முடியும் என்பதை என்னால் பார்க்க முடியவில்லை. இது இருதலைக் கொள்ளி போன்ற ஒரு இக்கட்டான நிலை. எனவே நான் எதுவும் கூறவிரும்பவில்லை. எவ்வகையிலாவது முடிவு செய்வதை இந்த அவைக்கு விட்டுவிடுகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** நான் இப்பொழுது திருத்தங்களை ஒவ்வொன்றாக வாக்கெடுப்புக்கு விடுகிறேன். (மொத்தத்தில் ஐந்து திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன. ஒன்று திரும்பப் பெறப்பட்டது. எந்த திருத்தமும் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. 15வது விதி ஏற்றுக்கொள்ளப்பட்டு, அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப் பட்டது.)

★ ★ ★

## 44 வது விதி

[1]**திரு. துணைத் தலைவர்:** இப்பொழுது நாம் 44வது விதியை எடுத்துக் கொள்வோம்:

பிரேரணை: 44வது விதி. அரசியல் சாசனத்தின் பகுதியாக அமையும்.

திருத்தங்களை ஒன்றன்பின் ஒன்றாக முன்மொழியும்படிக் கேட்டுக்கொள்கிறேன்.

திருத்தம் எண். 1075 - டாக்டர் அம்பேத்கர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

> "44வது விதியின் (2) வது துணைவிதியின் (இ) உபவிதியில் "அத்தகைய உறுப்பினர்" என்ற சொற்களுக்கு பதிலாக, "நாடாளுமன்றத்தின் இரு அவைகளின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள்" என்ற சொற்களை சேர்க்கவும்."

இந்தத் திருத்தத்திற்கான காரணங்களைக் கூறத் தொடங்குவதற்கு முன்னால், உங்களுடைய அனுமதியோடு, ஒரு நிமிடம், இந்த விதியின் (2)வது துணைவிதிக்குத் திரும்பிச் சென்று,

1. அ.நி.வி. தொகுதி VII, டிசம்பர் 13, 1948, பக். 1001-03.

அந்தத் துணைவிதியின் (அ) மற்றும் (ஆ) உபவிதிகளில் வகுத்தளிக்கப்பட்டுள்ள திட்டத்தை விளக்குவதற்கு விரும்புகிறேன். குடியரசுத் தலைவர் ஒவ்வொரு மாநில சட்டப்பேரவையின் கீழ்சபையின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களாலும் நாடாளுமன்றத்தின் இரு சபைகளின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களாலும் - இந்த இரண்டும் தனியொரு வாக்காளர் தொகுதியாகும் - தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்பதை மதிப்புமிகு உறுப்பினர்கள் அறிவார்கள். 44வது விதியின் உபவிதி (1), நடைமுறை சாத்தியமானவரையில், குடியரசுத் தலைவர் தேர்தலில் வெவ்வேறு மாநிலங்களின் பிரதிநிதித்துவத்தின் விகிதம் ஒரு சீராக இருக்க வேண்டும் என்று கூறுகிறது. வாக்காளர் தொகுதியின் ஒவ்வொரு உறுப்பினருக்கும் ஒருவாக்கை ஒதுக்குவது என்ற எளிய வழிமுறையின்மூலம் இந்த ஒரு சீரான தன்மையை அடைவது சாத்தியமாகியிருந்திருக்கும். ஆனால் இது சாத்தியமல்ல, ஏனெனில், சட்டப்பேரவை உறுப்பினர்களுக்கும் மாநிலங்களின் வெவ்வேறு பிரிவுகளுக்கிடையில் இருந்துவரும் மக்கட்தொகைக்குமான அவர்களின் தகவுக்குமிடையில் உள்ள வேறுபாடு இதற்குக் காரணமாகும். முதலாவது அட்டவணையின் பாகம் 1ல் உள்ள மாநிலங்கள் விஷயத்தில், 149(3) வது விதி பிரதிநிதித்துவத்தின் விகிதத்தை ஒவ்வொரு லட்சம் மக்கள் தொகைக்கும் ஒரு பிரதிநிதி என்று நிர்ணயம் செய்கிறது. பாகம் IIIல் உள்ள மாநிலங்கள் சம்பந்தமாக, எந்த விகிதமும் வகுத்தளிக்கப்படவில்லை. இந்த விகிதம் மாநிலத்திற்கு மாநிலம் வேறுபடக்கூடும். ஒரு மாநிலத்தில் இது, ஒவ்வொரு 10,000 மக்கட்தொகைக்கு ஒரு பிரதிநிதியாக இருக்கலாம், மற்றொன்றில், இது ஒவ்வொரு 20,000க்கு ஒரு பிரதிநிதி என்று இருக்கக்கூடும். நிலைமை இவ்வாறிருக்க, குடியரசுத் தலைவர் தேர்தலில் மாநில சட்டப் பேரவை உறுப்பினர்கள் அளிக்கும் வாக்குகளின் மதிப்பை, ஒரு ஓட்டுக்கு ஒரு மதிப்பு என்று ஒதுக்கும் எளியவிதியின் மூலம் அளவிட முடியாது. எனவே, பிரச்சினை என்னவெனில், ஒரே வாக்காளர் யூனிட்டைப் பிரதிநிதித்துவப்படுத்தாத உறுப்பினர்கள் அளிக்கும் வாக்குகளின் மதிப்பில் எவ்வாறு ஒரு சீரான தன்மையைக் கொண்டு வருவது என்பதேயாகும். ஒரு மாநிலத்தின் சட்டப் பேரவையின் ஒரு தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் அளித்த ஒரு வாக்கின் மதிப்பைக் கண்டறிவதற்குக் கடைப்பிடிக்கப்படும் சூத்திரம், அந்த மாநிலத்தின் மக்கட் தொகையை அந்த மாநிலத்தின் சட்டப் பேரவையின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையினால் வகுக்க வேண்டும்; அவ்வாறு பெறப்பட்ட ஈவுத் தொகையை

ஆயிரத்தால் வகுக்க வேண்டும், அதன் மூலம் கிடைக்கும் மீதி 500க்குக் குறைவாக இல்லாமலிருந்தால், ஈவுத்தொகையுடன் ஒரு எண்ணிக்கையை சேர்க்க வேண்டும். இதுதான் (2) வது துணைவிதியின் (ஆ) மற்றும் (இ) உப-விதிகளில் கூறப்பட்டுள்ளது.

நான் முன்மொழிந்த உப-விதி (இ)க்கான திருத்தத்திற்கு இப்பொழுது வருகிறேன். நாடாளுமன்ற உறுப்பினர்கள் அளிக்கும் வாக்குகளைப் பொறுத்தமட்டிலும், அதே பிரச்சினைதான் நம்மை எதிரிடுகிறது. அதாவது, வாக்காளர் யூனிட்டுகளில் உள்ள ஏற்றத் தாழ்வும், அதன் விளைவாக, அவர்கள் அளிக்கும் வாக்குகளின் மதிப்பில் உள்ள ஏற்றத்தாழ்வுமேயாகும். அதே காரணங்களினாலேயே இந்த ஏற்றத்தாழ்வும் ஏற்படுகிறது. முதலாவதாக, மாநில சட்டப் பேரவையினால் தேர்ந்தெடுக்கப்படும் மாநிலங்களின் கவுன்சில், பாகம் Iல் உள்ள மாநிலங்களுக்கும் பாகம் IIIல் உள்ள மாநிலங்களுக்கும் இடையில் இருந்துவரும் அதே ஏற்றத்தாழ்வைப் பிரதிபலிக்கிறது. இரண்டாவதாக, நாடாளுமன்ற உறுப்பினர்களின் தேர்தலில் பாகம் Iலும் பாகம் IIIலும் உள்ள மாநிலங்களுக்கு இடையில் மக்கட்தொகைக்கும் உள்ள இடங்களுக்குமான தகவில் அதே ஏற்றத்தாழ்வு இருக்கிறது.

நாடாளுமன்ற உறுப்பினர்கள் வாக்களிப்பதில் ஒரு சீரான தன்மையை இருவழிகளில் அடையலாம்: ஒன்று, அனைத்து மாநில சட்டப் பேரவைகளின் உறுப்பினர்கள் அளிக்கவல்ல மொத்த ஓட்டுகளின் எண்ணிக்கையை அனைத்து மாநில சட்டப்பேரவைகளின் மொத்த உறுப்பினர் எண்ணிக்கையால் வகுக்க வேண்டும். அவ்வாறு கிடைக்கும் ஈவுதான், ஒவ்வொரு உறுப்பினரும் அளிப்பதற்கு உரிமையுள்ள ஓட்டுகளின் எண்ணிக்கையாகும். மற்றொரு வழிமுறை, அனைத்து மாநில சட்டப்பேரவைகளின் உறுப்பினர்களால் அளிக்கவல்ல மொத்த ஓட்டுகளின் எண்ணிக்கையை நாடாளுமன்றத்தின் இரு சபைகளிலும் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையால் வகுக்க வேண்டும். முதலாவது வழிமுறை உபவிதி (இ)யில் தரப்பட்டுள்ளது. இரண்டாவது வழிமுறை, நான் முன்மொழிந்த உபவிதி(இ) க்கான திருத்தத்தில் அடங்கியுள்ளது. இந்த இரண்டு வழிமுறைகளுக்கு இடையிலான வேறுபாடு இதுதான். முதலாவது வழிமுறையில், குடியரசுத் தலைவர் தேர்தலில் பங்கெடுத்துக்கொள்ளும் வாக்காளர் தொகுதியின் அனைத்து உறுப்பினர்களும், அவர்களது வாக்குகளின் மதிப்பு

சம்பந்தமாக ஒரே அளவுகோலின்படி, நாடாளுமன்ற உறுப்பினர்களுக்கு மாநில சட்டப் பேரவைகளின் உறுப்பினர்கள் போன்றே வாக்களிப்பு விஷயத்தில் சம வலு அளிக்கப்படுகின்றது. உபவிதி (இ) தற்போது உள்ளபடி அளிப்பதைக் காட்டிலும் நாடாளுமன்ற உறுப்பினர்களுக்கு மேம்பட்ட வலு இருக்கவேண்டுமென்று உணரப்பட்டது. அதனால்தான் இந்தத் திருத்தம் கொண்டுவரப்படுகிறது.

★ ★ ★

## 44 வது விதி (தொடர்ச்சி)

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, திரு. துணைத் தலைவர் அவர்களே, 1083வது எண் திருத்தத்திற்கு, எனது நண்பர் திரு. நஸிருத்தீன் அகமது முன்மொழிந்த, பட்டியல் Iன், 25வது எண் திருத்தத்தை ஏற்றுக்கொள்கிறேன். இதர திருத்தங்களை ஏற்றுக் கொள்ள முடியாமைக்கு வருந்துகிறேன். ஐயா, இப்பொழுது, பொது விவாதத்தின்போது, இரு பிரச்சினைகள் எழுப்பப்பட்டுள்ளன: ஒன்று திரு.நஸிருத்தீன் அகமதுவின் திருத்தம் பற்றியது. அதாவது, 1941ல் நடைபெற்ற கடைசி மக்கட்தொகைக் கணக்கு எடுப்பை அடிப்படையாகக் கொண்டு எந்தத் தேர்தலையும் நடத்துவது தவறாகும். இந்த விஷயம் சம்பந்தமாக, பல்வேறு பேச்சாளர்கள் கூறியவற்றில் பெருமளவு வலு இருக்கிறது என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன். 1941ம் வருட மக்கட்தொகைக் கணக்கெடுப்பு, சில பிரதேசங்களில் தில்லுமுல்லு செய்யப்பட்டதாகும் என்பது மெய்யே. அப்பொழுது பதவியிலிருந்த ஸ்தல ஆட்சியினால், சில சமூகங்களுக்கு சாதகமாக மக்கட்தொகைக் கணக்கெடுப்பில் தில்லுமுல்லு செய்யப்பட்டது; வேறுசில சமூகங்களுக்கு எதிராக அது செயல்பட்டது. ஆனால், அதுதவிர, இந்தியா பிரிவினை செய்யப்பட்டதன் விளைவாக, மக்கட்தொகையிலும், அதனுடைய சமூக இயைபிலும் இந்தியாவின் சில மாகாணங்களில், உதாரணமாக, கிழக்கு பஞ்சாப், பம்பாய், மேற்கு வங்கம், ஓரளவுக்கு உ.பி.யிலும் கூட, பெரும் மாற்றம் ஏற்பட்டது என்பதும் அதே அளவு மெய்யே. பல்வேறு சமூகங்களுக்கு, பொதுவான மக்கட்தொகையில் அவர்களது மக்கட் தொகையின் தகவுக்கு ஏற்ப அரசியல் சாசனம்

1. அ.நி.வி. தொகுதி 12, டிசம்பர் 13, 1948. பக்.1016-18.

பிரதிநிதித்துவம் வழங்குகிறது என்ற உண்மையை முன்னிட்டு, ஒவ்வொரு குறிப்பிட்ட மாகாணத்தின் மொத்த மக்கட் தொகையும் உறுதிப்படுத்தப்படவேண்டும என்பது மட்டுமன்றி, அவர்களின் மக்கட்தொகைக்கு ஏற்ப பிரதிநிதித்துவத்தை நாம் உத்தரவாதம் செய்துள்ள பல்வேறு சமூகங்களின் வீதாசாரத்தையும் உறுதிப்படுத்த வேண்டியது அவசியமாகும். தேர்தல் சம்பந்தமாக அரசியல் சாசனத்தின் அடிப்படைகள் இடப்படுவதற்கு முன்னால் இது செய்யப் பட வேண்டும்.

தேர்தல்கள் மேற்கொள்ளப்படுவதற்கு முன்னால் மக்கட் தொகையின் உண்மையான கணக்கெடுப்பு இருக்க வேண்டுமென்று கூறப்பட்ட பல்வேறு வாதங்களையும் அரசு கவனத்தில் எடுத்துக் கொள்ளும் என்பது குறித்து எனக்கு சிறிதும் ஐயமில்லை. எனது நண்பர் திரு. நஸிருத்தீன் அகமதினுடைய திருத்தத்தை என்னை ஏற்றுக்கொள்த் தூண்டியதற்கான காரணங்களில் ஒன்று, அவர் 'கடைசி' என்ற சொல்லுக்கு பதிலாக, 'சமீபத்திய' என்ற சொல்லைப் பயன்படுத்தியதுதான். கடைசி என்ற சொல்லுக்கு ஒருவகைப்பட்ட ஸ்தல சாயல் இருந்தது. அதாவது கடைசி மக்கட் தொகைக் கணக்கெடுப்பு என்றால், ஒவ்வொரு பத்தாண்டுகளுக்கு ஒருமுறை மேற்கொள்ளப்படும் கால அட்டவணைப்படியான மக்கட் தொகைக் கணக்கெடுப்பு என்று பொருள்படக்கூடும். 'சமீபத்திய' மக்கட் தொகைக் கணக்கெடுப்பு என்றால், எந்தத் தேர்தல் நடவடிக்கையும் தொடங்குவதற்கு முன்னால் மேற்கொள்ளப்பட்ட மக்கட் தொகைக் கணக்கெடுப்பு என்று பொருள்.

**திரு. நஸிருத்தீன் அகமது:** நான் அந்தச் சொற்களை உபயோகப்படுத்தவில்லை. இதற்கு முந்திய கடைசி மக்கட் தொகைக் கணக்கெடுப்பு என்றுதான் கூறினேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எப்படியிருந்த போதிலும், அவர் கூறியதற்கு நான் அதிக கவனம் செலுத்தவில்லை. ஆனால், நிச்சயமாக, அது என்னுடைய கருத்துத்தான். புதிய சட்ட மன்றத்திற்குத் தேர்தல்களை நடத்துவதற்குத் தொடங்குவதற்கு முன்னால் ஒரு புதிய மக்கட் தொகைக் கணக்கெடுப்பை மேற்கொள்வதற்கு இந்தத் துணைவிதி அரசைத் தடுக்காது. இந்த விஷயம் சம்பந்தமாக, ஓர் ஐயப்பாடு கொண்டிருந்த பெரும்பாலான உறுப்பினர்களை இது திருப்திப்படுத்த வேண்டும் என்று நினைக்கிறேன்.

**திரு. மகாவீர் தியாகி:** அத்தகைய மக்கட் தொகைக்கணக் கெடுப்பு மேற்கொள்ளப்படும் என்று நீங்கள் வாக்குறுதி கொடுக் கிறீர்கள் என்று நான் கருதலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் அத்தகைய வாக்குறுதியைக் கொடுப்பது சாத்தியமில்லை. ஆனால் பல்வேறு மாகாணங்களில் மொத்த மக்கட் தொகையிலும் அதனுடைய இயைபிலும் ஏற்பட்டுள்ள பெரும் மாற்றங்களை எந்த அரசும் புறக் கணிக்காது. பல்வேறு சிறுபான்மையோரைக் கொண்ட பெரும் மக்கட்தொகைக்குப் பிரதிநிதித்துவத்தை நாம் உத்தரவாதம் செய் துள்ளோம். மதிப்புக் கூட்டும் பிரச்சினை சம்பந்தமாகப் பெருமளவு விவாதம் நடைபெற்றுள்ளதை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் அறி வார்கள், மதிப்புக் கூட்டுவது அனுமதிக்கப்படுவதில்லை என்பதை நாமறிவோம். இப்பொழுதுள்ள தேர்தல்கள் வந்து, அவை நடை பெறுவதற்கு அனுமதிக்கப்பட்டு, மக்கட் தொகையின் தற்போ துள்ள அடிப்படையில் இடங்கள் ஒதுக்கப்பட்டு, மக்கள் இடம் பெயர்வதினால் அந்த அடிப்படை தகர்க்கப்படும்பொழுது, பல்வேறு சமூகங்களுக்கு மதிப்புக் காட்டப்பட வேண்டியேற்படக் கூடும், சில சமூகங்களுக்குப் பிரதிநிதித்துவமே இல்லாமற் போகும். எனவே அத்தகைய ஒருநிலைமை ஏற்படாமல் தவிர்த்து, எந்த சமூகத்திற்கும் கூடுதல் மதிப்பு இல்லாமல் பார்த்துக் கொள்வ தற்கு, மக்கட் தொகைக் கணக்கெடுப்பு முறையான மக்கட் தொகைக் கணக்கெடுப்பாக இருக்கும்படி செய்வது அரசின் கடமையாகும் என்பதில் ஐயமில்லை.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** இந்த மக்கட் தொகைக் கணக்கெடுப்பு மேற்கொள்ளாத பட்சத்தில், புதிய அரசியல் சாச னத்தின்கீழ் எந்தத் தேர்தலும் நடத்தப்படக் கூடாது என்று மாண்பு மிகு அமைச்சர் கூறுகிறாரா என்பதை நான் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது ஓர் இயல் பான முடிவு என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. ஏனெனில் பல்வேறு சமூகங்களின் மக்கட்தொகை உறுதிப்படுத்தப்பட்டா லொழிய, தேர்தலுக்கான இடங்களை ஒதுக்க முடியாது. எனவே, அது தர்க்கநியதியான முடிவாகவே எனக்குப்படுகிறது. எனவே ஒரு புதிய மக்கட் தொகைக் கணக்கெடுப்பு தவிர்க்க முடியாதது.

திரு. தியாகியும், பீகம் அய்ஜாஸ் ரசூலும் வேறு சில உறுப்பினர்களும் மிகவும் பரபரப்பாக்கிய பிரச்சினை, குடியரசுத் தலைவர் தேர்தல் சம்பந்தமான பிரச்சினையாகும். குடியரசுத் தலைவரைத் தேர்ந்தெடுப்பதற்கு இப்பொழுது இரண்டு வழிகள் உள்ளன. ஒருவழி, அவையின் அறுதிப் பெரும்பான்மை மூலம் அவரைத் தேர்ந்தெடுப்பது. ஒருவர் 51 சதவீத ஓட்டுக்களைப் பெற்றால் அவர் தேர்ந்தெடுக்கப்படுவார். குடியரசுத் தலைவரைத் தேர்ந்தெடுப்பதற்கு அது ஒரு வழி, அது எளியதும், நேரடியானதுமாகும். ஆனால், அதில், குடியரசுத் தலைவரைத் தேர்ந்தெடுப்பதற்கு பெரும்பான்மை வலுவுள்ள கட்சியால் முடியும் என்ற நிலை ஏற்படக்கூடும். அப்பொழுது, குடியரசுத் தலைவர் தேர்தலில் சிறுபான்மைக் கட்சிக்கு எவ்விதப் பங்கும் இல்லாமற் போய்விடும். இயல்பாகவே, குடியரசுத் தலைவர் அறுதிப் பெரும்பான்மையால் தேர்ந்தெடுக்கப்படுவத்றகோ, அல்லது சிறுபான்மையோர் ஆற்றுவதற்கு எந்தப் பங்கும் இல்லாத ஒரு தேர்தல் முறையினால் குடியரசுத் தலைவர் தேர்ந்தெடுக்கப்படுவதற்கோ அவையின் எந்த ஒரு உறுப்பினரும் விரும்ப மாட்டார்கள். இந்த நிலைமையில், அறுதிப் பெரும்பான்மையினரால் குடியரசுத் தலைவர் தேர்ந்தெடுக் கப்படுவது நீக்கப்பட வேண்டும். குடியரசுத் தலைவரின் தேர்தலில் சிறுபான்மையினருக்கும் ஓரளவு பங்கிருக்கும் வகையிலான ஒரு ஏற்பாட்டை நாம் வகுக்க வேண்டும். குடியரசுத் தலைவர் தேர்தலில் சிறுபான்மையினருக்கு ஒரு பங்கை ஏற்படுத்துவதற்கான ஒரே வழிமுறை தனித்தனி வாக்காளர் தொகுதிகளை ஏற்படுத்துவதும், மற்றும் குடியரசுத் தலைவருக்குப் பெரும்பான்மை கிடைக்க வேண்டும் என்பது மட்டுமன்றி, ஒவ்வொரு சிறுபான்மையோரிடமிருந்தும் கணிசமான வாக்குகளை அவர் பெறுவதற்கும் வகை செய்ய வேண்டும். ஆனால், அரசியல் சாசனத்தில் நாம் வரையறுத்துக் கூறியுள்ளதைக் கொண்டு பார்க்கும்போது, மேலே கூறப்பட்டுள்ள பிரேரணையையும் நாம் ஏற்றுக்கொள்ள முடியாதுபோல் தோன்றுகிறது; ஏனெனில், தனி (வாக்காளர்) தொகுதிகள் கிடையாது என்று நாம் வரையறுத்துள்ளோம். எனவே, எஞ்சியுள்ள ஒரே வழிமுறை, சிறுபான்மையோருக்கு ஓரளவு இடம், ஓரளவு பாத்திரம் இருக்கக்கூடிய ஒரு தேர்தல் முறையை ஏற்படுத்துவதேயாகும். அது வீதாசாரப் பிரதிநிதித்துவமுறை என்பதில் ஐயமில்லை. இது அரசியல் சாசனத்தில் வகுத்தளிக்கப்பட்டுள்ளது.

**திரு. நஸிருத்தீன் அகமது:** வாக்குகளை மாற்றிக் கொடுக்கும் முறை இருக்க வேண்டும். ஒரே ஒரு நபர் மட்டுமே தேர்ந்

தெடுக்கப்பட வேண்டியவராக இருக்கும்போது வீதாசாரப் பிரதி நிதித்துவம் எவ்வாறு இருக்க முடியும்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தப் பிரச்சினை பற்றி நான் விவரமாக விளக்க முடியாது. அவ்வாறு செய்வதற்கு நான் ஒரு வகுப்பை ஆரம்பித்து, இவ்விஷயம் பற்றி ஒரு சொற்பொழிவு நிகழ்த்த வேண்டும். இந்தக் கட்டத்தில் அந்தப் பணியை நான் மேற் கொள்ள முடியாது. ஆயினும், இது நன்கு அறியப்பட்ட ஒன்று. இந்த ஏற்பாடு எவ்வாறு செயல்படுகிறது என்பதை எல்லோரும் அறி வார்கள்.

**திரு. துணைத் தலைவர்:** வீதாசாரப் பிரதிநிதித்துவத் தின் மெய்யான தன்மையை சில உறுப்பினர்கள் அறிந்து கொள்ள வில்லை என்பதையே இந்தக் குறுக்கீடுகள் காட்டுகின்றன. இந்தக் குறுக்கீடுகளை நீங்கள் கவனிக்க வேண்டாம்.

**மௌலானா ஹஸரத் மோஹனி:** ஒரே ஒரு வேட்பாளர் மட்டுமே இருந்தால் நீங்கள் என்ன செய்வீர்கள்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஒரே ஒரு வேட்பாளர் மட்டுமே இருந்தால், அவர் ஒருமனதாகத் தேர்ந்தெடுக் கப்படுகிறார் (சிரிப்பு). அப்பொழுது பெரும்பான்மை அல்லது சிறுபான்மை என்ற பிரச்சினையே எழாது.

திரு. தியாகி கேட்ட மற்றையக் கேள்வி, வேட்பாளர்களை அகற்றுவதற்கான நடைமுறை ஏதாவது இருக்கிறதா என்பதே யாகும்.

**திரு. மகாவீர் தியாகி:** ஐயா, எனக்கு ஒரு தகவல் தெரிய வேண்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இல்லை, நான் இதை அனுமதிக்க முடியாது, நான் உங்களுடைய கருத்துக்கு பதி லளித்துக் கொண்டிருக்கிறேன். வேட்பாளரை நீக்கும் நடைமுறை ஏதாவது இருக்கிறதா என்பதுதான் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டிய தகவல். எனக்கு முன்னால் உள்ள விஷயம் என்னவெனில், குடியரசுத்தலைவர் தேர்ந்தெடுக்கப்படுவதை நான் விரும்புகிறேனா,

அல்லது பொதுப் பிரதிநிதித்துவத்தில் நீக்கப்படுவது அடங்கியுள்ளதா என்பதேயாகும். நாம் செய்துள்ள ஒரே ஒரு விஷயம் என்னவெனில், பல வீதாசாரப் பிரதிநிதித்துவங்களுக்கு பதிலாக, ஒரே ஒரு வீதாசாரப் பிரதிநிதித்துவத்தை நாம் ஏற்பாடு செய்துள்ளோம். இதில் கீழாக உள்ள ஒவ்வொரு வேட்பாளரும் நீக்கப்படுவார். ஒரு 'கோட்டா'' என்று அழைக்கப்படுகிற குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள வாக்குகள் பெற்றுள்ள ஒருவரை நாம் அடைகின்றவரையில் இது நீடிக்கும்.

**திரு. மகாவீர் தியாகி:** ஆனால் நாடாளுமன்றத்தில் மாற்று ஓட்டுகள் முறை கடைப்பிடிக்கப்படுகிறதே.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மாற்று ஓட்டுக்கள் என்பது வீதாசாரத்திற்கு மற்றொரு பெயராகும்.

ஐயா, இந்த விஷயம் சம்பந்தமாக நான் வேறு ஒன்றும் சொல்வதற்கு இல்லை.

**திரு. மகாவீர் தியாகி:** ஐயா... எனக்குத் தெரிய வேண்டும்.

**திரு. துணைத் தலைவர்:** திரு. தியாகி அவர்களே, எனக்குள்ள சிரமம் என்னவெனில், உங்களுடைய கேள்விகளுக்கு பதிலளிக்குமாறு வரைவுக் குழுவின் தலைவரை நான் கட்டாயப்படுத்த முடியாது. அதுபோன்றே உங்களுடைய ஐயப்பாடுகளுக்கு தெளிவு ஏற்படுத்தும்படியும் அவரை நான் கட்டாயப்படுத்த முடியாது.

இந்தத் திருத்தங்களை ஒவ்வொன்றாக நான் வாக்கெடுப்புக்கு விடப்போகிறேன்.

திருத்தம் எண் 1075 ஐ நான் வாக்கெடுப்புக்கு விடுகிறேன். (இதை டாக்டர் அம்பேத்கர் பிரேரணை செய்தார்.)

(கீழ்வரும் இரு திருத்தங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. வேறு இரண்டு திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன.)

(1) 44வது விதியின் (2) வது துணைவிதியின் (இ) உபவிதியில் ''அத்தகைய உறுப்பினர்'' என்ற சொற்களுக்குப் பதிலாக, ''நாடாளுமன்றத்தின் இரு அவைகளின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள்'' என்ற சொற்களை சேர்த்துக் கொள்ளவும்.

திரு.நஸிருத்தீன் அகமதுவால் முன்மொழியப்பட்ட கீழ்வரும் திருத்தத்தை டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக்கொண்டார்:

(2) 44வது விதிக்கான விளக்கத்திற்குப் பதிலாக, கீழ்வரும் விளக்கம் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்:

''விளக்கம் - இந்த விதியில் 'மக்கட்தொகை' என்றால், இதற்கு முந்திய கடைசி மக்கட்தொகைக்கணக்கெடுப்பில் உறுதிப்படுத்தப்பட்ட மக்கள் தொகை என்று பொருள்; இது சம்பந்தப்பட்ட புள்ளிவிவரங்கள் வெளியிடப் பட்டுள்ளன.''

திருத்தப்பட்ட வடிவத்தில் 44வது விதி ஏற்றுக்கொள்ளப் பட்டு, அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

★ ★ ★

## 45 வது விதி

[1]**திரு.டி.டி.கிருஷ்ணமாச்சாரி:** ஐயா, மதிப்பிற்குரிய உறுப் பினரின் திருத்தம், சாராம்சத்தில் இந்த விதியைப் போன்றதே. இது துணைவிதியின் சாரம்சமான பகுதி சம்பந்தப்பட்டதே. விதிவிலக்கு சம்பந்தப்பட்டதல்ல. தனது திருத்தத்தை முன்மொழிவதில் மதிப்பு மிகு உறுப்பினருக்கு ஏதாவது நோக்கம் இருக்கிறதா?

**திரு. முகமது தாஹிர்:** திருத்தத்தின் பொருளுக்கும், விதியின் பொருளுக்கும் ஒரு வேறுபாடு இருக்கிறது. அது எவ்வாறென்று நான் விளக்குகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது ஒரு திருத்தமே அல்ல. இது சொற்களின் மாற்றமேயாகும். எத்தகைய வேறுபாடும் இல்லை.

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** எண். 1086 வது திருத்தத்திற்கு அனுமதி மறுக்கப்படுகிறது. ஏனெனில், அது, சொற்கள் மாற்றம் பற்றிய ஒரு திருத்தமே.

1. அ.நி.வி., தொகுதி 12, டிசம்பர் 13, 1948, பக்.1019

*1087 மற்றும் 1088 வது திருத்தங்கள் ஒன்று போன்றவை. 1087வது திருத்தத்தை டாக்டர் அம்பேத்கர் முன்மொழியலாம்.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:*** *ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:*

*''45வது விதிக்கான விளக்கத்தின் (அ) து1ணைவிதியில் ''பதவி விலகல்'' என்று சொல்லுக்கு பதிலாக ''எழுதுவது'' என்ற சொல்லை சேர்க்கவும்.*

★ ★ ★

[1]***திரு. துணைத் தலைவர்:*** *இந்த விதி பற்றிய பொது விவாதத்தில் பேசுவதற்கு எந்த உறுப்பினரும் விரும்பாததால், விவாதத்திற்கு பதிலளிக்கும்படி டாக்டர் அம்பேத்கரைக் கேட்டுக்கொள்ளப் போகிறேன். பேசுவதற்கு வாய்ப்பு அளிக்கும்படிக் கேட்டு இப்பொழுதுதான் என்னிடம் ஒரு சீட்டு வந்திருக்கிறது. மிகவும் தாமதமாக அது வந்துள்ளது.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *ஐயா, நான் ஏற்றுக் கொள்ளக்கூடிய ஒரே திருத்தம், திரு.குப்தேயின் திருத்தத்தினால் திருத்தப்பட்ட எண் 1090வது திருத்தம் மட்டுமே. மற்ற திருத்தங்களை நான் ஏற்றுக்கோள்ள முடியாததற்கு வருந்துகிறேன். எந்த விளக்கமும் தேவைப்படக்கூடிய எந்த விஷயத்தையும் எந்த உறுப்பினரும் எழுப்பவில்லை.*

***திரு. துணைத் தலைவர்:*** *நான் திருத்தங்களை வாக்கெடுப்புக்கு விடப்போகிறேன்.*

*(மொத்தத்தில், டாக்டர் அம்பேத்கரால் ஒப்புக்கொள்ளப்படாத ஐந்து திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன. கீழே கொடுக்கப்படுகின்ற இரண்டு திருத்தங்கள் மட்டுமே ஏற்றுக்கொள்ளப்பட்டன.)*

***திரு. துணைத் தலைவர்:*** *இப்பொழுது திருத்தம் என்னவெனில் -*

*45வது விதிக்கான நிபந்தனையின் (அ) துணைவிதியில் 'பதவி விலகல்' என்ற சொல்லுக்கு பதிலாக, 'எழுதுவது' என்ற சொல்லை சேர்க்கவும்.*

*(டாக்டர் அம்பேத்கரால் முன்மொழியப்பட்ட இந்தத் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.)*

★ ★ ★

---

1. *அ.நி.வி., தொகுதி 12, டிசம்பர் 13, 1948, பக். 1019-20*
2. *மேற்படி பக். 1022*

2

**திரு. துணைத்தலைவர்:** திரு.பி.எம்.குப்தேயின் பெயரிலுள்ள எண். 26 (அ) திருத்தத்தினால் மாற்றியமைக்கப்பட்ட எண். 1090 திருத்தத்தை இப்பொழுது வாக்கெடுப்புக் விடுகிறேன். திருத்தம் என்னவெனில்:

1. 45வது விதி, அந்த விதியின் துணைவிதி (1) என்று மறு இலக்கமிடப்பட வேண்டும்.

2. மறு இலக்கிமிட மேற்படி துணைவிதியின் வரம்புரையான துணை விதி (அ) வில் 'மாநிலங்கள் அவையின் தலைவர், மற்றும் மக்களவையின் சபாநாயகர்' என்ற சொற்களுக்கு பதிலாக, 'துணைத்தலைவர்' என்ற சொல்லை சேர்த்துக் கொள்ளவும்.

3. மறு இலக்கமிட்ட அதே விதியில், பின்வரும் துணைவிதியை சேர்த்துக்கொள்ளவும்:

'2. இந்த விதியின் துணைவிதி(1)க்கான வரம்புரையான (அ) துணை விதியின் கீழ் துணைத்தலைவருக்கு அனுப்பப்படும் எந்த பதவி விலகலும் உடனடியாக, அவரால் மக்களவையின் சபாநாயகருக்குத் தெரிவிக்கப் பட்டு விடவேண்டும்.''

இந்தத் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

திருத்தப்பட்ட வடிவத்தில் 45வது விதி ஏற்றுக்கொள்ளப்பட்டு அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

★ ★ ★

## 46 வது விதி

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, திரு. துணைத் தலைவர் அவர்களே, ''ஒருதடவை, ஒரே ஒரு தடவை மட்டும்'' என்ற சொற்களை நீக்குவதற்கான திரு. சர்மாவின் எண் 1098 திருத் தங்களை நான் ஏற்றுக்கொள்வதற்குத் தயாராயிருக்கிறேன்.

திரு.காமத்தின் திருத்தத்தைப் பொறுத்தமட்டிலும், குடியரசுத் தலைவர் பதவிக்குப் போட்டியிடக்கூடிய நபரின் தகுதிகள் பற்றிய பிரச்சினை எழுப்பப்படும்போதுதான், இந்த விஷயம் விவாதிக்கப் படுவதற்கான, சரியான நேரமாகும் என்று கருதுகிறேன்.

1. அ.நி.வி., தொகுதி 12, டிசம்பர் 13, 1948, பக். 1024.

திரு.தியாகிக்கு நான் கூறிக்கொள்வது என்னவெனில், 'ஒரு தடவை, ஒரே தடவை மட்டும்' என்ற சொற்கள் நீக்கப்படுவதனால், துணை குடியரசுத் தலைவர் பற்றிய அவரது அச்சங்களுக்கு ஆதார மில்லை.

**துணைத் தலைவர்:** இப்பொழுது நான் திருத்தங்களை ஒவ்வொன்றாக வாக்கெடுப்புக்கு விடுகிறேன். திருத்தம் எண்.1098 அந்தத் திருத்தம் என்னவெனில்,

> ''46வது விதியில், 'ஒரு தடவை, ஒருதடவை மட்டுமே' என்ற சொற்கள் நீக்கப்பட வேண்டும்.''

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**திரு. துணைத் தலைவர்:** இனி, 1100வது திருத்தம்.

**திரு. எச்.வி. காமத்:** டாக்டர் அம்பேத்கரின் அறிக்கையை முன்னிட்டு, நான் அதை வற்புறுத்த விரும்பவில்லை.

இந்தத் திருத்தம், பேரவையின் அனுமதியுடன் திரும்பப் பெறப்பட்டது.

**திரு. துணைத் தலைவர்:** இனி, திரு.தியாகியின் திருத்தம். டாக்டர் அம்பேத்கரின் உரைக்குப் பின்னர், அதற்கு அவசிய மில்லை. ஆனால், நான் அதை ஓட்டுக்கு விடவில்லை என்று தொழில்நுட்ப வித்தகர் யாராவது கூறக்கூடும். எனவே, திரு.தியாகி அதைத் திரும்ப பெற்றுக் கொள்கிறாரா இல்லையா என்பதை நான் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

**திரு. மகாவீர் தியாகி:** ஐயா, நான் அதைத் திரும்பப் பெறு கிறேன்.

பேரவையின் அனுமதியுடன் திருத்தம் திரும்பப் பெறப் பட்டது.

**திரு. துணைத் தலைவர்:** பிரேரணை என்னவெனில்:

திருத்தப்பட்ட வடிவத்தில் 46வது விதி அரசியல் சாசனத்தின் ஒரு பகுதி யாகிறது.

பிரேரணை நிறைவேற்றப்பட்டது. திருத்தப்பட்ட விதத்தில் 46வது விதி அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

★ ★ ★

## 47வது விதி

[1]**திரு. துணைத்தலைவர்:** 1109 வது எண் திருத்தம், சொற்கள் சம்பந்தப்பட்டதே, அனுமதிக்கப்படவில்லை. 1110 முதல் 1112 வரை யிலான திருத்தங்கள் ஒரேமாதிரியான முக்கியத்துவமுடையவை. இவற்றில் முதலாவது திருத்தம் முன்மொழியப்படலாம். இது டாக்டர் அம்பேத்கரின் பெயரில் உள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய் - பொது): ஐயா, திரு. துணைத் தலைவர் அவர்களே, நான் பின்வருமாறு முன் மொழிகிறேன்:

''47வது விதியின் (2) வது துணைவிதியிலும், 2வது துணைவிதிக்கான விளக்கத்திலும் 'எந்தப்பதவி அல்லது ஊதியம் பெறும் தகுதியிலும்' என்ற சொற்கள் வரும் இடங்களிலெல்லாம் அவற்றை நீக்கிவிட்டு, 'லாபம் ஈட்டக் கூடிய எந்தப் பதவியும்' என்ற சொற்கள் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்.

'' ஐயா, இந்தத் திருத்தம், வரைவின் வாசகத்தை மேம்படுத்துவதை மட்டுமே நோக்கமாகக் கொண்டதாகும்.

**திரு. துணைத் தலைவர்:** 1111வது எண் திருத்தத்தை வாக் கெடுப்புக்கு விடவேண்டுமா?

**திரு.எச்.வி.காமத்** (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார்: பொது): டாக்டர் அம்பேத்கர் என்னை முந்திக்கொண்டு சென்று விட்டார்; இது அவசியமில்லை.

**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் எண் 1112.

1. அ.நி.வி. தொகுதி 12, டிசம்பர் 27, பக்.1027.

**திரு. மிஹிர் லால் சட்டோபாத்யாயா** (மே.வங்கம்: பொது): ஐயா, அது ஏற்கனவே முடிந்துவிட்டது.

(திருத்தம் எண். 1113 முன்மொழியப்படவில்லை.)

**திரு. துணைத்தலைவர்:** திருத்தங்கள் 1114, 1115 மற்றும் 1116 ஆகியவை சொற்கள் சம்பந்தப்பட்டவையே, எனவே அவற்றுக்கு அனுமதி மறுக்கப்படுகிறது.

திருத்தம் எண் 1117 டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பின் கண்டவாறு முன்மொழிகிறேன்:

'47வது விதியின் (2) வது துணைவிதிக்கான விளக்கத்தின் உபவிதி (ஆ)வுக்கு பதிலாகப் பின்வருவது சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்:

(அ) அவர், தற்போதைக்கு முதலாவது அட்டவணையின் பகுதி I-ல் குறிப்பிடப்பட்டுள்ள எந்த ஒரு மாநிலத்தினுடையவும் ஆளுநர், அல்லது இந்தியாவுக்கோ அல்லது அத்தகைய எந்த மாநிலத்திற்குமோ ஓர் அமைச்சர்; அல்லது''

இந்தத் திருத்தத்தின் நோக்கம், ஒரு மாநிலத்தின் ஆளுநர், அல்லது ஓர் அமைச்சர், ஆதாயம் தரக்கூடிய ஒரு பதவியை வகிப்பதன் விளைவாய் ஏற்படக்கூடிய தகுதியிழப்பை அகற்றுவதேயாகும். ஒரு மாநிலத்தின் ஆளுநர், அதுபோன்றே மையத்திலும் மாநிலத்திலும் அமைச்சராக இருக்கும் ஒருவர் தேர்தலுக்கு நிற்பதற்கு அனுமதிக்கப்படுவதும், மன்னரின் கீழ் ஆதாயம் தரும் பதவி வகிப்பதும் அவர்களுக்கு இடையூறாக நிற்கக்கூடாது என்பது விரும்பத்தக்கதாகும்.

★ ★ ★

[1]திரு. துணைத் தலைவர்: டாக்டர் அம்பேத்கர்...

**திரு. சியாமானதன் சஹாயா** (பீஹார்- பொது): ஐயா, நான்...

**திரு. துணைத் தலைவர்:** நான் டாக்டர் அம்பேத்கரைப் பேச அழைத்தேன், மன்னிக்கவும், உங்களுக்கு ஏதாவது திருத்தம் இருக்கிறதா?

**திரு. சியாமானந்தன் சஹாயா:** இல்லை, நான் திருத்தம் கொண்டு வரவில்லை, ஆனால்....

**திரு. துணைத்தலைவர்:** நீங்கள் முன்வரிசைக்கு வந்திருந் தால், என் பார்வையில் பட்டிருக்கமுடியும், ஏனெனில் நீங்கள் உள்ள பகுதியில் வெளிச்சம் கண்களைக் கூசுகிறது.

**திரு. ஆர்.கே. சித்வா** (மத்திய மாகாணங்கள் - பேரார்: பொது): ஆனால் ஐயா, இந்த விதியைப் பற்றி நாம் போதிய அளவு விவா திக்கவில்லை. ஒரே ஒரு உறுப்பினர் மட்டுமே பேசியிருக்கிறார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** மேற்கொண்டு விவாதம் தேவையென்று அவர்கள் விரும்பினால், எனக்கு ஆட் சேபனையில்லை.

**திரு. துணைத் தலைவர்:** இதர உறுப்பினர்களும் பேசுவதா னால் தனக்கு ஆட்சேபனையில்லை என்று டாக்டர் அம்பேத்கர் பெரியமனதுடன் கூறியிருக்கிறார். திரு.சியாமானந்தன் சஹாயா அவர்களே, தயவுசெய்து பேசுங்கள்.

**திரு. ஆர்.கே.சித்வா:** ஐயா....

**திரு. துணைத் தலைவர்:** திரு. சித்வா எப்போதும் கடைசி யாகப் பேசலாம். கடைசியாக அவருக்குப் பேசுவதற்கு நான் வாய்ப்பு அளிக்கிறேன்.

**திரு. சியாமானந்தன் சஹாயா:** ஐயா, துணைத் தலைவர் அவர்களே, பேராசிரியர் கே.டி.ஷா முன்மொழிந்துள்ள திருத்தத்தை ஆதரிப்பதற்காக முன்வந்துள்ளேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பேராசிரியர் ஷாவின் எந்தத் திருத்தம்?

**திரு. சியாமானந்தன் சஹாயா:** திருத்தம் எண் 1124. அது பின்வருமாறு:

---

1. அ.நி.வி., தொகுதி 12, டிசம்பர் 27, 1948, பக்.1034-37.

*''அத்தகைய எந்த அமைச்சரும், அத்தகைய தேர்தலில் வேட்பாளராக நிற்பதற்கு முன்னால், தனது பதவியிலிருந்து விலகவேண்டும்.''*

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு.துணைத் தலைவர் அவர்களே, எனது மதிப்புமிக்க நண்பர் பேராசிரியர் கே.டி.ஷா முன்மொழிந்துள்ள திருத்தங்கள் எதையும் என்னால் ஏற்றுக்கொள்ள இயலாததற்கு வருந்துகிறேன். பேராசிரியர் கே.டி.ஷா மூன்று திருத்தங்களை முன்மொழிந்துள்ளார். அவற்றில் ஒன்று, குடியரசு பதவிக்கு ஒரு வேட்பாளராக நிற்கும் அமைச்சர் சம்பந்தப் பட்டதாகும். மற்றைய இரு திருத்தங்கள் குடியரசுத் தலைவர் சம்பந்தப்பட்டதாகும். இந்த மூன்று திருத்தங்கள் மீதான அவருடைய உரைகளுக்கான எனது பதிலை இரண்டு பாகங்களாகப் பிரித்துக் கொள்ள விரும்புகிறேன். முதல் பாகத்தில், அமைச்சர் சம்பந்தப்பட்ட அவருடைய திருத்தத்தைப் பற்றிக் கூறுகிறேன்.

அமைச்சராகப் பதவி வகிக்கும் ஒருநபர், தேர்தலில் போட்டி யிடுவதற்கு விரும்பினால் அவர் தனது அமைச்சர் பதவியிலிருந்து விலக வேண்டும் என்பது முதலாவது நிபந்தனையாக இருக்க வேண்டும் என்று பேராசிரியர் கே.டி.ஷாவின் திருத்தம் கூறுகிறது. வேறு சொற்களில் கூறுவதெனில், அமைச்சர் பதவியானது தேர்த லுக்கு ஒரு தகுதியின்மையாகும். தன்னுடைய திருத்தத்தின்பால் பேராசிரியர் கே.டி.ஷா.போதிய கவனம் செலுத்தவில்லை என்று எனக்குத் தோன்றுகிறது. முதலாவதாக, ஓர் அமைச்சர் பதவி விலகி னால், பின்னர் இந்தத் திருத்தம் அவசியமற்றதாகும். பேராசிரியர் ஆய்வு செய்யாததும், மிகவும் கேந்திரமானது என்று எனக்குத் தோன்றுகிறதுமான இரண்டாவது விஷயம் இதுதான். அதாவது, குடியரசுத் தலைவர் பதவிக்கான ஒரு வேட்பாளராகத் தன்னை அறிவித்துக் கொள்வதற்கு முன்னால், ஓர் அமைச்சர் பதவி விலக வேண்டுமென்ற அவருடைய திருத்தத்தை நாம் ஏற்றுக்கொள்வ தாக வைத்துக்கொண்டால், பழைய நாடாளுமன்றம் கலைக்கப் படுவதற்கும், புதிய நாடாளுமன்றம் கூடுவதற்கும் இடைப்பட்ட காலத்தில் நிர்வாகத்திற்குப் பொறுப்பாக எந்த அமைச்சரும் இருக்க மாட்டார் என்பது மிகவும் தெளிவு. எனவே நாம் ஆராய வேண்டிய பிரச்சினை இதுதான்: பழைய நாடாளுமன்றம் கலைக்கப்படுவதற் கும் புதிய நாடாளுமன்றம் கூடுவதற்கும் இடைப்பட்ட காலகட்

1. *அ.நி.வி., தொகுதி 12, டிசம்பர்27, 1948, பக்.1034-37.*

டத்தின்போது நிர்வாகம் எப்படி நடைபெறப் போகிறது? புதிய நாடாளுமன்றம் தேர்ந்தெடுக்கப்படுகின்ற வரையில் நிர்வாகத்தை நாம் அதிகாரிகளின் கைகளில் விட்டுவிடப்போகிறோமா, அல்லது நிர்வாக இலாகாக்களின் தலைவர்களிடம் ஒப்படைக்கப் போகி றோமா? அல்லது, இரண்டு அல்லது மூன்று மாத குறுகிய காலக் கட்டத்தின்போது, அரசு நிர்வாகத்தைப் பொறுப்பேற்றுக் கொள்ளும் தற்காலிக அமைச்சர்கள் தொகுதி ஒன்றைக் கண்டறிவதற்கும், அதன் மூலம், தேர்தல்களில் போட்டியிட்டு, ஒரு புதிய நாடாளுமன்றத் தில் முழுக் காலகட்டத்திற்கு அவர்களே அமைச்சர்களாகும் வாய்ப்பை இழப்பதற்குமான ஒருவகைப்பட்ட ஏற்பாடு இருக்க முடியுமா? பேராசிரியர் கே.டி.ஷாவின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப் பட்டால், நாட்டின் அரசில் முழுநிர்வாகக் குழப்பம் ஏற்படும் என்று எனக்குத் தோன்றுகிறது. எனவே, நான் கூறுவதென்னவெனில், (குறுக்கீடு).

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி** (சென்னை: பொது): இது எல்லா அமைச்சர்களையும் குறிப்பிடுவதில்லை. இது ஓர் அமைச்சரை மட்டுமே குறிப்பிடுகிறது.

**திரு. மகாவீர் தியாகி** (ஐக்கிய மாகாணங்கள்: பொது): திரு. துணை அமைச்சரையும்கூடத்தான்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஒவ்வொரு அமைச்சரும் குடியரசுத் தலைவர் தேர்தலில் போட்டியிட விரும்பு கிறார் என்று வைத்துக்கொள்வோம். அப்பொழுது ஒவ்வொரு அமைச்சரும் பதவி விலக வேண்டிவரும்.

அமைச்சர்கள் பொதுவாக தேர்தலில் கோளாறு செய்யக் கூடும், அல்லது தில்லுமுல்லு செய்யக்கூடும் அல்லது நிர்வாகத் தின் மீது செல்வாக்குச் செலுத்தக்கூடும்; இது ஓரளவுக்கு உண்மை யாக இருக்கலாம். ஆனால் அமைச்சர்கள் தேர்தல்களின் மீது செலுத்தும் அல்லது செலுத்தக்கூடிய செல்வாக்கை அகற்றுவதற் காக அரசியல் சாசன வரைவில், சில விதிகளின்கீழ் (விதிகள் 289-292) மத்தியிலும் மாநிலங்களிலும் தேர்தல் ஆணையங்கள் எனப்படும் சிறப்பு அமைப்பைத் தேர்தல்களுக்குப் பொறுப்பாக இருப்பதற்கு வகை செய்யப்பட்டுள்ளது. இவை நாடாளுமன்றத் திற்கும், மாநில சட்டப்பேரவைகளுக்குமான தேர்தல்களுக்குப் பொறுப்பேற்றுக் கொள்ளும். அவை தேர்தல்கள் மீதான முழு மேற்பார்வை, கட்டுப்பாடு மற்றும் நிர்வாகம் செலுத்தும். எனவே தேர்தல்கள்மீது அமைச்சர்கள் தமது செல்வாக்கைச் செலுத்தும்

சாத்தியப்பாடு ஏதாவது இருந்தால் அவை அகற்றப்படும். எனவே இதன் விளைவாக, பேராசிரியர் கே.டி.ஷாவுக்கு ஏற்படுகிற அச்சத்திற்கு மெய்யாகவே சிறிதும் இடமில்லை. எனவே இந்தக் காரணங்களுக்காக, என்னால் அவருடைய திருத்தத்தை ஏற்றுக்கொள்ள இயலாது.

குடியரசுத் தலைவர் சம்பந்தமான அவருடைய திருத்தங்களைப் பொறுத்தமட்டிலும், அவருடைய முதலாவது திருத்தம் எண் 1108, தேசதுரோகத்திற்காக தண்டனை பெற்றது, அரசுக்கு எதிரான ஏதாவது குற்றம், அல்லது அரசியல் சாசனத்தை மீறியது போன்ற சில தகுதியின்மைகளை வரையறுத்துக் கூறுகிறது. விவாதத்திலுள்ள இந்தக் குறிப்பிட்ட விதியில், உதாரணமாக இந்தத் தகுதியின்மைகளை நாங்கள் குறிப்பாகக் குறிப்பிடாததற்கான காரணம், பேராசிரியர் ஷா தனது மனதில் கொண்டுள்ள இதே நோக்கத்துடன் கூடிய பிறவிதிகளை நாம் சேர்த்திருப்பதை உறுப்பினர்கள் நினைவு கூர்வார்களேயானால், தெளிவாகும். இதுதொடர்பாக, 48வது விதியின் (இ) உபவிதியை சபையின் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். ''ஜனாதிபதியாகும் நபர், நாடாளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு தகுதியுடையவராக இருக்க வேண்டும்'' என்று அது கூறுகிறது. இனி, நாடாளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கான தகுதிகள் 83வது விதியில் கூறப்பட்டுள்ளன. 83வது விதியின் உபவிதி (2), நாடாளுமன்றம் அவசியம் என்றோ அல்லது விரும்பத்தக்கது என்றோ கருதி சேர்த்துக் கொள்வதற்கான எந்தத் தகுதியின்மைகளையும் சேர்த்துக் கொள்வதை, நாடாளுமன்றத்திற்கு விட்டுவிடுகிறது. எனவே, நாடாளுமன்றம், 83வது விதி(உ)யின்கீழ் அதற்கு வழங்கப்பட்டுள்ள அதிகாரங்களை அது செலுத்தும்போது, தகுதியின்மைகளின் பட்டியலில் (83வது விதியின்கீழ் ஏற்கனவே பட்டியலிடப்பட்டுள்ளதோடு புதிதாகச் சேர்த்துக் கொள்வதற்கு அதிகாரமளிக்கப்பட்டுள்ளது) பேராசிரியர் கே.டி.ஷா, தமது திருத்தத்தில் வரையறுத்துக் கூறியுள்ள பிரேரணைகளில் சிலவற்றை சேர்த்துக்கொள்வது விரும்பத்தக்கது என்று கருதக்கூடியதும் சாத்தியமே. எனவே, இந்தக் குறிப்பிட்ட விதி, பேராசிரியர் குறிப்பிட்டுள்ள தகுதியின்மைகளைப் பற்றிக் குறிப்பிடாவிட்டாலும், நாடாளுமன்றமானது, 83 ஆவது விதியின் (உ) உபவிதியில் அது இயற்றும் எந்த சட்டத்தின் வாயிலாகவும் கூடுதல் தகுதியின்மைகளைச் சேர்த்துக் கொள்வது மிகவும் சாத்தியமே, அவ்வாறு செய்வதற்கு அதற்கு உரிமையும் உண்டு என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

**திரு. எச்.வி. காமத்:** துணைத் தலைவர் அவர்களே, ஒரு விஷயம் தெளிவுபடுத்தப்பட வேண்டும். 'மனநிலை சரியில்லாதவர்', 'கடனைத் திருப்பிச் செலுத்தும் ஆற்றல் இல்லாது நொடித்துப் போனவர்' ஆகியவை அந்த விதியிலேயே அமைக்கப்படும் அள விற்கு முக்கியமானவை என்று கண்டறிந்துள்ளபோது, இந்தக் கூடுதல் ஜீவாதாரமான மற்றும் அடிப்படையான விஷயத்திற்கு அரசியல் சாசனத்திலேயே ஓர் இடம் வைக்காமல் அதை நாடாளு மன்றத்திற்கு விடுவது எவ்வாறு சரியாகும்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எனக்குத் தெரியாது. இது ஒரு வெறும் தர்க்கவியல் சம்பந்தப்பட்ட விஷயமேயாகும். ஒவ்வொரு தகுதியின்மையும் இங்கு குறிப்பிட வேண்டும் என்று கூறுவதும் முற்றிலும் சாத்தியமே. சில அத்தியாவசியமான விஷ யங்களை மட்டுமே இங்கு குறிப்பிட்டு விட்டுவிட வேண்டும் என்று கூறுவதும் முற்றிலும் சாத்தியமே. அதில் முன்னுக்குப்பின் முரணானது எதையும் நான் காணவில்லை.

இப்பொழுது பேராசிரியர் ஷாவின் கடைசித் திருத்தம் எண் 1125க்கு வருவோம். அவர் பயன்படுத்தியுள்ள வாசகத்தை கவனமாகப் பரிசீலனை செய்வது அவசியம் என்று நினைக்கிறேன். பேராசிரியர் என்ன விரும்புகிறார் என்றால், குடியரசுத் தலைவர் ஆகும் ஒவ்வொரு நபரும் பதவி ஏற்றுக்கொள்வதற்கு முன்னால், அரசின் ஆதரவு பெற்ற அல்லது அரசு தானாகவே நடத்துகிற, அல்லது எந்த எஜென்ஸி மூலமாக நடத்துகிற எந்தத் தொழில் அல்லது நிறுவனத் திலுமிருந்து தனது நலன், உரிமை, உடைமையுரிமை முதலிய வற்றைக் கைவிட வேண்டும், இரண்டாவதாக, அரசு அந்த நலனை குடியரசுத் தலைவரிடமிருந்து விலைக்கு வாங்கிக் கொள்ள வேண்டும் என்கிறார். இது சம்பந்தமாக, எனக்குப்படுகிற முதலாவது விஷயம் என்னவெனில், இது நான் என்றுமே காணாத மிகவும் புதுமையான பிரேரணையாகும். உலகில் வேறு எங்கும் எந்த அரசியல் சாசனத்திலும் இத்தகைய ஒரு நிபந்தனை விதிக்கப்படுவதாக எனக்கு நினைவில்லை. அத்தகைய நிபந்தனை ஏதாவது அவசிய மெனில், அது அமெரிக்காவின் அரசியல் சாசனத்தில் இருக்கிறது என்பதை நான் நினைத்திருக்க வேண்டும். அங்கு குடியரசுத் தலை வருக்கு நிர்வாகக் கட்டுப்பாடு, நிர்வாக விருப்பு உரிமை ஆகிய வற்றைச் செலுத்தும் ஒரு வாய்ப்புள்ளது, எனவே அங்கு சொந்த நலனுக்காகச் செயல்படுவதற்கு மிக அதிகமான வாய்ப்பு உள்ளது.

இருந்தபோதிலும், அமெரிக்காவின் அரசியல் சாசனம் இத்தகைய எந்த ஒரு நிபந்தனையையும் கொண்டிருக்கவில்லை. பேராசிரியர் ஷா, இந்தத் திருத்தத்தை முன்மொழிந்ததற்குக் காரணம், அவருடைய திருத்தத்தின் வடிவத்தில் அவர் முன்வைத்த ஆரம்பப் பிரேரணைக் கான ஒரு பின்விளைவு திருத்தமேயாகும் என்று அவர் கருதுகிறார் என்பதில் ஐயமில்லை. அதாவது நம்முடைய குடியரசுத் தலை வரின் அந்தஸ்து அமெரிக்கக் குடியரசுத் தலைவரின் அந்தஸ்தைப் போன்றே இருக்க வேண்டும் என்று அவர் கருதுகிறார். ஆனால், அமெரிக்கக் குடியரசுத் தலைவருக்கு அளிக்கப்பட்டுள்ள அந்தஸ் திலிருந்து நமது அரசியல் சாசனம் முற்றாக வேறுபட்ட நிலை எடுத்துள்ளது. நான் மீண்டும் மீண்டும் கூறியது போன்று, நம்முடைய குடியரசுத் தலைவர் பெயரளவிலான ஒருவர் மட்டுமேயாகும். அவருக்கு சொந்த விருப்புரிமை கிடையாது. நிர்வாக அதிகாரங்கள் எதுவும் அவருக்கு இல்லை. எனவே, நம்முடைய குடியரசுத் தலை வரைப் பொறுத்தமட்டிலும், இந்த வழிவகை முற்றிலும் அவசிய மற்றதாகும். இது ஒருவேளை அவசியமெனில், அது பிரதம மந்திரிகள் மற்றும் நாட்டின் பிற அமைச்சர்கள் ஆகியோர் சம்பந்த மாகத்தான் இருக்க வேண்டும். ஏனெனில் அவர்களிடம்தான் நாட்டின் நிர்வாகத்தின் முழுக் கட்டுப்பாடு இருக்கிறது. இந்திய அரசின் எந்த நபராவது தன் சொந்த சுயநலத்தைப் பேணும் வாய்ப்பைப் பெற்றிருந்தால், அது பிரதம மந்திரியோ அல்லது அரசின் பிற அமைச்சர்களோதான்; எனவே அத்தகைய வழிவகை அவர்களின் மீதுதான், அவர்களின் பதவிக் காலத்தின் மீதுதான் சுமத்தப்பட வேண்டுமேயன்றி, குடியரசுத் தலைவரின் மீது அல்ல.

எழுகின்ற மூன்றாவது பிரச்சினை - இது ஒரு மிகவும் ஸ்தூல மான பிரச்சினை என்று நான் கருதுகிறேன்: இதுதான்- அத்தகைய நிபந்தனை ஏதாவது நாம் வரையறுத்துக் கூறுவதாக வைத்துக் கொள் வோம். நாம் வாழ்கின்ற சூழ்நிலைமைகளில், குடியரசுத் தலைவர் பதவிக்குப் போட்டியிடும் எந்த வேட்பாளரையாவது, பேராசிரியர் ஷா வரையறுத்துள்ள நிபந்தனைகளுக்கு உட்படும்படிச் செய்வது சாத்தியமா? இந்த நிபந்தனைகளையெல்லாம் விதித்தால், பேரா சிரியர் ஷாகூட இந்திய யூனியன் குடியரசுத் தலைவராவதற்கு முன் வருவாரா என்று நான் ஐயப்படுகிறேன்.

**பேராசிரியர் கே.டி. ஷா:** பேச்சாளர்களை இடைமறிக்கும் வழக்கம் என்னிடத்தில் கிடையாது. ஆனால், என்னைப் பொறுத்த

மட்டிலும் இந்த நிபந்தனைகளையெல்லாம் பூரணமாக நிறை வேற்றுவேன் என்று அவருக்கு உறுதிகூறுகிறேன். (சிரிப்பு)

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் மகிழ்ச்சி அடைகிறேன். ஆனால், குடியரசுத்தலைவர் தேர்தலில் பேராசிரியர் ஷா ஒருவர் மட்டுமே வேட்பாளராக இருப்பார் என்ற ஊகத்தின் பேரில் நாடு செயல்பட முடியாது (சிரிப்பு). பல வேட்பாளர்கள் போட்டியிடுவதில்தான் பாதுகாப்பு அடங்கியுள்ளது. எனவே, நடைமுறைக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, இந்தக் குறிப்பிட்ட பதவிக்குப் போதிய அளவு வேட்பாளர்கள் போட்டியிட வேண்டுமா என்பது குறித்து நாம் பரிசீலனை செய்ய வேண்டும். இந்தத் திருத்தத்தின் மிகவும் தூய்மையான தன்மை ஒருபுறமிருக்க, இந்தத் திருத்தத்தை நாம் ஏற்றுக்கொண்டால், அரசியல் சாசனத் திலிருந்து இந்தக் குறிப்பிட்ட வழிவகையை நாம் நடைமுறையில் நிறுத்தி வைப்பதாகும்.

இந்தக் காரணங்களினால் இந்தத் திருத்தங்கள் எதையும் நான் ஏற்றுக்கொள்ளவில்லை.

**திரு. எச்.வி. காமத்:** வேட்பாளரின் நலன் அல்லது பங்கை வெளிப்படுத்துவதையும்கூட டாக்டர் அம்பேத்கர் எதிர்க்கிறாரா? அதுபோன்ற ஓர் அறிவிப்பை (பிரகடனம்) கூட அவர் எதிர்க்கிறாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆனால் திருத்தம் அதுவல்லவே.

**திரு. எச்.வி. காமத்:** அது திருத்தத்தின் ஒரு பகுதியாகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆனால் அது திருத்தமல்லவே.

**திரு. துணைத் தலைவர்:** இப்பொழுது நான் திருத்தங்களை ஒன்றன்பின் ஒன்றாக வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

*(கீழ்வரும் இரு திருத்தங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. மூன்று திருத் தங்கள் நிராகரிக்கப்பட்டன.)*

**திரு. துணைத் தலைவர்:** பிரேரணை என்னவெனில்:

''47வது விதியின் (2) வது துணைவிதியிலும், 2வது துணைவிதியின் விளக்கத்திலும் 'எந்தப் பதவியோ அல்லது வருமானம் அளிக்கும் தகுதியோ' என்னும் சொற்கள் வருகின்ற இடங்களிலெல்லாம், அவற்றை நீக்கி விட்டு, 'ஆதாயம் அளிக்கும் எந்தப் பதவியும்'' என்ற சொற்கள் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்.''

**திரு. துணைத் தலைவர்:** பிரேரணை என்னவெனில்:

''47வது விதியின் (2) வது துணை விதிக்கான விளக்கத்தின் (அ) உப விதிக்கு பதிலாக, பின்வருவது சேர்த்துக்கொள்ளப்பட வேண்டும்:

''(அ) அவர், முதலாவது அட்டவணையின் பகுதி I ல் தற்காலத்திற்குக் குறிப்பிடப்பட்டுள்ள எந்த ஒரு மாநிலத்தின் ஆளுநர், அல்லது இந்தியாவுக்கு அல்லது அத்தகைய எந்த மாநிலத்திற்குமான ஓர் அமைச்சர் அல்லது''

திருத்தப்பட்ட வடிவத்தில் விதி 47 ஏற்றுக்கொள்ளப்பட்டு, அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

★ ★ ★

## விதி 47-அ

[1]**திரு. தாஜமுல் ஹுசேன்:** ஐயா, என்னுடைய அபிப்பிராயத்தில், இது ஒரு நியாயமான திருத்தம்; ஆனால் இந்தத் திருத்தத்தை மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக்கொள்ள மாட்டார் என்று அஞ்சுகிறேன். பேராசிரியர் ஷா, அழகான திருத்தங்களைக் கொண்டு வருகிறார். ஆனால் அவை எல்லாம் நிராகரிக்கப்படுகின்றன. ஏனெனில் வரைவு அரசியல் சாசனத்திற்கு பொறுப்பாயுள்ள மாண்புமிகு அமைச்சர் அவற்றுக்கு ஆதரவாக இல்லை. எனவே, உங்களுடைய அனுமதியுடன், இதற்கு சொல் சம்பந்தப்பட்ட ஒரு திருத்தத்தை முன்மொழிய விரும்புகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** அதை நீங்கள் செய்வதற்கு நான் அனுமதிக்க முடியாது. ஏனெனில், இதரர்களும் சொல் ரீதியான திருத்தங்களை முன்மொழிய வருவார்கள். டாக்டர் அம்பேத்கர் இதை ஏற்றுக்கொள்ளும்படி நீங்கள் ஓர் ஆலோசனை கூறலாம்.

1. அ.நி.வி., தொகுதி 7, டிசம்பர் 27, 1948, பக். 1040.

**திரு. தாஜமுல் ஹுசேன்:** என்னுடைய ஆலோசனை இதுதான். ஒருநபர் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டால், அவர் தனது சொந்த சொத்துக்களை அறிவித்து, அவை அனைத்தின் மீதான உரிமையைக் கைவிட்டு விடவேண்டும் என்று ஷாவின் திருத்தம் கூறவில்லை. அரசின் உதவிபெற்ற அல்லது ஆதரிக்கப் பெற்ற எந்த நிறுவனத்திலும் அவர் தனது உரிமைகள், பங்குகள் அல்லது நலன்களைக் கைவிடவேண்டும் என்று மட்டுமே அவர் கூறுகிறார். மேலும் அத்தகைய உரிமைகள் முதலியவற்றை இந்திய அரசாங்கம் மேற் கொண்டு, அவருக்காக அவற்றைத் தனது பாது காப்பில் வைத்திருக்க வேண்டும் என்றும் அது கூறுகிறது. அது இந்திய அரசின் வசம் வந்து விடுமாகையால், டாக்டர் அம்பேத்கர் அதை ஏற்றுக்கொள்வார் என்று நினைத்தேன். ஆனால், இந்திய அரசின் சட்ட அமைச்சர் என்ற முறையில், அதை ஏற்றுக்கொள்ளப் போவ தில்லை யென்றால், அப்பொழுது 'இந்திய அரசு'க்கு பதிலாக, அது குடியரசுத் தலைவரின் மனைவிக்கும் குழந்தைகளுக்கும் போய்ச் சேரட்டும். அது ஒரு மிகவும் சாதாரண விஷயமாகும்... நான் அந்தத் திருத்தத்தை ஆதரிக்கிறேன். மற்றும் எனது வாய்மொழியான திருத் தத்தை முன்மொழிகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** முன்மொழிவதற்குத் திருத்தம் ஏதுமில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, எனக்கு சொல்வதற்கு வேறு ஒன்றுமில்லை.

*(பேராசிரியர் கே.டி.ஷாவின் திருத்தம் வாக்கெடுப்புக்கு விடப்பட்டது. ஆனால் சபை அதை நிராகரித்துவிட்டது.)*

## விதி 48

[1]**திரு. துணைத் தலைவர்:** ஒவ்வொரு திருத்தமாகப் பார்க்கும் போது, திருத்தங்கள் எண்:1127, 1128 மற்றும் 1130 ஆகியவை ஒரே மாதிரி முக்கியத்துவமுடையவை என்று காண்கிறேன். திருத்தம் எண் 1130 மிகவும் சர்வாம்ச ரீதியானதாகத் தோன்றுகிறது, அதை முன்மொழியலாம்.

---

1. அ.நி.விவாதங்கள், தொகுதி 7, டிசம்பர் 27, 1948, பக். 1040.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, திரு. துணைத் தலைவர் அவர்களே, நான் கீழ்வருவனவற்றை முன்மொழிகிறேன்:

'48வது விதியின் (1) வது துணைவிதியில்:-

''(அ) 'நாடாளுமன்றத்தின் அல்லது' என்ற சொற்களுக்கு பதிலாக, 'நாடாளுமன்றத்தின் ஏதாவது ஓர் அவையின் அல்லது ஒரு மாநில சட்ட மன்றத்தில்' என்ற சொற்களை சேர்த்துக் கொள்ளவும்;

(ஆ) 'நாடாளுமன்ற உறுப்பினர் அல்லது' என்ற சொற்களுக்கு பதிலாக, 'நாடாளுமன்றத்தின் ஏதாவது ஓர் அவையின் உறுப்பினர், அல்லது ஓர் மாநில சட்டமன்ற உறுப்பினர்' என்ற சொற்களை சேர்த்துக்கொள்ளவும்.

(இ) 'நாடாளுமன்றத்தில் அல்லது அத்தகைய சட்டமன்றத்தில், எது பொருத்தமோ அதன்படி' என்ற சொற்களுக்கு பதிலாக, 'அந்த அவையில்' என்ற சொற்களை சேர்த்துக் கொள்ளவும்.''

பூர்வாங்க வாசகத்தில் ஏதோ குறைபாடு இருந்தது, அதை மேம்படுத்துவதற்கு நாங்கள் முயன்றுள்ளோம்.

**திரு. நஸிருத்தீன் அகமது** (மே.வங்கம்: முஸ்லீம்): திரு. துணைத்தலைவர் அவர்களே, ஒரு விதியின் வாசகத்தை அழகுபடுத்துவதை நோக்கமாகக் கொண்ட திருத்தங்கள் அனுமதிக்கப்பட மாட்டாது என்று, சில விதிமுறைகளை ஏற்றுக்கொள்ள நாம் ஏற்கனவே முடிவு செய்துள்ளோம். வாசகத்தை மேம்படுத்துவது என்பது இப்பொழுது ஒரு திருத்தத்தின் நோக்கங்களில் ஒன்றாக இல்லை. இந்தத் திருத்தம் முன்மொழியப்படுவதற்கு முன்னால், அது ஒரு பிரமாதமான திருத்தமாகத் தோன்றியது. ஆனால் விதியின் வாசகத்தை மேம்படுத்துவது மட்டுமே இதனுடைய நோக்கமென்று டாக்டர் தெளிவாக ஒத்துக்கொண்டுள்ளார். அந்தக் கண்ணோட்டத்தில், இது முன்மொழியப்பட்டு விட்டாலும்கூட, இதை வாக்கெடுப்புக்கு விடவேண்டிய அவசியமில்லை.

**திரு. துணைத் தலைவர்:** தலைவருக்கு சில அதிகாரங்கள் வழங்கப்பட்டுள்ளன, சிறந்த வழி என்று தோன்றுகிற விதத்தில் தலைவர் அதைச் செயல்படுத்தப் போகிறார்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

1. அ.நி.விவாதங்கள், தொகுதி 7, டிசம்பர் 27, 1948, பக். 1040.

''48வது விதியின் (2) வது துணைவிதியில் 'அல்லது வருமானம் பெறும் பதவி' என்ற சொற்களுக்கு பதிலாக, 'ஆதாயம் அளிக்கும்' என்ற சொற்களை சேர்த்துக்கொள்ளவும்.''

ஐயா, ஒரேசீரான தன்மைக்காக மட்டுமே இந்தத் திருத்தம்.

**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் எண் 1134. இதை வாக்கெடுப்புக்கு விடுவதற்கு நீங்கள் விரும்புகிறீர்களா?

**திரு. எச்.வி. காமத்:** டாக்டர் அம்பேத்கர் என்னை முந்திச் சென்று விட்டார்; ஆனால், திருத்தம் எண் 1135ஐ நான் முன்மொழிய விரும்புகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** இப்பொழுது நாம் திருத்தம் எண். 1134 வரைக்கும் தான் வந்திருக்கிறோம். திருத்தம் எண் 1135ஐ நீங்கள் முன்மொழியலாம்.

**திரு. எச்.வி. காமத்:** ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

''48வது விதியின் (3) வது துணைவிதியில் 'குடியரசுத்தலைவருக்கு அதிகாரபூர்வமான இல்லம் இருக்கவேண்டும், மற்றும்' என்ற சொற்கள் நீக்கப்படவேண்டும்.

அதாவது, திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டால், அந்தத் துணை விதி இவ்வாறு இருக்கும்:

''குடியரசுத் தலைவருக்கு இத்தகைய ஊதியங்களும் அலவன்சுகள் முதலியனவும் வழங்கப்பட வேண்டும்........''

இந்தத் திருத்தத்தை முன்மொழியும் போது, டாக்டர் அம்பேத்கரிடமிருந்து சிறிது தெளிவை வேண்டுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எந்தத் திருத்தம்?

**திரு. எச்.வி. காமத்:** திருத்தம் எண் 1135. இந்தத் திருத்தத்தை சபையின் முன்னால் முன்மொழிவதில் என்னுடைய நோக்கம்,

---

1. அ.நி.விவாதங்கள், தொகுதி 7, டிசம்பர் 27, 1948, பக். 1042.

இத்தகைய ஒரு முக்கியத்துவமில்லாத, இப்படிப்பட்ட ஒரு சிறிய விவரத்தை நமது அரசியல் சாசனத்தில் இணைத்துக் கொள்வதற்கான அவசியம் குறித்து, ஒரு சிறிய தெளிவை ஏற்படுத்துமாறு டாக்டர் அம்பேத்கரை வேண்டிக்கொள்வதேயாகும்.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, திரு. துணைத்தலைவர் அவர்களே, முன்மொழியப்பட்ட திருத்தங்கள் எதையும் என்னால் ஏற்றுக்கொள்ள முடியாமைக்கு வருந்துகிறேன். பேராசிரியர் ஷாவின் திருத்தம் எண் 1138 ஓரளவு தேவைக்கு மிகுதியான ஒன்றாகும் என்று எனக்குத் தோன்றுகிறது. குடியரசுத் தலைவருக்கு அலுவலக உதவி வழங்கப்படுவதற்கு வகை செய்கிறது. அரசியல் சாசனத்தில் இதற்கு ஏதாவது வழிவகை செய்யப்பட்டிருந்தாலும் அல்லாவிட்டாலும் அது செய்யப்படும் என்பதில் எவ்வித ஐயப்பாடும் இல்லை.

குடியரசுத் தலைவர் ஓய்வு பெறும்போது அவருக்கு ஓய்வு ஊதியம் வழங்கப்பட வேண்டும் என்று கோரும் அவருடைய இரண்டாவது திருத்தம் எண் 1140 ஐப் பொறுத்தமட்டிலும், நாடாளுமன்றத்தின் உறுப்பினர்களாகி, பொதுமக்களுக்கு சேவை செய்யும் நபர்கள், பெருமளவு சொந்தநலனைத் தியாகம் செய்கிறார்கள், எனவே அவர்கள் தமது வாழ்வின் இறுதிக்காலத்தில் கவனிக்கப்படாமல், வசதிகள் இல்லாமல் விடப்படக்கூடாது என்று அவர் வெளிப்படுத்தியுள்ள உணர்வை நான் ஏற்றுக்கொள்கிறேன. அதே சமயத்தில், இந்தக் குறிப்பிட்ட திருத்தத்தையும் ஏற்றுக்கொள்வது சிரமமானதாகும். அவருடைய கூற்றுப்படி, குடியரசுத் தலைவராகி, தனது பதவிக்காலமாகிய 5 ஆண்டுகள் சேவையாற்றும் ஒவ்வொரு நபரும், 5 ஆண்டுகள் முடிவில், ஓய்வூதியம் பெறுவதற்கு உரிமை இருக்க வேண்டும் என்பதாகும். இரண்டாவது சிரமம் என்னவெனில் அவருடைய திருத்தத்தின்படி, அவருடைய வாழ்நாள்காலத்தில் அவருடைய ஓய்வூதியம் மாற்றப்படக்கூடாது என்பதாகும். இப்பொழுது, உதாரணமாக, குடியரசுத் தலைவராகிய ஒரு நபர், தம்முடைய முழுப் பதவிக் காலத்தையும் முடித்தவர், பேராசிரியரின் திருத்தத்தின்படி ஓய்வூதியத்தையும் பெற்றவர். ஒருவேளை மீண்டும் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டால், நிலைமை

1. அ.நி.விவாதங்கள், தொகுதி 7, டிசம்பர் 27, 1948, பக். 1042.

என்னாகும்? குடியரசுத் தலைவர் என்ற முறையில், அவர் தொடர்ந்து தனது சம்பளத்தைப் பெறும்போதே, கூடுதலாக, தமது ஓய்வூதியத்தையும் பெறுவதற்கு அவருக்கு உரிமையுண்டு என்பதே நிலைமை. அவருடைய ஓய்வூதியத்தை அவருடைய சம்பள அளவுக்குக் கொண்டு வரும் வகையில் குறைப்பதற்கும் கூட நம்மால் முடியாது. எனவே, இந்தத் திருத்தம் முன்மொழியப்பட்டுள்ள வடிவத்தில் அதை யாராலும் ஏற்றுக்கொள்வது நடைமுறை சாத்தியமானதல்ல என்று நினைக்கிறேன். ஆனால் நாடாளுமன்றத்தில் ஒரு குறிப்பிட்ட கால சேவைக்குப்பின், குடியரசுத் தலைவர் உள்ளிட்ட உறுப்பினர்கள், ஒருவகைப்பட்ட ஓய்வூதியத்திற்குத் தகுதியுடையவர்களாக இருக்க வேண்டும் என்ற பொதுவான கருத்தை அவர் வெளிப்படுத்தியிருக்கிறார் என்பதில் ஐயமில்லை. பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தில் அமலாக்கப்பட்டுள்ள இந்தக் கருத்து பாராட்டத்தக்க ஒன்று என்றே நினைக்கிறேன். இந்த உண்மையை நமது வருங்கால நாடாளுமன்றம் கவனத்தில் கொள்ளும் என்பதில் எனக்கு ஐயமில்லை.

பேராசிரியர் காமத் எழுப்பியுள்ள, வீடு பற்றிய பிரச்சினை சம்பந்தமாக..........[1]

**திரு. எச்.வி. காமத்:** ஐயா, நான் பேராசிரியர் காமத் அல்ல.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆனால் அவர் பேராசிரியர் என்று அழைக்கப்படுவதற்கு மிகவும் தகுதியுடையவர் தான், ஏனெனில் அவர் மிகவும் அடிக்கடி பேசுகிறார் (சிரிப்பு).

**திரு. எச்.வி. காமத்:** நான் ஒருபோதும் ஒரு பேராசிரியர் ஆக வேண்டாம் என்று கடவுளை வேண்டிக்கொள்கிறேன். (சிரிப்பு).

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** சரி, எனது நண்பர் திரு.காமத் குடியரசுத் தலைவரின் அதிகாரபூர்வமான இல்லம் சம்பந்தமான இந்த விதியை நாம் ஏன் இங்கு சேர்த்துள்ளோம் என்பதை விளக்கும்படி என்னைக் கேட்டுள்ளார். இதையும் இதர சிறிய விஷயங்களையும் குறிப்பிடுவதன் மூலம் அரசியல் சாசனத்தின் மீது சுமை ஏற்றியிருப்பதாக என்னைக் கடிந்து கொள்ளவும்

---

1. அ.நி.விவாதங்கள், தொகுதி 7, டிசம்பர் 27, 1948, பக். 1044-46.

செய்கிறார். இது ஒரு சிறிய விஷயமாக இருக்கக்கூடும். அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்படாமலும் இருந்திருக்கக் கூடும். ஆனால், நான் திரு. காமத் அவர்களைக் கேட்க விரும்பும் கேள்வி இதுதான்: குடியரசுத் தலைவருக்கு அதிகாரபூர்வமான இல்லம் இருக்க வேண்டுமென்று அவர் விரும்புகிறாரா. இல்லையா? அதற்கு நாடாளுமன்றம் வகைசெய்யவேண்டுமா, வேண்டாமா? அந்தப் பிரேரணை அரசியல் சாசனத்திலேயே இடம்பெற்றிருந்தாலும்கூட அது பெரிய தவறாகுமா? அவருடைய நோக்கம்...

*திரு. எச்.வி. காமத்:* ஐயா, பிரதம மந்திரிக்கு அதிகாரபூர்வ இல்லம் இருக்குமா? இருக்காதா என்பதை நான் தெரிந்து கொள்ள லாமா?

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** ஆம். இது ஒரு வெறும் தர்க்கவியல் விஷயமேயாகும். குடியரசுத் தலைவருக்கு ஓர் அதிகாரபூர்வமான இல்லம் இருக்க வேண்டும் என்ற பிரேரணையை அவர் ஆதரிக்கிறாரா, இல்லையா என்பதை தெரிந்து கொள்ள விரும்புகிறேன். அந்தப் பிரேரணையை அவர் ஏற்றுக்கொள்ள விரும்புகிறேன். அந்தப் பிரேரணையை அவர் ஏற்றுக்கொள்கிறார் என்றால், அந்தப் பிரேணை அரசியல் சாசனத்திலேயே அடங்கி யிருக்கிறதா அல்லது இந்தப் பிரச்சினையை முடிவு செய்வது வருங்கால நாடாளுமன்றத்திற்கு விடப்படுகிறதா என்பது அவ்வளவு முக்கியமான விஷயமல்ல. நாம் இந்த விஷயத்தை அரசியல் சாச னத்தில் சேர்ந்திருப்பதற்குக் காரணம், இந்திய அரசு சட்டத்தில், இந்திய அரசு சட்டத்தின் இரண்டாவது அட்டவணையினால் வழங்கப்பட்டிருக்கும் அதிகாரத்தின்கீழ், இந்தியா மந்திரியினால் வெளியிடப்பட்டுள்ள பல ஆணைகளில், கவர்னர்-ஜெனரலுக்கும் ஆளுநர்களுக்குமான அதிகாரபூர்வமான இல்லங்கள் வகுத்தளிக் கப்பட்டுள்ளன; எனவே அரசியல் சாசனத்தில் இந்தக் குறிப்பிட்ட விதியை இணைப்பதில், ஏற்கனவே உள்ள நடைமுறையை நாம் பின்பற்ற மட்டுமே செய்திருக்கிறோம். எனவே நாம் நல்ல உணர் வுக்கு எத்தகைய பெரிய தீங்கும் இழைக்கவில்லை, அல்லது நாம் செய்யத் தேவையில்லாத ஏதோ ஒரு விஷயத்தை செய்துவிடவும் இல்லை என்று கருதுகிறேன்.

*திரு. எச்.வி. காமத்:* ஐயா, ஒருவிளக்கம் தேவை. 48வது விதியின் இந்தக் குறிப்பிட்ட துணைவிதி, குடியரசுத் தலைவருக்கு

ஒன்றுக்கு மேற்பட்ட அதிகாரபூர்வமான இல்லங்கள் வழங்கப்படு வதற்குக் குறுக்கே நிற்குமா என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா? அந்தத் துணைவிதி குடியரசுத் தலைவருக்கு 'ஓர் அதிகாரபூர்வமான இல்லம்'' என்று மட்டுமே கூறுகிறது.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அவ்வாறு இல்லவே இல்லை. இரு அதிகாரபூர்வ இல்லங்கள் இருக்கக்கூடும்.

பின்னர், திரு.சர்வாத்தேயின் எண் 28 திருத்தம் சம்பந்த மாக, இந்திய ஒன்றியத்துடன் இணையும் சமஸ்தானங்களின் அமைப்புப் பற்றி விவாதிக்கும்போது, இந்த விஷயமும் விவாதிக்கப் பட வேண்டியிருக்கும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இன்று நிலைமை மிகவும் தெளிவற்றாக இருப்பதால், திரு. சர்வாத்தே யோசனை கூறியுள்ள வகைப்பட்ட எந்த விதியையும் இயற்றுவது மிகவும் சிரமமானதாகும்.

*திரு. துணைத் தலைவர்:* இப்பொழுது திருத்தங்கள் ஒவ் வொன்றாக வாக்கெடுப்புக்கு விடப்படும். டாக்டர் அம்பேத்கரின் பெயரில் உள்ள திருத்தம் எண் 1130.

(மேலே கூறப்பட்ட டாக்டர் அம்பேத்கரின் அனைத்துத் திருத்தங்களும் ஏற்றுக்கொள்ளப்பட்டன. திரு. சர்வாத்தே, திரு. நஸிருத்தீன் அகமது, திரு.காமத், மற்றும் பேராசிரியர் கே.டி.ஷாவின் பெயரிலுள்ள எல்லாத் திருத்தங்களும் நிராகரிக்கப்பட்டன. திருத்தப்பட்ட வடிவத்தில் 48வது விதி ஏற்றுக்கொள்ளப் பட்டு, அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)

★ ★ ★

## 49வது விதி

[1]*திரு. துணைத் தலைவர்:* இனி நாம் 49வது விதியை எடுத்துக் கொள்வோம்.

*திரு.டி.டி.கிருஷ்ணமாச்சாரி:* ஐயா, திரு.துணைத்தலைவர் அவர்களே, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

> ''49வது விதியில், 'இந்தியாவின் பிரதம நீதிபதி' என்ற சொற்களுக்குப் பின்னால்' 'அல்லது' அவர் இல்லாதபட்சத்தில், உச்சநீதிமன்றத்தின் (கிடைக்கக் கூடிய) மிகவும் மூத்த நீதிபதி' என்ற சொற்களை சேர்த்துக் கொள்ளவும்.''

1. அ.நி.வி. தொகுதி 7, டிசம்பர் 27, 1948, பக். 1047.

ஐயா, இந்தியாவின் பிரதம நீதிபதி அந்த சமயத்தில் இல்லாமலிருந்தால், வேறு ஒரு நீதிபதி அவருடைய அலுவல்களைச் செய்வதற்கு ஒரு வழிவகை செய்ய வேண்டும் என்பதுதான் இதன் நோக்கம். உச்சநீதிமன்றத்தின் மிகவும் மூத்த நீதிபதி இந்த அலுவலைச் செய்ய வேண்டும் என்பது மிகவும் சரியானதே. ஐயா, இதற்கு வேறு விளக்கம் தேவையில்லை என்பதால், இந்தத் திருத்தத்தை சபை ஏற்றுக் கொள்ளுமென்று நம்புகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் அவர்களே, அந்தத் திருத்தத்தை நீங்கள் ஏற்றுக்கொள்கிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம், ஏற்றுக் கொள்கிறேன்.

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் பேசலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, திரு. துணைத் தலைவர் அவர்களே, திரு.டி.டி.கிருஷ்ணமாச்சாரி முன்மொழிந்த திருத்தம், எண் 1144 ஐ ஏற்றுக்கொள்வதற்கு தயாராயிருக்கிறேன். மற்றும் திரு. காமத் முன்மொழிந்து, தியாகியின் திருத்தத்தால் திருத்தப்பட்ட திருத்தம் எண் 1146 ஐயும் ஏற்றுக்கொள்கிறேன்.

முதலாவது திருத்தத்தைப் பொறுத்தமட்டிலும், அதாவது திரு.டி.டி. கிருஷ்ணமாச்சாரி முன்மொழிந்த திருத்தம் சம்பந்தமாக, அதிக விவாதம் தேவையில்லை. என்னுடைய பெயரில் உள்ள திருத்தத்தைக் காட்டிலும் அவருடைய திருத்தம் நிச்சயமாக மேம்பட்டது.

இரண்டாவது திருத்தம் எண் 1146 ஐப் பொறுத்தமட்டிலும், திரு. தியாகியினால் திருத்தப்பட்ட வடிவத்தில் நான் அதை ஏற்றுக் கொள்வதற்குத் தயாராயிருப்பதை முன்னிட்டு, அதனுடைய தகுதிகளைப் பற்றிய விவாதத்தில் நான் இறங்கவேண்டியதில்லை என்று நினைக்கிறேன். ஒருவேளை, மூலவரைவில், 'கடவுளின் பெயரால்'' என்ற சொற்களை வரைவுக்குழு ஏன் சேர்க்கவில்லை என்பது குறித்து ஒரு சில சொற்கள் நான் கூறவேண்டியது அவசியமாகலாம். ஐயா, இந்த விஷயத்தை வரைவுக்குழு பூரணமாகப் பரிசீலனை செய்யவில்லை என்று நினைக்கிறேன்; எனவே, முதலிலேயே அந்த

1. அ.நி.வி., தொகுதி 7, டிசம்பர் 27, 1948, பக். 1060-62.

சொற்களை அவர்கள் ஏன் சேர்த்துக் கொள்ளவில்லை என்பதற்கு என்னால் போதிய காரணம் கூற இயலாது.

என்னைப் பொறுத்தமட்டிலும், இந்த விஷயம் ஓரளவு பரிசீலனை செய்யப்பட வேண்டும் என்று உணர்கிறேன். சபை என்னை அனுமதித்தால், இந்த விஷயம் பற்றிய என்னுடைய சொந்தக் கருத்தைக் கூறுகிறேன். இதுகுறித்து நான் இவ்வாறுதான் உணர்ந்தேன். என்னுடைய கருத்தின்படி, 'கடவுள்' என்ற சொல்லுக்கு வெவ்வேறு மதங்களில் வெவ்வேறு முக்கியத்துவம் அளிக்கப் பட்டுள்ளது. கிறிஸ்துவர்களும் முஸ்லீம்களும் கடவுளை நம்புகின்றனர். இது ஒரு வெறும் கருத்தமைப்பு மட்டுமல்ல, உலகை ஆளும் ஒரு சக்தி என்று கருதுகிறோம், எனவே அது கடவுளிடம் நம்பிக்கை கொண்டுள்ளவர்களின் தார்மீக மற்றும் ஆன்மீக நடவடிக்கைகளையும் ஆள்கிறது. இந்து சமயத் தத்துவத்தைப் பொறுத்த மட்டிலும், 'ஈஸ்வரன்'', அல்லது, அதைக் காட்டிலும் ஒரு பெரிய வார்த்தையாகிய - 'பரமேஸ்வரன்'' என்பது ஒரு கருத்தின், ஒரு கருத்தமைப்பின் கூட்டுமொத்தம் மட்டுமேயாகும் என்று நான் கருதுகிறேன். நான் முழுமையாகத் தவறாக இருக்கலாம், நான் இந்தப்பொருள் பற்றிய ஓர் ஆராய்ச்சி மாணவன் என்று பாசாங்கு செய்யவில்லை. நான் கூறியது போன்று நுண்கணித மொழியைப் பயன்படுத்துவதெனில், கூட்டுத் தொகைகளை ஒன்றாக வைத்து, அவற்றுக்குப் பொதுவான ஒன்றைக் கண்டுபிடிக்கிறோம். அதை ''எஸ்'' என்றழைக்கிறோம். அது ஒரு மொத்தமான கூட்டுத் தொகையேயாகும். அதற்குப் பின்னால் ஸ்தூலமாக ஒன்றுமில்லை. இந்து சமயத் தத்துவத்தில் ஸ்தூலமாக ஏதாவது இருக்கிறதென்றால், அது ''பிரம்மா'', ''விஷ்ணு'', ''மகேஷ்வரன்'', ''சிவன்'', ''சக்தி'' ஆகியவையேயாகும். சக்திகள் என்று இந்துக்களால் ஏற்றுக்கொள்ளப் பட்டவை உலகை ஆளுகின்றன. வரைவுக்குழு இதன் அடிப்படையில் செயலாற்றி, அடிக்கோடிட்டுக் காண்பிக்க வேண்டிய தேவையை ஏற்படுத்தும் சொற்றொடர்களை பயன்படுத்துவது மிகவும் சிரமமாகப் போயிருக்கும் என்று எனக்குத் தோன்றுகிறது. கடவுள் என்பதற்குக்கீழே சிவன், விஷ்ணு, பிரம்மா, சக்தி முதலானவற்றைக் குறிப்பிட்டிருக்க வேண்டியது ஏற்பட்டிருக்கும். இத்தகைய சங்கடமான நிலைமையின் காரணமாகத்தான் அந்த நிலைமையை நாங்கள் ஒன்றும் குறிப்பிடாமல் சூன்யமாக விட்டுவிட்டோம். வரைவுக்குழுவில் இதை நீங்கள் காணமுடியும்.

*திரு. ஏ.வி. தக்கர் (கத்தியவார் ஐக்கிய சமஸ்தானம் (சௌராஷ்டிரா)): ஆனால் எல்லோருக்கும் மேலே ஒருவர் இருக்கிறார்.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *ஆயினும் இந்தத் திருத்தம் கொண்டு வரப்பட்டிருப்பதற்காக நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். இப்பொழுது சில உறுப்பினர்கள் இந்தத் திருத்தத்திற்கு ஆட்சேபனை தெரிவித்துள்ளனர். அரசியல் சாசனத்தில் கடவுள் என்ற சொல்லைப் பயன்படுத்தியிருப்பதானது, மதச்சார்பற்ற அரசு என்று பிரகடனப்படுத்தியிருப்பதன் தன்மையையே மாற்றிவிடும் என்று அவர்கள் அஞ்சுகின்றனர். கடவுள் என்ற சொல் பயன்படுத்தப்பட்டிருப்பதானது - அந்தப் பிரச்சினையை எழுப்புவதேயில்லை என்பதே என்னுடைய கருத்து - கடவுள் என்ற சொல் ஏன் உபயோகப்படுத்தப்பட்டுள்ளது என்பதற்கான காரணம் மிகவும் எளிதானது. அரசியல் சாசனம் குடியரசுத் தலைவருக்குச் சில கடப்பாடுகளை வகுத்துக் கூறுகிறது. அந்தக் கடப்பாடுகளை இருவகைப்பட்டவையாகப் பிரிக்கலாம். சட்டபூர்வ அனுமதியுள்ள கடப்பாடுகள் உண்டு. இதன்படி சட்டப்படியான தண்டனைக்கும் வகை செய்யப்பட்டுள்ளது. சட்டபூர்வமான விதிமுறைகளுக்கு வகை செய்யப்படாத கடப்பாடுகளும் உண்டு, இதில் எந்தத் தண்டனைக்கும் வகைசெய்யப்படவில்லை. இதன் விளைவாக, ஒவ்வொரு அரசியல் சாசனத்திலும் எப்போதும் இந்தக் கேள்வி எழுகிறது. சட்டப்படி எத்தகைய குற்ற ஆதாரமும், எத்தகைய தண்டனையும் விதிக்கப்படும் சாத்தியப்பாடு இல்லாத, ஒரு குறிப்பிட்ட அலுவலர் மீது சுமத்தப்படும் அத்தகைய கடமைகள், அத்தகைய கடப்பாடுகளுக்கு ஆதாரம் எதுவாக இருக்க வேண்டும்? எந்தக் குற்ற அல்லது சட்டப்படியான ஆதாரம் இல்லாத இந்த தார்மீகக் கடமைகள் வெறும் விருப்பப்பூர்வமான வெற்றுரைகள் அல்ல என்று நாம் முடிவு செய்கிற அல்லது நம்புகிறவரையில், நாம் ஏதாவது வகைப்பட்ட ஆதாரத்தை ஏற்படுத்தவேண்டும் என்பது வெளிப்படை. சிலருக்குக் கடவுள் ஓர் ஆதாரமாகும். தாங்கள் கடவுளின் பெயரால் ஒரு சபதம் எடுத்துக்கொண்டால், கடவுள் பிரபஞ்சத்தின், அதுபோன்றே, அவர்களின் தனிப்பட்ட வாழ்க்கைகளில் ஆளும் சக்தியாக இருக்கும் நிலையில் கடவுளின் பெயரால் எடுத்துக்கொள்ளப்படும் பிரமாணம் கடப்பாடுகளை நிறைவேற்றுவதற்கு அவசியமாகும் என்று அவர்கள் நினைக்கின்றனர். அந்தக் கடப்பாடுகள் முற்றிலும் தார்மிகமானவையே, அவற்றுக்கு எந்த ஆதாரமும் வழங்கப்படவில்லை.*

தமது மனச்சாட்சியே ஒரு பிரமாணத்திற்குப் போதுமான தாகும் என்று நம்புகிறவர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு ஒரு வெளிச்சக்தியாகிய கடவுள்-தமக்கு ஆதரவாகச் செயல்படும் ஒரு காவல் சக்தி அல்லது பாதுகாவலர்-தேவைப்படவில்லை. தமது மனசாட்சியிலிருந்து உருக்கமான முறையில் பிரமாணம் எடுத்துக் கொள்வதே போதுமானது என்று அவர்கள் நினைக்கின்றனர். திரு. பிராட்லாவுக்கும் காமன்ஸ் சபைக்கும் இடையில் ஏற்பட்ட போராட்டத்திற்கு 'அடிப்படையாக இருந்த இந்த விஷயத்தின் வரலாற்றை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் படித்திருந்தார்களானால், 1880ம் ஆண்டு வாக்கிலேயே, திரு.பிராட்லா, தாம் ஒரு நேர்மை யான தார்மீகவாதி என்றும்-தம்முடைய மனச்சாட்சி பெரிதும் செய லூக்கமிக்கது என்றும், தாம் பிரமாணம் மேற்கொண்டால் தம்மைக் கட்டுப்பாட்டினுள் வைத்திருப்பதற்குத் தமது மனசாட்சி போதுமான ஆதார அடிப்படையாக இருக்குமென்றும் வலியுறுத்தினார். காமன்ஸ் சபையில், ஒரு நீண்ட நெடிய போராட்டத்திற்குப்பின், அதில் ஒரு சந்தர்ப்பத்தில், திரு.பிராட்லா சபையின், காவலரால் கடுமையாக அடித்து நொறுக்கப்பட்டார்; காரணம், பிரமாணம் எடுத்துக்கொள்ளாமல், காமன்ஸ் சபையில் உட்காரவும், அதனுடைய நடவடிக்கைகளில் பங்கெடுத்துக்கொள்ளவும் அவர் முயன்றார். பிரமாணம் எடுத்துக் கொள்வதை அவர் ஆட்சேபித்தார். திரு. கிளாட்ஸ்டன் (பிரிட்டிஷ் பிரதமர்) இறுதியில் விட்டுக் கொடுக்க வேண்டியதேற்பட்டது. அவர் ஒரு கூடுதல் அல்லது மாற்று வழி முறைக்கு ஏற்பாடு செய்தார். அது மனப்பூர்வமான உறுதிமொழி என்று அழைக்கப்பட்டது. எனவே இந்தத் திருத்தத்தில் அடங்கி யுள்ள பிரச்சினை அரசின் இயல்பு சம்பந்தப்பட்டதல்ல. அது ஒரு மதச்சம்பந்தப்பட்டதல்ல. அது ஒரு மதச்சார்பற்ற அரசா அல்லது மதச்சார்புடைய அரசா என்ற விஷயம் எழுப்பப்பட்ட பிரச்சினை யின் எல்லைகளுக்கு முற்றிலும் அப்பாற்பட்டதாகும். எழுப்பப்பட் டுள்ள ஒரே பிரச்சினை என்னவெனில், குடியரசுத் தலைவரின் மீது நாம் சுமத்தும் தார்மீகக் கடப்பாட்டுக்கு ஏதாவது ஒரு வகைப் பட்ட ஆதாரம் இருக்க வேண்டாமா என்பதுதான். கடவுள் ஒரு நம்பிக்கைமிக்க வழிகாட்டி என்று ஜனாதிபதி நினைத்து, கடவுளின் பெயரால்தான் விசுவாசப் பிரமாணம் எடுத்துக்கொண்டாலன்றி, தாம் மேற்கொள்ளும் கடமைகளுக்குத் தாம் உண்மையாக இருக்க மாட்டோம் என்று நினைக்கும் பட்சத்தில், கடவுளின் பெயரால் பிரமாணம் எடுத்துக்கொள்ளும் சுதந்திரத்தை நாம் அவருக்குக் கொடுத் தாக வேண்டும் என்று நினைக்கிறேன். கடவுளை நம்பிக்கையான

வழிகாட்டியாகக் கொள்ளாத எவரேனும் இருந்தால், அவர் உறுதி மொழி எடுத்துக்கொள்வதற்கும், அந்த உறுதிமொழியின் அடிப் படையில் தமது கடமைகளை நிறைவேற்றுவதற்குமான சுதந்திரத்தை நாம் அவருக்கு வழங்கியாக வேண்டும்.

எனவே, அது ஒரு நல்ல திருத்தம் என்றும், அதை ஏற்றுக் கொள்வதற்கு தயாராயிருக்கிறேன் என்றும் உறுதிபடக் கூறுகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** திரு. கரீமுத்தீனும் பேராசிரியர் ஷாவும் முன்மொழிந்த தீர்மானங்கள் மீது நீங்கள் சொல்வதற்கு ஒன்றுமில்லையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இல்லை, ஐயா.

*(முன்பு கூறிய டி.டி.கிருஷ்ணமாச்சாரியின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப் பட்டது.)*

★ ★ ★

**திரு. துணைத் தலைவர்:** வாக்கெடுப்புக்கு விடப்பட வேண்டிய அடுத்தத் திருத்தம், எண் 1146. இது திரு.மகாவீர் தியாகியினுடைய திருத்தத்துடன் ஒன்றுபோல் இருக்கிறது. திரு.காமத் ஏற்றுக்கொண் டால், இதை நான் வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

**திரு.எச்.வி.காமத்:** திரு.தியாகியின் திருத்தத்திற்கு எனக்கு ஆட்சேபனையில்லை. அவருடைய திருத்தத்திற்கும் என்னுடைய திருத்தத்திற்குமிடையில் சொல்ரீதியான வேறுபாடு மட்டுமே இருக் கிறது.

**திரு. துணைத் தலைவர்:** எனவே நான் திரு.தியாகியின் திருத்தத்தை, அதாவது எண் 1146வது திருத்தத்திற்கான திருத்தத்தை இப்பொழுது வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

**திரு. எச்.வி. காமத்:** இல்லை, ஐயா. திரு.தியாகியின் திருத் தத்தினால் திருத்தப்பட்ட எனது திருத்தம் வாக்கெடுப்புக்கு விடப்பட வேண்டும்.

**திரு. துணைத் தலைவர்:** ஆம், ஆம். இப்போது புரிந்து கொண்டேன். நீங்கள் சொல்லமைப்பு வடிவங்களை விடாப்பிடியாகக்

கடைப்பிடிப்பவர் என்பது எனக்குத் தெரியாது; நீங்கள் எத்தனை சொல்லமைப்பு வடிவங்களை திட்டமிட்டு உடைத்து வருகிறீர்கள்!

பிரேரணை என்னவெனில்:

''49வது விதியில் 'மனப்பூர்வமாக உறுதிமொழி எடுத்துக் கொள்கிறேன் (அல்லது பிரமாணம் எடுத்துக்கொள்கிறேன்) என்ற சொற்களுக்கு பதிலாக, பின்வருவது சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்:

'கடவுளின் பெயரால் பிரமாணம் எடுத்துக் கொள்கிறேன்'

மனப்பூர்வமாக உறுதிமொழி எடுத்துக் கொள்கிறேன்.

இந்தத் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

திருத்தப்பட்ட வடிவத்தில் 49வது விதி ஏற்றுக்கொள்ளப்பட்டு, அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** திருத்தங்கள் எண்.1166, 1167, 1168 மற்றும் 1169 ஆகியவை ஒரேமாதிரியானவை. இப்போது திருத்தம் எண் 1167 முன்மொழியப்படலாம். இது டாக்டர் அம்பேத்கர் பெயரில் உள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்:பொது): ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

''50வது விதியின் (2) வது துணைவிதியின் உப-விதி (ஆ)வில் 'ஆதரிக்கப்பட்டு' என்ற சொற்களுக்கு பதிலாக, 'பெரும்பான்மை ஓட்டுகளால் நிறைவேற்றப்பட்டு' என்ற சொற்கள் சேர்த்துக்கொள்ளப்பட வேண்டும்.''

**திரு. துணைத் தலைவர்:** திரு. முகம்மது தாஹிர், திரு. சையது ஜாஃபர் இமாம் பெயரில் உள்ள திருத்தம் எண் 1166.

**திரு.முகமது தாஹிர்:** நான் அதை விவாதிக்க விரும்புகிறேன். என்னுடைய திருத்தம் டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்திலிருந்து மிகவும் வேறுபட்டதாகும். அவை இரண்டும் ஒன்றல்ல.

**திரு. துணைத் தலைவர்:** அதை இப்போது வாக்கெடுப்புக்கு விடுவோம். நீங்கள் பொதுவிவாதத்தில் கலந்துகொண்டு பேசும்போது

1. அ.நி.வி., தொகுதி 7, டிசம்பர் 28 1948, பக். 1065.

அப்பொழுது உங்கள் கருத்தைத் தெரிவிக்கலாம். அது மிகவும் உசித மாயிருக்கும் என்று நினைக்கிறேன்.

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** 1177வது எண் திருத்தம் முன் மொழியப்படலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஐயா, அத்திருத் தத்தை நான் முன்மொழிய விழைகிறேன்:

> ''50வது விதியின் (4)வது துணைவிதியில், 'ஆதரிக்கப் பெற்று நிறை வேற்றப்பட்டது' என்ற சொற்களுக்கு பதிலாக, 'பெரும்பான்மை ஓட்டுகளால் நிறைவேற்றப்பட்டது' என்ற சொற்களை சேர்க்கவும்.''

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, திரு. துணைத்தலைவர் அவர்களே, இந்த விதிக்கு முன்மொழியப்பட் டுள்ள பல திருத்தங்களில், இரண்டை மட்டும் ஏற்றுக்கொள்ள முடியும். ஒன்று, எனது நண்பர் திரு.குப்தே முன்மொழிந்துள்ள திருத்தம் எண்.1158. இது, குடியரசுத் தலைவர் மீது குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யும் பிரேரணையை விவாதிப்பதற்கு பதினான்கு நாள் முன்னறிவிப்புக் கொடுப்பதற்கு வகை செய்கிறது. இரண்டாவது திருத்தம் இதை ஏற்றுக்கொள்வதற்கு நான் தயாரா யிருக்கிறேன். எண் 1160 எனது நண்பர் திரு.தேவ் முன்மொழிந் துள்ளார். இது திரு. டி.டி.கிருஷ்ணமாச்சாரியால் திருத்தப்பட்டதாகும். அரசியல் சாசனவரைவில் முதலில் வகுத்துக் கூறப்பட்டதில் ஒரு பிரேரணையை முன்மொழிவதற்குப் போதிய அளவு உறுப்பினர் கள் ஆதரவளிக்க வேண்டும் என்பதை முன்நிபந்தனையாக விதிக்க வில்லை. இந்தத் திருத்தத்தினால் ஏற்படுத்தப்படும் மாற்றம் முக்கியத் துவம் வாய்ந்ததாகும், எனவே அதை ஏற்றுக்கொள்வதற்கு தயாராக இருக்கிறேன்.

ஐயா, இப்பொழுது இதர திருத்தங்களுக்கு வருகிறேன்; அவற்றை ஏற்றுக்கொள்ள முடியாமைக்கு வருந்துகிறேன். ஆனால்

1. அ.நி.வி., தொகுதி 12, டிசம்பர் 28 1948, பக். 1067.
2. மேற்படி அதே நூல், பக். 1079-82.

அவற்றுக்கு பதிலளிக்க வேண்டியது அவசியம் என்று நினைக்கிறேன். பதில் தேவைப்படுகிற திருத்தங்கள் பேராசிரியர் கே.டி.ஷா முன்மொழிந்த திருத்தங்கள் எண் 1151, 1171, 1173, 1176 மற்றும் 1186 ஆகும். ஐயா, பேராசிரியர் கே.டி.ஷா முன்மொழிந்த திருத்தங்கள் இருபிரச்சினைகளைக் குறிப்பிடுகின்றன. முதலாவது, அரசியல் சாசன வரைவில் வரையறுத்துக் கூறப்பட்டுள்ள, குற்றம்சாட்டும் திட்டம். இரண்டாவது சபையின் முன்னால் தோன்றுவதற்கும், ஜனாதிபதிக்கு எதிரான குற்றச்சாட்டைப் புலனாய்வு செய்யும் அவையில் ஒரு வழக்கறிஞர் வாயிலாகத் தன்னைத் தற்காப்பு செய்து கொள்வதற்கும் குடியரசுத் தலைவருக்கு உள்ள உரிமை சம்பந்தப்பட்டதாகும். பேராசிரியர் கே.டி.ஷாவின் இரண்டாவது திருத்தத்தைப் பொறுத்தமட்டிலும் , அத்தகைய எந்தத் திருத்தத்திற்கும் எத்தகைய அவசியத்தையும் நான் காணவில்லை; பேராசிரியர் ஷா அந்த விதியைக் குறிப்பிட்டதால் - அது உப.விதி (4) அல்லது (3) என்று நான் நினைக்கிறேன். புலனாய்வு செய்யும் சபையின் முன்னால் தோன்றுவதற்கும், வேறு எந்த நபரையும், அதாவது ஒரு வழக்கறிஞரைத் தன்னைப் பிரதிநிதித்துவப்படுத்தச் செய்வதற்கும் குடியரசுத் தலைவரை அனுமதிப்பதற்குப் போதுமான வழிவகை செய்யப்பட்டுள்ளது. பேராசிரியர் கே.டி.ஷா செய்தது எல்லாம், அந்தத் துணைவிதியின் இந்தக் குறிப்பிட்ட பகுதியைத் தனியாகப் பிரித்து, அதை உபவிதி (3) (அ) ஆகச் செய்தது மட்டுமேயாகும். அதை ஒரு தனிப் பிரேரணையாகச் செய்வதற்காக இவ்வாறு செய்துள்ளார். அவர் கடைப்பிடித்துள்ள வழிமுறைக்கு எத்தகைய அவசியமும் இல்லை என்று கருதுகிறேன்.

இப்பொழுது, நான் முதலாவது பகுதிக்கு வருகிறேன். அதாவது, அரசியல் சாசன வரைவில் வகைசெய்யப்பட்டுள்ள, மாமன்றத்தில் குற்றம்சாட்டும் திட்டத்தில் அவர் சுட்டிக்காட்டியுள்ள குறைபாடுகள் பற்றியதாகும். அவருடைய குறிப்புகளுக்கு நான் பதிலளிப்பதற்கு முன்னதாக, அரசியல் சாசன வரைவில் அமைந்துள்ள திட்டத்தின் வழிவகைகள் பற்றி ஒரு தெளிவான சித்திரம் சபைக்கு முன்னால் இருக்க வேண்டியது விரும்பத்தக்கதாகும் என்று கருதுகிறேன். இந்த விதியைப் பகுப்பாய்வு செய்யும் எவரும் அது நான்கு வெவ்வேறு பிரேரணைகளைக் கொண்டுள்ளது என்பதைக் காண்பர். முதலாவதாக, குற்றம்சாட்டும் பிரேரணை எந்த அவையிலாவது - மாநிலங்களவையிலோ அல்லது மக்களவையிலோ - முதலில் துவக்கி வைக்கப்படலாம். இரண்டாவதாக, அத்தகைய

பிரேரணைக்கு தேவைப்படும் எண்ணிக்கையிலான உறுப்பினர்களின் ஆதரவைப் பெற்றிருக்க வேண்டும். மூன்றாவதாக, புலனாய்வு செய்வதற்கான பிரேரணையை நிறைவேற்றிய அவை, குற்றச்சாட்டை புலனாய்வு செய்வதற்கு உரிமை உடையதல்ல. நான்காவதாக, குற்றச்சாட்டைப் புலனாய்வுசெய்த சபை, குடியரசுத் தலைவரைக் குற்றவாளி என்று கண்டறிந்தால், மூன்றிலிரண்டு பங்கு பெரும்பான்மையின் ஆதரவுடன்தான் அவ்வாறு செய்ய வேண்டும்.

இவைதாம் இந்தக் குறிப்பிட்ட விதியில் அமைந்துள்ள நான்கு நிலைகள் (பிரேரணைகள்) ஆகும். இப்பொழுது பேராசிரியர் ஷாவின் பிரேரணை என்னவெனில், குடியரசுத் தலைவர் மீது குற்றம் சாட்டு வதற்குமேல்சபைக்கு எந்த சம்பந்தமும் இருக்கக் கூடாது. குடியரசுத் தலைவர் மீது குற்றம் சாட்டுவதற்கும், புலனாய்வு செய்து, தனது சொந்தமுடிவுகளுக்கு வருவதற்குமான அதிகாரம் மக்கள் சபையிடம் மட்டும்தான் முற்றாக இருக்க வேண்டும் என்பதாகும். கீழ்சபை தனிச் சிறப்பான முறையில் இந்த அதிகார வரம்பைக் கொண் டிருக்க வேண்டும் என்று பேராசிரியர் கே.டி.ஷா ஏன் நினைக்கிறார் என்பதற்கான காரணங்களை என்னால் புரிந்து கொள்ள முடிய வில்லை. பார்க்கப் போனால், குடியரசுத் தலைவர் மீதான விசாரணை அல்லது அவர் மீது குற்றம் சாட்டுவது, அந்தக் குறிப்பிட்ட பதவியை வகிக்கும் நபரால், அந்தப் பதவியின் கண்ணியமும், கௌரவமும், நேர்மையும் (நடுநிலை பிறளாமையும்) கட்டிக் காக்கப்பட வேண்டும் என்பதை நோக்கமாகக் கொண்டதேயாகும். அந்தப் பதவியின் கௌரவமும், கண்ணியமும், நேர்மையும் கீழ் சபைக்கு மட்டும் அக்கறையுள்ள ஒருவிஷயமல்ல. அது மேல் சபைக்கும் அதே அளவு அக்கறையுள்ள ஒரு விஷயமாகும். எனவே, நான் கூறியது போன்று குடியரசுத் தலைவர் அரசியல் சாசனத்தின் விதிகளுக்கு இசைவாக நடந்து கொள்வதில் மேல்சபையும் சம அளவில் அக்கறை கொண்டுள்ள நிலையில், குடியரசுத் தலைவர் நேர்மை தவறி எவ்வகையிலேனும் தவறாக நடந்து கொண்டாரா என்பதைப் புலனாய்வு செய்வதில் அல்லது குற்றச்சாட்டைப் பரிசீலனை செய்வதில் மேல்சபையை ஏன் விலக்க வேண்டும் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. அது, மக்கள் சபையைப் போலவே அதே அளவில் அக்கறை கொண் டுள்ளது. தன்னுடைய பிரேரணை சரியானது என்பதில் மிகவும் நிச்சயமாக உள்ள பேராசிரியர் கே.டி.ஷா, தமது வாதத்தின்போது, பிற நாடுகளின் அரசியல் சாசனங்களை அடிமைப் புத்தியுடன் பகர்ப்பு

செய்பவர்கள்தான், தம்முடைய திருத்தங்களை எதிர்ப்பதற்குத் துணிவார்கள் என்று கூறியிருந்தார். வரைவுக்குழுவின் மீது அவர் தொடுத்துள்ள தாக்குதலை நான் பொருட்படுத்தவில்லை. என்னுடைய துவக்க உரையில் நான் கூறியது போன்று வரைவுக்குழு இந்த நாட்டின் நலன் கருதி, நம்மால் வகுக்க முடிந்ததைக் காட்டிலும் சில மேம்பட்ட விதிகளைக் கொண்டுள்ளதாக கருதப்படும் பிற அரசியல் சாசனங்களிலிருந்து, அவை எங்கிருந்தாலும் சரி கடன் வாங்குவதற்கு பயப்படவில்லை. ஆனால், என்னால் பார்க்க முடிந்த வரையிலும், அமெரிக்காவின் அரசியல் சாசனத்தை அடிமை புத்தியுடன் பகர்ப்பு செய்யும் நபர் யாராவது ஒருவர் இருந்தால், பேராசிரியர் ஷாவைத் தவிர வேறு யாரையும் என்னால் சுட்டிக்காட்ட முடியவில்லை என்பதை பேராசிரியர் மறந்துவிட்டார் என்று நினைத்தேன் (சிரிப்பு). அவருடைய திட்டம் முழுவதும், வரைவுத் திட்டத்தில் உருவகம் பெற்றுள்ள அரசின் திட்டத்திற்கு ஒரு மாற்றுத்திட்டம் மட்டுமே என்று நினைத்தேன். அது கால்புள்ளி, அரைப் புள்ளிகளோடு கூடமுற்றாக அமெரிக்காவின் அரசியல் சாசனத்திலிருந்து கடன் வாங்கப் பட்டுள்ளது. அவருடைய பிரதான பிரேரணை தோற்கடிக்கபட்டபோது, அமெரிக்க அரசியல் சாசனத்தின் மீது அவருக்குள்ள மோகம் மிகவும் ஆழமானதாக இருப்பதைக் கண்டேன். அதனால்தான் அவர் இதர திருத்தங்களை முன்மொழிவதில் விடாப்பிடியாக இருந்து வருகிறார். அவை, பின்விளைவான திருத்தங்களே என்பதையும், அவற்றில் சாராம்சமானவை ஒன்றுமில்லையென்பதையும் அவரே உணர்வார். எனவே, அவர் வரைவுக் குழுவை குத்திப் பேசியதை நான் பொருட்படுத்தவில்லை.

அரசியல் சாசனத்தில் புகுத்துவதற்குப் பேராசிரியர் கே.டி.ஷா முயன்ற மற்றையப் பிரேரணை மற்றைய சபையின் ஒப்புதல் இருக்க வேண்டும் என்பதாகும். குற்றத்தை ஆய்வுசெய்த ஒருசபை ஒரு முடிவுக்கு வந்திருந்த போதிலும், மற்றைய சபையும் அதை ஏற்றுக் கொண்டாலன்றி, அந்த முடிவை நடைமுறைப்படுத்தக் கூடாது என்று அவர் விரும்புகிறார். உதாரணமாக, ஒரு சான்றாயம் இந்த அவையும் ஒருவகை சான்றாயம்தான் என்பதில் ஐயமில்லை - மற்றொரு சான்றாயத்தின் பரிசீலனைக்கு விட வேண்டுமென்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. அத்தகைய எந்தக் கோட்பாட்டையும் நான் அறிந்ததில்லை, அதற்கு எந்த முன்னுதாரணமும் இல்லை. இரண்டாவதாக, மற்றைய சபை இந்தத் தீர்ப்பை ஏற்றுக் கொள்ளாவிட்டால் விளைவு என்னாகும் என்பதை என்னால்

புரிந்துகொள்ள முடியவில்லை. மற்றைய சபை, அறுதிப் பெரும்பான்மையில் அதை ஏற்க வேண்டுமா, அல்லது மூன்றிலிரண்டு பங்கு பெரும்பான்மையிலா? ஒரு சபை மேற்கொண்ட முடிவை மற்றைய சபை ஏற்றுக்கொள்ளாவிட்டால், என்ன செய்யவேண்டும்? ஓர் இக்கட்டான (வெற்றி- தோல்வியில்லாத) நிலைமை ஏற்படும் என்பது தெளிவு. அந்த இக்கட்டான நிலைக்குத் தீர்வுகாண்பதற்கு கே.டி.ஷா எந்தப் பரிகாரமும் வழங்கவில்லை என்று கருதுகிறேன். இந்தக் காரணங்களினால் பேராசிரியர் கே.டி.ஷா முன்மொழிந்த எந்தத் திருத்தங்களையும் என்னால் ஏற்றுக்கொள்ள இயலாது.

நான் பதில் சொல்ல வேண்டிய மற்றொரு திருத்தம் உள்ளது. ஏனெனில் அது, பேராசிரியர் கே.டி.ஷா முன்மொழிந்த திருத்தங்களுடன் ஒத்திருக்கிறது. அது, எனது நண்பர் திரு.முகமது தாஹிர் முன்மொழிந்த திருத்தம் எண் 1178 ஆகும். அரசியல் சாசனத்தை மீறியதாகக் குற்றம் சாட்டுவதற்கு மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மையைப் பெறுவது அவசியமில்லை என்று அவர் கூறுகிறார். அறுதிப்பெரும்பான்மையே போதும் என்று அவர் கருதுகிறார். ஐயா, எனது நண்பர் திரு. முகம்மது தாஹிர், மன்றத்தின் முன் குற்றம் சாட்டுவதற்கான பிரேரணை, நம்பிக்கையில்லாத் தீர்மானப் பிரேரணையிலிருந்து மிகவும் வேறுபட்டது என்ற உண்மையைப் போதிய அளவு கவனத்தில் எடுத்துக்கொள்ளவில்லை என்று நினைக்கிறேன். நம்பிக்கையில்லாத் தீர்மானத்தில் எத்தகைய அவமானமோ அல்லது ஒழுக்கக்கேடோ அடங்கியிருக்கவில்லை. நம்பிக்கையில்லாத் தீர்மானம் என்றால் கட்சி அல்லது சபை அரசின் கொள்கையை ஏற்றுக்கொள்ளவில்லை என்று மட்டுமே பொருள்படும். அதற்கப்பால், வேறு எந்தக் கண்டனமும் ஒரு நம்பிக்கையில்லாத் தீர்மானத்தில் அடங்கியிருக்கவில்லை. ஆனால் ஒரு குற்றம் சாட்டும் பிரேணையானது முற்றிலும் ஒரு வேறுபட்ட அடிப்படையைக் கொண்டதாகும். குற்றம்சாட்டும் ஒரு பிரேரணையின்மீது ஒருவர் தண்டிக்கப்பட்டால், நடைமுறையில் அது, அவருடைய பொதுவாழ்க்கையையே பாழாக்கிவிடும். இரண்டுக்கும் இடையிலான வேறுபாடு இவ்வாறிருக்க, இத்தகைய ஒரு முக்கியமான விளைவை உடைய விஷயம் ஓர் அறுதிப் பெரும்பான்மையைக் கொண்டு தீர்மானிக்க அனுமதிப்பது விரும்பத்தக்கது அல்ல என்று நினைக்கிறேன். இந்த வேறுபாட்டின் காரணமாகத்தான்,

குற்றம் புரிந்ததாகத் தீர்ப்பு அளிப்பதற்கு மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மை ஆதரவு இருக்க வேண்டும் என்று வரைவுக்குழு முடிவு செய்தது.

ஐயா, இனி என்னுடைய மதிப்புமிகு நண்பர் காஜி சையத் கரிமுத்தீன் திருத்தங்களுக்கு வருகிறேன். நான் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்போகும் அவருடைய முதலாவது திருத்தம் எண் 1152 ஆகும். இந்தத் திருத்தத்தின் மூலம் அவர், தேச துரோகம், லஞ்சம், மற்றும் பிறகொடிய குற்றங்களையும் தவறான நடத்தைகளையும் 'அரசியல் சாசனத்தை மீறுவதாகும்' என்ற சொற்களுக்குப் பின்னால் சேர்த்துக்கொள்ள விரும்புகிறார். இதுகுறித்து என்னுடைய சொந்தக் கருத்து இதுதான். 'அரசியல் சாசனத்தை மீறுவது' என்ற சொற்றொடர் மிகவும் விரிவான பொருளைக் கொண்டதாகும். அதில தேசதுரோகம், லஞ்சம், மற்றும் பிற கொடிய குற்றங்கள் அல்லது தவறான நடத்தைகளும் உள்ளடங்கும். ஏனெனில் தேசத்துரோகம், நிச்சயமாக அரசியல் சாசனத்தை மீறுவதாகும். லஞ்சமும் அரசியல் சாசனத்தை மீறுவதாகும். ஏனெனில், அது, குடியரசுத் தலைவர் எடுத்துக்கொண்ட பதவிப் பிரமாணத்தை மீறுவதாகும். குற்றங்களைப் பொறுத்தமட்டிலும், குடியரசுத்தலைவர் புரியக்கூடும் எந்தக் குற்றங்கள் அல்லது தவறான நடத்தைக்காக விசாரணைசெய்வது சம்பந்தமாக நாங்கள் வேறு ஒரு விதியை அமைத்துள்ளோம் என்பதை உறுப்பினர்கள் பார்க்கலாம். எனவே, தேசத் துரோகம், லஞ்சம் முதலிய சொற்களை சேர்ப்பது அவசியமற்றது என்று நான் கருதுகிறேன். 'அரசியல் சாசனத்தை மீறுதல்'' என்ற சொற்றொடரில் அவை அடங்கியுள்ளன.

அவருடைய மற்றைய திருத்தம் எண்.1170 இதன் மூலம் திரு.கரிமுத்தீன், பெரும் குற்றச்சாட்டு சம்பந்தமாக விசாரணை செய்யும்போது, இந்தியாவின் தலைமைநீதிபதி தலைமை தாங்குவதற்கு வகை செய்ய வேண்டும் என்று கூறுகிறார். குடியரசுத் தலைவர் மீது கூறப்படும் பெரும் குற்றச்சாட்டுச் சம்பந்தமாக அவையில் விசாரணை நடத்தப்படும்போது, அது நீதித்துறை ரீதியில் நடத்தப்பட வேண்டும் என்ற அவருடைய பிரேரணை சம்பந்தமாக எனக்கு ஆட்சேபனை ஏதுமில்லை. குற்ற விசாரணை முறைச் சட்டம், சாட்சியம் சம்பந்தமான சட்டம் ஆகியவற்றில் அமைந்துள்ள எல்லா விதிகளையும் கவனத்தில் கொண்டு இது செய்யப்பட வேண்டும். நான் கூறியது போன்று, அவருடைய

குறிக்கோள் சம்பந்தமாக எனக்கு எவ்வித ஆட்சேபணையும் இல்லை; உண்மையில், அக்கருத்தை நானும் பகிர்ந்து கொள்கிறேன். இதில் ஒரே ஒருவிஷயம் என்னவெனில், இந்த விஷயம் நடைமுறை சம்பந்தமான விதிமுறைகளில் வகைசெய்வதை இரு அவைகளுக்கும் விட்டுவிடலாமா, அல்லது, அரசியல் சாசனத்திலேயே இதைத் திட்டவட்டமாகவும் வெளிப்படையான முறையிலும் கூறவேண்டுமா என்பதுதான். உபவிதி (3)ல் அவை புலனாய்வு செய்ய வேண்டுமென்று கூறப்பட்டுள்ளது. எனவே நடைமுறை சம்பந்தமான விதிமுறைகளை வகுக்கும்போது, நாடாளுமன்றத்தின் இரு அவைகளும், அதில், கண்டனத் தீர்மானம் சம்பந்தமான நடைமுறை குறித்த ஒரு பகுதியை அமைக்க வேண்டும் என்பது மிகவும் தெளிவானதேயாகும். ஏனெனில், ஒரு சமயத்தில் கண்டனத் தீர்மானம் கொண்டுவரப்படுவது மேலவையில் நிகழலாம், விசாரணை கீழவையில் நடைபெறலாம். இதற்கு மாற்று முறையிலும் அது நடைபெறக் கூடும். எனவே, ஒவ்வொரு அவையின் நடைமுறை விதிகளிலும் இந்தவிஷயம் சம்பந்தமாக - இரு அவைகளிலும் - ஒரு பகுதி இருக்க வேண்டும். இத்தகைய நிலையில், இரு அவைகளின் நடைமுறை விதிகளில், புலனாய்வு எந்த சபையில் செய்யப்பட்டாலும், தலைமை நீதிபதி அல்லது வேறு ஒரு நீதித்துறை அதிகாரி தலைமை வகிக்க வேண்டும் என்று சட்டப்பேரவை வரையறுப்பதை எதுவும் தடுக்காது. எனவே, நான் சமர்ப்பிப்பதை இரு அவைகளின் விதிமுறைகளின் நடைமுறைப் பகுதியால் நிறைவேற்றப்பட்டால் அவருடைய குறிக்கோள் சாதிக்கப்பட்டுவிடும் என்று எனக்குத் தோன்றுகிறது. எனவே இந்த வழிவகை அவசியமற்றதாகும்.

இனி, அவருடைய மூன்றாவது திருத்தத்திற்கு - எண். 1187 நான் வருகிறேன். கண்டனம் செய்யும் குற்றச்சாட்டிலிருந்து அவசியமாகவே எழுகின்ற தகுதியின்மைகளை அரசியல் சாசனம் வரையறுத்துக் கூற வேண்டுமென்று அவர் விரும்புகிறார். அவர் எடுத்தாண்டிருக்கிற வாசகம் அமெரிக்காவின் அரசியல் சாசனத்திலிருந்து என்று காண்கிறேன். இந்த விஷயம் சம்பந்தமாக எனது கருத்து இதுதான். சட்டப் பேரவையின் உறுப்பினர் தகுதியைப் பொறுத்த மட்டிலும், முன்பு ஒரு சமயத்தில் நான் சுட்டிக்காட்டியபடி, இது 83 ஆவது விதியில் அடங்கியுள்ள வழிவகையில் அடங்கியுள்ளது, அது சட்டப் பேரவையின் உறுப்பினர் பதவியின் தகுதியின்மைகளை வரையறுத்துக் கூறுகிறது. நான் அப்பொழுது கூறியது

போன்று, நாடாளுமன்றம் கூடுதல் தகுதியின்மைகளை வரையறுத்துக் கூறும்போது, அரசியல் சாசனத்தின் கீழ்மன்றத்தின் முன்னால் ஆஜர்படுத்தப்பட்டு கண்டனம் தெரிவிக்கப்பட்ட ஒரு நபர், சட்டப் பேரவையின் உறுப்பினராவதற்குத் தகுதியுடையவர் அல்ல என்ற ஒரு துணை விதியை வகுப்பது முற்றிலும் சாத்தியமே. எனவே, 83வது விதியின் பயனாக, கண்டனம் தெரிவிக்கப்பட்ட ஒரு குடியரசுத் தலைவர் சட்டப் பேரவையின் உறுப்பினராவதிலிருந்து விலக்குவது முற்றிலும் சாத்தியமே. எஞ்சியிள்ள ஒரே விஷயம், பதவிக்கு நியமனம் செய்யும் பிரச்சினையாகும். இதுசம்பந்தமாக மனதில் கொள்ளவேண்டிய பல விஷயங்கள் இருக்கின்றன என்று எனக்குத் தோன்றுகிறது. அரசியல் சாசன வரைவு விதிகள் இந்த விஷயம் பற்றி எதுவும் கூறவில்லை என்பது மெய்யே. நாடாளுமன்றம் அரசு ஊழியர் சட்டத்தை இயற்றும்போது, வருங்கால நாடாளுமன்றம் இதைச் செய்யும்படி ஏற்படும் என்பதில் எனக்கு ஐயமில்லை. அரசு அலுவலர்களுக்கான தகுதிகள், அவர்களின் ஊதியங்கள், மற்றும் அரசுப் பணியாளர் சம்பந்தப்பட்ட இதர அனைத்து விதிகளையும் வரையறுத்துக்கூறுவது முற்றிலும் சாத்தியமே என்று நான் நினைக்கிறேன். அரசியல் சாசனத்தின்படி கண்டனத்திற்குள்ளான எந்த நபரும் எந்தக்குறிப்பிட்ட பதவிக்கும் தூதர் பதவிக்கோ, அரசுக்கு வெளியிலோ அல்லது அரசுக்கு உள்ளேயோ எந்தக் குறிப்பிட்ட இலாகாவிலோ நியமிக்கப்படுவதற்குத் தகுதியுள்ள நபரல்ல என்று கூறுவதற்கு நாடாளுமன்றத்திற்கு முழு உரிமையுண்டு என்பது தெளிவு. எனவே, அந்த விஷயம் நாடாளுமன்ற சட்டமியற்றும் பணியிலேயே சேர்த்துக் கொள்ளப்படலாம் என்று நினைக்கிறேன்.

**திரு. எச்.வி.காமத்:** டாக்டர் அம்பேத்கர் தனிப்பட்ட முறையில் இந்தத் திருத்தங்களுக்கு ஆதரவளிக்கிறார் என்று நான் எடுத்துக் கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஆம், இது வேறு வழிகளில் மேற்கொள்ளப்பட்டிருக்கிறது என்ற உண்மையைத்தவிர, இந்தத் திருத்தத்தில் வேறு எதுவுமில்லை என்று நினைக்கிறேன்.

ஐயா, இப்பொழுது நாம் பரிசீலிக்க வேண்டிய மற்றைய கேள்வி இதுதான்: இந்தத் தகுதியின்மைகளைத் திட்டவட்டமாகவும் வெளிப்படையாகவும், அரசியல் சாசனத்தில் வரையறுத்துக்

7

*கூறுவது அவசியமா என்பதுதான். இரண்டு காரணங்களுக்காக இது அவசியமில்லை என்று எனக்குத் தோன்றுகிறது. ஒரு காரணம், ஒரு பகிரங்க விசாரணை மூலம் அவமானப்படுத்தப்பட்டு, ஒரு பொது விரோதி என்று அறிவிக்கப்பட்ட ஒருநபர், எந்தக் குறிப் பிட்ட பதவிக்காவது ஒருவேட்பாளர் என்று தன்னை அறிவித்துக் கொள்வதற்கு எப்பொழுதும் துணிவு கொள்ளமாட்டார். எனவே, அந்த சாத்தியப்பாடு, இந்த நோக்கத்தினால் விலக்கப்படுகிறது என்று நினைக்கிறேன். இரண்டாவது காரணம் இதுதான்: அவர், உண்மை யாகவே, அவ்வாறு வேட்பாளராக நின்றால், அத்தகைய எந்த நபரையும் தேர்ந்தெடுப்பதற்கு இந்த நாட்டின் மக்கள் அவ்வளவு தூரம் பொதுக் கடமை உணர்வும் பொது சேவைஉணர்வும் இல்லாத வர்களாக இருப்பார்களா? இந்த நாட்டின் மக்கள், குற்றவாளி களை, நம்பிக்கை மோசடி செய்தவர்களை, மற்றும் தமது பொதுக் கடமைகளை நிறைவேற்றுவதில் மக்களுக்குத் துரோகம் செய்தவர் களைத் தேர்ந்தெடுக்கக் கூடுமாதலால் இந்த வகைப்பட்ட ஒரு வெளிப்படையான விதியை அரசியல் சாசனத்தில் சேர்க்க வேண் டியது அவசியம் என்று கூறுவது இந்த நாட்டின் மக்களுக்கு மிகவும் அவமானகரமான ஒரு பழிச் சொல்லாகும் என்று நினைக்கிறேன். இந்தப் பலவீனங்களெல்லாம் எல்லா சமுதாயங்களிலும் உள் ளார்ந்து இருக்கின்றன, எனவே, அவற்றை அரசியல் சாசனத்தில் அமைத்து விளம்பரப்படுத்துவதில் எவ்வித நற்பயனும் விளையப் போவதில்லை என்று கருதுகிறேன். எனவே, அந்தத் திருத்தங்கள் எவ்வளவு பாராட்டத்தக்கவையாக இருந்தபோதிலும் அரசியல் சாசனத்தில் அவற்றை சேர்த்துக் கொள்வது அவசியமில்லை என்று நினைக்கிறேன்.*

**திரு. துணைத் தலைவர்:** முன்மொழியப்பட்ட திருத்தங் களை இப்பொழுது நான் வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

*(கீழ்வரும் திருத்தங்கள் டாக்டர் அம்பேத்கரால் ஏற்றுக் கொள்ளப்பட்டு, சபையினால் நிறைவேற்றப்பட்டன.)*

★ ★ ★

[1]**திரு. துணைத்தலைவர்:** திரு.டி.டி.கிருஷ்ணமாச்சாரியின் திருத்தத்தால் மாற்றப்பட்ட விதத்தில் எண்.1160 திருத்தத்தை இப் பொழுது வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

1. அ.நி.வி., தொகுதி VII, டிசம்பர் 28 1948, பக். 1083.

*''பிரேரணை என்னவெனில் '50வது விதியின், (2)வது துணை விதியின் (அ) உப-விதியில் 'முப்பது உறுப்பினர்கள்' என்ற சொற்களுக்கு பதிலாக மொத்த உறுப்பினர்களில் நான்கில் ஒரு பங்கினர் என்ற சொற்களை சேர்க்கவும்.''*

இந்தத் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**திரு. துணைத் தலைவர்:** பிரேரணை என்னவெனில்,

*''50 ஆவது விதியின் (2) வது துணைவிதியின் (அ) உப-விதியில் 'ஓர் அறிவிப்புக்குப் பின்' என்ற சொற்களுக்கு பதிலாக, 'குறைந்தபட்சம் 14 நாட்கள் முன்னறிவிப்புக்குப் பின்னர்' என்ற சொற்களை சேர்க்கவும்.''*

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

★ ★ ★

**திரு. துணைத் தலைவர்:** பிரேரணை என்னவெனில்:

*''50வது விதியின் (2) வது துணை விதியின் (ஆ) உப-விதியில் 'ஆதரிக்கப் பெற்று' என்ற சொற்களுக்கு பதிலாக 'பெரும்பான்மையினால் நிறைவேற்றப் பட்டது' என்ற சொற்களை சேர்க்கவும்.''*

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

*(மொத்தத்தில் 15 திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன. அவற்றில் ஒன்று பின்வருமாறு விவாதிக்கப்பட்டது.)*

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** பிரேரணை - திருத்தம் எண்.1185.

**திரு. நஸிருத்தீன் அகமது:** ஐயா, என்னுடைய திருத்தத்திற்கு டாக்டர் அம்பேத்கரால் எவ்வித பதிலும் கொடுக்கப்படவில்லை.

**மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர்:** ஐயா, நான் அதை எதிர்க் கிறேன் என்று கூறியிருக்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** பிரேரணை என்னவெனில்,

*50வது விதியின் (4) வது துணைவிதியில் 'தேதியில்' என்ற சொல்லுக்குப் பதிலாக, 'பொழுது' என்ற சொல்லை சேர்த்துக்கொள்ளவும்.*

திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

---

1. *அ.நி.விவாதங்கள், தொகுதி VII, டிசம்பர் 28 1948, பக். 1084.*

*(திருத்தப்பட்ட விதத்தில் 50வது விதி ஏற்றுக்கொள்ளப்பட்டு, அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)*

★ ★ ★

## 51வது விதி

★ ★ ★

[1]**துணைத் தலைவர்:** திருத்தங்கள் எண் 1195, 1196, மற்றும் 1197 சொல்ரீதியான திருத்தங்களாக இருந்ததால் அனுமதி மறுக்கப் பட்டது. டாக்டர் அம்பேத்கர், நீங்கள் ஏதேனும் கூற விரும்புகிறீர் களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, பேராசிரியர் கே.டி.ஷா முன்மொழிந்த திருத்தத்தை என்னால் ஏற்றுக்கொள்ள முடியாததற்கு வருந்துகிறேன். அவருடைய திருத்தம் விதி 54 (1) ல் முற்றாக அடங்கியிருப்பதாகத் தோன்றுகிறது. அவர் முன்மொழிந் துள்ள திருத்தத்திற்கும், 54வது விதியின் (1)வது உபவிதியில் அடங்கியுள்ள வழிவகைக்கும் எந்த வேறுபாடும் இருப்பதாக என்னால் காணமுடியவில்லை. இந்த விதியை அவர் பரிசீலனை செய்து பார்த்தாரேயானால், அவருடைய திருத்தம் அவசியமற்றது, மிகையானது என்பதை அவர் காண்பார்.

மற்றைய திருத்தத்தைப் பொறுத்தமட்டிலும் வேறுபாட்டு அம்சம் என்னவெனில், பதவி விலகல் முதலியவற்றின் விளைவாகத் தேர்ந்தெடுக்கப்படும் ஒரு நபர் குடியரசுத் தலைவர் பதவியை, எஞ்சியுள்ள பதவிக் காலத்திற்கு மட்டுமே வகிக்கவேண்டும் என்ப தாகும். ஆனால் அரசியல் சாசனத்தில் உள்ள விதி, பதவியிலிருப் பவரின் பதவி விலகல், மரணம் முதலியவற்றின் விளைவாகத் தேர்ந் தெடுக்கப்படும் ஒரு நபர், அரசியல் சாசனத்தில் வகுத்துக் கூறியுள்ள பதவிக் காலத்திற்கும் அவர் தொடர்ந்து பதவியிலிருக்க வேண்டும் என்பதாகும். பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்படும் ஒரு நபர், அரசியல் சாசனத்தில் வகுத்தளிக்கப்பட்டுள்ள முழுப் பதவிக் காலத்திற்கும் அவர் அதை ஏன் வகிக்கக்கூடாது என்பதற்கும் எஞ்சியுள்ள காலத் திற்கு மட்டுமே அவர் ஏன் பதவி வகிக்க வேண்டும் என்பதற்கும்

1. அ.நி.வி., தொகுதி VII, டிசம்பர் 28 1948, பக். 1087.

எந்த காரணத்தையும் என்னால் காணமுடியவில்லை. எனவே, இந்தத் திருத்தத்தை ஆதரிக்க எவ்வித நியாயமும் இல்லை.

*(மூன்று திருத்தங்கள் அனைத்தும் நிராகரிக்கப்பட்டன. 51வது விதி அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது. பிரேரணை ஏற்றுக்கொள்ளப்பட்டது.)*

## 52வது விதி

*(52 வது விதி விவாதமின்றி ஏற்றுக்கொள்ளப்பட்டு அரசியல் சாசனத்தில் சேர்க்கப்பட்டது.)*

## 53-வது விதி

[1]**திரு. துணைத் தலைவர்:** இனி நாம் 53-வது விதியை எடுத்துக் கொள்வோம்.

திருத்தம் எண். 1201 அனுமதிக்கப்படவில்லை. ஏனெனில், அது எதிர்மறைவாக்கின் விளைவைக் கொண்டுள்ளது. திருத்தங்கள் எண். 1202ம், 1203ம் ஒன்று போல் உள்ளன. எனவே திருத்தம் எண் 1202ஐ முன்மொழிய அனுமதிக்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

> "53வது விதியில் 'அல்லது சம்பளத்தின் நிலை' என்ற சொற்களுக்கு பதிலாக' 'லாபம் ஈட்டுகின்ற' என்ற சொற்களை சேர்க்கவும்."

**திரு. துணைத் தலைவர்:** இனி, முகமது தாஹிரின் பெயரில் உள்ள திருத்தம் எண் 1204.

**திரு. முகமது தாஹிர்:** ஐயா, நான் அதை முன்மொழியவில்லை.

**திரு. துணைத் தலைவர்:** இனி, டாக்டர் அம்பேத்கர் பெயரில் உள்ள திருத்தம் எண் 1205.

---

1. அ.நி.வி., தொகுதி VII, டிசம்பர் 28 1948, பக். 1088-89.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:*

*''53வது விதியின் வரம்புரையுடன் கீழ் வருமாறு சேர்க்கப்பட வேண்டும்:*

*'இந்த அரசியல் சாசனத்தின் 79வது விதியின் கீழ் மாநிலங்களின் அவைத் தலைவருக்குக் கொடுக்கப்படவேண்டிய எந்த சம்பளமோ, படித்தொகையோ பெறுவதற்குத்தகுதியில்லை.''*

*இரட்டை லாபம் பெறுவதைத் தடுப்பதை நோக்கமாகக் கொண்டது இந்த விதி.*

***திரு. துணைத் தலைவர்:*** *திரு.நஸிருத்தீன் அகமது அனுப்பி யுள்ள திருத்தம் எண் 33 இருக்கிறது. இது பெயரளவிலானது. எனவே அனுமதி மறுக்கப்படுகிறது. இப்பொழுது இந்தத் திருத்தங்களை வாக்கெடுப்புக்கு விடுகிறேன். இந்தத் திருத்தங்களைப் பற்றி எந்த உறுப்பினருக்காவது ஏதாவது கூறுவதற்கிருக்கிறதா?*

***திரு. எச்.வி. காமத்:*** *ஐயா, திருத்தம் எண். 1205 ஐப் பற்றி ஒரு தகவல் வேண்டும். துணை குடியரசுத் தலைவர் குடியரசுத் தலைவராகச் செயல்படும்பொழுது, குடியரசுத் தலைவரின் சம்பளம், படித்தொகைகளைப் பெறுவாரா, அல்லது துணை குடியரசுத் தலைவருக்குரியதை மட்டும் பெறுவாரா?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *குடியரசுத் தலைவரின் சம்பளத்தை, அந்தப் பதவியின் சம்பளத்தைப் பெறுவார்.*

***திரு. துணைத் தலைவர்:*** *இனி, இந்தத் திருத்தங்களை வாக்கெடுப்புக்கு விடுகிறேன். டாக்டர் அம்பேத்கரின் பெயரில் உள்ள திருத்தம் எண் 1202 ஐ முன்வைக்கிறேன்.*

*பிரேரணை என்னவெனில்:*

*' '53 வது விதியில், 'ஊதியத்தின் நிலை' என்ற சொற்களுக்கு பதிலாக, 'லாபமீட்டக்கூடிய' என்ற சொற்களை சேர்க்கவும்.''*

*இந்தத் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.*

***திரு. துணைத் தலைவர்:*** *திரு.நஸிருத்தீன் அகமது அவர்களே, உங்களுடைய திருத்தத்தை வாக்கெடுப்புக்கு விட வேண்டு*

மென்று விரும்புகிறீர்களா? அது முந்திய திருத்தத்தைப் போலவே உள்ளது.

**திரு. நஸிருத்தீன் அகமது:** வேண்டாம், ஐயா.

**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் எண் 1205 ஐ இனிநான் வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

பிரேரணை என்னவெனில்:

''53 வது விதியின் வரம்புரைக்குப் பின்வருவதை சேர்க்க வேண்டும்: 'இந்த அரசியல் சாசனத்தின் 79வது விதியின் கீழ், மாநிலங்களவைத் தலைவருக்குக் கொடுபடவேண்டிய சம்பளமோ, படித்தொகையோ பெறுவதற்கு உரிமையில்லை.''

இத்திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

திருத்தப்பட்ட வடிவத்தில் 53வது விதி ஏற்றுக்கொள்ளப்பட்டு அரசியல் சாசனத்தில் சேர்க்கப்பட்டது.

## 54வது விதி

**திரு. நஸிருத்தீன் அகமது:** ஐயா, நான் பின்கண்டபடி முன்மொழிய விழைகிறேன்:

' '54வது விதியின் துணைவிதி(1) ல் 'தேதியில்' என்ற சொல்லுக்குப் பதிலாக, 'பொழுது' என்ற சொல்லை சேர்க்கவும்.

(நஸிருத்தீன் அமகதின் உரை)

**திரு. துணைத் தலைவர்:** திருத்தங்கள் எண் 1121 மற்றும் 1210ம் ஒன்று போன்று முக்கியத்துவமுடையவை, ஆனால் முந்தியது கூடுதல் சர்வாம்ச ரீதியானது, எனவே அதை முன்மொழியலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பின்கண்டவாறு முன்மொழிகிறேன்:

'54வது விதியின் துணைவிதி (3) க்கு கீழ் வருவதை சேர்க்க வேண்டும்:

'நாடாளுமன்றத்தினால் சட்டத்தினால் நிர்ணயிக்கப்படுகிற சலுகைகளையும், ஊதியங்களையும் படித்தொகைகளையும் பெறுவதற்கு உரிமை

---

1. அ.நி.வி., தொகுதி VII, டிசம்பர் 28 1948, பக். 1089-92.

உண்டு. அதற்கான வழிவகை செய்யப்படும் வரையில், இரண்டாவது அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள சலுகைகள், ஊதியங்கள், மற்றும் படித் தொகைகளைப் பெறுவதற்கு உரிமை உண்டு.''

வரைவு அரசியல் சாசனத்தில் விட்டுப்போன ஒன்றை இது சரிசெய்கிறது.

★ ★ ★

**மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர்:** திரு. துணைத்தலைவர் அவர்களே, முன்மொழியப்பட்டுள்ள திருத்தங்களில் மெய்யாகவே மூன்று பிரச்சினைகள் எழுப்பப்பட்டுள்ளன. எனது நண்பர் திரு. நஸிருத்தீன் அகமது எழுப்பியுள்ள ஒரு பிரச்சினை காலத்தைப் பற்றியதாகும். எனது நண்பர் திரு.நஸிருத்தீன் அகமது எவ்வளவு கருத்தாக இருக்கிறார் என்பதை இப்பொழுது நாம் அனைவரும் அறிவோம். ஒரு குடியரசுத்தலைவர் எப்பொழுது தனது பதவியிலிருந்து விலகி, மற்றொரு நபர் அந்தப் பொறுப்பை மேற்கொள்கிறார் என்ற காலத்தை அரசியல் சாசனம் திட்டவட்டமாகக் கூறவேண்டும் என்று அவர் விரும்புகிறார். இந்த அரசியல் சாசனத்தில் இவ்வளவு துல்லியத்தன்மை தேவையா என்பது எனக்குத் தெரியாது. ஆனால், அவர் முன்மொழிந்துள்ள திருத்தத்தில் என்னால் ஏற்றுக்கொள்வதற்கு சிரமமானது என்னவெனில், அவரது மனதிலுள்ள காலமுறை என்னவென்று அவர் குறிப்பிட்டுக் கூறவில்லை. அது கிரீன்விச் நேரமா, ஸ்டாண்டர்டு நேரமா, பம்பாய் அல்லது கல்கத்தா நேரமா? .....[1]

**திரு. நஸிருத்தீன் அகமது:** பதவியில் நியமிக்கப்படும் சரியான நேரத்தை நான் அர்த்தப்படுத்துகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எந்த நேரம் என்பது மிகவும் வித்தியாசமானது. காலமுறையை அவர் குறிப்பிட்டுக் கூறினால் அன்றி, 'காலம்' (நேரம்) என்ற சொல்லை சேர்ப்பதன் மூலம் எத்தகையக் கூடுதல் தெளிவோ அல்லது திட்டவட்டமான நிலையோ ஏற்படப் போவதில்லை என்று நினைக்கிறேன்.

1. மூல விவாதங்களில் இடைமறிப்புகளைப் புள்ளிகள் குறிக்கின்றன.

இரண்டாவதாக, இந்தக் குறிப்பிட்ட துணைவிதியைப் பொறுத்தமட்டிலும், அவருடைய திருத்தம் அவசியமற்றதாக நான் காண்கிறேன். ஏனெனில்; 54வது விதியின் உபவிதியை அவர் படித்தால், அதில் 'அத்தகைய காலியிடத்தை நிரப்புவதற்கு அவருடைய பதவியை ஏற்றுக்கொள்கிறார்'' என்று கூறப்பட்டிருப்பதை அவர் காண்பார். நிச்சயமாக, பதவி ஏற்றுக்கொள்வது பகலில் ஏதாவது ஒரு நேரத்தில் இருக்கும். அது நள்ளிரவாகவும் இருக்கக்கூடும், அல்லது பகல் 12 மணியாகவும் இருக்கக்கூடும். எனவே நேரம் மறைமுகமாகக் குறிப்பிடப்படுகிறது. எனவே இந்தத் திருத்தம் அவசியமற்றதாகும்...''

**திரு. நஸிருதீன் அகமது:** புதிய குடியரசுத் தலைவர் பதவி ஏற்றுக்கொள்ளும் 'தேதி' வரையில் துணை குடியரசுத் தலைவர், தற்காலிக குடியரசுத் தலைவராகச் செயல்படுவதற்கு துணைவிதி வகைசெய்கிறது. அவர் அவ்வாறு செய்யும் நேரமல்ல.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நிச்சயமாக, அவர் பதவிஏற்றுக்கொள்ளும் நாளில் ஏதாவது ஒரு நேரமாக இருக்கும். நல்லநேரம் எது என்பதைக் கண்டறிவதற்கு அவர் ஒருவேளை ஒரு ஜோதிடரை ஆலோசனை கலக்கக்கூடும். எனினும் இந்தத் திருத்தம் அவசியமற்றாகும்.

முந்திய விதியைப் பற்றிய விவாதத்திற்கு பதிலளிக்கையில், அல்லது ஒருவேளை என்னுடைய திருத்தத்தை முன்மொழியும் போது துணை குடியரசுத் தலைவர், தற்காலிக குடியரசுத் தலைவராகச் செயல்படும்போது,குடியரசுத்தலைவரைப் போன்று அதே ஊதியத்தைப் பெறுவார் என்று நான் கூறியதாக எனது நண்பர் திரு. காமத் கூறினார். அந்தக் கூற்றும் நான் முன்மொழிந்த திருத்தமும் இசைவாக இருப்பதைக் காண்பதற்கு அவர் ஓரளவு சிரமப்பட்டார். அந்தத் திருத்தம், துணை குடியரசுத் தலைவர், தற்காலிகக் குடியரசுத் தலைவராகச் செயல்படும்போது, அவருடைய சம்பளத்தை நிர்ணயம் செய்யும் அதிகாரத்தை நாடாளுமன்றத்திற்கு அளிக்கிறது. அரசியல் சாசன வரைவின் 161வது பக்கத்தை எனது நண்பர் திரு.காமத் திருப்பிப் பார்ப்பாரேயானால், அதில் குடியரசுத் தலைவரின் சம்பளத்தை நிர்ணயம் செய்யும் ஓர் அட்டவணை

---

1. மூல விவாதங்களில் இடைமறிப்புகளைப் புள்ளிகள் குறிக்கின்றன.

இருப்பதையும், அந்த அட்டவணையின் 5வது பத்தி, குடியரசுத் தலைவரின் சம்பளத்தைத் திட்டவட்டமாக எடுத்துக் கூறுவதையும் அவர் காண்பார். நிச்சயமாக, ஒரு நபர் தற்காலிகக் குடியரசுத் தலைவ ராகச் செயல்படும்போது, வாழ்க்கையில் எவ்வளவு ஆரம்ப கட்டத்தில் அவர் அந்தப் பதவியைப் பெற்றிருந்த போதிலும் இந்த அரசியல் சாசனத்தின்படியான சம்பளத்தைப் பெறுவதற்கு அவர் தகுதியுடையவர் ஆவார். ஆனால், ஒரு மிகவும் குறுகிய காலத் திற்கு குடியரசுத் தலைவர் பதவியை ஏற்றுக்கொள்ளும் நபருக்கு வேறுவிதித சம்பளத்தை நிர்ணயம் செய்யும் விஷயத்தை நாடாளு மன்றத்திற்கு விட்டுவிடுவது அவசியமாக இருக்கக்கூடும் என்று உணரப்பட்டது. அவரது பதவிக்காலம் நிச்சயமாக குடியரசுத் தலைவரின் பதவிக்காலத்தைப்போன்று அதே அளவு இருக்காது என்ற காரணத்தினால், அதே சம்பளத்தை அவருக்கு வழங்குவதற்கு நாடாளுமன்றம் விரும்பாமலிருக்கக்கூடும். இதன் விளைவாக, நாடாளுமன்றம் இது குறித்து எதுவும் வகைசெய்யாவிட்டால், அப்பொழுது அவர் குடியரசுத் தலைவரின் சம்பளத்தையே பெறுவார். ஆனால், அவருக்கு வேறுசம்பளம் கொடுப்பதற்கு நாடாளுமன்றம் முடிவுசெய்யவும் கூடும். அந்த நோக்கத்திற்காகவே இந்தத் திருத்தம் முன்மொழியப்பட்டுள்ளது.

**திரு.எச்.வி.காமத்:** ஐயா, எனது மாண்புமிகு நண்பர் டாக்டர் அம்பேத்கரை, 48வது விதியின் (4) வது உபவிதியின் பால் கவனத் தைத் திருப்பும்படி கேட்டுக்கொள்கிறேன். அது, குடியரசுத் தலை வரின் ஊதியமும் படித்தொகைகளும் அவரது பதவிக் காலத்தின் போது குறைக்கப்படக் கூடாது என்று கூறுகிறது. துணைக் குடியரசுத் தலைவர் தற்காலிக குடியரசுத் தலைவராகச் செயல்படுவதற்கும், குடியரசுத் தலைவருக்கும் இடையில் நீங்கள் வேறுபாடு காண்கிறீர்கள் என்று நான் புரிந்துகொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம், நிச்சயமாக.

**திரு.எச்.வி.காமத்:** ஐயா, இப்பொழுதுதான், கடைசியாக விவாதிக்கப்பட்ட விதிக்கான ஒரு திருத்தத்திற்கு நான் ஆட்சேபனை தெரிவித்தபோது, தற்காலிகக் குடியரசுத் தலைவராக துணைக் குடியரசுத் தலைவர் செயல்படும்போது, அவர் குடியரசுத் தலை

வரின் சம்பளத்தையும் படித்தொகைகளையும் வாங்குவார் என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நாடாளுமன்றம் வேறுவிதமாக முடிவு செய்யாத வரையில் துணைக் குடியரசுத் தலைவர் தற்காலிகக் குடியரசுத் தலைவராகச் செயல்படும்போது, குடியரசுத் தலைவரின் சம்பளத்தைப் பெறுவார். ஒரு குறுகிய காலமே அந்தப் பதவியிலிருக்கும் ஒரு குடியரசுத் தலைவரின் சம்பள விகிதத்தை நிர்ணயம் செய்யும் அதிகாரம் ஏன் நாடாளுமன்றத் திற்குக் கொடுக்கக்கூடாது என்பதற்கு எந்தக் காரணமும் இல்லை.

பண்டிட் பார்கவா மற்றொரு விஷயத்தை எழுப்பினார். அதாவது, துணைக் குடியரசுத் தலைவர், தற்காலிக குடியரசுத் தலை வராகச் செயல்படும்போது, அவர் மீது குற்றம்சாட்டி, மன்றத்தின் முன்னால் நிறுத்தப்பட்டு கண்டனம் தெரிவிப்பதற்கு எந்த விதியும் கிடையாது என்று கூறினார். துணைக் குடியரசுத் தலைவர் குடியரசுத் தலைவராகும்போது, குடியரசுத் தலைவர் மீது சுமத்தப்படும் எல்லாக் கடமைகளும், கடப்பாடுகளும் இந்த உண்மை வெளிப்படை யாகக் கூறப்படாமலேயே அவர் மீது விழுகிறது என்பது தெள்ளத் தெளிவான விஷயம். குடியரசுத் தலைவர் என்ற வகையில் அவ ருடைய பதவிக் காலத்தின்போது, குடியரசுத் தலைவர் கண்டனம் தெரிவிக்கும் அபாயத்திற்கு இரையாகும் ஏதாவது குற்றங்களையோ அல்லது செயல்களையோ புரிந்தால், அவர் ஒரு துணைக் குடியரசுத் தலைவராகவோ, அல்லது குடியரசுத் தலைவராக தற்காலிகமாக செயல்படுபவராகவோ இருப்பது எந்தவிதமான தடைக்காப்பை யும் அவருக்கு அளிப்பதில்லை. எனவே அது சம்பந்தமாக எந்த வழிமுறையும் உருவாக்கப்பட வேண்டிய அவசியமில்லை.

**திரு. நஸிருத்தீன் அகமது:** திரு. துணைத் தலைவர் அவர்களே நான் கேட்கலாமா...

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தக் கட்டத்தில் எத்தகைய குறுக்கு விசாரணைக்கும் நான் என்னை இரையாக்கிக் கொள்ளப்போவதில்லை.

**திரு. துணைத் தலைவர்:** திரு. நஸிருத்தீன் அகமது அவ ருடைய இருக்கைக்குத் திரும்பிச் செல்லலாம்.

**திரு. நஸிருத்தீன் அகமது:** தவறுதலாக (தெரியாமல்) கூறப் பட்ட ஒரு விஷயம் குறித்து மாண்புமிகு டாக்டர் அம்பேத்கரின் கவனத்தை ஈர்ப்பதற்கு நான் விரும்புகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** அவர் அதற்குக் காதுகொடுத்துக் கேட்க மறுக்கிறார். நான் என்ன செய்ய முடியும்? காது கொடுக்கும் படி அவரை நான் கட்டாயப்படுத்த முடியாது.

**திரு. நஸிருத்தீன் அகமது:** யாரும் அவரைக் கட்டாயப் படுத்த முடியாது. விஷயம் என்னவெனில் விதி 54-ன் துணைப் பிரிவு (3)ல்....

**திரு. துணைத் தலைவர்:** நான் திருத்தத்தை வாக்கெடுப்புக்கு விடப்போகிறேன். தாம் எந்தப் பதிலும் அளிக்கப் போவதில்லை என டாக்டர் அம்பேத்கர் கூறிவிட்டார்.

**திரு. நஸிருத்தீன் அகமது:** விஷயத்தை அவர் மறுபரிசீலனை செய்வார் என நம்புகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** நஸிருத்தீனை பேசும்படி நான் அழைக்கவில்லை.

**திரு. நஸிருத்தீன் அகமது:** வாக்கெடுப்பின் மீது செல்வாக்கை ஏற்படுத்தக்கூடிய ஒரு விஷயத்தை அவையின் கவனத்திற்கு கொண்டு வரவே விரும்புகிறேன், ஐயா.

**திரு. துணைத் தலைவர்:** மூன்றாவது வாசிப்புக் கட்டத்தில் அவ்வாறு ஏன் செய்யக்கூடாது? திருத்தத்தை நான் வாக்கெடுப்பிற்கு விடப்போகிறேன்.

**திரு. நஸிருத்தீன் அகமது:** ஆனால், ஐயா, இந்த விஷயம் அதிமுக்கியம் வாய்ந்ததாகும்.

**திரு. துணைத் தலைவர்:** தாங்கள் அவ்வாறு கருதுகிறீர்கள். தங்களது இருக்கைக்குத் திரும்பிச் செல்லும்படி தங்களை மரியாதையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

**திரு. நஸிருத்தீன் அகமது:** தங்களது வேண்டுகோளுக்கு இணங்குகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** திரு. நஸிருத்தீன் பெயரில் நிற்கும் திருத்தம் எண் 1205ஐ இப்பொழுது வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்படவில்லை.

(ஏற்கனவே குறிப்பிடப்பட்டிருந்த டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.)

திருத்தம் செய்யப்பட்ட விதி 54, ஏற்றுக்கொள்ளப்பட்டு அரசியல் சாசனத்துடன் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

★ ★ ★

## விதி 55

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் எண் 1224, டாக்டர் அம்பேத்கர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பின் வருமாறு முன்மொழிகிறேன்:

> ''விதி 55ன் துணைவிதி (2)ல், 'நாடாளுமன்றங்களில் ஒன்றோ அல்லது' என்ற சொற்களுக்கு பதிலாக, நாடாளுமன்ற இரு அவைகளில் ஒன்றோ அல்லது ஓர் அவையோ' என்ற சொற்களும், 'நாடாளுமன்றத்தின் உறுப்பினர் அல்லது' என்ற சொற்களுக்குப் பதிலாக நாடாளுமன்ற இரு அவைகளில் ஒன்றின் உறுப்பினரோ அல்லது ஒரு அவையின்' என்ற சொற்களும்' நிலைமைக்கு ஏற்ப நாடாளுமன்றத்தில் அல்லது அத்தகைய அவையில்' என்ற சொற்களுக்கு' பதிலாக 'அந்த அவையில்' என்ற சொற்களும் முறையே சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்.''

இது வாசகத்தைச் செழுமைப்படுத்த மட்டுமே சாராம்ச விஷயம் இதில் எதுவுமில்லை.

★ ★ ★

1. அ.நி.வி. தொகுதி VII, 1948 டிசம்பர் 28, பக்கம் 1095.

[1]**திரு. துணைத் தலைவர்:** அடுத்த இரு திருத்தங்கள் எண் 1232, 1233. அவை வாய்மூலமானவையாதலால், அனுமதிக்கப்படவில்லை.

டாக்டர் அம்பேத்கர் பேரில் உள்ள திருத்தம் எண் 1234ம் திரு. நாஸிருத்தின் அகமது பெயரில் உள்ள திருத்தங்கள் எண் 1235ம் 1239ம் சாராம்சத்தில் ஒத்தவையாக உள்ளன. எனவே அவரது திருத்தத்தை முன்மொழியும்படி டாக்டர் அம்பேத்கரைக் கேட்டுக் கொள்கிறேன்; இந்தத் திருத்தம் மிகவும் வியாபகம் வாய்ந்ததாக எனக்குத் தோன்றியது.

**மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர்:** ஐயா! நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

> ''விதி 55ன் துணைவிதி (4)ல் 'அல்லது சம்பள நிலை' என்ற பதங்கள் எங்கெங்கு வருகின்றனவோ அவற்றை மாற்றி 'லாபநிலை' என்ற பதங்களைப் போடவும்.''

**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் எண் 1235 திரு. நஸிருத்தீன் அகமது பெயரில் உள்ளது. அதை வாக்கெடுப்புக்கு விடவேண்டும் என்று அவர் விரும்புகிறாரா?

**திரு. நஸிருத்தீன் அகமது:** இல்லை ஐயா, முந்திய திருத்தம் இதிலுள்ளதைத் தன்னுள் கொண்டுள்ளது.

**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் எண். 1239 பற்றி என்ன?

**திரு. நஸிருத்தீன் அகமது:** அந்த நிலை இதற்கும் பொருந்தும்.

(திருத்தம் எண் 1236 முன்மொழியப்படவில்லை.)

**திரு. துணைத் தலைவர்:** திருத்தங்கள் எண் 1237ம் 1238ம் வாய்மூலமானவையாதலால் அவை அனுமதிக்கப்படவில்லை.

திருத்தம் எண். 1240 டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் பெயரில் உள்ளது. அவர் அதை முன்மொழியலாம்.

1. அ.நி.விவாதங்கள், தொகுதி VII, 1948 டிசம்பர் 28, பக்கம் 1096.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

> *''விதி 55 ன் துணைப்பிரிவு (4)க்கான விளக்க உபபிரிவு (அ)ல் கீழ்க் கண்டவை பின்கண்டவாறு மாற்றப்பட வேண்டும்:*
>
> *(அ) அவர் முதல் அட்டவணையின் பகுதி Iல் நிர்ணயித்தபடி இப் போதைக்கு எந்த ஓர் மாகாணத்தின் ஆளுநராகவோ அல்லது இந்தியா விற்கான அல்லது அத்தகைய மாகாணத்திற்கான மந்திரியாகவோ இருக் கிறார்.''*

இந்த விஷயம் ஏற்கனவே சென்ற தடவை விவாதிக்கப் பட்டது.

★ ★ ★

[1]***திரு. துணைத் தலைவர்:*** *டாக்டர் அம்பேத்கர்.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்*** *(பம்பாய்: பொது):* திரு. துணைத்தலைவர் அவர்களே, இந்த விதிக்குக் கொண்டுவரப் பட்ட திருத்தங்கள் எதையும் என்னால் ஏற்றுக்கொள்ள முடிய வில்லை என்பதற்காக வருந்துகிறேன். பொது விவாதத்தைப் பொறுத்தவரை, பதிலளிக்க தேவைப்படுபவை இரு திருத்தங்கள் மட்டுமே என நினைக்கிறேன். முதலாவது திருத்தம் திரு.தாஹிர் பிரேரேபித்த திருத்தம் எண் 1215 ஆகும். குடியரசுத் தலைவர் தேர்தலுக்காக நிர்ணயிக்கப்பட்ட அதே முறையே குடியரசு துணைத் தலைவர் தேர்தலுக்கும் இருக்க வேண்டும் என்று திரு. தாஹிரின் திருத்தம் கோருகிறது. ஐயா, குடியரசுத் தலைவர் தேர்தல் முறைக் கும் குடியரசுத் துணைத் தலைவர் தேர்தல் முறைக்கும் அரசியல் சாசன வரைவில் செய்யப்பட்ட வேறுபாடு, இந்த இரு உயர் பதவி வகிப்பவர்கள் ஆற்ற வேண்டிய பணிகளை அடிப்படையாகக் கொண்டது. குடியரசுத் தலைவர், நாட்டின் ஆட்சித் தலைவர், அவரது அதிகாரங்கள் மத்திய நிர்வாகத்திற்கும் மாகாணங்களின் நிர்வாகத்திற்கும் விரிந்து பரவுகின்றன. இதன் காரணமாக, தங்களது பங்கை ஆற்றுவதோடு, மாகாணங்களின் சட்டமன்றங்களின் உறுப் பினர்களும் தம்பங்கை ஆற்ற வேண்டியது அவசியமாகும். துணைக் குடியரசுத் தலைவர் பற்றி எடுத்துக் கொண்டோமாயின், அவரது

---

1. அ.நி.வி. தொகுதி VIII, 1948 டிசம்பர் 28, பக்கம் 1096.

வழக்கமான பணிகள் மாநிலங்கள் அவைக்குத் தலைமை தாங்குவது மட்டுமே. அபூர்வமான சந்தர்ப்பங்களில், அதுவும் தற்காலிக காலத்திற்கு, குடியரசுத் தலைவரின் கடமைகளை ஆற்றும்படி அவர் கேட்கப்படலாம். இதனால், துணைக் குடியரசுத் தலைவர் தேர்தலில் மாகாண சட்டமன்றங்களின் உறுப்பினர்களையும் பங்குபெற அழைக்க வேண்டுமென்பது அவசியம் என்று தோன்றவில்லை. இரு உயர் பதவி வகிப்பவர்களைத் தேர்ந்தெடுக்கும் முறைகளில் அரசியல் சாசன வரைவு ஏன் வேறுபாடு செய்கிறது என்பதற்கு இது நியாமான காரணமாகும்.

பதில் தரவேண்டிய இரண்டாவது திருத்தம் திரு. நஸிருத்தீன் அகமது முன்மொழிந்த திருத்தம் எண் 1219 ஆகும். 'கூடியிருப்பவர்கள்' என்ற பதத்தை எடுத்துவிட வேண்டும் என்று அவர் ஆலோசனை கூறுகிறார். இப்பொழுது, 'கூடியிருப்பவர்கள்'' என்ற பதம் இந்த விதியில் சேர்க்கப்பட்டிருப்பதன் காரணம், வாக்காளர்கள் வாக்குகளை அஞ்சலில் அனுப்புவதன் மூலம் தேர்தல் நடப்பதைத் தவிர்ப்பதற்காகத்தான். தேர்தலுக்காக அஞ்சல்துறை பயன்படுத்தப்படும்போது, அது தோல்வியில் முடியக்கூடும் என்பதை நாம் எல்லோரும் அறிவோம். அஞ்சலில் அனுப்பப்படும் வாக்குச் சீட்டுக்கள் போக வேண்டிய இடத்திற்கு போய்ச் சேராமல் போகலாம்; வழியில் தவறிப் போகலாம்; அல்லது ஒரு வேட்பாளர் வாக்குச் சீட்டுகளைச் சேகரிப்பதற்காக தமது ஏஜெண்டுகளை பல இடங்களுக்கு அனுப்புவதும், அவற்றை அவர்கள் பெற்றுக்கொண்டு, தேர்தலில் வாக்காளர் தமது உரிமையை பயன்படுத்த வாய்ப்பு அளிக்காமலே, அவர்களே அவற்றை கையொப்பமிட்டு அனுப்பி வைப்பதும் முற்றிலும் சாத்தியமே. இந்தக் காரணத்திற்காகத்தான், அஞ்சல் மூலம் அனுப்புவதைத் தவறாகப் பயன்படுத்தாமல் தடுப்பதற்காகத்தான் இரு அவைகளும் கூடும்போது தேர்தல் நடைபெற வேண்டுமென முடிவு செய்யப்பட்டது. இந்த நோக்கத்திற்காக, நாடாளுமன்ற உறுப்பினர்கள் எல்லோரையும் ஒரு கூட்டத்திற்கு அழைப்பது நடைமுறையில் எத்தகைய சிரமத்தையும் ஏற்படுத்தும் என்றோ அல்லது எந்த அசௌகரியத்தையும் ஏற்படுத்தும் என்றோ நான் கருதவில்லை. எப்படியும் சட்டங்களை இயற்றும் நோக்கங்

1. அ.நி.ச. விவாதங்கள், பகுதி VII, 1948, டிசம்பர் 28, ப.1096.

களுக்காக நாடாளுமன்ற உறுப்பினர்கள் கூடுவார்கள். அம்மாதிரி, கூடியிருக்கும் ஒரு சமயத்தின்போது தேர்தலை நடத்துவது முற்றிலும் சாத்தியமே. நான் குறிப்பிட்ட சூழ்நிலைமையின் காரணமாக மூலப் பிரதியில் உள்ள வாசகம் மிகவும் நியாயமானது என்று பணிவுடன் கூறிக்கொள்கிறேன்.

இப்பொழுது ஐயா, துணைக் குடியரசுத் தலைவரைத் தகுதியற்றவராகக் கருதுவது பற்றி அரசியல் சாசனத்திலேயே குறிப்பிடப் படவேண்டுமென்ற திரு.கே.டி.ஷாவின் திருத்தத்தைப் பொறுத்தவரை, குடியரசுத் தலைவரைத் தகுதியற்றவராக்கும் விஷயம் பற்றி அவர் முன்மொழிந்த இம்மாதிரியான திருத்தத்துக்கு பதிலளிக்கும் போது இதுபற்றி விளக்கியுள்ளேன். இம்மாதிரி விஷயத்தை நாடாளுமன்றத்தால், ஒரு சட்டம் இயற்றுவதன் மூலம் சமாளிக்க முடியும் என்று கூறினேன்.

'மாற்று வாக்குமுறை' என்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளது பற்றி திரு. பாரதியும் திரு. நஸிருத்தீனும் அளித்துள்ள ஆலோசனையைப் பொறுத்தவரை, நான் கூறக்கூடியது இதுதான்: வாசகத்தை மாற்ற வேண்டுமென்பது மட்டுமே விஷயம் என்றால், இதை வரைவுக்குழு ஒரு பிந்திய கட்டத்தில் பரிசீலிப்பது சாத்தியமே. ஆனால், 'மாற்று வாக்குமுறை' என்பது சாராம்சத்தில் சிறிது மாற்றத்தை ஏற்படுத்துகிறது என்றால், இதுவிஷயத்தில் எவ் வகையிலும் என்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள நான் தயாராக இல்லை. இந்த விஷயத்தை எந்தக் கட்டத்திலும் நாம் பரிசீலிப்பது சாத்தியமில்லை என அஞ்சுகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** நான் இப்போது ஒவ்வொரு திருத்தத்தையும் வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

*(டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் முன்மொழிந்த திருத்தத்தைத் தவிர மற்ற எல்லாத் திருத்தங்களும் நிராகரிக்கப்பட்டன.)*

திருத்தப்பட்ட விதி 55 நிறைவேற்றப்பட்டு அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

18

★ ★ ★

## விதி 56

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா! திரு. துணைத் தலைவர் அவர்களே! விதி 56க்கு முன்மொழியப்பட்ட திருத்தங்கள் எதையும் ஏற்றுக்கொள்ள இயலாமைக்கு நான் வருந்துகிறேன். எனினும், இந்தத் திருத்தங்களை முன்மொழிந்தவர்கள் எழுப்பிய விஷயங்கள் சிலவற்றைப் பற்றி பதிலளிக்க விரும்புகிறேன். முதல் திருத்தம் பேராசிரியர் ஷாவால் கொண்டுவரப்பட்டது; துணைக் குடியரசுத் தலைவருக்கு ஓய்வூதியம் வழங்குவதற்கு வழிவகை செய்யப்பட வேண்டுமென்று அந்தத் திருத்தம் கோருகிறது. குடியரசுத் தலைவர் சம்பந்தமாகவும் இதே விஷயத்தைப் பேராசிரியர் ஷா எழுப்பினார். அரசியல் சாசனத்திலேயே அத்தகைய வழிவகை செய்வதற்கு எதிரான எனது ஆட்சேபனையை எடுத்துக் கூறினேன்.

**மாண்புமிகு திரு.கே. சந்தானம்** (சென்னை: பொது): இரண்டாவது அட்டவணையில் இது சம்பந்தமாக திட்டவட்டமாக வழிவகை செய்யப்பட்டுள்ளது என்பதை நான் சுட்டிக்காட்டலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அந்த விஷயம் பற்றி எனது நிலையை விளக்கிவிட்டதால், அப்பொழுது நான் கூறியவற்றை திருப்பிச் சொல்ல மாட்டேன். விதி 56ன் உபவிதி (ஆ) பற்றி பல்வேறு விஷயங்கள் எழுப்பப்பட்டுள்ளன. எழுப்பப்பட்ட முதலாவது விஷயம் லஞ்சஊழல், ஒழுக்கக்கேடு ஆகிய பதங்கள் சேர்க்கப்படவேண்டுமென்பது, அத்தகைய எந்தச் சொற்றொடரும் தேவையில்லை என்று தனிப்பட்ட முறையில் கருதுகிறேன். நம்பிக்கை இல்லை என்பது மிக விரிவான சொற்றொடர்; லஞ்ச ஊழல், ஒழுக்கக்கேடு முதலானவை போன்ற எந்தக் காரணங்களையும் இச்சொற்றொடரில் உட்படுத்தக்கூடிய அளவுக்கு விரிவானதாகும். எனவே, என்னுடைய கணிப்பில் அந்தத் திருத்தம் அவசியமில்லை. இரண்டாவது கூறப்பட்ட விஷயம் துணைக் குடியரசுத் தலைவரை நீக்குவதற்கான விதிமுறைகள், குடியரசுத் தலைவரை நீக்குவதற்கான விதிமுறைகள் போன்றே இருக்க வேண்டும் என்பது; அதாவது, மூன்றில் இருபங்கு பெரும்பான்மை இருக்க வேண்டும். இப்பொழுது ஐயா, இந்த விஷயத்தை பொறுத்தவரை, அரசியல்

1. அ.நி.ச. விவாதங்கள், பகுதி VII, 1948, டிசம்பர் 29, ப. 1113-15.

சாசனம் துணைக் குடியரசுத் தலைவர் என்று குறிப்பிட்டிருந்தாலும், அவர் உண்மையில் மாநிலங்களின் அவைத்தலைவர் என்பதை அவையின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். வேறு வார்த்தைகளில் கூறுவ தெனில், அவரின் பணிகளைப் பொறுத்த வரை, மக்கள் அவை சபாநாயகரின் பணிகளைப் போன்றவை மட்டுமே. எனவே, விதி 56ன் உபவிதி (ஆ)ல் உள்ள வழிவகைகளை ஒப்பிடும்போது, அல்லது வியாக்கியானம் செய்யும்போது, மக்கள் அவைத் தலைவரை நீக்குவது பற்றி குறிப்பிடும் விதிகளோடு ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும்; அவை விதி 76 (இ)ல் அடங்கியுள் ளன. விதி 56 (ஆ)ஐ விதி 77 (இ) யுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் நிலைமை துல்லியமாக ஒரே மாதிரியானது என்பது தெரியவரும். மக்கள் அவை சபாயநாயகரை நீக்குவதற்கான விதிமுறைகளே துணைக் குடியரசுத் தலைவரை நீக்குவதற்கும் பொருந்தும்; நான் ஏற்கனவே குறிப்பிட்டபடி, துணைக் குடியரசுத் தலைவருக்கு உண்மையில் மற்றொரு பெயர் மாநிலங்கள் அவைத் தலைவராகும். இதனால், மூன்றில் இரண்டு பங்குப் பெரும்பான்மை என்பது அவசியமில்லாதது.

அடுத்து, எனது நண்பர் திரு.காமத் எழுப்பிய பிரச்சினை ஓரளவு சிக்கலானது. இந்த விதியின் உபபிரிவு (ஆ) ஒரு பெரும் பான்மை என்று கூறுகிற அதேசமயம், மக்களவையைப் பற்றிக் குறிப் பிடும்போது அத்தகைய சொற்றொடர் எதுவும் பயன்படுத்தப்பட வில்லை என்று அவர் கூறினார். ஒரு குறிப்பிட்ட தீர்மானம் நிறை வேற்றப்பட வேண்டுமென்று எப்பொழுதெல்லாம் குறிப்பிடு கிறோமோ, அப்பொழுதெல்லாம் அவையின் பெரும்பான்மை வாக்குகளால் நிறைவேற்றப்பட வேண்டுமென்று புரிந்து கொள்ளப் படுகிறது. எப்பொழுது விசேடப் பெரும்பான்மை என்று குறிப்பிடப் படுகிறதோ அப்போது மட்டுமே, பெரும்பான்மை பற்றி கூறப்படு கிறது, மற்றபடியல்ல. மாநிலங்கள் அவையைப் பொறுத்தவரை எந்த குறிப்பிட்ட பெரும்பான்மை பற்றிக் கூறவோ குறிப்பிடவோ செய்யாவிட்டாலும், அந்த சொற்றொடரைப் பயன்படுத்துகிறோம் - ஒரு பெரும்பான்மையால் நிறைவேற்றப்பட்டதாக, ஏன் இந்த வேறுபாடு செய்யப்படுகிறது? மாநிலங்கள் அவை பற்றிப் பயன் படுத்தப்படும் சொற்றொடருக்கும் மக்கள் அவை பற்றிப் பயன் படுத்தப்படும் சொற்றொடருக்கும் இடையே உள்ள இந்த வேறுபாடு ஏன்? வித்தியாசம் செய்யப்படுவதற்குக் காரணம் அங்கு வரும் 'அச் சமயம்'' என்றபதமே. 'அச்சமயம்'' என்ற சொல் முக்கியமானது.

'அச்சமயம்' என்ற சொல்லின் பொருள், இருக்கைகள் காலியாக இல்லாத எல்லா உறுப்பினர்கள் என்றாகும். அவைக்குள் அமர்ந்திருக்கும் அல்லது ஆஜராகி வாக்களிக்கும் உறுப்பினர்கள் என்று அர்த்தமல்ல. இந்த ஏற்பாட்டின் காரணமாகவே, நாடாளுமன்றத்தின் உறுப்பினராக உள்ள எல்லா உறுப்பினர்களும், யாருடைய இடங்கள் காலியாக இல்லையோ அவர்களின் வாக்குகள் எண்ணப்படவேண்டும், அப்போதுள்ள உறுப்பினர்களின் பெரும்பான்மையால் நிறைவேற்றப்பட்டது என்று நாம் கூறியுள்ளோம்.

**திரு.எச்.வி.காமத்:** மாநிலங்கள் அவையின் மொத்த உறுப்பினர்கள் என்று அது பொருள்படுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம். 'அச்சமயம்'' என்ற சொல் அவசியம்.

**திரு. எச்.வி. காமத்:** ஒருவிஷயம் தெளிவுபடுத்தப்படவேண்டும்; ஐயா! நேற்று விதி 50ல் ஒரு பெரும்பான்மையால் 'நிறைவேற்றப்படுகிறது'' என்ற சொற்றொடரை, மூன்றில் இரு பங்கு பெரும்பான்மை என்பதற்குப் பதிலாக உபயோகித்தோம். அர்த்தத்தைத் தெளிவாக்குவதற்காக இங்கும் அதையே நாம் பயன்படுத்தக்கூடாதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இப்பொழுது அதை நான் விளக்குகிறேன். 'அச்சமயம்'' என்று நாம் உபயோகப்படுத்த வேண்டியுள்ளதுதான் காரணம்; ஆஜராகி வாக்களிக்கும் உறுப்பினர்கள் என்பதற்கும் அவையின் யாருடைய இடங்கள் காலியாக இல்லையோ அந்த அவையின் உறுப்பினராக உள்ள உறுப்பினர்கள் வாக்களிப்பது என்பதற்கும் இடையே உள்ள வேறுபாட்டை எடுத்துக்காட்டுவதற்குமே.

**திரு. எச்.வி. காமத்:** வேறு முறையில் குறிப்பாகச் சொல்லப்படாமலிருந்தால், ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது அல்லது ஏற்றுக்கொள்ளப்பட்டது என்று தாங்கள் கூறும்போது, அது ஒரு சாதாரணப் பெரும்பான்மையால் என்று நான் புரிந்து கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம். இப்பொழுது, எனது நண்பர் திரு.தாஹிர் எழுப்பிய திருத்தம் எண் 1266க்கு வருவோம். அவரை நான் சரியாகப் புரிந்து கொண்டிருந்தால், நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேற மூன்றில் இரண்டு பங்கு வாக்குகள் தேவைப்பட வேண்டும் என்று அவர் கூறுகிறார். அது நல்லதாக இருக்கலாம், அல்லது கெட்டதாக இருக்கலாம். என்னால் கூற முடியாது. நான் கூறக்கூடியது எல்லாம், இந்த வழிவகை, மக்கள் அவைத் தலைவர் மீது நம்பிக்கையில்லா தீர்மானத்திற்குமான வழிவகைக்கு ஒப்பானதாகும். இங்கும் மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மையால் அல்லது அவையின் உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்கினரால் நிறைவேற்றப்பட வேண்டுமென்பது நமக்கு தேவையில்லை.

அடுத்து, எனது நண்பர் திரு. நஸிருத்தீன் அகமதுவின் திருத்தம்; உட்பிரிவு(இ)ல், பதவிவிலகல் முதலிய சொற்கள் புகுத்தப்பட வேண்டும் என அவர் விரும்புகிறார். இந்தத் திருத்தம் நிச்சயமாக அவசியமற்றது. ஏனெனில் இந்த விதி திட்டமிடாத காலி இடத்தை நிரப்புவதற்கான எந்த ஏற்பாட்டையும் செய்யவில்லை. திட்டமிடாத தற்செயலாக ஏற்பட்ட காலிஇடங்களை நிரப்ப எந்த வழிமுறையையும் ஏற்படுத்துவதற்கு அவசியமில்லை. காரணம் விதி 74 உப பிரிவு (1)ன் கீழ், ஏதாவது எதிர்பாராதபடி காலி இடம் எப்பொழுது ஏற்பட்டாலும் அதில் செயல்பட ஒரு துணைத்தலைவர் எப்பொழுதும் இருக்கிறார். எனவே அத்தகைய திருத்தம் அவசியமற்றது.

ஐயா, இந்த விளக்கத்துடன், இந்த விதியை அதன் இப்போதைய வடிவத்தில் அவை ஏற்றுக்கொள்ளும் என நம்புகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** இப்பொழுது திருத்தங்களை ஒவ்வொன்றாக வாக்கெடுப்புக்கு விடலாம்.

*(எல்லாத் திருத்தங்களும் நிராகரிக்கப்பட்டன. விதி 56 நிறைவேற்றப்பட்டு அரசியல் சாசனத்துடன் சேர்க்கப்பட்டது.)*

★ ★ ★

## விதி 57

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தத் திருத்தத்தை முன்வைக்கும் முன்பு, இந்த விஷயத்தை பேராசிரியர் கே.டி.ஷா முழுமையாக பரிசீலிக்கவில்லை என அஞ்சுகிறேன். விதி 57-லிருந்து துணைக் குடியரசுத் தலைவர் விடப்பட்டிருப்பது மிக நிதானித்து செய்த ஒன்றாகும்; ஏனெனில், எனது நண்பர் திரு. தாஜமுல் ஹுசேன் சற்றுமுன்பு சுட்டிக்காட்டியதுபோல், அவரது பிரதான பணிகள் - மாநிலங்கள் அவைத் தலைவரின் பணிகள் - விதி75 (1)ல் போதுமான அளவு கொடுக்கப்பட்டுள்ளன; அவர் இல்லாத வேளைகளில், துணைத் தலைவர் அவரது பணிகளை ஆற்றுவார், எனவே விதி57ல் அத்தகைய ஒரு திருத்தத்தை புகுத்த வேண்டியது அவசியமில்லாதது.

அரசியல் சாசன வரைவு ஏதாவது ஒருவிதத்தில் குறைபாடுடையதாக இருக்கிறது என்று நான் காண்கிறபோதெல்லாம், மற்ற நண்பர்களின் திருத்தங்களிலிருந்து உண்மையில் நான் மிகத் தாராளமாக கடன் வாங்கிக் கொள்கிறேன் என்று எனது நண்பர் பேராசிரியர் ஷா கூறினார். நான் கூறமுடியுமெனில் பேராசிரியர் கே.டி.ஷா மறைமுகமாக எனக்கு ஒரு பாராட்டைத் தெரிவித்தார் என்று நினைக்கிறேன்; ஏனெனில், எமர்சன் கூறியுள்ளதுபோல், 'மிக அதிகம் நண்பர்களுக்கு நிச்சயமாக நான் மிக அதிகம் கடன் பட்டவனாவேன்.

**திரு. துணைத் தலைவர்:** நான் இப்பொழுது திருத்தங்களை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

திருத்தம் என்னவெனில்:

> ''விதி 57ல், 'குடியரசுத் தலைவரின் பணிகள்' என்ற சொற்களுக்குப் பின்னால், அல்லது 'துணைக் குடியரசுத் தலைவரின் பணிகள்' என்ற சொற்கள் சேர்க்கப்பட வேண்டும்.''

திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

**திரு. துணைத் தலைவர்:** வேறு திருத்தங்கள் எதுவும் இல்லை.

---

1. அ.நி.ச. விவாதங்கள், பகுதி VII, 1948 டிசம்பர் 29, பக். 1117.

*''எனவே விதி 57, அரசியல் சாசனத்தின் பகுதியாகிறது.''*

*தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.*

*விதி 57 அரசியல் சாசனத்துடன் சேர்க்கப்பட்டது.*

*(விதி 58 எந்தத் திருத்தமுமில்லாமல் அரசியல் சாசனத்தில் சேர்க்கப் பட்டது.)*

## விதி 59

[1]**திரு. துணைத் தலைவர்:** திரு. தாஜமுல் ஹுசேனால் கொண்டு வரப்பட்ட திருத்தத்தின் மீது டாக்டர் அம்பேத்கர் ஏதாவது கூற விரும்புகிறாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம்! ஐயா! விதி 59ல் உள்ளடங்கியுள்ள வகை துறை ஏற்பாட்டின் பொதுவான உருவரையை சில வார்த்தைகளில் விளக்குவது விரும்பத்தக்கதாக இருக்கும். சமஷ்டி சட்டத்தில் விவரிக்கப்பட்டிருக்கும் குற்றங்களுக் கான தண்டனையைக் குறைக்கும் அதிகாரம் ஒன்றியத்தின் குடியரசுத் தலைவருக்கு அளிக்கப்பட்டுள்ளது. மாகாண சட்டமன்றங்கள் இயற்றிய சட்டங்களுக்குட்பட்ட குற்றங்களுக்கான தண்டனையை குறைக்கும் அதிகாரம் மாகாண ஆளுநர்களுக்கு அளிக்கப்பட் டுள்ளது. மரண தண்டனையைப் பொறுத்தவரையில், அந்தத் தண்டனை நாடாளுமன்றம் நிறைவேற்றிய எந்த சட்டத்தின் கீழோ அல்லது மாகாணங்களின் சட்டத்தின்கீழோ அளிக்கப்பட்டிருந் தாலும் அதிகாரம் இரு வருக்கும், அதாவது குடியரசு தலைவருக்கும் சம்பந்தப்பட்ட மாகாணத்திற்கும் உண்டு.'' இதுதான் விதி 59ல் செய்யப்பட்டுள்ள ஏற்பாடு.

எனது நண்பர் திரு.தாஜமுல் ஹுசேனின் திருத்தத்தை பொறுத்தவரை, அவரது நோக்கம் மரணதண்டனையைக் குறைப் பதற்கு ஆளுநருக்கு அளிக்கப்பட்டுள்ள அதிகாரம் நீக்கப்பட வேண்டும் என்பது. உப-பிரிவு (3)ன்படி மரண தண்டனையைக் குறைக் கும் அதிகாரம் இப்பொழுது ஆளுநருக்கும் குடியரசுத் தலைவருக் கும் அளிக்கப்பட்டுள்ளது. ஆளுநரிடமிருந்து இந்த அதிகாரம் அகற்றப்பட வேண்டும் என்பதற்கான மிகவும் பலமான வாதங் களை வரைவுக் குழுவால் காண முடியவில்லை. இது எப்படி

1. அ.நி.ச. விவாதங்கள், பகுதி VII, 1948 டிசம்பர் 29, பக். 1117

யாயினும், குற்றம் அந்தக் குறிப்பிட்ட ஸ்தலத்தில் நிகழ்ந்துள்ளது, மரணதண்டனை விதிக்கப்பட்ட குற்றவாளியின் கருணை மனுவின் மீது ஆளுநருக்கு ஆலோசனை வழங்க உள்துறை அமைச்சர் மேலான நிலையில் இருப்பார்; காரணம் அந்த வழக்கின் சூழ்நிலைமைகள் பற்றியும் அந்த வட்டாரத்தில் உள்ள நிலவரம் பற்றியும் அவர் நெருக்கமாக அறிந்திருப்பார். எனவே, இப்பொழுது ஆளுநர் அனுபவித்துவரும் அதிகாரம் அவரிடம் நீடித்திருப்பதால் எந்தத் தீங்கும் வராது என்று கருதப்பட்டது. எனினும், இதற்கு ஒரு பாது காப்பும் அளிக்கப்பட்டுள்ளது. அதாவது மரண தண்டனை விதிக்கப் பட்ட வழக்கில் கருணை மனு நிராகரிக்கப்பட்டால், இந்த விதி யின் ஷரத்தின்படி, குற்றவாளி மற்றொரு கருணை மனுவை குடியரசுத்தலைவருக்கு அனுப்பி அவரது அதிர்ஷ்டத்தை சோதனை செய்து பார்க்கலாம். இந்த வரைவு விதியில் உள்ள ஷரத்துக்களை அவை உள்ளபடியே இருத்திக் கொண்டால், எந்த அடிப்படைக் கோட்பாடும் பெரிதாக மீறப்படும் என்று நான் கருதவில்லை.

**திரு. துணைத் தலைவர்:** இப்பொழுது திரு.தாஜமுல் ஹுசேனின் திருத்தத்தை வாக்கெடுப்பிற்கு விடுகிறேன். திருத்தம் என்னவெனில்,

"விதி 59ன் துணைவிதி (3) நீக்கப்பட வேண்டும்."

திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

**திரு.துணைத் தலைவர்:** இப்பொழுது விதி 59 ஐ வாக்கெடுப் புக்கு விடுகிறேன். தீர்மானம் என்னவெனில்:

'விதி 59, அரசியல் சாசனத்தின் பாகமாகிறது"

விதி 59 நிறைவேற்றப்பட்டு, அரசியல் சாசனத்துடன் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

## விதி 60

[1] **மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (பம்பாய் - பொது) திரு.துணைத்தலைவர் அவர்களே, இந்த வரம்புரைக்குக் கொண்டு வரப்பட்டுள்ள இரண்டு திருத்தங்களையும் நான் ஏற்றுக் கொள்ள முடியாததற்கு வருந்துகிறேன்; ஆனால், இந்தத் திருத்தங்களை ஏன்

1. அ.நி.ச. விவாதங்கள், பகுதி VII, 1948 டிசம்பர் 29, பக். 1136-40.

ஏற்றுக் கொள்ள முடியாத நிலையில் உள்ளேன் என்பதற்கான கார ணங்களை சுருக்கமாக எடுத்துக்கூற விரும்புகிறேன்: அதைச் செய் வதற்குமுன்பு வரம்புரையில் கூறப்பட்டுள்ள நிலைக்கும், இந்த வரம்புரைக்கு முன்மொழியப்பட்ட திருத்தங்களுக்கும் இடையே உள்ள வித்தியாசம்தான் என்ன என்பதை அவை தெரிந்து கொள்ள வேண்டுவது விரும்பத்தக்கது எனக் கருதுகிறேன். இப்பொழுதுள்ள வரம்புரை இரு பிரச்சினைகளை முன்வைக்கிறது. முதலாவது கருத்து என்னவெனில், ஒருங்கியல் அதிகாரப் பட்டியலில் வரும், மத்திய சட்டமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டமானாலும், மாகாணம் அல்லது சமஸ்தானம் இயற்றிய சட்டமானாலும், பொதுவாக அதை அமல்நடத்தும் அதிகாரம் சாதாரணமாக , மாகாணத்தை அல்லது சமஸ்தானத்தைச்சாரும் என்பதாகும். இந்த வரம்புரை வகுக்கும் முதலாவது கருத்து இதுதான். அது முன்வைக்கும் இரண்டாவது கருத்து, வருமாறு: ஒருங்கியல் அதிகாரப் பட்டியல் அரங்கத்தில் அடங்கும் சட்டம் சம்பந்தமான ஒரு குறிப்பிட்ட வழக்கில், அதை அமுல்நடத்தும் அதிகாரம் மத்திய அரசாங்கத்திடம் வைத்துக் கொள்ளப்பட வேண்டும் என்று நாடாளுமன்றம் கருதினால், அம்மாதிரி செய்வதற்கு நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் உண்டு. எனவே நிலை இதுதான்: சாதாரணமாக ஒருங்கியல் அதிகாரப் பட்டியல் சம்பந்தமான எல்லா வழக்குகளிலும் அமல் நடத்தும் அதிகாரம் மாகாணங்களிடமும் சமஸ்தானங்களிடத்திலும் இருக்கும். விதிவிலக்கான வழக்குகளில் மட்டுமே ஒருங்கியல் அதிகாரப் பட்டியல் சார்ந்த சட்டத்தை அமுல்நடத்துவது தன்னிடம் இருக்கும் என மத்தியஅரசாங்கம் நிர்ணயிக்கலாம். இங்கு முன்வைக்கப்பட்ட திருத்தங்கள் அவற்றின் உட்பொருளிலிருந்து வேறுபட்டவை. ஒருங் கியல் அதிகாரப் பட்டியலில் உட்படும் சட்டத்தை அமுல்நடத் துவதை பொறுத்தவரை மத்திய அரசாங்கத்திற்கு எந்த சம்பந்தமும் இருக்கக்கூடாது என்பது முதல் திருத்தம். எனது மதிப்பிற்குரிய நண்பர் பண்டிட் குன்ஸ்ரூ முன்மொழிந்த இரண்டாவது திருத்தம் ஒருங்கியல் அதிகாரப் பட்டியலிலுள்ள ஒரு சட்டத்தை நிர்வகிப் பதை மத்திய அரசாங்கம் எடுத்துக் கொள்வதற்கு அனுமதியளிக்கா விட்டாலும், இனங்கள் 25, 37க்கு உட்படும் விஷயங்கள் சம்பந்த மான வழிகாட்டுக் கட்டளைகளை அளிப்பதை அனுமதிக்கத் தயாராக இருக்கிறது. இந்த இரு திருத்தங்களுக்கிடையே உள்ள வித்தியாசம் இதுவே. முதல் திருத்தம் 1935-ம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம்

வகுத்துள்ள இன்றைய நிலைக்குப் பெரிதும் அப்பால் செல்கிறது. உண்மையில், மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் அறிந்துள்ளதுபோல், இன்றைய 1935 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்தின் கீழ்கூட, ஒரு குறிப்பிட்ட சட்டம் அமுல்நடத்தப்பட வேண்டிய முறை, வழிவகை பற்றி வழிகாட்டுக் கட்டளைகளை மத்திய அரசாங்கம் மாகாணங்களுக்கு அனுப்புவது அனுமதிக்கப்பட்டுள்ளது. இன்றைய 1935 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டம், மத்திய அரசாங்கத் திற்கு வழங்கும் அதிகாரத்தைக்கூட முதலாவது திருத்தம் எடுத்து விடுகிறது. 1935 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்தில் இப் பொழுது காணப்படும் நிலைக்கு மீண்டும் எடுத்துச் செல்கிறது எனது மதிப்பிற்குரிய நண்பர் பண்டிட் குன்ஸ்ரூவின் திருத்தம்.

**பண்டிட் ஹிருதய நாத் குன்ஸ்ரூ:** இதற்குச் சற்று அப்பாலும் நான் செல்கிறேன். 1935 ஆம் வருட இந்திய அரசாங்க சட்டத்தின் கீழ் இந்திய அரசாங்கம் இப்பொழுது அனுபவிக்கும் எந்த அதிகாரத் திற்கும் அப்பால் செல்கிறது எனது திருத்தத்தின் இரண்டாவது பகுதி.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நல்லது. அப்படி யும் இருக்கலாம். நான் புரிந்து கொண்டபடி உள்ள நிலைமையைக் கூறினேன். ஐயா, வழிகாட்டுக் கட்டளைகளை அளிக்கும் அதிகாரம் மத்திய அரசாங்கத்திற்கு இருக்காது என்ற நிலைக்கு திரும்பிப் போக விரும்பும் முதலாவது திருத்தத்தை பற்றி இப்பொழுது பேசப் போகிறேன்; இதற்காக, இந்தக் குறிப்பிட்ட விஷயம் பற்றிய வர லாற்றினுள் செல்ல வேண்டியது அவசியம். இதை உண்மை விஷய மாக - எவ்விதமான மறைமுக குறைகூறுவது எதுவும் இல்லாமல், சாதாரணமாக குறிப்பிடுகிறேன்; இந்த முதல் திருத்தத்திற்கு ஆதர வாகப் பேசிய உறுப்பினர்கள் மிகப் பெரும்பாலும் முஸ்லீம்கள் என்பதை அவசியம் கவனித்திருக்கலாம். இந்த வரம்புரையை எதிர்க்க வேண்டியது அவையின் ஒவ்வொரு உறுப்பினரது ஒரு புனிதமான கடமை என்று அவர்களில் ஒருவரான எனது நண்பர் திரு. போக்கர் நினைத்தார். எனக்கு அதுபற்றி எதுவும் தெரியவில்லை......*

---

மூல விவாதத்தில் ★குறி குறுக்கீட்டைக் குறிக்கிறது.

**திரு. பி. போக்கர் சாகிப் பகதூர்:** அப்படி நான் கூறவில்லை. ஐயா! ஒவ்வொரு உறுப்பினரும் அவரது மனச்சாட்சிப்படி நடப்பது கடமை என்று மட்டுமே கூறினேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதை நான் அர்த்தப்படுத்துவது, மனச்சாட்சி உள்ள ஒவ்வொரு உறுப்பினரும் இந்த வரம்புரையை எதிர்க்க வேண்டும் என்று நான் ஊகிக்கிறேன். இதற்கு வேறு எந்த அர்த்தமும் இருக்க முடியாது (சிரிப்பு).

**திரு. பி. போக்கர் சாகிப் பகதூர்:** நிச்சயமாக இல்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இப்பொழுது, இந்தக் குறிப்பிட்ட வரம்புரைபற்றி முகமதிய நண்பர்கள் அக்கறை கொண்டுள்ள இந்த பிரத்தியேக நூதனக் காட்சிக்குப் பின்னே நான் கூறியபடி, ஒரு வரலாறு இருக்கிறது; என்னைப் போன்றே அந்த வரலாறு பற்றி நன்றாக அறிந்தவர் எனது மதிப்பிற்குரிய நண்பர் பண்டிட் குன்ஸ்ரூ; (அந்த வரலாற்றை) அதை அவர் முற்றிலும் மறந்துவிட்டார் என்று கூற வருந்துகிறேன்.

இந்த விஷயம் 1930ல் நடந்த வட்டமேஜை மகாநாட்டிற்கு பின்நோக்கிக் கொண்டு செல்கிறது. 1930ல் நடந்த வட்டமேஜை மகாநாட்டில் என்ன நடந்தது என்பதை அறிந்துள்ள ஒவ்வொருவரும்; அந்த மகாநாட்டில் பிரதிநிதித்துவம் பெற்ற இரு பிரதானக் கட்சிகள், அதாவது முஸ்லீம் லீகும் இந்திய தேசியக் காங்கிரஸும், அரசியல் சட்ட சம்பந்தப்பட்ட முக்கியமான விஷயங்களில் எதிரும் புதிருமாக இருந்தன என்பதை ஞாபகத்தில் கொண்டிருப்பார்.

எதிரும் புதிருமான நிலையை அவை மேற்கொண்ட விஷயங்களில் ஒன்று மாகாண சுயாட்சி பற்றியதாகும். சட்டம், நிர்வாகம் ஆகிய இரண்டிலும் இந்தியாவின் ஐக்கியத்தைப் பாதுகாப்பதை நோக்கமாகக் கொண்ட ஓர் அரசியல் சாசனத்தில், முற்றிலுமான மாகாண சுயாட்சி இருக்க முடியாது என்பது உணரப்பட்டது உண்மையே. ஆனால் இந்த விஷயத்தில் முஸ்லீம் லீக் ஒரு பிடிவாதமான கண்ணோட்டத்தை மேற்கொண்டது, இதன் விளைவாய் மத்தியில் ஒரு மாதிரியான பொறுப்பான அரசாங்கத்தை முஸ்லீம் லீகை ஒப்புக்கொள்ள வைப்பதற்காக ஒரு குறிப்பிட்ட சலுகையை இந்தியா மந்திரி அளிக்க வேண்டியதாயிற்று. அப்பொழுது இருந்த

இந்தியா மந்திரி செய்த காரியங்களில் ஒன்று இந்திய அரசாங்கச் சட்டத்தின் 126வது விதியில் ஒரு துணைவிதியைப் புகுத்துவதாகும்; ஒருங்கியல் பட்டியலில் உள்ள சட்டம் சம்பந்தப்பட்டவரை, மத்திய அரசாங்கத்தின் அதிகாரம் வழிகாட்டும் கட்டளைகளை வெளியிடுவதோடு, நின்று கொள்ள வேண்டும். நடைமுறை நிர்வாகம் சம்பந்தமாக அந்த அதிகாரம் நீடிக்கக்கூடாது. வாதம் என்னவெனில், மத்திய அரசாங்கத்தில் இந்துக்களின் ஆதிக்கம் இல்லாதவரை ஒருங்கியல் பட்டியல் சம்பந்தமாக ஒரு குறிப்பிட்ட சட்டத்தை மத்திய அரசாங்கம் நிர்வகிப்பதில் தங்களுக்கு ஆட்சேபம் ஏதும் இல்லை என்பது முஸ்லீம் லீகின் வாதம். வட்டமேஜை மாநாட்டில் விவாதங்களின்போது இது மிகத் தெளிவாகக் கூறப்பட்டது என்பது எனது ஞாபகத்தில் உள்ளது. இது ஏனெனில், முஸ்லீம்கள் பெரும்பான்மையராக உள்ள மாகாணங்களில், எடுத்துக்காட்டாக வடமேற்கு எல்லைப்புற மாகாணம், பஞ்சாப், வங்காளம், ஓரளவுக்கு அசாம் ஆகிய மாகாணங்களில், முஸ்லீம் லீக் அரசாங்கங்கள் பதவி ஏற்றன; இதனால், தாங்கள் பெரும்பான்மையில் உள்ளதன் காரணமாக இங்கெல்லாம் அந்த அதிகாரம் தங்களுக்கு மட்டுமே உரித்தாகும் என்று அவர்கள் கருதியதேயாகும்; இந்த அதிகாரம் வேறு எவருக்கும் செல்ல அவர்கள் விரும்பவில்லை; இதனால் இந்திய விவகார மந்திரி இந்த சலுகையை அளிக்க வேண்டி வந்தது. இது ஒரு சலுகை என்பதில் எனக்கு ஐயம் எதுவுமில்லை. ஒருங்கியல் பட்டியலின் வரம்புக்குள் உள்ள சட்டத்தை நிர்வகிக்க மத்திய அரசாங்கத்திற்கு எந்த அதிகாரமும் கூடாது என்பது கோட்பாட்டு ரீதியில் ஏற்றுக்கொள்ளப்படத்தக்கது அல்ல. எனவே, 1936 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்தின் 126 பிரிவில் குறிப்பிடப்பட்ட நிலை கோட்பாடு அடிப்படையில் நியாயப்படுத்தக் கூடியதல்ல என்பது எனது பணிவான கருத்து; முஸ்லீம்களுக்கு அளிக்கப்பட்ட சலுகை என்பதால் அது நியாயப்படுத்தப்படுகிறது. எனவே, இந்த திருத்தத்திற்குச் சாதகமான வாதங்களுக்கு ஆதரவு அடிப்படையாக 126 பிரிவைச் சார்ந்திருப்பது முறையானதல்ல.

ஐயா, இந்திய அரசாங்கச்சட்டத்தின் 126வது பிரிவில் கூறப்பட்டுள்ள நிலை தவறானது என்பதை போர்ப் பிரகடனம் செய்யப்படுவதற்கு முன்னர் நாடாளுமன்றம் இயற்றிய ஒரு சட்டத்திலேயே இந்தியா மந்திரியால் ஒப்புக்கொள்ளப்பட்டது; யுத்தப் பிரகடனம் செய்யப்படுவதற்கு சற்று முன்பு நாடாளுமன்றம் இயற்றிய ஒரு

சட்டத்தின் மூலம் 126 (ஆ) என்ற பிரிவு 126 (அ) பிரிவோடு பின் சேர்க்கையாக ஆக்கப்பட்டது என்பது மதிப்பிற்குரிய உறுப்பினர் களுக்கு நினைவிருக்கும். 126 (அ) பிரிவை இயற்ற வேண்டியது அவசியம் என்று நாடாளுமன்றம் கருதியது ஏன்? ஒருங்கியல் பட்டி யல் சம்பந்தப்பட்ட சட்டங்களைப் பொறுத்தவரை, இந்திய அர சாங்கச் சட்டத்தின் அதிதீவிரமான ஷரத்துக்களில் ஒன்று 126 (அ) பிரிவு என்பதைத் தாங்கள் அறிவீர்கள். மாகாணம் சம்பந்தப்பட்ட விஷயங்களில் சட்டங்கள் இயற்ற அது மத்திய சர்க்காரை அனு மதிப்பதோடு, மாகாண மற்றும் ஒருங்கியல் பட்டியல் விஷயங் களிலும் நிர்வாகத்தை எடுத்துக் கொள்வதற்கும் மத்திய சர்க்காரை அனுமதிக்கிறது. யுத்த காலத்தில் 126 (ஆ)வது பிரிவு நாட்டை நிர்வகிப் பதில் நிச்சயமாக நாசகார விளைவை ஏற்படுத்தும் என்று இந்திய மந்திரி உணர்ந்ததாலேயே இவ்வாறு செய்யப்பட்டது. எனவே, பணிவோடு ஒரு விஷயத்தை இங்கு கூறிக்கொள்ள விரும்புகிறேன். அதாவது 126 (அ) பிரிவு என்பது அவசர நோக்கங்களுக்காக நெருக்கடி நிலைக்காக ஏற்படுத்தப்பட்டது மட்டுமல்ல, சாதாரண நோக்கங்களுக்காக சாதாரண நிலைக்கும் அது உருவாக்கப்பட்ட தாகும். எனவே, 126 ஆவது பிரிவு என்னும் கோட்பாட்டின் அடிப் படையில் அமைந்த எந்த வாதமும் இந்நாட்களில் நான் குறிப்பிட்ட சந்தர்ப்ப சூழ்நிலைமைகளுக்கு ஏற்புடையது அல்ல என்பது எனது திட்டவட்டமான கருத்து.

இனி வரம்புரையை எடுத்துக் கொண்டால் .......★

**திரு. பி. போக்கர் சாகிப் பகதூர்:** ஐயா, தங்கள் அனுமதி யுடன் கற்றறிந்த எனது நண்பரைத் திருத்த விரும்புகிறேன். இன்றைய இந்திய ஒன்றியத்துக்காக இந்த அரசியல் சாசனம் உருவாக்கப் படுகிறது; அதில் முஸ்லீம்கள் பெரும்பான்மையில் உள்ள ஒரு மாகாணமும் இல்லை; எனவே, முஸ்லீம் லீகின் நலனுக்காக முஸ்லீம் உறுப்பினர்கள் இந்த திருத்தத்தை கொண்டு வருகிறார்கள் என்று கூறுவதில் நிச்சயமாக பொருள் எதுவுமில்லை. யதார்த்தத்தைத் தவறாகப் புரிந்து கொள்வதன் அடிப்படையில் மிகத் தவறான எண்ணத்தை ஏற்படுத்தும் வாதமாகும் இது; இன்றைய இந்திய ஒன்றியத்தில் உள்ள நாங்கள், முஸ்லீம்கள், குறிப்பாக இந்தத் திருத்

---

★ விவாதங்களின் முதல் பிரதியில் ★ இந்த குறி, குறுக்கீட்டை எடுத்துக்காட்டுகிறது.

தத்தால் சிறிதேனும் நன்மையடையப் போவதில்லை என்பதை மாண்புமிகு சட்ட அமைச்சர் மறந்துவிடுகிறார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நீங்கள் கூறுவது உண்மை என்பதை முற்றிலும் ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் முஸ்லீம் உறுப்பினர்கள் எந்த முஸ்லீம் லீக் சித்தாந்தத்தை கைவிட்டிருக்க வேண்டுமோ, அதை அவர்கள் இன்னமும் கைவிடவில்லை என்பது தான் எனது முறையீடு. முஸ்லீம் லீக் இருந்தபோது, முஸ்லீம் மாகாணங்கள் இருந்தபோது அவர்கள் முன்வைத்த அதே வாதங் களை இப்போதும் அவர்கள் திரும்பத் திரும்பக் கூறுகிறார்கள். இப்பொழுது அவை செல்லத்தக்கவை அல்ல. முகமதியர்கள் ஏன் அதைத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை (குறுக்கீடுகள்).

**திரு. துணைத் தலைவர்:** அமைதி, அமைதி.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்திய அர சாங்கச் சட்டத்தின் 126 பிரிவில் உள்ள ஷரத்திலிருந்து நாம் விலகிச் செல்கிறோம் என்ற வாதத்தில் சாரம் எதுவுமில்லை என்று பன்முறை எடுத்துக் கூறியிருக்கிறேன். நான் கூறியபடி, இந்தப் பிரிவு எந்த அடிப்படையையும் ஆதாரமாகக் கொண்டதேயல்ல.

இந்த ஷரத்துக்கு ஆதரவாக, இரண்டு விஷயங்களைக் கூற விரும்புகிறேன். முதலாவதாக இந்த ஷரத்தில் பொதிந்துள்ள கருத்துக்குப் போதுமான முன்மாதிரி உள்ளது. மதிப்பிற்குரிய எனது நண்பர் திரு.டி.டி.கிருஷ்ணமாச்சாரி கூட்டாட்சி அரசியல் சாசனம் உள்ள பல்வேறு நாடுகளில் உள்ள நிலைமையை விளக்கிக் கூறினார். எனவே, அந்த விஷயம் பற்றி நான் மீண்டும் கூறப் போவதில்லை. ஆனால் ஆஸ்திரேலியாவின் அரசியல் சாசனம் பற்றி ஒன்றைக் குறிப்பிட விரும்புகிறேன். ஆஸ்திரேலியாவின் அரசியல் சாசனத்திலும், ஒருங்கியல் பட்டியல் சட்டம் எனப்படுவது இருப்பதைப் பார்க்கிறோம். ஆஸ்திரேலியாவின் எந்தச் சட்டத்தை யும் அமுல்நடத்தும் அதிகாரத்தை காமன்வெல்த் நாடாளுமன்றம் தனக்கே எடுத்துக் கொள்ளலாம். ஆஸ்திரேலியாவில் சட்டமன்றத் துறை மற்றும் ஆட்சித்துறையின் அதிகாரங்கள் என்ற நூலைப் புகழ் பெற்ற வழக்கறிஞர் திரு.வைனெஸ் எழுதியுள்ளார்; அதிலிருந்து ஒரு சிறிய பத்தியை இங்கு எடுத்துக் காட்டுகிறேன்.

''கடைசியாக, காமன்வெல்த் சட்டங்கள் இருக்கின்றன. கட்டுப்படுத்தும் சட்டம் ஏதும் இருந்தாலொழிய, ஆட்சித்துறை அதிகாரம் சட்டமன்றத்தின் அதிகாரத்திலிருந்து பெறப்படுகிறது என்று லேப்ராய் கூறுகிறார். இந்தக் கருத்து கனடாவிற்கும் பொருந்தும் என்று தோன்றுகிறது; அங்கு இரட்டை அதிகாரமுறை ஒவ்வொரு அரசாங்கத்திற்கும் சட்டமியற்றும் தனி அதிகாரத்தை அளிக்கிறது; ஆனால் ஆஸ்திரேலியாவில் இவ்வாறு இல்லை. காமன்வெல்த்தின் சட்டமியற்றும் அதிகாரம் அதன் தனிப்பட்ட அதிகார வரம்புக்கு உட்பட்டது. உதாரணமாக, பாதுகாப்புத் துறையைக் கூறலாம். மானியம் சம்பந்தப்பட்ட விஷயத்தில் ஆட்சி அதிகாரம் காமன் வெல்த்திடம் நிலைகொண்டிருக்கிறது; ஆனால் ஒருங்கியல் பட்டியல் சம்பந்தமாக காமன்வெல்த்தின் சட்டம் இயற்றும் அதிகாரம் பயன் படுத்தப்பட்டாலன்றி ஆட்சி அதிகாரம் மாகாணங்களிடமே உள்ளது.''

இதன்பொருள், தனக்குள்ள சட்டமியற்றும் அதிகாரத்தை காமன்வெல்த் பயன்படுத்தாதவரை, ஒருங்கியல் பட்டியல் துறையில் ஆட்சிஅதிகாரம் மாநிலங்களிடம் இருக்கிறது; காமன்வெல்த் தனது அதிகாரத்தை பயன்படுத்தியதும் சட்டங்களை அமுல் நடத்துவது தானாகவே காமன்வெல்த்துக்கு மாற்றப்படுகிறது; எனவே, இந்த ஷரத்தில் காணப்படும் நிலையை ஆஸ்திரேலியாவில் உள்ளதோடு ஒப்பிடும்போது எந்தக் கூட்டாட்சிக் கோட்பாட்டிலிருந்தும் நாம் தீவிரமாக விலகிப்போகவில்லை என்று உறுதியோடு கூறுகிறேன். ஐயா, எனது இரண்டாவது முறையீடு என்னவெனில், ஒரு குறிப்பிட்ட சட்டங்களை அமுல்நடத்தும் பொறுப்பை மத்திய அரசாங்கம் எடுத்துக் கொள்வதை அனுமதிக்கும் இத்தகைய ஷரத்துக்கு போதுமான நியாயம் இருக்கிறது. ஒன்று அல்லது இரண்டு உதாரணங்களைக் கொடுக்கிறேன். தீண்டாமையை ஒழிக்கும் விதி 11ஐ அரசியல் நிர்ணய சபை நிறைவேற்றியுள்ளது. தீண்டாமை ஒழிப்பு ஒரு யதார்த்தம் ஆவதற்கு நாடாளுமன்றம் பொருத்தமான சட்டம் இயற்றுவதற்கும் அனுமதிக்கிறது. தங்களின் மனித உரிமைகளை நடைமுறையில் தீண்டப்படாதவர்கள் பெறுவதற்கு ஏற்படும் இடையூறுகளுக்கு அபராதம் விதிப்பதையோ வழக்குத் தொடர்வதையோ கட்டளையிடும் ஒரு சட்டத்தை மத்திய அரசாங்கம் இயற்றுவதாக வைத்துக்கொள்வோம். ஆனால் ஒரு குறிப்பிட்ட மாகாணத்தில், தீண்டாமையை ஒழிப்பதற்கான உணர்வு அவ்வளவு

உண்மையானதாக, தீவிரமானதாக இல்லை; அரசியல் சாசனம் உத்திரவாதம் அளிக்கும் எல்லா மனித உரிமைகளும் தீண்டப்படாதவர்கள் அடைவதை காண்பதில் அந்த அரசாங்கம் அக்கறை கொள்ளவில்லை; அந்த நிலையில் அரசியல் சாசனம் தீண்டாமை பற்றி மத்திய அரசாங்கத்தின் மீது பெரும் பொறுப்பை சுமத்தியுள்ள போது, சட்டத்தை இயற்றியதோடு தன் கடமை தீர்ந்துவிட்டதாக கையைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருப்பதும், குறிப்பிட்ட சட்டங்களை அமுல்நடத்துவதற்கு மாகாண அரசாங்கங்கள் என்ன செய்கின்றன என்று மத்திய அரசாங்கம் காத்திருந்து பார்த்து கொண்டிருப்பதும் தர்க்கரீதியானதா, நியாயமானதா? இத்தகைய ஒரு சட்டத்தை நடைமுறைப்படுத்த அதிகப்படியான காவல் படையை ஏற்படுத்தப்பட வேண்டும். இழைக்கப்படும் குற்றம் கைது செய்யப் படுவதற்கும் வழக்குத் தொடரப்படுவதற்கும் உரியதாக இருக்குமாயின் அதற்குத் தேவையான ஏற்பாடுகளையும் மேற்கொள்ள வேண்டும்; அவ்வாறு செய்யா விடின் அது நல்ல சட்டமாக இருக்கமுடியாது. இத்தகைய தன்மை வாய்ந்த சட்டத்தை இயற்றும் மத்திய அரசுக்கு அதை அமுல் நடத்துவதற்கு அதிகாரம் இருக்க வேண்டாமா? இத்தகைய ஜீவாதார முக்கியத்துவம் வாய்ந்த விஷயத்தில், சட்டத்தை இயற்றுவதோடு மத்திய அரசு வேறு எதையும் செய்ய வேண்டியதில்லை எனச் சொல்லக் கூடியவர்கள் யாராவது இருக்கிறார்களா என்பதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

மற்றொரு உதாரணத்தையும் இங்கு எடுத்துக் கொள்வோம். குழந்தைத் திருமணம் என்ற கொடிய தீமை இந்த நாட்டில் நடைமுறையில் உள்ளது; அது மிகுந்த கோபாவேசத்தைக் கிளர்த்தி விட்டுள்ளது. அதற்கு எதிராகப் பெருங்குரல் எழுப்பப்படுகிறது. மத்திய அரசாங்கம் இது சம்பந்தமாக சட்டங்களை இயற்றியுள்ளது. அவற்றை அமுல் நடத்துவது மாகாணங்களிடம் விடப்பட்டுள்ளது. சட்டம் இயற்றும் அதிகாரம் ஓர் அரசாங்கத்திடமும் அதனைச் செயல் படுத்தும் அதிகாரம் வேறு ஓர் அரசாங்கத்திடமும் இருகூறாகப் பிரிக்கப்பட்டுள்ளதன் விளைவாக பயன் என்ன என்பதை நாம் எல்லோரும் அறிவோம். இந்த விஷயத்தில் தீவிர ஆலோசனை உள்ள எனது நண்பர் பண்டிட் பார்கவா இதுபற்றி இந்த அவையில் அடிக்கடி கண்டனக்குரல் எழுப்பி வருவது நம் அனை வருக்கும் தெரியும். சட்டம் இருந்தும், முன்பு இருந்தது போலவே குழந்தை திருமணங்கள் பெரும் எண்ணிக்கையில் நடைபெற்று வருகின்றன

என்பதாக அறிகிறேன். இந்தத் தீமைகளை ஒழிக்க வேண்டுமென்று அவ்வளவு அதிகம் அக்கறை கொண்டுள்ள மத்திய அரசாங்கத்திற்கு, இத்தகைய சட்டங்களை அமுல்நடத்தும் அதிகாரம் இருக்க வேண்டு மென்பது விரும்பத்தக்கதல்லவா? மிகத் தீவிர உணர்வோடும், அதை நடைமுறைப்படுத்த வேண்டுமென்ற மிகுந்த விருப்பத் தோடும் நாடாளுமன்றம் இயற்றிய சட்டத்தை, மாகாணங்கள் அவற்றின் விருப்பம் போல் செய்து கொள்ளட்டும் என்று விட்டுவிட வேண்டுமா? உதாரணத்திற்கு, வேறு ஒரு விஷயத்தையும் எடுத்துக் கொள்ளுங்கள் - தொழிற்சாலைச் சட்டம். இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினராக நான் இருந்தபோது, தொழிற் சாலை ஆய்வாளர்களை நியமிப்பது பற்றியோ தொழிற்சாலை சட்டங்கள் முறையாக நிறைவேற்றப்படுகின்றனவா என்று அவர் களைக் கொண்டு கண்காணிப்பதற்கு ஏற்பாடு செய்வது பற்றியோ பல மாகாணங்கள் தயாராக இல்லை என்று எனக்கு முறையீடுகள் மேல்முறையீடுகள் வந்து கொண்டிருந்தன. மத்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நலச் சட்டங்கள் வெறும் காகித சட்டங்களாகி, அவற்றைச் செயல்படுத்தாமல் இருப்பது விரும்பத்தக்கதா? தான் இயற்றும் சட்டங்கள் நன்கு அமுல்படுத்தும்படிப் பார்த்துக் கொள் வதற்கு அரசாங்கத்திற்கு ஓரளவு அதிகாரம் இல்லையெனில் அவற்றால் என்ன பயன்? நான் எடுத்துக்காட்டிய அனுபவங்களைப் போன்றே மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் பலருக்கும் அனுபவங் கள் ஏற்பட்டிருக்கக்கூடும் என்பதில் எனக்கு ஐயம் எதுவுமில்லை. எனவே, ஒருங்கியல் பட்டியலில் மத்திய அரசாங்கம் இயற்றிய சட்டங்களில் கணிசமானவை மத்திய அரசாங்கத்தால் அமுல் நடத்த முடியாதபடி வெறும் காகிதச் சட்டங்களாகவே இருந்து வருகின்றன. ஆதலால் இந்த முக்கிய குறைபாட்டை உடனே சரிப்படுத்தியாக வேண்டும். இந்த ஷரத்து இதைத்தான் செய்ய முயலுகிறது.

நான் குறிப்பிட விரும்பும் வேறு ஒரு விஷயமும் உள்ளது. அது இதுதான்: மாகாண அரசாங்கங்கள் இந்த ஷரத்தை வரவேற்க வேண்டும்; ஏனெனில், இன்றைய நிலைமையில் ஒரு மாதிரியான நிதி முறைகேடு உள்ளது. மத்திய அரசாங்கம் சட்டத்தை இயற் றுவது, அதன் நிர்வாகத்தை மாகாணங்களுக்கு விட்டுவிடுவது என்றால், மாகாணங்களின்மீது சில நிதிப்பளுக்களை திணிப்பது என்றாகிறது; அந்தச் சட்டங்களை அமுல்படுத்துவதற்கான நிர்வாக யந்திரத்தை அமைப்பதில் இந்த சுமை ஏற்படுகிறது. அந்தச் சட்டங் களை அமுல்படுத்தும் பொறுப்பை மத்திய அரசாங்கமே ஏற்றுக்

கொண்டால், அந்த அளவுக்கு மாகாணங்கள் அந்த நிதிப் பளுவி லிருந்து விடுபடுகின்றன. இந்தக் கண்ணோட்டத்தில், இந்த ஷரத்து மாகாணங்கள் பெரிதும் அடைய விரும்புகிற, வரவேற்கக்கூடிய அதிகமான நிவாரணங்களை வழங்கும் என்பதில் ஐயமில்லை; எனவே ஐயா, நான் கொடுத்துள்ள காரணங்களால், இந்த வரம்புரை ஒரு கோட்பாட்டை உள்ளடக்கியுள்ளது; இதை அவை ஏற்றுக் கொள்வது நல்லது *(கரகோஷம்).*

*(எல்லா 4 திருத்தங்களும் நிராகரிக்கப்பட்டன. எந்தத் திருத்தமும் இல்லாமல் விதி 60 நிறைவேற்றப்பட்டு அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப் பட்டது.)*

★ ★ ★

## விதி 61

[1]**திரு. துணைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர்...

**திரு. லட்சுமி நாராயண சாகு** *(ஒரிசா-பொது):* இது ஒரு மிக முக்கியான விதி; அதன்மீது நான்.....

**திரு. துணைத் தலைவர்:** இந்த விதியின் மீது பேச விரும்பும் உறுப்பினர்கள் பலர் இருக்கின்றனர் என்பதை அறிவேன்; ஆனால் நமக்குள்ள நேரம் மிகக் குறைவு. இதுபோதுமான அளவு விவா திக்கப்பட்டது என்றும் கருதுகிறேன்.

**திரு. லட்சுமி நாராயண சாகு:** ஆனால் ஐயா...

**திரு.துணைத் தலைவர்:** அவைத் தலைவரின் முடிவை மீற தயவுசெய்து முயலாதீர்கள். இப்போது டாக்டர் அம்பேத்கர் பேசலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, திரு. துணைத் தலைவர் அவர்களே! திரு.பெய்க் அல்லது திரு.தாஹிர் அல்லது பேராசிரியர் கே.டி.ஷா ஆகியோர் முன்மொழிந்த திருத்தங்கள் எவற்றையும் என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது என்பதற்கு வருந்து

1. அ.நி.ச. விவாதங்கள், பகுதி VII, 1948 டிசம்பர் 30, பக்கம் 1156-61.

கிறேன். அவர்கள் முன்மொழிந்த திருத்தங்களுக்கு ஆதரவாக அவர்கள் கூறிய விஷயத்திற்கு என்னால் முடிந்த அளவு சுருக்கமாக என் நிலையை விளக்க விரும்புகிறேன்.

திரு. மகபூப் அலி பெய்க்கின் திருத்தம் இரு பகுதிகளைக் கொண்டது. அவரது திருத்தத்தின் முதல் பகுதி அமைச்சரவை உறுப்பினர்களின் எண்ணிக்கையை நிர்ணயிக்க முயலுகிறது. அமைச்சர்கள் எண்ணிக்கை அவர்கள் கூறியுள்ளபடி பதினைந்தாக இருக்க வேண்டும். அவர் ஆலோசனையின் இரண்டாவது பகுதி என்னவெனில், அமைச்சரவை உறுப்பினர்கள் பிரதமராலோ அல்லது பிரதமரின் ஆலோசனையின் பேரில் குடியரசுத் தலைவராலோ நியமிக்கப்படக்கூடாது; அதற்கு மாறாக, விகிதாசார பிரதிநிதித்துவப்படி அவையால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

இப்பொழுது ஐயா! திருத்தத்தின் முதல் பகுதி நடைமுறை சாத்தியமானதல்ல என்பது தெளிவு. ஆரம்பத்திலேயே அமைச்சரவையின் எண்ணிக்கையை நிர்ணயிப்பது சாத்தியமல்ல. பதினைந்துக்கு மிகக் குறைவான அமைச்சர்களைக் கொண்டே நாட்டின் நிர்வாகத்தை நடத்துவது சாத்தியமல்ல என்று பிரதமர் கருதலாம். அரசியல் சாசனம் அமைச்சர்களின் எண்ணிக்கையை நிர்ணயிப்பதை அவர் விரும்பாதபோது, 15 அமைச்சர்கள் என்று அரசியல் சாசனம் அவர்மீது ஏன் பளுவைச் சுமத்த வேண்டும்? பதினைந்து மிகச் சிறிய எண்ணிக்கை என்று கருதும் அளவுக்கு அரசாங்கத்தின் நடவடிக்கைகள் மிகப் பெருமளவுக்கு வளரலாம். பதினைந்துக்கு மேல் அதிக உறுப்பினர்களை நியமிக்க வேண்டிய அவசியம் ஏற்படலாம். இங்கும், அமைச்சர்களின் எண்ணிக்கையை மட்டுப்படுத்தி, தேவைகளின்படி அதற்கான எண்ணிக்கையில் அமைச்சர்களை நியமிப்பது சம்பந்தமாக அவரைத் தடுப்பது அரசியல் சாசனத்தின் பக்கத்தில் தவறாகும்.

இரண்டாவது திருத்தத்தைப் பொறுத்தவரை, அதாவது, பிரதமரின் ஆலோசனையின் பேரில் குடியரசுத் தலைவர் அமைச்சர்களை நியமிக்கக் கூடாது; பதிலாக விகிதாசாரப் பிரதிநிதித்துவப்படி தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்று மகபூப் அலி பெய்க் கூறுகிறார். இதைக் கொண்டு அவரது மனதில் உள்ள அடிப்படை நோக்கமென்ன என்பதை துல்லியமாக என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவரது வாதங்களை நான் புரிந்து கொள்ள முடிந்த

வரை அரசியல் சாசன வரைவில் வகுக்கப்பட்ட முறை ஜனநாயகத் தன்மையற்றது என்று அவர் சொன்னார். மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்ட பிரதமர் வயதுவந்தவர்கள் வாக்குரிமை அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு அவையிலிருந்து அல்லது வயதுவந்தோர் வாக்குரிமையால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களிடையிலிருந்து அமைச் சர்களை நியமிக்கும் முறை எவ்வாறு ஜனநாயகத் தன்மையற்றது என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. அமைச்சரவை யில் சிறுபான்மையினர் பிரதிநிதித்துவம் பெறுவதை சாத்திய மாக்குவது என்பது இந்தத் திருத்தத்திற்குப் பின்னால் உள்ள நோக்கம் என்று நான் சந்தேகிக்கிறேன். இப்பொழுது, அதுதானெ னில், அவர் கொண்டுள்ள நோக்கத்தின்பால் அனுதாபம் கொள் கிறேன். ஏனெனில், நல்ல நிர்வாகம் என்பது யார் கையில் பெரு மளவுக்கு நிர்வாக அதிகாரம் உள்ளது என்பதைப் பொறுத்தது என்பதை நான் உணர்கிறேன். நிர்வாகம் ஒரு குறிப்பிட்ட பிரிவின ரின் கட்டுப்பாட்டில் இருந்தால், எந்தப் பகுதியினரை அவர்கள் பிரதி நிதித்துவப்படுத்துகிறார்களோ, அந்தப் பகுதியினரின் நலனுக்காக நிர்வாகம் செயல்படும். எனவே, அமைச்சரவையைத் தேர்ந்தெடுப்பது அதில் சிறுபான்மையினரைச் சேர்ந்தவர்களையும் சேர்க்கப்படுவதை அனுமதிக்கும் முறையில் இருக்கவேண்டும் என்று ஆலோசனை கூறுவதில் தவறு எதுவுமில்லை. இந்த ஆலோசனை தவறானது என்றோ, வெட்கப்பட வேண்டியது என்றோ நான் கருதவில்லை. அட்டவணை 3 (அ) என்று அழைக்கப்படும் ஒரு அட்டவணையை சேர்க்க வரைவுக்குழு உத்தேசித்திருப்பது அவரது நோக்கத்தை நிறைவேற்றும் என்பதை எனது நண்பர் திரு.மகபூப் அலி பெய்க் கின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். அரசியல் சாசன வரைவு அட்டவணை 4 என்ற ஒரு அட்டவணையைச் சேர்த்துள்ளது என்பதைக் காணலாம்; நிர்வாக விஷயத்தில் தமது உசிதப்படி நடந்து கொள்ளும் அதிகாரத்தை ஆளுநர் எவ்வாறு செயல்படுத்த வேண்டும் என்பதற்கான நெறிமுறைக் கட்டளைகள் அதில் அடங்கி யுள்ளன. அதற்கு ஏற்ப, மற்றொரு, அட்டவணையைச் சேர்க்கும் ஒரு திருத்தத்தை முன்மொழிவது என்று நாங்கள் முடிவு செய்துள் ளோம்; அதுவும் மேலே சொன்ன மாதிரியான குடியரசுத் தலைவ ருக்கான நெறிமுறைக் கட்டளைகளை உட்கொண்டுள்ளது. உத்தே சித்துள்ள நெறிமுறைக் கட்டளைகளின் துணைவிதிகளில் ஒன்று இதுதான்:

''குடியரசுத் தலைவர் தம்முடைய அமைச்சரவையை நியமிப்பதில், கீழ்க்கண்டமுறையில் தமது அமைச்சர்களை தேர்ந்தெடுக்கச் சாத்தியமான

*அளவு சிறப்பாகமுயற்சிப்பார்; அப்படியெனில், நாடாளுமன்றத்தில் அநேக மாக ஒரு ஸ்திரமான பெரும்பான்மை ஆதரவைப் பெறக்கூடியவர் என்று அவர் கருதுபவரை பிரதமராக அவர் நியமிக்கவேண்டும். பின்பு பிரதமரின் ஆலோசனையின் பேரில் மற்றவர்களை நியமிக்கவேண்டும். நடைமுறை யில் சாத்தியமான அளவு சிறுபான்மை சமூகத்தினரின் உறுப்பினர்களை யும் உள்ளிட்ட, கூட்டுமுறையில் நாடாளுமன்றத்தின் நம்பிக்கை பெறக் கூடியவர்களை நியமிக்க வேண்டும்.''*

தமது இந்தத் திருத்தத்தை முன்மொழிந்ததற்கு திரு. மகபூப் அலி பெய்க்கின் மனதில் கொண்டுள்ள நோக்கம் இதுவானால் இந்த நெறிமுறைக்கட்டளைகள் இந்த நோக்கத்தை நிறைவேற்றும் என்று கருதுகிறேன். ஒரு குறிப்பிட்ட சமூகத்தை சேர்ந்தவர்களை சேர்த்துக் கொள்ளவேண்டும் என்று சட்டரீதியான ஷரத்தை சேர்த்துக் கொள்வது சாத்தியமல்ல என்று நினைக்கிறேன். நாம் முன்வைத்துள்ள நமது அரசியல் சாசனம், கூட்டுப் பொறுப்பு என்ற கோட்பாட்டை உள் ளடக்கியுள்ளதால், அது சாத்தியமாகாது என்று நான் நினைக்கிறேன்; ஒரு குறிப்பிட்ட சிறுபான்மைச் சமுதாயத்தினரைச் சேர்ந்தவர் என்ப தால் மட்டும், ஆனால் பிரதம மந்திரியும் அவரது கட்சியும் ஒப்புக் கொண்டுள்ள கொள்கையின் அடிப்படைகளை ஒத்துக்கொள்ளாத வரை, பிரதம மந்திரியின் மீது அவரது சகாவாகத் திணிப்பதில் எந்த பயனும் இல்லை.

எனது நண்பர் திரு.தஹீரின் திருத்தத்தை எடுத்துக் கொண் டால், குடியசுத் தலைவர் தமது உசிதம் போல் செயல்பட வேண்டி யுள்ளபோது, அவர் அமைச்சர்களின் ஆலோசனையை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்ற கட்டாயத்திற்கு உட்படவேண்டியதில்லை என்று நிர்ணயிக்க வேண்டும் என அவர் கூறுகிறார். இந்திய அரசாங்கச் சட்டம் 50வது பிரிவை அப்படியே பகர்ப்பு செய்திருக்கிறார் என்று எனக்குத் தோன்றுகிறது. இந்திய அரசாங்கச் சட்டத்தில் முதலில் இருந்த பிரிவு 50ன் ஷரத்து முற்றிலும் சரியானதாகும்; ஏனெனில் அந்த ஷரத்துப்படி சில விஷயங்களில் உசிதம்போல் செயல்படும் அதிகாரம் கவர்னர்-ஜெனரலுக்கு அளிக்கப்பட்டிருந்தது; இவை பிரிவுகள் 11,12,19 லும் அந்த அரசியல் சட்டத்தின் மற்ற பல பகுதி களிலும் இடம்பெற்றிருந்தன. ஆனால் இப்போது, கவர்னர்-ஜெனரலைப் பொறுத்தவரை, அவரது உசிதப்படியான பணிகள் எதுவும் அவருக்கு இல்லை. பிரதமர் அல்லது அவரது அமைச்சரவை யின் ஆலோசனை இல்லாமல் தமது பணிகளை ஆற்றும்படி குடியரசுத் தலைவர் கோரப்படுவதற்கு எந்த சாத்தியக்கூறும் இல்லை. புதிய

அரசியல் சாசனத்தில் குடியரசுத் தலைவர் சில தனிச் சிறப்புரிமை கள் பெறுகிறார்; செயலாற்றும் உரிமைகளல்ல என்பதை திரு. தாஹிர் புரிந்துகொள்ளத் தவறிவிட்டார்; தனிச் சிறப்புரிமைகளுக்கும் செயலாற்றும் உரிமைகளுக்குமிடையே பெரு அளவிலான வித்தி யாசம் உள்ளது.

நாடாளுமன்ற முறை அரசாங்கத்தின் கீழ், மன்னரோ அல்லது அரசின் தலைவரோ பயன்படுத்தும் சிறப்புரிமைகள் இரண்டு மட்டுமே உள்ளன. ஒன்று பிரதமரை நியமிப்பது; மற்றது நாடாளுமன்றத்தைக் கலைப்பது. பிரதமர் சம்பந்தப்பட்டவரை, உசித அதிகாரத்தை குடியரசுத் தலைவருக்கு அளிப்பதைத் தவிர்க்க முடியாது. மற்றொரு வழியும் உள்ளது. அதுவருமாறு: பிரதமரை நியமிப்பதற்கு குடியரசுத்தலைவருக்கு அதிகாரம் அளிக்காமலோ அல்லது அவருக்கு உசித அதிகாரம் வழங்கப்படாமலோ, அவை முதலில் தனது தலைவரைத் தேர்ந்தெடுக்கும்; அவையின் முடிவு அல்லது தீர்மானப்படி பிரதமரைத் தேர்ந்தெடுத்தபின், பிரதமரைக் குடியரசுத் தலைவர் நியமிக்கலாம்.

**திரு. முகமது தாஹிர்:** இங்கு ஓர் ஒழுங்குப் பிரச்சினை எழுப்ப விரும்புகிறேன். ஆளுநர்கள் தம் உசிதம்போல் செயல்படும் அதிகாரம் அளிக்கப்பட்டுள்ள மாகாணங்களில் ஆளுநர்களுக்கும் அமைச்சர்களுக்குமிடையே உள்ள நிலை என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆளுநரின் நிலை குடியரசுத் தலைவரின் நிலையைப் போன்றதே. இப்பொழுது அள வுக்கு அதிகமாக நான் விளக்குவது தேவையில்லை என்று நினைக் கிறேன்; மாகாண சட்டமன்றங்கள், ஆளுநர்கள் பற்றி எடுத்துக் கொள்ளும்போது நிலைமை முழுவதையும் பரிசீலிக்கலாம். எனவே, பிரதமரைப் பொறுத்தவரை, மற்றொரு வழி அவை தனது தலை வரைத் தேர்ந்தெடுப்பதை அனுமதிப்பது; ஆனால் அது முற்றிலும் அவசியமற்றது என்று தோன்றுகிறது; ஒருவேளை தேர்தெடுக்கப் பட்ட பிரதமர் தவறான நபராக இருந்தால் தேவைப்படும் தகுதி அவருக்கு இல்லாமலிருந்தால், அதாவது அவருக்கு அவையில் ஸ்திரமான பெரும்பான்மை இல்லாமலிருந்தால் அல்லது அவர் அவையின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவராக இல்லாவிடில் பரிகாரம் அவையிடமே உள்ளது; பிரதமரைக் குடியரசுத்தலைவர் நியமித்தஉடனேயே, நியமிக்கப்பட்ட அந்தக் குறிப்பிட்ட நபரின்

நியமனத்தை அவை எதிர்க்கலாம் அல்லது அவையின் எந்த உறுப்பினரோ அல்லது ஒரு கட்சியோ, அவர்மீது நம்பிக்கையில்லாத் தீர்மானத்தைக் கொண்டு வந்து, அதுதான் அவையின் விருப்பமானால் அவரை முற்றிலுமாக அகற்றிவிடலாம். இவற்றில் எந்த வழியும் சிறந்ததே. எனவே, இந்த விஷயத்தைக் குடியரசுத் தலைவரின் உசிதத்திற்கு விட்டுவிடுவது விரும்பத்தக்கது என்று கருதப்பட்டது.

அவையைக் கலைப்பதைப் பொறுத்தவரை, இங்கும் பிரிட்டிஷ் அரசியல் சாசன வழக்கறிஞர்கள் சம்பந்தப்பட்டவரை, எந்தத் திட்டவட்டமான கருத்தும் இல்லை. ஒரு கருத்துப்படி, அவை பிடிவாதமாக முரண் எதிர்ப்பு தெரிவிப்பதாக ஆகிவிட்டதென்றோ, மக்களின் அபிலாஷைகளை அவை பிரதிநிதித்துவப்படுத்தவில்லை என்றோ பிரதமர் கருதினால் அவரது சிபாரிசின் பேரில் குடியரசுத் தலைவரோ அல்லது மன்னரோ அவரது சிபாரிசை ஏற்கலாம். மற்றொரு கருத்து, பிரதமர் அல்லது அமைச்சரவை ஆலோசனை எப்படி இருந்தாலும், அவை மக்களின் அபிலாஷைகளைப் பிரதிநிதித்துவப்படுத்தவில்லை என்று குடியரசுத் தலைவர் கருதினால் அவர் தாமாகவே அவையைக் கலைக்கலாம்.

இவையெல்லாம் முற்றிலும் தனிச் சிறப்புரிமைகளே; இந்தத் தனிச் சிறப்புரிமைகள் நாட்டின் நிர்வாகக் கட்டுக்கோப்புக்குள் வரவில்லை. எனவே, தனிச் சிறப்புரிமையை பயன்படுத்துவதை பற்றி தாஹிர் தமது திருத்தத்தில் ஆலோசனை கூறியுள்ள ஷரத்து எதுவும் அவசியமில்லை.

ஐயா, பேராசிரியர் கே.டி.ஷாவின் திருத்தத்தை இப்பொழுது எடுத்துக் கொள்கிறேன். அவரது நீண்ட திருத்தங்களைப் படித்துப்பார்ப்பதும் இந்த நீளமான பத்திகள் ஒவ்வொன்றின் உச்ச உயர் குறிக்கோளின் சாரத்தைப் பிழிந்து எடுப்பதும் எனக்குக் கஷ்டம் தான். நான் அவற்றை படித்துப்பார்த்தேன். பேராசிரியர் கே.டி.ஷா நான்கு விஷயங்களை முன்வைக்க விரும்புகிறார். ஒன்று எப்படியும், அரசியல் சாசனத்தின் கீழ் பிரதமமந்திரி இருப்பதை அவர் விரும்பவில்லை. இரண்டாவதாக, அமைச்சராக நியமிக்கப்பட்ட ஒவ்வொரு அமைச்சரும் சட்டமன்றத்தின் நம்பிக்கையைப் பெற முன்வரவேண்டும் என அவர் விரும்புகிறார். ஒருவர் அமைச்சராக நியமிக்கப்படும்போது அவர் அவையின் உறுப்பினராக இல்லை

எனில், ஆறு மாதங்களுக்குள் தேர்தலில் நின்று உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்பது அவரது மூன்றாவது ஆலோசனை. அவரது நான்காவது ஆலோசனை என்னவெனில், லஞ்ச ஊழல், ஒழுக்கக்கேடு முதலியவற்றிற்காக தண்டிக்கப்பட்டவர் எவரும் அமைச்சராக நியமிக்கப்படக்கூடாது.

ஐயா, இப்பொழுது இந்த யோசனைகளை ஒவ்வொன்றாக எடுத்துக் கொள்கிறேன். உதாரணமாக, பேராசிரியர் கே.டி. ஷா பிரதமர் பதவியை ஏன் ஒழித்துக் கட்ட வேண்டும் என நினைக்கிறார் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. அவரை நான் சரியாகப் புரிந்து கொண்டேன் என்றால் மரபுரீதியில் ஆட்சித் துறையின் ஓர் அங்கமாக பிரதமர் வைத்துக்கொள்ளப்பட்டால், அவருக்கு ஆட்சேபணை இல்லை என்று அவர் நினைக்கிறார். நல்லது, மரபுரீதியில் பிரதமர் பதவியை நீடிப்பதற்கு பேராசிரியர் கே.டி.ஷாவுக்கு ஆட்சேபனை இல்லை என்றால், பிரதமர் பதவிக்கு ஓர் அரசியல் சட்டரீதியான அங்கீகாரம் கொடுக்கப்படுவதில் எந்த ஆட்சேபனையும் இருக்கமுடியாது என்பதே என் கருத்து.

இங்கிலாந்திலும் கூட, பிரதமர் பதவி என்பது மரபுரீதியாகத் தான் அங்கீகரிக்கப்பட்ட ஒன்று என்பது அரசியல் சாசன நிபுணர்கள் மிகவும் பெரும்பான்மையினருக்கு நினைவிருக்கும் என்று நம்புகிறேன். பிந்திய கட்டங்களில் அமைச்சர்களின் சம்பளங்களை முறைப்படுத்த சட்டம் இயற்றப்பட்டபோதுதான் பிரதமர் பதவிக்கு சட்டபூர்வமான அங்கீகாரம் 1939 வாக்கில் அளிக்கப்பட்டது என்று நம்புகிறேன். எப்படியாயினும் பிரதமர் பதவி இருந்து வந்தது.

நாம் சட்டமாக்க விரும்பும் மற்ற கோட்பாட்டிற்கு, அதாவது கூட்டுப் பொறுப்பு என்ற கோட்பாட்டிற்கு, அவரது திருத்தம் நிச்சயமாக மரண அடிகொடுக்கும் என்று எனது நண்பர் பேராசிரியர் கே.டி.ஷாவுக்கு கூற விரும்புகிறேன். அமைச்சரவை கூட்டுப் பொறுப்பு என்ற அடிப்படையில் செயல்பட வேண்டுமென்று அவையில் எல்லா உறுப்பினர்களும் மிகவும் அக்கறை கொண்டுள்ளனர்; இது ஒரு மிகவும் நியாயமான, ஆரோக்கியமான கோட்பாடு என்று எல்லோரும் ஒப்புக்கொள்கிறார்கள். கூட்டுப் பொறுப்பை நடைமுறைப்படுத்துவதற்கு தேவைப்படும் அமைப்பு எத்தகையதாக இருக்க வேண்டும் என்று அவையிலுள்ள எத்தனை

உறுப்பினர்கள் உணர்கிறார்கள் என்று எனக்குத் தெரியாது என்பது தெளிவு. ஓர் அமைச்சர் மற்ற அமைச்சர்களிடமிருந்து வேறுபாடு கொண்டு, அமைச்சரவையின் கருத்துகளுக்கு எதிரான தமது கருத்தை வெளியிடுகிறார் என்று வைத்துக் கொள்வோம், அப்போது கூட்டுப்பொறுப்பு என்று அழைக்கப்படுவதை மீறி செயல்பட்ட தற்காக சட்டம் அவர் மீது நடவடிக்கை எடுப்பது சாத்தியமல்ல. கூட்டுப் பொறுப்புக்கு சட்டப்படியான நடவடிக்கை இருக்க முடியாது என்பது தெளிவு. பிரதமர் மூலம்தான் நடவடிக்கை எடுத்து கூட்டுப் பொறுப்பை அமுல் நடத்த முடியும். என்னுடைய கணிப்பில், இரண்டு கோட்பாடுகளை நடைமுறைப்படுத்துவதன் மூலம் கூட்டுப் பொறுப்பை அமுல்படுத்த முடியும். ஒரு கோட்பாடு, பிரதமரின் பரிந்துரை இல்லாமல் எந்த நபரும் அமைச்சரவைக்கு நியமிக்கப் படக் கூடாது. இரண்டாவதாக, ஒருநபர் அமைச்சரவை யிலிருந்து நீக்கப்பட வேண்டும் என்று பிரதமர் கூறினால், அவர் அமைச் சரவையில் நீடிக்கக்கூடாது. அமைச்சரவையின் உறுப்பினர்கள், அவர்களது நியமன விஷயத்திலும் அவர்கள் நீக்கப்படும் விஷயத் திலும், அவர்கள் பிரதமரின் அதிகாரத்தின்கீழ் வைக்கப்பட்டால் தான் கூட்டுப் பொறுப்பு என்ற நமது லட்சியத்தை நாம் அடைய முடியும். அந்தக் கோட்பாட்டை நடைமுறைப்படுத்த வேறு எந்த முறைகளையோ வழியையோ என்னால் காணமுடியவில்லை.

உங்களுக்கு பிரதமர் இல்லை என்று வைத்துக்கொள்வோம்; என்ன நடக்கும்? பின்வருமாறுதான் நடக்கும்: ஒவ்வொரு அமைச் சரும் குடியரசுத் தலைவரின் கட்டுப்பாட்டிற்கும் செல்வாக்கிற்கும் உட்படுவர். ஒரு குறிப்பிட்ட அமைச்சரவையுடன் ஒத்துபோகாதக் குடியரசுத் தலைவர், ஒவ்வொரு அமைச்சருடனும் தனித்தனி யாகத் தொடர்பு கொண்டு அவர்கள் மீது செல்வாக்கை பிரயோ கித்து, அதன் மூலம் அமைச்சரவையில் சீர்குலைவை நிச்சயமாக ஏற்படுத்த முடியும். இத்தகைய ஒரு விஷயத்தைக் கற்பனை செய்வது சாத்தியமில்லாதது ஒன்றுமல்ல. பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் கூட்டுப் பொறுப்பு கொண்டு வரப்படும் முன்பு, ஆங்கில மன்னர் பிரிட்டிஷ் அமைச்சரவையை சீர்குலைவு செய்தார் என்பது உங்க ளுக்கு ஞாபகம் இருக்கலாம். அமைச்சரவையிலும் பாராளுமன்றத் திலும் தம்முடைய நண்பர்கள் குழாம் ஒன்றை அவர் வைத்திருந்தார்; இம்மாதிரியான செயல்மூலம் கூட்டுப் பொறுப்புக்கு முற்றுப்புள்ளி

வைக்கப்பட்டது. பிரதமர் என்ற சாதனத்தின் மூலம் மட்டுமே, நான் கூறியபடி, கூட்டுப்பொறுப்பைச் சாதிக்க முடியும். எனவே உண்மையிலேயே அமைச்சரவை என்ற மாளிகைக்கு ஆதார அடித்தளம் பிரதமரேயாவார். அந்தப் பதவியை ஏற்படுத்தி அமைச்சர்களை நியமிக்கவும் அகற்றவும் அந்தப் பதவிக்கு அரசியல் சட்டபூர்வமான அதிகாரத்தை நாம் வழங்காதவரை, கூட்டுப் பொறுப்பு எதுவும் இருக்க முடியாது.

ஐயா, இப்பொழுது ஓர் அமைச்சர் நியமிக்கப்பட்டவுடன் நம்பிக்கை வாக்குப் பெறவேண்டும் என்ற எனது நண்பர் பேராசிரியர் கே.டி.ஷா தெரிவித்த இரண்டாவது யோசனைக்கு இப்போது வருவோம். இத்தகைய ஓர் ஏற்பாட்டுக்கு அவசியம் எதுவும் இல்லை என்று பேராசிரியர் கே.டி.ஷா உணர்வார் என்று நிச்சயமாக நினைக்கிறேன்; பிரிட்டிஷ் அமைச்சரவையின் ஆரம்ப வரலாலற்றில், ஒரு நாடாளுமன்றத்தின் உறுப்பினராக ஒருவர் இருந்தாலும், அவர் அமைச்சராக நியமிக்கப்பட்டால், அந்த உறுப்பினர் பதவியை ராஜிநாமா செய்து மறுபடியும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமெனக் கோரப்பட்டார்; ஏனெனில், ஒரு நபர் அமைச்சராக நியமிக்கப்பட்டால், அவர் மன்னரின் செல்வாக்கின் கீழ்வரலாம், பொது நலனுக்கு ஒவ்வாத முறையில் காரியங்களைச் செய்யலாம் என்று கருதப்பட்டது. இந்த முறையைப் பிரிட்டிஷ்காரர்களே இப்பொழுது கைவிட்டுவிட்டனர். அந்த வழக்கத்தை சட்டத்தின் மூலம் ஒழித்தனர். ஒரு நபர் அல்லது நாடாளுமன்ற உறுப்பினர் அமைச்சராக இப்பொழுது நியமிக்கப்பட்டால் மீண்டும் தேர்தலில் தேர்ந்தெடுக்கப்பட வேண்டியதில்லை. எனவே, இத்தகைய ஏற்பாடு கொஞ்சமும் அவசியமில்லை. சற்று முன்னர், நான் விளக்கியது போல், அமைச்சர் பதவிக்கு லாயக்கில்லாத ஒருவரை அமைச்சராகப் பிரதமர் நியமித்தால், அந்தக் குறிப்பட்ட அமைச்சர் மீதோ அல்லது அமைச்சரவை முழுவதன் மீதோ அல்லது சட்டமன்றத்தில் நம்பிக்கையில்லாத் தீர்மானத்தைக் கொண்டுவந்து அதன் மூலம், பிரதமரையோ அல்லது சட்டமன்றத்தின் கோரிக்கையின்படி பிரதமர் அந்த அமைச்சரை நீக்கத்தயாராக இல்லையெனில் அந்த அமைச்சரையோ பதவி நீக்கம் செய்யலாம். எனது பணிவான கருத்து என்னவெனில் பேராசிரியர் கே.டி.ஷா தெரிவித்த இரண்டாவது யோசனைக்கும் அவசியமில்லை என்பதாகும்.

அவரது மூன்றாவது யோசனையைப் பொறுத்தவரை, அதாவது சட்டமன்ற உறுப்பினராக இல்லாத ஒருவர் அமைச்சரவை உறுப்பினராக நியமிக்கப்படும்போது அவர் ஆறு மாதங்களுக்குள் சட்டமன்ற உறுப்பினராக ஆகவேண்டும் என்பதைப் பொறுத்த வரை, விதி 62(5)ல் இதற்கு வழிவகை செய்யப்பட்டுள்ளது. எனவே இந்தத் திருத்தம் அவசியமில்லாதது.

அவரது கடைசி யோசனை என்னவெனில், தண்டனை பெற்ற எவரும் அரசாங்கத்தில் அமைச்சராக நியமிக்கப்படக்கூடாது என்பது நல்லது. அவரது நோக்கத்தைப் பொறுத்தவரை, சந்தேக மில்லாமல் அது மிகவும் பாராட்டுக்குரியது. இந்த அவையின் எந்த உறுப்பினரும் இந்த யோசனைக்கு எதிராக மாறுபட்ட கருத்துக் கொள்ள விரும்பமாட்டார். ஆனால் இதிலுள்ள பிரச்சினை இதுதான்: இது சம்பந்தமான தகுதிகளையும் தகுதியின்மைகளையும் அரசியல் சாசனத்திலேயே கொண்டு வரவேண்டுமா என்பதுதான். அமைச்சர் களின் செயல்பாடுகளையும் சட்டமன்றத்தின் செயல்பாடுகளை யும் கவனித்து இத்தகைய இகழார்ந்த காரியத்தை அவர்களில் யாரும் செய்யாமல் பார்த்துக் கொள்ளப் பிரதமர் மீதும், அமைச்சர் கள் மீதும் பொதுமக்கள் மீதும் நம்பிக்கை வைப்பது போதுமானதாக இருக்காதா? பொதுமக்கள் அவர்களைக் கண்காணிக்கும் நிலையில் பிரதமரின் நல்லெண்ணத்திற்கும், சட்டமன்றத்தின் நல்லெண்ணத் திற்கும் கண்ணியத்துடன் விட்டு விடும் விஷயமாகும் இது என நினைக்கிறேன். எனவே, இந்தத் திருத்தங்கள் அவசியமற்றவை எனக் கூறுகிறேன்.

**திரு.எச்.வி.காமத்:** ஐந்தாவது வாரப் பட்டியல் IVல் உள்ள திருத்தம் எண் 47 டாக்டர் அம்பேத்கரின் பார்வையில் படவில்லை என அஞ்சுகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** எல்லாவற்றிற்கும் பதிலளிக்க அவர் கடமைப்பட்டுள்ளார். இந்தத் திருத்தத்திற்கு திரு.தாஜமுல் ஹுசேனால் பதிலளிக்கப்பட்டுள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அதற்கு எந்தப் பதிலும் தேவையில்லை. அவை எல்லாவற்றையும் பிரதமருக்கு விட்டுவிடலாம்.

**திரு. துணைத் தலைவர்:** இப்பொழுது எல்லாத் திருத்தங்களையும் ஒவ்வொன்றாக வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

*(எல்லா 5 திருத்தங்களும் நிராகரிக்கப்பட்டன. விதி 61 நிறைவேற்றப் பட்டு அரசியல் சாசனத்துடன் சேர்க்கப்பட்டது).*

★ ★ ★

## விதி 62

**திரு. துணைத் தலைவர்** (டாக்டர் எச்.சி. முகர்ஜி): விதி 62 பற்றி விவாதத்தை நாம் தொடரலாம்.

*(திருத்தங்கள் 1310, 1311 முன்மொழியப்படவில்லை)*

எண் 1312 ம் எண் 1329ம் ஒரே சாராம்சத்தைக் கொண்டுள்ளன. எண் 1329 முன்மொழியப்படலாம். டாக்டர் அம்பேத்கர், இப்போது தமது திருத்தத்தை முன்மொழியலாம்.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (பம்பாய் - மத்திய) ஐயா! நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

''விதி 62ன் துணைப்பிரிவு (5)க்குப் பின் கீழ்க்கண்ட புதிய துணைப் பிரிவு சேர்க்கப்படவேண்டும்.

''5 (அ) அமைச்சர்களைத் தேர்ந்தெடுப்பதிலும், இந்த அரசியல் சாசனத்தின்படி அவரது மற்ற கடமைகளை ஆற்றுவதிலும், அட்டவணை III -அ-ல், வகுத்தளிக்கபபட்டுள்ள அறிவுறுத்தல்களால் பொதுவாக குடியரசுத்தலைவர் வழிநடத்தப்படுவார்; அத்தகைய அறிவுறுத்தல்கள் படியல்லாமல் வேறு மாதிரியாக குடியரசுத்தலைவரால் ஏதாவது செய்யப்பட்டிருந்தால் அதன் சட்டப்படியான தன்மையை எத்தகைய ஐயப்பாட்டுக்கும் உட்படுத்தக் கூடாது''.

★ ★ ★

[2]**திரு. மகாவீர் தியாகி:** அடுத்து பேராசிரியர் ஷாவின் திருத்தம் உள்ளது. அமைச்சர்கள் ஆங்கில மொழியை பத்து ஆண்டுகளுக்குத் தெரிந்திருக்கவேண்டும், அடுத்த 10 ஆண்டுகளுக்குப் பின் ஹிந்தி தெரிந்திருக்க வேண்டும் என்று அதில் அவர் கூறுகிறார். எழுத்தறிவைப் பொறுத்தவரை நான் ஓர் அராஜகவாதி. இன்றைய கல்வி முறையில் எனக்கு நம்பிக்கையில்லை. கல்வியறிவு என்ற

---

1. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி VII, 1948, டிசம்பர் 31, பக். 1167
2. அதே நூல், பக். 1182

கோட்பாடு, மதிப்பிற்குரியது என்றாலும் அதை நான் எதிர்க்கிறேன். இப்பொழுது நான் ஒரு சிறுவனாக இருந்தால் எழுதப் படிக்க மறுப்பேன். நடைமுறையில் படிக்க, எழுத மறுத்தேன்; அதனால் நான் அரைகுறை கல்வி கற்றவன். இந்தியாவில் பெரும்பான்மை யோர் கல்வியறிவு இல்லாதவர்கள். நாட்டின் நிர்வாகத்தில் அவர் களுக்குரிய பங்கை ஏன் அவர்களுக்கு மறுக்கப்பட வேண்டும்? மனிதர் களின் மிகச் சிறந்த சாதனை கல்வியறிவு என்று ஏன் கருதப்பட வேண்டுமென்று எனக்குத் தெரியவில்லை. நாட்டின் ஆட்சிப் பொறுப்பை ஒருவருக்கு அளிப்பதற்கு ஒரே ஒரு தகுதி அதுதான் என்று ஏன் செய்யப்பட வேண்டும்? கலை, தொழில், தொழில்நுட்பம், உடல்பலம், அல்லது அழகு ஆகியவை இதைவிடச் சிறந்த தகுதி கள் என்று ஏன் தேர்ந்தெடுக்கக்கூடாது? ரஞ்சித்சிங் கல்வி அறிவு பெற்றவராக இருக்கவில்லை. சிவாஜியும் கூட கல்வி அறிவு பெற்ற வரல்ல. அக்பரும் அதிகம் கல்வி அறிவு பெற்றவரல்ல. அவர்கள் எல்லோரும் தங்கள் ராஜ்யங்களை மிகச் சிறப்பாக நிர்வகித்து உலகையே வியக்க வைக்கவில்லையா? ஐயா, கல்வியறிவிற்கு அள வுக்கு அதிகமான முக்கியத்துவம் அளிக்கக்கூடாது என்று பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன். டாக்டர் அம்பேத்கரை கேட்கிறேன்;. அவர் எப்பொழுதாவது எழுதுகிறாரா? அவருக்காக எழுத எழுத்தாளர்கள் இருக்கிறார்கள். அவருக்கு படித்துக் காட்ட ஆட்கள் இருக்கிறார்கள் போலும். அமைச்சர்கள் எழுதப்படிக்க ஏன் தெரிந்திருக்க வேண் டும்? மந்திரிகளுக்கு எழுதப் படிப்பது ஏன் தேவை என்று எனக்குத் தெரியவில்லை. அவர்கள் ஏதாவது எழுத விரும்பினால் தட்டச் சர்களை பயன்படுத்தலாம். படிப்பது, எழுதுவது தேவையில்லாதது. தேவைப்படுவது முன்முயற்சி, நேர்மை, ஆளுமை, வாய்மை, புத்திக் கூர்மை, கள்ளங்கபடில்லாமல் நடந்துகொள்வது ஆகியவையே. ஓர் அமைச்சராவதற்கு ஒரு மனிதருக்குள்ள தகுதிகள் இவையே. கல்வியறிவு முக்கியமானதல்ல.

**திரு.கே.வி.காமத்:** இன்று உள்ளது போல் இந்தியாவை தற்குறி நாடாக வைத்திருக்க பேராற்றலுடைய என் நண்பர் விரும்பு கிறாரா?.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** கல்வியறிவிற்கு எதிராக மனச்சாட்சிபூர்வமான ஆட்சேபம் எதுவும் உள்ளதா தங்க ளுக்கு?

**திரு. மகாவீர் தியாகி:** இல்லை, ஐயா!

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, பட்டியல் V உள்ள எண் 71ன்படி திருத்தப்பட்ட திருத்தங்களான எண் 1322 ஐயும், எண் 1326ஐயும் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறேன். எஞ்சிய திருத்தங்கள் பற்றி மேலோட்டமாக விளக்க விரும்புகிறேன்.

இந்தத் திருத்தங்கள் மூன்று விஷயங்களை எழுப்புகின்றன. முதலாவது ஓர் அமைச்சரின் பதவிக் காலம் பற்றியது; இரண்டாவது ஒரு அமைச்சரின் தகுதிகள் பற்றியது. மூன்றாவது, ஒருவர் அமைச்சரவையின் உறுப்பினராவதற்கான நிபந்தனை பற்றியது. முதலாவது விஷயத்தைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்கிறேன். இதுவிஷயமாக இரு திருத்தங்கள் உள்ளன. ஒன்று திரு.போக்கர் கொண்டுவந்தது, மற்றது திரு.கரிமுத்தீன் கொண்டுவந்தது. மற்ற பரிசீலனைகள் எதுவாக இருந்தபோதிலும், அவையின் நம்பிக்கைக்கு பாத்திரமாக இருக்கும்வரை ஓர் அமைச்சர் தொடர்ந்து பதவியில் இருக்கலாம் என்பது திரு.போக்கரின் திருத்தம். அவர் லஞ்சஊழல் மந்திரியாக இருக்கலாம்; மோசமான மந்திரியாக இருக்கலாம்; திறமையற்றவராகவும் இருக்கலாம்; ஆனால், அவையின் நம்பிக்கையைப் பெற்றவராக இருந்தால், அவரைப் பதவியிலிருந்து நீக்க யாருக்கும் உரிமை கிடையாது என்பது போக்கரின் வாதம். திரு. கரிமுத்தீனை நான் சரியாகப் புரிந்து கொண்டிருக்கிறேன் எனில், அவர் எடுத்தநிலை இதற்கு நேர்மாறானது. அவர், ஓர் அமைச்சர் அவையின் நம்பிக்கையை பெற்றிருந்தாலும் பெற்றிராவிட்டாலும் லஞ்சஊழல், ஒழுக்கக்கேடு, தேசத் துரோகம் முதலிய குறிப்பான குற்றங்களுக்காக, விசாரணைக்குக் கொண்டு வருதல் மீது மட்டும் தான் பதவியிலிருந்து நீக்கப்படுவதற்கு அவர் ஆளாகிறார்; ஓர் அமைச்சர் அவையின் நம்பிக்கையை இழந்துவிட்ட போதிலும் குறிப்பிட்ட காரணங்களுக்காக குற்றச்சாட்டுக்களுக்கான விசாரணை எதுவும் அவர் மீது நடைபெறவில்லையெனில், பிரதம மந்திரியோ அல்லது குடியரசுத் தலைவரோ அவரைப் பதவியிலிருந்து நீக்க முடியாது. மதிப்பிற்குரிய அவை காண்பதுபோல் இந்த இரு திருத்தங்களும் ஓர் அர்த்தத்தில் முரண்பாடானவையாக இல்லையென்றாலும் ஒவ்வாதவையாக இருக்கின்றன. விதி 62ன் உபவிதி (2)ல் உள்ள ஷரத்து இவற்றை விடச் சிறப்பாக உள்ளது, இரண்டு விஷயங்

1. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி VII, 1948, டிசம்பர் 31, பக். 1185-89

களையும் உள்ளடக்கியிருக்கிறது என்பது எனது கருத்து. குடியரசுத் தலைவரின் விருப்பம் இருக்கும் வரை அமைச்சர்கள் பதவியில் இருப்பர் என்று விதி 62ன் உபவிதி (2) கூறுகிறது. இதன்பொருள் இரு காரணங்களால் ஓர் அமைச்சர் வித 62ன் உபவிதி (2)ல் காணப் படும் ஷரத்தின் கீழ் அவர் நீக்கப்படலாம்; அதாவது, அவையின் நம்பிக்கையை அவர் இழந்துவிட்டார் என்று அவர் நீக்கப்படலாம். இரண்டாவதாக, அவரது நிர்வாகம் தூய்மையானதாக இல்லை; காரணம், இங்கு உபயோகிக்கப்படும் பதம் ‘விருப்பம்'' என்பதாகும். விதி 62ன் அந்த ஷரத்தின்கீழ், அவையின் நம்பிக்கையை பெற்றுள்ள வராக அந்தக் குறிப்பிட்ட அமைச்சர் இருந்தபோதிலும், ஒழுக்கக் கேடு அல்லது லஞ்ச ஊழல் அல்லது தவறான நிர்வாகம் போன்ற குற்றச்சாட்டுகளின் காரணமாக அவரை நீக்கும்படி குடியரசுத் தலைவர் கோரமுடியும். அமைச்சரின் பதவிக்காலம் ஓர் அம்சத்தைச் சார்ந்திருப்பது மட்டுமல்லாமல் இரண்டு அம்சங்களை சார்ந்திருக்க வேண்டுமென்று மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் உணர்ந்து கொள் வார்கள் என்று நினைக்கிறேன்; அந்த இரு அம்சங்கள் நிர்வாகத் தின் தூய்மையும் அவையின் நம்பிக்கையுமாகும். இந்த விதி அவை இரண்டிற்கும் வழிவகை செய்கிறது; எனவே மதிப்பிற்குரிய எனது நண்பர்கள் திருவாளர்கள் போக்கரும் கரிமுத்தீனும் கொண்டு வந்துள்ள திருத்தங்கள் அவசியமற்றவை.

இரண்டாவது விஷயத்தைப் பொறுத்தவரை, அதாவது அமைச்சர்களின் தகுதிகள் பற்றி நம்மிடம் மூன்று திருத்தங்கள் வந்துள்ளன. முதலாவது திருத்தம் திரு. முகமது தாஹிருடையது. மந்திரியின் நியமனத்தின்போது அவர் அவையின் தேர்ந்தெடுக்கப் பட்ட உறுப்பினராக இருந்தாலொழிய எந்த நபரும் அமைச்சராக நியமிக்கப்படக்கூடாது என்பது அவரது யோசனை ஷரத்தில் காணப்படும் சாத்தியப்பாடுகளை அவர் கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை; அதாவது, அமைச்சராக நியமிக்கப்படும்போது அவர் அவையின் உறுப்பினராக இல்லை எனினும், 6 மாதங்களுக் குள் அவையின் உறுப்பினராக அவர் தம்மைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள ஏற்பாடு செய்ய வேண்டும் என்ற நிபந்தனையில் அவர் அமைச்சராக நியமிக்கப்படலாம். இரண்டாவது தகுதி பற்றிய திருத்தம் பேராசிரியர் கே.டி.ஷாவுடையது. ஓர் அமைச்சர் ஒரு பெரும்பான்மைக் கட்சியைச் சேர்ந்தவராக இருக்க வேண்டும். அவரது மூன்றாவது தகுதி அவருக்கு அவசியம் ஒரு கல்வித் தகுதி இருக்கவேண்டும். இப்பொழுது முதலாவது விஷயம், அமைச்சராக

நியமிக்கப்படும்போது, அவையின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினராக இல்லாவிடில் எந்த நபரும் அமைச்சராக நியமிக்கப்படக் கூடாது என்பது. இங்கு கவனத்தில் கொள்ள வேண்டிய சில முக்கிய விஷயங்களை இந்தத் திருத்தம் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளத் தவறிவிட்டது என நினைக்கிறேன். முதலாவதாக, எல்லா வகைகளிலும் அமைச்சர் பதவி வகிக்கும் திறமை வாய்ந்த ஒரு நபர் ஏதோ காரணத்தால் ஒரு தொகுதியில் தோற்கடிக்கப் பட்டிருக்கலாம். அது முற்றிலும் சரியானதாக இருந்தாலும் ஒரு தொகுதியைத் தொல்லைக் குட்படுத்தியிருக்கலாம்; ஒரு தொகுதியின் அதிருப்தியைப் பெற்றிருக்கலாம். திறமை வாய்ந்த அவர் அந்தத் தொகுதியிலோ அல்லது வேறு ஒரு தொகுதியிலோ தேர்ந் தெடுக்கப்படக் கூடும் என்று நினைத்துக் கொண்டு அவரை அமைச்சரவையில் ஓர் உறுப்பினராக நியமிக்கப்படுவதை ஏன் அனுமதிக்கக் கூடாது? எது எப்படியாயினும் இந்தக் குறிப்பிட்ட சலுகை ஆறுமாதத்துக்கு மட்டுமே பொருந்தும். தேர்ந்தெடுக்கப்படாமலேயே நிரந்தரமாக இருக்க எவருக்குமே அது உரிமையளிக்கவில்லை. எனது இரண்டாவது கருத்து என்னவெனில், நியமிக்கப்படும் அமைச்சர் அமைச்சரவையின் உறுப்பினராக இருப்பது கூட்டுப் பொறுப்பு என்ற கோட்பாட்டை மீறவில்லை; நம்பிக்கை என்ற கோட்பாட்டையும் அது மீறவில்லை. ஏனெனில், அமைச்சரவையின் உறுப்பினராக அவர் இருந்தால், அமைச்சரவையின் கொள்கையை ஏற்றுக்கொள்வாரெனில், அமைச்சரவையின் ஓர் அங்கமாக அவர் இருக்கிறார்; அவர் அவையின் நம்பிக்கையை இழக்கும்போது அமைச்சரவையுடன் சேர்ந்து அவர் பதவி விலகுகிறார்; அவர் அமைச்சரவை உறுப்பினர் என்பதால் நாடாளுமன்ற ரீதியான அரசாங்கத்திற்கு அடிப்படையாக அமைந்துள்ள கோட்பாடுகளுக்கு அசௌகரியமோ மீறலோ எவ்வகையிலும் ஏற்படவில்லை. எனவே எனது கணிப்பில் இந்தத் தகுதி முற்றிலும் அவசியமில்லை.

இரண்டாவது தகுதியைப் பொறுத்தவரையில் ஓர் உறுப்பினர் பெரும்பான்மைக் கட்சியின் உறுப்பினராக இருக்க வேண்டும் என்பதைப் பொறுத்தவரையில் வாக்காளர் எப்பொழுதும் ஒரே கட்சியை தேர்தலில் தேர்ந்தெடுப்பார்கள் என்றும், அந்தக் கட்சியே எப்பொழுதும் பெரும்பான்மையில் இருக்கும் என்றும், சிறுபான்மையாக இருக்கும் மற்றொரு கட்சி எதிர்கட்சியாகவே இருக்கும் என்றும் பேராசிரியர் கே.டி.ஷா கற்பனை செய்கிறார், அல்லது நம்புகிறார், எதிர்பார்க்கிறார் என்று நினைக்கிறேன். இம்மாதிரி

யான ஊகத்தை மேற்கொள்வது அனுமதிக்க முடியாதது. ஒரு தேர்தலில் பல்வேறு கட்சிகள் இடம்பெறலாம் என்பதும், அவற்றில் எதுவும் பெரும்பான்மை பெறாமல் போகலாமென்பதும் முற்றிலும் சாத்தியமானதும் இயல்பானதுமாகும். மூன்று கட்சிகளில் எதற்கும் பெரும் பான்மை கிடைக்காதபோது, அந்த சூழ்நிலையில் இந்தக் கோட்பாட்டை முன்நிறுத்தி எவ்வாறு செயல்பட முடியும்? எனவே இத்தகைய தற்செயல் நிகழ்வின்போது பேராசிரியர் கே.டி.ஷா வகுத்துத் தந்துள்ள தகுதி அரசாங்கத்தைச் சாத்தியமற்ற தாக்கிவிடும்.

இரண்டவதாக, அவையில் ஒரு பெரும்பான்மைக் கட்சி இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம்; ஆனால், அச்சமயம் ஒரு அவசர நிலைமை ஏற்படுகிறது; பெரும்பான்மை கட்சிப் பக்கத்திலிருந்தும், சிறுபான்மை கட்சியின் பக்கத்திலிருந்தும் அவசரகாலக் கட்டத்தில் கட்சிச் சண்டைகள் நிறுத்தப்பட வேண்டும்; அவசர நிலையைச் சமாளிப்பதற்கு ஒரு - கட்சி சர்க்கார் சரிப்பட்டு வராது; மறுபடியும் அந்த சூழலில் ஒரு கூட்டு அரசாங்கத்தைத் தவிர வேறு எதுவும் இருக்க முடியாது; ஒரு கூட்டு அரசாங்கம் ஏற்படுகிறது என்று வைத்துக்கொண்டால், சிறுபான்மைக் கட்சியைச் சேர்ந்த உறுப்பினர்களும் அமைச்சரவை உறுப்பினராக இடம்பெற உரிமை உண்டு. இந்த இரு காரணங்களால் இந்தத் திருத்தம் நடைமுறையில் சாத்தியமற்ற திருத்தம் என்பதை கூறிக் கொள்கிறேன்.

கல்வித் தகுதியை பொறுத்தவரை, எனது நண்பர் திரு. மகாவீர் தியாகி இதுகுறித்து என்ன கூறியிருந்தாலும், கல்வித் தகுதிக்கு எதிராக அவர் மிகக் கடுமையாக கருத்துத் தெரிவித்தாலும், கல்வி பற்றி மனச்சான்றுரீதியாக அவருக்கு ஏதாவது ஆட்சேபனை இருக்கிறதா என்று அவரை நான் கேட்டபோது, அப்படி எதுவும் ஆட்சேபனை தமக்கு இல்லை என்று எனக்கு உறுதி அளிப்பதில் அவர் மிகவும் மகிழ்ச்சியடைந்தார். நிர்வாகம் அல்லது நாடாளுமன்ற நடவடிக்கைகளுக்கான அதிகாரபூர்வ மொழியாக ஆங்கிலம் இருந்தால், ஆங்கிலம் தெரியாத ஒருவரை நியமிப்பது விரும்பத்தக்கது என்று நினைக்கும் எந்தப் பிரதம மந்திரியோ குடியரசுத் தலைவரோ இருப்பாரா என்று நான் அதிசயிக்கிறேன். அத்தகைய ஒரு விஷயத்தை என்னால் கற்பனை செய்ய முடியவில்லை. அதிகாரபூர்வ மொழியாக இந்தி, இந்துஸ்தானி அல்லது உருது எதுவாக இருந்தாலும், அந்த நிலைமையிலும் நாட்டின் அல்லது நிர்வாகத்தின் அதிகாரபூர்வ மொழி தெரியாத ஒருவரை நியமிக்கும் அளவுக்கு

ஒரு பிரதம மந்திரி விவேகமின்றி எண்ணுவார் என்று நினைப்பது சாத்தியமில்லை என்று எனக்குத் தோன்றுகிறது. எனவே, அரசாங்கத்தின் ஓர் இலாகாவை ஏற்றிருப்பவர் சரியான கல்வித் தகுதி பெற்றிருக்க வேண்டும் என்பது மனத்தில் இருத்திக் கொள்ள வேண்டியது மிகவும் விரும்பத்தக்கது என்பதில் சந்தேகமில்லை; ஆனால் இந்தக் கோட்பாட்டை அரசியல் சாசனத்தில் உட்படுத்துவது மிகவும் அவசியமற்றது என்று நினைக்கிறேன்.

இப்பொழுது அமைச்சரவையில் உறுப்பினராவதற்கு வேண்டிய மூன்றாவது நிபந்தனைக்கு வருவோம்; பதவிப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளும் முன் ஒரு மந்திரியின் நலன்கள், உரிமைகள், அவருக்குச் சொந்தமான சொத்துகள் பற்றிய எழுத்து மூலமான அறிவிப்பு அவசியம் தரப்பட வேண்டும் என்று அந்த நிபந்தனை கூறுகிறது. பேராசிரியர் கே.டி.ஷா கொண்டுவந்த திருத்தம் திரு.காமத்தால் ஓரளவு திருத்தப்பட்டது. அவையில் இந்த விஷயம் முதல்முறையாக விவாதிக்கப்படவில்லை. குடியரசுத் தலைவரின் நியமனம், பதவிப் பிரமாணம் பற்றிய விதிக்கு இம்மாதிரி திருத்தங்கள் முன்மொழியப்பட்டபோது, இது விவாதிக்கப்பட்டது; அந்தக் குறிப்பிட்ட சமயத்தில் நான் அதுபற்றி மிக அதிகம் கூற வேண்டியிருந்தது. அந்தச் சந்தர்ப்பத்தில் நான் கூறியதைத் திரும்பச் சொல்ல விரும்பவில்லை. குடியரசுத் தலைவர் பற்றிய விதி குறித்து அவையில் நடந்த விவாதத்தில் நான் என்ன கூறினேன் என்பது பற்றி எனது நண்பர் திரு.காமத் எனக்கு நினைவுப்படுத்தினார்; அத்தகைய ஓர் ஏற்பாடு அவசியப்படலாம் என்று நான் கூறியது ஞாபகத்தில் உள்ளது......*

**திரு.காமத்:** டாக்டர் அம்பேத்கர் கறாராக என்ன கூறினார் என்பதை அவருக்கு ஞாபகப்படுத்தட்டுமா? சட்டமன்ற அலுவலகத்தின் தட்டச்சு அடிக்கப்பட்ட அதிகாரபூர்வ தஸ்தாவேஜிலிருந்து நான் படிக்கிறேன். அவர் கூறிய வார்த்தைகள் வருமாறு:

> ''இந்திய அரசாங்கத்தில் இருக்கும் எவரும் தமது பதவிக் காலத்தில் செல்வத்தைப் பெருக்கிக்கொள்ளத் தமது பதவியைப் பயன்படுத்திக் கொண்டால் அவர்கள் பிரதமராகவோ அல்லது அமைச்சர்களாகவோ இருந்தாலும் அவர்களுக்கு எதிராக இந்த ஷரத்து பிரயோகிக்கப்படும்; ஆனால் குடியரசுத் தலைவருக்கு எதிராக அல்ல.''

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதைத் தான் நான் கூறிக்கொண்டிருந்தேன்: அமைச்சர்களைப் பொறுத்தவரை அத்தகைய ஷரத்து தேவைப்படலாம் என்று தெரிவித்தேன். எனது

நண்பர் திரு.காமத் தொழிற்சாலை மேற்பார்வையாளர்களுக்குத் தேவைப்படும் தகுதிகள் பற்றிப் படிக்கவும் செய்தார். இப்பொழுது ஐயா, நாம் பரிசீலிக்க வேண்டியது இதுதான்: இது மிகவும் பாராட்டத்தக்க நோக்கமே: பொறுப்பு வகிக்கும் அமைச்சர்கள் நிர்வாகத்தில் தூய்மையைப் பாதுகாப்பது அவசியம். இந்த விஷயத் தில் இந்த அவையில் உள்ள எவருக்கும் எந்த மாறுபட்ட கருத்தும் இருக்கும் என்று நான் நினைக்கவில்லை. நிர்வாகம் உயர்மட்ட அளவில் பாதுகாக்கப்பட வேண்டும் என்பதிலும் திறமையும், தூய்மையும் நிலைநாட்டப்பட வேண்டும் என்பதிலும் நாம் எல் லோரும் அக்கறை கொண்டுள்ளோம். உண்மையில் இங்கு எழும் கேள்வி இதுதான்: அந்தத் தூய்மையைப் பாதுகாக்க உறுதிப்படுத்த வேண்டிய தடுப்பு நடவடிக்கைகள் யாவை? இரு தடுப்பு நட வடிக்கைகள் உள்ளன என்று எனக்குத் தோன்றுகிறது. ஒன்று, சட்டப்படி அல்லது அரசியல் சாசனப்படி நமக்குத் தேவைப்படுவது - இந்த ஷரத்து பயனளிக்கும்படி இருக்க வேண்டுமெனில் - அமைச்சர்கள் பதவி ஏற்குமுன் தங்களின் சொத்து, கடன் பொறுப்பு கள் பற்றி எழுத்து மூலம் அறிவிக்க வேண்டும்; அதுமட்டுமல் லாமல், வேறு இரு உப-ஷரத்துக்களும் இருக்க வேண்டும்; அதாவது பதவி துறக்கும் ஒவ்வொரு மந்திரியும் ராஜிநாமா செய்யும் தேதியில் அவரது சொத்து பற்றி எழுத்து மூலம் அறிவிக்க வேண்டும்; அவர் பதவியில் இருந்தபோது நிர்வாகம் லஞ்ச ஊழல் கொண்ட தாக இருந்ததா, இல்லையா என்று மதிப்பிட விரும்புகிறவர்கள் அமைச்சரின் சொத்து எவ்வளவு அதிகரித்துள்ளது என்பதையும், இந்த அதிகரிப்பு அவரது ஊதியத்திலிருந்து மிச்சப்படுத்தியதா என்பதையும் காணமுடியும். மற்ற ஷரத்து என்னவெனில்: ஓர் அமைச்சர் அவர் பதவி விலகும் தேதியில் அவரது சொத்து அதிகரித் திருக்கிறது என்று நாம் கண்டால், அவரது சேமிப்புகளின் காரண மாக ஏற்பட்ட சாதாரண அதிகரிப்பு என்று விளக்கப்படவில்லை யெனில், அந்தக் காலகட்டத்தில் அவருடைய சொத்தை அசாதாரண அளவுக்கு அதிகரிக்க அவரால் எப்படி முடிந்தது என்று விளக்கிக் கூற அவர் கடமைப்பட்டிருக்கிறார். இதற்கு ஒரு மூன்றாவது ஷரத்து அவசியம் இருக்க வேண்டும். இந்தத் துணைவிதியை பயனளிக்கும் முறையில் ஆக்க வேண்டுமெனில், நான் கூறியபடி மூன்று ஷரத்து கள் அவசியம் இருக்க வேண்டும். ஒன்று, ஆரம்பத்தில் அறிவிப்புக் கொடுப்பது; இரண்டு, பதவியை விட்டு விலகும்போது அறிவிப்பு; மூன்றாவது, அசாதாரண அளவுக்கு சொத்து எப்படி அதிகரித்தது என்பதை விளக்கிக்கூறும் கடமை. நான்காவதாக இது குற்றம் என்று

அறிந்து அதைத்தொடர்ந்து அபராதமோ அல்லது தண்டனையோ விதிப்பது. ஆரம்பத்தில் வெறும் அறிவிப்பு.....*

**திரு. நஸிருத்தீன் அகமது:** கண்ணுக்குத் தெரியாத அல்லது இரகசிய சொத்துக்களை நீங்கள் எவ்வாறு கண்டுபிடித்துச் சரிபார்க்கப் போகிறீர்கள்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உண்மையில் நிலைமை சரியில்லை என்றுதான் கூறவேண்டும். இந்தத் திருத்தம் இருந்தபோதிலும், ஓர் அமைச்சர் தமது பதவி வகித்த காலத்தில் என்ன செய்வார் என்று தெரிந்துகொள்ள முடியாதபடி தமது சொத்தின் உரிமையை மற்றவர்களுக்கு பினாமியாக மாற்றுவது சாத்தியமே. எனவே லட்சியம் பாராட்டக் கூடியதாக இருந்த போதிலும், அதனைச் செயல்படுத்துவதற்கான வாய்ப்பு வசதி குறைவாகவே உள்ளது; நோய் தீர்க்கும் மருந்து நோயைவிட மோசமாக இருக்கக் கூடும் என்று கருதுகிறேன்.

**திரு.எச்.வி.காமத்:** ஐயா, குறைந்தது, கோட்பாட்டு ரீதியில் டாக்டர் அம்பேத்கர் திருத்தத்தை ஏற்றுக் கொள்வார் என்றும், முன்னர் அவர் தெரிவித்த கருத்திலிருந்து அவர் பின்வாங்கவில்லை என்றும் நம்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** எனது கருத்திலிருந்து நான் பின்வாங்கவில்லை. நான் கூறுவதெல்லாம் என்னவெனில், வகுக்கப்பட்டுள்ள பரிகாரம் மிகவும் போதுமானதாக, பயனளிக்கக்கூடியதாக இல்லை; எனவே, அதை ஏற்றுக்கொள்ளும் நிலையில் நான் இல்லை.

**பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா:** அதை அதிக வியாபக மானதாக ஆக்குங்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இப்பொழுது அதை நான் செய்ய முடியாது. திருத்தத்தைக் கொண்டுவந்திருப் பவர்கள் தங்கள் திருத்தங்களை மிகத் தெளிவாகவும் மோசடிக்கு

1. விவாதத்தில் மூலப் பிரதியில் உள்ள புள்ளிகள் குறுக்கீடு இருந்ததைக் குறிக்கிறது.

இடங்கொடாதவாறும் செய்திருக்க வேண்டும்; இது அவர்களது பணி. ஆனால் அதை அவர்கள் செய்யவில்லை. ஐயா, நான் ஏற்கனவே கூறியபடி திருத்தத்திற்கு அடிப்படையாக உள்ள நோக்கத்தோடும் லட்சியத்தோடும் யாருக்கும் ஆட்சேபனையோ சர்ச்சையோ இல்லை. இது விஷயத்தில் எந்த மாதிரியான தடுப்பு நடவடிக்கையை நாம் மேற்கொள்ள வேண்டும் என்பதுதான் பிரச்சினை. நான் கூறியபடி சட்டபூர்வமானன தண்டனை போதாது. வேறு எந்த தடுப்பு நட வடிக்கையும் நமக்கு இல்லையா? என்னுடைய கணிப்பில், நிர்வாகத் தில் தூய்மையை ஏற்படுத்த நம்மிடம் வேறு ஒரு தடுப்பு நடவடிக்கை இருக்கிறது. சட்டமன்ற நடவடிக்கைகளின் பால் பொதுமக்களின் கவனத்தையும் கருத்தையும் ஈர்ப்பதுதான் அந்த நடவடிக்கை. மதிப் பிற்குரிய எனது நண்பர் தொழிற்சாலைச் சட்டத்தை மேற்கோள் காட்டினார். தொழிற்சாலை மேற்பார்வையாளர்கள் சம்பந்தமான தகுதியின்மைகள் கொண்டுவரப்பட்டதற்கான காரணம் என்ன வெனில், பொதுமக்களின் அபிப்ராயம் அவர்களைப் பாதிக்காது; ஆனால் அமைச்சரவைக்கு எதிராக பொதுமக்களின் அபிப்ராயம் ஒவ்வொரு நிமிடமும் பெருகிக் கொண்டிருக்கிறது. எந்த நேரத்திலும் அவை விரும்பினால், நிர்வாகச் சீர்கேட்டின் ஏதாவது ஒரு குறிப் பிட்ட விஷயத்தில் கவனம் செலுத்தி, அமைச்சரவையை நீக்கலாம்; எனவே நிர்வாகத்தின் தூய்மையை நிலைநாட்ட அவையின் அபிப் ராயமும் அதற்குள்ள மேலாண்மை உரிமையும் பலமான தடுப்பு நடவடிக்கை என்பது எனது திட்டவட்டமான கருத்து; வெளியில் சட்டப்படியான நடவடிக்கை எடுக்க வேண்டிய அவசியத்தை இது நீக்குகிறது.

**திரு. லோக் நாத் மிஸ்ரா** (ஒரிசா- பொது): இது அதிகம் சாத்தியமில்லாத கடமையில்லையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பற்பல சாத்திய மற்ற கடமைகளை ஜனநாயகம் செய்ய வேண்டியுள்ளது. ஜனநாய கத்தை நீங்கள் விரும்பினால், அவற்றை எதிர்கொள்ள வேண்டும்.

ஐயா! இப்பொழுது, மதிப்பிற்குரிய எனது நண்பர் திரு. நஸிருத்தீன் அகமதுவின் திருத்தத்திற்கு வருகிறேன். நான் முன் மொழிந்த திருத்தத்தின் பிந்திய பகுதியை நீக்க வேண்டுமென அவர் விரும்புகிறார். அவரது ஆட்சேபனை என்னவெனில், எனது திருத் தத்தின் பிற்பகுதியை வைத்திருந்தால், அது எனது திருத்தத்தின்

முற்பகுதியை அதாவது செயல்முறைக் கட்டளைகள் சம்பந்தமாக அமைச்சருக்குள்ள எனது திருத்தத்தின் முதற் பகுதியை பயனற்ற தாக்கிவிடும் என்பதாகும்.

ஆம், தத்துவார்த்த ரீதியில் அது உண்மைதான். எனினும் மீண்டும் இங்கு ஒரு கேள்வி எழுகிறது. செயல்முறைக் கட்டளை களில் உள்ள தடைகளை எவ்வாறு நாம் நடைமுறைப்படுத்தப் போகிறோம்? இரண்டு வழிகள் உள்ளன. ஒருவழி, அதன் சட்டபூர்வ தன்மை பற்றி விசாரித்து தீர்ப்பளிக்க நீதிமன்றத்தை அனுமதிப்பது, மற்றது விஷயத்தைச் சட்டமன்றத்திற்கே விட்டுவிடுவது; ஒரு கண்டனத் தீர்மானம் அல்லது நம்பிக்கையில்லா தீர்மானம் மூலம், குடியரசுத் தலைவருக்கு சரியான ஆலோசனையை வழங்கும்படி அமைச்சரவையை நிர்ப்பந்திப்பது, அமைச்சரவை அளிக்கும் சிபாரிசை குடியரசுத் தலைவர் பின்பற்றுகிறாரா என்று பார்த்துக் கொள்வது. எனது கணிப்பில், பிந்தியது நமது நோக்கத்தை நிறை வேற்றிக் கொள்வதற்கு நல்லவழி எனத் தோன்றுகிறது. அவையில் செய்யப்படுவது எல்லாம் நீதிமன்றத்தின் அதிகாரத் கட்டுப்பாட் டிற்கு உட்படுத்துவது நியாயமற்றதும், சிரமத்தை ஏற்படுத்துவது மாகும்; அம்மாதிரி நீதிமன்ற வரம்பிற்குள் வந்தால், பிடிவாதமான ஒரு உறுப்பினர் உச்சநீதிமன்றத்திற்குச் சென்று நீதிப் பேராணை மூலம் குறிப்பிட்ட விஷயம் உச்சநீதிமன்றம் அல்லது உயர்நீதிமன்றத் தால் முடிவு செய்யும் வரை, அவையில் நடவடிக்கையை அவைத் தலைவர் நடத்துவதற்கு தடைவாங்கலாம். அது அவையின் பணி யில் சகிக்க முடியாத தலையீடு ஆகும் என்று எனக்குத் தோன்று கிறது. இங்கிலாந்திலும் கூட, நாடாளுமன்றத்தின் நடவடிக்கை முறை களையும் அதன் அலுவல்களையும் கவனிப்பதும் நீதிமன்றத்தின் அதிகாரத்திற்கு உட்படுத்தப்படுவதில்லை. இந்தக் கௌரவமான விதியை நாமும் பின்பற்ற வேண்டுமென நினைக்கிறேன். அதுவும், குடியரசுத் தலைவராலும் அமைச்சரவையாலும் நிறைவேற்றப்பட வேண்டிய செயல்முறைக் கட்டளைகள் நிறைவேற்றப்படுகின் றனவா என்பது அவைக்கு முற்றிலும் சாத்தியமாகிறபோது இந்த விதியை நாம் பின்பற்றுவதில் தவறு ஏதும் இல்லை. ஐயா, இந்தத் திருத்தத்தை நான் எதிர்க்கிறேன்.

**பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா:** அமைச்சரவையில் நியமன உறுப்பினர்கள் இடம்பெறுவது குறித்து என்ன சொல் கிறீர்கள்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதுபற்றி நான் ஏற்கெனவே குறிப்பிட்டிருக்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** இப்பொழுது திருத்தங்களை நான் வாக்கெடுப்பிற்கு விடுகிறேன்.

(ஏற்றுக்கொள்ளப்பட்ட திருத்தங்கள் கீழே தரப்பட்டுள்ளன.)

(டாக்டர் அம்பேத்கரின் திருத்தங்கள்)

(1) 'விதி 62ன் துணைப் பிரிவு (5) க்குப்பின் கீழ்க்கண்ட புதிய துணைப் பிரிவு சேர்க்கப்பட வேண்டும் -

'5 (அ) அமைச்சர்களைத் தேர்ந்தெடுப்பதிலும் இந்த அரசியல் சாசனத்தின்படி அவரது மற்ற கடமைகளை அறிவுறுத்தல்களால் பொதுவாகக் குடியரசுத்தலைவர்களின் வழியில்லாமல் வேறுமாதிரியாக குடியரசுத் தலைவரால் ஏதாவது செய்யப்பட்டிருந்தால் அதன் சட்டப்படியான தன்மையை எத்தகைய ஐயப்பாட்டுக்கும் உட்படுத்தப்படக்கூடாது.''

(2) 'விதி 62ன் துணைவிதி (3)ல் 'சபை' என்ற பதத்திற்குப்பின் 'மந்திரி' என்ற பதம் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்.''

திருத்தம் எண் 1326, பட்டியல் Vன் எண் 71. திருத்தப்பட்டு, திரு. கிருஷ்ணமாச்சாரி, திரு. காமத்தால் மேலும் திருத்தப்பட்டபடி:

''விதி 62ன், துணைவிதி (5)ல் 'எந்தத் தொடர்ச்சியான ஆறு மாத காலத்திற்கு' என்ற பதங்களுக்குப் பதிலாக, 'நியமனமான தேதியிலிருந்து தொடர்ச்சியான ஆறு மாத காலத்திற்கு' என்ற வார்த்தைகள் இடம்பெற வேண்டும்.''

(விதி 62, திருத்தப்பட்டபடி நிறைவேற்றப்பட்டு அரசியல் சாசனத்தில் சேர்த்துக்கொள்ளப்பட்டது.)

* * *

## விதி 66

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்: பொது): திருத்தங்கள் எதையும் நான் ஏற்றுக்கொள்ளவில்லை; எந்தப் பதிலும் தேவை என்றும் நினைக்கவில்லை.

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VII, ஜனவரி 3, 1948, பக். 1199-1200.

**திரு. துணைத் தலைவர்:** திருத்தங்களை ஒவ்வொன்றாக இப்பொழுது வாக்கெடுப்பிற்கு விடுகிறேன். திருத்தம் எண் 1358 வருமாறு:

> ''விதி 66ல், 'இருஅவைகள் முறையே மாநிலங்கள் அவை என்று அறியப் படும்' என்ற சொற்கள் நீக்கப்படும்''.

திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் எண்: 1356. அத்திருத்தம் வருமாறு:

> ''விதி 66ல் 'ஒன்றியத்திற்கு ஒரு நாடாளுமன்றம் இருக்கும்'' என்ற வார்த்தைகளுக்குப்பதிலாக ஒன்றியத்தின் சட்டமன்றம் இந்தியத் தேசிய காங்கிரஸ் என்று அழைக்கப்படும்' என்ற வார்த்தைகள் இணைக்கப்படும்.''

திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

**திரு. துணைத் தலைவர்:** தீர்மானம் பின்வருமாறு:

> ''விதி 66 அரசியல் சாசனத்தின் அங்கமாகிறது.''

தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

விதி 66 அரசியல் சாசனத்துடன் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

**திரு. துணைத் தலைவர்:** அடுத்து நாம் விதி 67ஐ எடுத்துக் கொள்கிறோம். தீர்மானம்:

> ''விதி 67 அரசியல் சாசனத்தின் அங்கமாகிறது.''

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி** (சென்னை: பொது): திரு. துணைத்தலைவர் அவர்களே, இந்த விதியைப் பரிசீலிக்கும்போது கடைப்பிடிக்க வேண்டிய செயல்முறைப் பற்றி ஒரு பணிவான யோசனையை நான் வைத்திருக்கிறேன். நாடாளுமன்ற இரு அவை களின், அதாவது மாநிலங்கள் அவை, மக்கள் அவை ஆகிய இரண்டு அவைகளின், இயைபைப் பற்றியது இந்த விதி என்பதை தாங்கள் அறிவீர்கள். இது ஒன்பது துணை விதிகளைக் கொண்டது. விவா தத்தின் தெளிவை முன்னிட்டு, இந்த விதி மூன்று பகுதிகளாக்கப் படலாம் என்று யோசனை கூறுகிறேன். ஒன்று மாநிலங்கள் அவை யின் இயைபு பற்றியது 1 முதல் 4 வரை; மக்களவையின் இயைபு பற்றியது 5 முதல் 7 வரை; இதன் விளைவாக எழுவது, மக்கள்

தொகைக் கணக்கெடுப்பு, விரிவாக விவரங்களைச் சேகரித்தல் பற்றியவை துணைவிதிகள் (8) ம் (9) ம்.

இது விஷயமாக டாக்டர் அம்பேத்கருடன் கலந்து பேசினேன்; தம்முடைய புத்தகத்தில் தாம் அவ்வாறே குறித்து வைத் திருப்பதாகவும் மூன்றாவது வாசிப்பின்போது, பொருட்செறிவு ஏற்பட சொற்களை மாற்றியமைக்க உத்தேசித்திருப்பதாகவும் அவரே கூறினார். இப்பொழுது உடனடியாக அதைப் பிரிப்பது சாத்திய மில்லாமலிருக்கலாம். ஆனால் மாநிலங்களவைக்கான எல்லாத் திருத்தங்களையும் துணைவிதிகள் (1) முதல் (4) வரை, மொத்தமாக எடுத்துக்கொள்ளும்படியும், முதலில் அவற்றின்மீது விவாதத்தைக் கூர்மைப்படுத்தும்படியும் அந்த விதிக்கு திருத்தங்கள் வருவதற்கு வழிவகை செய்யும்படியும் தங்களைக் கேட்டுக் கொள்கிறேன். விவாதத்திற்குப் பின் நீங்கள் அந்தத் துணை விதிகள் முழுவதையும் ஒன்றாக வைத்துக் கொள்ளலாம். அவை தெளிவுபெற வேண்டும் என்பதற்காகவே இதையெல்லாம் கூறுகிறேன்; இதனால் மதிப்பிற் குரிய உறுப்பினர்கள் விவாதத்தை மாநிலங்கள் அவை பற்றி மட்டும் வைத்துக்கொண்டு, பின்னால், மக்கள் அவை சம்பந்தப் பட்ட விதியின் துணைப் பிரிவுகள் பற்றி முழுமையாக கவனம் செலுத்தலாம்.

**திரு. துணைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர், திரு.பாரதி தெரிவித்துள்ள யோசனைகள் பற்றி சொல்லவேண்டியது ஏதாவது தங்களுக்கு இருக்கிறதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** விவாதத்தைப் பயனுள்ளதாக்க இந்த யோசனைகளை ஏற்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** அப்படியாயின், அவற்றின் குறிப் பிட்ட வரிசைப்படி திருத்தங்களை நாம் எடுத்துக் கொள்ளலாம்.

* * *

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VII, ஜனவரி 3, 1949, பக். 1199-1200.

''விதி 67ன் துணைவிதி (1)க்குப் பதிலாக பின்கண்டது மாற்றீடு செய்யப் படவேண்டும்:

'1. மாநிலங்களின் அவை இருநூற்று ஐம்பதுக்கு மேற்படாத உறுப்பினர் களைக் கொண்டதாக இருக்கும். அவர்களில்

(அ) பன்னிரண்டு உறுப்பினர்கள், இந்தவிதியின் துணைவிதி 2 ல் வழி வகைசெய்யப்பட்டுள்ள முறையில் குடியரசுத் தலைவரால் நியமிக்கப்படுவர்.

(ஆ) மீதம் உள்ளவர்கள் மாகாணங்களின் பிரதிநிதிகளாக இருப்பர்.''

ஒரே ஒரு முக்கியமான விஷயம், பதினைந்து என்ற எண் ணிக்கை பன்னிரண்டாகக் குறைக்கப்பட்டுள்ளது.

(திருத்தங்கள் எண்கள் 1371, 1373, 1374 முன்மொழியப்பட வில்லை.)

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** மூன்று திருத்தங்கள் உள்ளன; எண்கள் 1371, 1373, 1374; இவற்றை ஒன்றாகப் பரிசீலிக்கலாம். இவற்றில் முதலாவது மிகவும் வியாபகமானதாகத் தோன்றுகிறது; அதை முன்மொழியலாம்;

திருத்தங்கள் எண் 1371, 1373, 1374 முன்மொழியப்பட வில்லை.

திருத்தங்கள் எண் 1375ம், 1376ம் திருத்தம் எண் 1375ம் முன் மொழியப்படலாம். திருத்தம் எண் 1376 திருத்தம் எண் 1375க்கு ஒத்ததாக உள்ளது. அதனால் அதை நான் வாக்கெடுப்பிற்கு விடப் போவதில்லை. திருத்தம் எண் 1375. டாக்டர் அம்பேத்கர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

''விதி 67ன் துணைவிதி (1)ல் உள்ள ஷரத்து நீக்கப்படும்.''

ஐயா, தங்கள் அனுமதியுடன் திருத்தம் எண் 1378ஐ முன் மொழியலாமா? இது இந்த ஷரத்துக்கு மாற்றீடு.

**திரு. துணைத் தலைவர்:** சரி.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VII, ஜனவரி 3, 1949, பக். 1205.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஐயா, நான் பின்கண்டவாறு முன்மொழிகிறேன்:

'விதி 67ல் துணைவிதி (1) ஐ அடுத்துப் பின்கண்ட புதிய துணைவிதி சேர்க்கப் பட வேண்டும்:

'1 (அ) மாநிலங்ள் அவையில் மாகாணங்களின் பிரதிநிதிகளுக்கு ஒதுக்கப் படும் இடங்கள் அதுபற்றிய அட்டவணை IIIஆல் வகை செய்துள்ளபடி இருக்கும்.

[1]**திரு. துணைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் பெயரில் உள்ள திருத்தம் எண் 1380.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, திரு. துணைத் தலைவர் அவர்களே, நான் பின்வருமாறு பிரேரேபிக்கிறேன்:

''விதி 67ன் துணைவிதி (2)க்கு பதிலாக, கீழ்க்கண்டது மாற்றீடு செய்யப் பட வேண்டும்:

'(2) இந்த விதியின் துணைவிதி (1) ன் உபவிதி (அ) ன் கீழ் குடியரசுத் தலைவரால், நியமிக்கப்படுகிறவர்கள் விசேட அறிவாற்றல் பெற்றவர்களாக அல்லது கீழ்க்கண்ட விஷயங்களில் நடைமுறை அனுபவம் பெற்றவர்களாக இருக்க வேண்டும்: இலக்கியம், கலை, விஞ்ஞானம் மற்றும் சமூக சேவை..''

[2]**திரு.துணைத்தலைவர்:** டாக்டர் அம்பேத்கர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, திருத்த எண்கள் 1369, 1375, 1378, 1400 மற்றும் 1403 ஆகியவற்றை ஏற்றுக்கொள்கிறேன். கடைசி இரு திருத்தங்கள் (எண்கள் 1400ம் 1403ம்) பொறுத்தவரை, திரு.முகமது அலி பெய்க் திருத்தத்திற்குள் அடங்குகிறது. அது திருத்த எண் 1407. அந்தத் திருத் தத்தை நான் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டிருப்பேன். ஆனால் துரதிருஷ்டவசமாக, திருத்தத்தின் வாக்கியத்தைப் பரிசீலித்ததில், விதி67ன் துணைவிதி (3) ல் பயன்படுத்தப்படும் வாசகத்தின் முக்கிய பகுதியுடன் பொருந்தவில்லை என்பதைக் கண்டேன். திருத்த எண். 1403க்கு நான் முன்னுரிமை கொடுப்பதற்கான ஒரே காரணம் விதி யின் வாசகத்தோடு இதன் வாசகம் ஒத்திருப்பதேயாகும்.

---

1. அ.நி.ச.விவாதம், பகுதி VII, 1949 ஜனவரி 3, ப.1211.
2. மேற்படி அதே நூல், பக். 1225-28.

மற்ற திருத்தங்களைப் பொறுத்தவரை, விசேடப் பரிசீலனைக்கு உகந்தவை மூன்று மட்டுமே என நினைக்கிறேன். ஒன்று திரு. குன்ஹி ராமனின் திருத்தம். அதன் நோக்கமும் லட்சியமும். ....*

**திரு. துணைத் தலைவர்:** அது முன்மொழியப்படவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அப்படியாயின், அதுபற்றி நான் எதுவும் கூற வேண்டிய அவசியம் இல்லை. மீதியுள்ளவை இரண்டு மட்டுமே. இவற்றில் ஒன்று திரு. குன்ஸ்ரூவின் திருத்தம். அரசியல் சாசன வரைவில் இடம்பெற்றுள்ள ஷரத்து குறித்து இயல்பாகவே அவர் கணிசமான அளவு உணர்ச்சி வசப்பட்டிருந்தார்; அது சமஸ்தானங்களின் பிரதிநிதிகளுக்கு 40 சதவிகித பிரதிநிதித்துவம் அளித்திருந்தது. இதன் பின்னணியைத் தெளிவுபடுத்தி, இந்த ஷரத்து எக்காரணத்தால் புகுத்தப்பட்டது என்பதை அவசியம் விளக்க வேண்டியதும், இன்றைய நிலை என்ன என்பதைக் கூறுவதும் விரும்பத்தக்கது என்று நான் நினைக்கிறேன். மக்கள் அவையில் அப்பொழுது இருந்தபடி, இந்தியாவின் மொத்த மக்கள் தொகையில் சமஸ்தானங்களின் மக்கட்தொகை நான்கில் ஒன்றாக இருந்தாலும், மொத்தத்தில் சமஸ்தானங்கள் மூன்றில் ஒரு பங்கு பிரதிநிதித்துவம் பெற்றன; மாநிலங்கள் அவையில் ஐந்தில் இரண்டு பங்கை சமஸ்தானங்கள் பெற்றன; அது 40 சதவிகிதமாகும். அரசியல் சாசன வரைவில் இந்த ஷரத்து ஏன் உட்படுத்தப்பட்டது என்பதற்கு இதுமட்டுமே ஒரே அடிப்படையல்ல. எனவே, பின்னோக்கிச் சென்று இந்தத் துணை விதியின் வரலாற்றை எடுத்துக் கூற விரும்புகிறேன்.

ஒன்றிய அதிகாரக்குழு என்று அறியப்படும் ஒரு குழுவை இந்த அவை நியமித்தது என்பதை அவையின் உறுப்பினர்கள் நினைவில் கொண்டிருப்பார்கள். பிரிட்டிஷ் இந்தியாவின் மக்களுக்கும் சமஸ்தானங்களின் மக்களுக்கும் பிரதிநிதித்துவம் அளிக்க ஒரு பொதுவான விதிமுறையைக் குழு பரிந்துரை செய்தது; அந்த விதிமுறை இதுதான்: ஒவ்வொரு பத்து லட்சத்திலிருந்து 50 லட்சம் வரை ஒரு இடம் இருக்க வேண்டும்; அதற்கு மேல் உள்ள ஒவ்வொரு 20 லட்சத்திற்கும் ஒரு கூடுதல் இடம். நான் ஏற்கனவே கூறியது

★ மூல விவாதத்திலுள்ள புள்ளிகள் குறுக்கீட்டைக் குறிக்கின்றன.

போல், இந்த விதிமுறை மாகாணங்களுக்கும் சமஸ்தானங்களுக்கும் பொதுவானதாகும். இந்த ஒன்றிய அதிகாரக் குழுவின் அறிக்கை, பரிசீலனைக்காக அரசியல் நிர்ணயசபைக்கு வந்தபோது, இந்த ஒன்றிய அதிகாரக் குழுவின் அறிக்கைக்கு சமஸ்தானங்களின் பிரதிநிதிகள் பெரும் எண்ணிக்கையில் திருத்தங்களைக் கொண்டு வந்திருப்பது தெரிய வந்தது. இதன்பேரில் இந்திய மாகாணங்களின் பிரதிநிதி களுக்கும் சமஸ்தானங்களின் பிரதிநிதிகளுக்குமிடையே உடன்பாடு ஏற்பட பெரு அளவிலான பேச்சுவார்த்தைகள் நடைபெற்றன. அரசியல் நிர்ணய சபையில் 1947 ஜூலை 31ம் தேதி நடைபெற்ற விவாதங்களை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் எடுத்துப் பார்த்தார் களானால், ஒன்றிய அதிகாரக்குழுவின் அறிக்கையை ஏற்றுக் கொள்ள எனது நண்பரும் சகாவுமான திரு. கோபாலசுவாமி அய்யங்கார் பிரேரேபித்தபோது, சமஸ்தானங்களுக்குள்ள பிரதிநிதித்துவம் 40 சதவிகிதத்திற்கு மேல் போகக்கூடாது என்ற திருத்தத்தை முன்மொழிந் தார். இப்பொழுது ஒன்று அந்த விதிமுறை ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும்; அல்லது அதை அரசியல் சாசன வரைவில் புகுத்த வேண்டும் என்ற நிலைமை ஏற்பட்டது. நடவடிக்கைகளை பரிசீலனை செய்து பார்த்தபோது சமஸ்தானங்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டும் என்ற நோக்கத்திற்காக இந்த ஷரத்து கொண்டு வரப்படவில்லை, மாறாக, சமஸ்தானங்களின் எண்ணிக்கை அதிகமாக இருந்ததால், சமஸ்தானங்களுக்கான மொத்தப் பிரதிநிதித் துவம் பெருமளவில் அதிகரிக்கப்பட்டாலொழிய ஒன்றியத்தில் சேர விரும்பும் ஒவ்வொரு சமஸ்தானத்திற்கும் பிரதிநிதித்துவம் அளிப்பது சாத்திய மாயிருக்காது, எனவே அவற்றை ஒன்றியத்திற்குள் கொண்டு வருவதற்காக இந்த ஷரத்து கொண்டுவரப்பட்டது என்பது தெரிய வந்தது. ஆனால் இப்பொழுது நிலைமை முற்றிலும் மாறியுள் ளதை நாம் பார்க்கிறோம். சில சமஸ்தானங்கள் அவைகளாகவே இணைந்து ஒரு விரிவான யூனியனை அமைத்துக் கொண்டன. பல சமஸ்தானங்கள் பிரிட்டிஷ் இந்திய மாகாணங்களோடு முழுமை யாக ஒன்றிணைந்துவிட்டன. சில சமஸ்தானங்கள் மட்டுமே அவற்றின் தனித்தன்மையைக் கொண்டுள்ளன. இந்த மாற்றத்தின் காரணமாக, முந்திய நிலையில் இருந்தது போலவே, சமஸ்தானங் களுக்கு அளிக்கப்பட பிரதிநிதித்துவத்தை அதிகரிக்க வேண்டிய அவசியம் ஏற்படவில்லை; காரணம், பிரிட்டிஷ் இந்திய மாகாணங் களுடன் இப்பொழுது சமஸ்தானங்களுக்குத் தனியான பிரதிநிதித் துவம் தேவையில்லை. அவை மாகாணங்கள் மூலம் பிரதிநிதித் துவம் பெறும். இதேபோல் இணைந்துள்ள சமஸ்தானங்கள் ஒவ்வொன்

றுக்கும் தனிப் பிரதிநிதித்துவம் தேவையில்லை. ஒன்றியத்தில் இணைந்த சமஸ்தானங்களுக்கு வழங்கப்பட்டுள்ள மொத்தப் பிரதி நிதித்துவம் ஆரம்பத்தில் தனித்திருந்த ஒவ்வொரு சமஸ்தானமும் பகிர்ந்து கொள்ளும் பிரதிநிதித்துவமாக இருக்கும். இதனால், அட்டவணை 3 (அ)ஐ குறிப்பிடும் - நான் கொண்டு வந்துள்ள திருத்தம் துரதிருஷ்டவசமாக அது இப்பொழுது அவையின் முன்இல்லை; ஆனால் அட்டவணைகளுக்கு நாம் வரும்போது ஒரு திருத்தமாக அது கொண்டு வரப்படும். அதில் செய்ய உத்தேசித்துள்ளது இதுதான்;

சமஸ்தானங்களுக்கு அளிக்கப்பட்டிருந்த 40 சதவிகித விகிதா சாரத்தை எடுத்துவிட்டோம்; மேலவையில் இந்திய சமஸ்தானங் களுக்கும் மாகாணங்களுக்கும் சமத்துவப் பிரதிநிதித்துவம் இருக்கும்; இது சம்பந்தமான சில புள்ளிவிவரங்களை நான் அளிக்க முடியும்; அவை இப்போதைக்கு துல்லியமானவையாக இல்லை என்ற போதிலும், அட்டவணை 3 (அ)வின் உள்ளடக்கம் எத்தகையதாக இருக்கக் கூடும் என்ற சித்திரத்தைதக் கொடுக்க அவை போது மானவை யாக இருக்கும்.

அட்டவணை 3-அ-ன்படி, மாகாணங்கள் 141 இடங்களைப் பெறும். தலைமை ஆணையர் மாகாணங்கள் இரண்டையும், சமஸ் தானங்கள் மொத்தத்தில் எழுபதையும் பெறும்; மேலவையின் மொத்த இடங்கள் 213. அத்துடன் நியமன இடங்கள் 12 ஐ சேர்த்துக் கொள்ளுங்கள். இது மொத்தத்தை 220க்குக் கொண்டுவரும். திருத்தப் பட்ட நமது துணைவிதி மாநிலங்கள் அவையின் மொத்த இடம். 250க்கு மேல் போகாது என்று கூறுகிறது. இவ்வாறு, 3 (அ) அட்ட வணையில் உத்தேசிக்கப்பட்ட இட ஒதுக்கீடு இரண்டு நிபந்தனை களைப் பூர்த்தி செய்கிறது. முதலாவதாக, மிகையான ஒதுக்கீட்டை அகற்றுகிறது; இரண்டாவதாக, நான் கொண்டு வந்த திருத்தம் நிர்ண யித்துள்ள அதிகபட்ச எண்ணிக்கைக்கு உட்பட்டே அவையின் மொத்த இடங்களின் எண்ணிக்கை நிர்ணயிக்கப்படுகிறது. இது மிகவும் திருப்திகரமான ஏற்பாடு என்று அவை கருதும் என நினைக் கிறேன்.

**பண்டிட் ஹிருதயநாத் குன்ஸ்ரு:** முதல் அட்டவணையின் பகுதி IIIல் உள்ள சமஸ்தானங்கள் அவற்றின் மக்கள் தொகைக்கேற்ப பிரதிநிதித்துவம் பெருகின்றனவா என்று எனது மதிப்பிற்குரிய நண்பரை நான் கேட்கலாமா?

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *ஒவ்வொருவரும் இப்பொழுது மக்கட் தொகை விகிதசாரத்தைப் பெறுவர்.*

*அடுத்து நான் இரண்டாவது திருத்தத்திற்கு வருகிறேன். எண் 1377 - பேராசிரியர் கே.டி.ஷா கொண்டுவந்தது. விவசாயம், தொழில், வாணிபம் மற்றும் விசேஷ நலன்களின் பிரதிநிதிகள் கொண்ட ஒரு சபை சட்டரீதியாக அமைக்கப்பட வேண்டுமென்று பேராசிரியர் கே.டி.ஷா ஆலோசனை கூறுகிறார். அது மக்களின் நிரந்தர சபையாக இருக்கும். அரசுகள் அவர்களுக்கு சம்பளம், படி அளிக்கும்படி கோரப்படும். பேராசிரியர் கே.டி.ஷா கோருகிறபடி அரசாங்கத்திற்கு ஆலோசனை கூறும் சட்டரீதியான கடமை அந்த சபைக்கு இருக்கும்; அதேபோல் இந்த அமைப்புடன் ஆலோசனை கலக்கும் சட்டரீதியான கடமை அரசாங்கத்திற்கு இருக்கும். எந்த மசோதாவையும், அதன் உள்ளடக்கத்தை பொறுத்தவரை இந்த சட்ட ரீதியான அமைப்பை கலந்து ஆலோசித்து அதன் ஒப்புதலைப் பெறாமல் பிரேரேபிப்பதை அனுமதிக்கக்கூடாது என்பதுதான் பேராசிரியர் கே.டி.ஷாவின் திருத்தத்தின் நோக்கம் என்று நான் நம்புகிறேன்.*

*இதற்குப் பல்வேறு ஆட்சேபனைகள் இருக்கின்றன. முதலாவதாக, இந்திய அரசாங்கத்திலோ அல்லது மாகாண அரசாங்கத்திலோ ஒருவர் ஒரு இலாகாப் பொறுப்பில் இருந்தால், தங்களது சட்டங்களுக்கான நடவடிக்கைகளுக்கு இறுதி வடிவம் கொடுக்கு முன்பு இந்திய அரசாங்கமும் மாகாண அரசாங்கங்களும் சாதாரணமாக கடைப்பிடிக்கும் முறைதான் இது என்பதை அறிந்திருப்பார்; ஒரு குறிப்பிட்ட விஷயத்தை கையாளும்போது, ஸ்தாபன ரீதியான கருத்தை கலந்து ஆலோசிக்கப் போதுமான நடவடிக்கைகள் எடுக்காமல் இந்திய அரசாங்கம் எந்தத் திட்டத்தையும் கொண்டு வந்ததில்லை. எனவே பொதுவான நடைமுறை விஷயமாக இருக்கும் இதற்கு அரசியல் சாசனத்தில் அவரது ஷரத்தை வைப்பது அவசிய என்று எனக்குத் தோன்றுகிறது. எனவே இந்தக் கண்ணோட்டத்தில் பார்த்தால், இது அவசியமற்றது என்று நினைக்கிறேன்.*

*அடுத்து, அவைக்கு ஒரு விஷயத்தைக் தெரிவிக்க விரும்புகிறேன். பிந்திய கட்டத்தில், மாநிலங்கள் அவைக்கோ அல்லது மக்கள் அவைக்கோ மூன்று நபர்களை நியமிக்க குடியரசுத் தலைவரை*

அனுமதிக்கும் ஒரு திருத்தத்தை கொண்டுவர நான் உத்தேசித்துள்ளேன். அரசாங்கம் கொண்டுவர விரும்பும் எந்தச் சட்டமும் அது பரிசீலிக்கும் எந்த விஷயத்தைப் பொறுத்தும் அவர்கள் நிபுணர்களாக இருப்பர். அது வணிகம் சம்பந்தமான விஷயமாக இருந்தால், அத்துறையில் விஷயஞானமும் தகவலும் உள்ளவரும் அந்த மசோதாவைப் பரிசீலிக்கும் விஷயத்தில் நிபுணராக உள்ளவருமானவரை மாநிலங்கள் அவைக்கோ அல்லது மக்கள் அவைக்கோ குடியரசுத் தலைவர் நியமிப்பார்; அந்த மசோதா பைசல் செய்யப்படும்வரை அவர் சட்டமன்றத்தின் உறுப்பினராக இருப்பார்; அவையில் உரையாற்ற அவருக்கு உரிமை இருக்கும்; ஆனால், வாக்களிக்க அவருக்கு உரிமை இருக்காது. இந்தத் திருத்தத்தின் மூலம் குறிப்பிட்ட நேரத்தில் சட்டமன்றத்துக்குத் தேவைப்படும் நிபுணத்துவம் வாய்ந்த தகவல்களை சட்டமன்றத்திற்குள் கொண்டு வர வரைவுக்குழு ஆலோசித்து வருகிறது. ஏற்கனவே நான் கூறியது போல் பேராசிரியர் கே.டி.ஷாவின் திருத்தத்தை நிராகரிப்பதை இது நியாயப்படுத்துகிறது; விவசாயம், தொழில் முதலியவையும் பிரதிநிதித்துவப்படுத்தப்பட வேண்டும் என்ற மற்றத் திருத்தங்களும் அவசியமற்றவையாகின்றன. ஏனெனில், எப்பொழுதெல்லாம் நிபுணர் உதவி அவசியப்படுகிறதோ, அப்பொழுதெல்லாம் அந்தக் குறிப்பிட்ட நோக்கத்தை நிறைவேற்ற இந்த ஷரத்து தேவையான அளவு போதுமானதாக இருப்பதைக் காணலாம். மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்கு ஞாபகம் இருக்கலாம்; 1919ஆம் வருடச் சட்டத்தில் இரட்டையாட்சி மாகாணங்களில் புகுத்தப்பட்டபோது, அத்தகைய ஷரத்து அன்றைய இந்திய அரசாங்கச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது. குறிப்பிட்ட மசோதாக்கள் மீது நடவடிக்கை மேற்கொள்ளும்போது, அவைக்கு நிபுணர்களை நியமிக்க ஆளுநர்களை அனுமதித்தது. ஐயா, இந்த அவையில் கொண்டுவரும் திருத்தம் இந்தக் குறிப்பிட்ட திட்டத்தின் தேவையைப் பூர்த்தி செய்யப் போதுமானது என்று கருதுகிறேன்.

**திரு. ஆர்.கே. சித்வா:** நியமனம் சம்பந்தமான துணைவிதி இருக்குமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம்.

**திரு. துணைத்தலைவர்:** இப்பொழுது, திருத்தம் எண் 1379 ஐ வாக்கெடுப்பிற்கு விடுகிறேன்.

''விதி 67ன் துணைவிதி (1) க்கு பதிலாக கீழ்க்கண்டவாறு மாற்றீடு செய்யப்படும்:

(1) மாநிலங்கள் அவை இருநூற்று ஐம்பதுக்கும் மேற்படாத உறுப்பினர் களைக் கொண்டதாக இருக்கும்; அவர்களில்

(அ) பன்னிரண்டு உறுப்பினர்கள், இந்த விதியின் துணைப்பிரிவு 2 ல் குறிப்பிடப்பட்டிருக்கும் முறையில் குடியரசுத்தலைவரால் நியமிக்கப்படு வார்கள்;

(ஆ) எஞ்சியவர்கள் மாகாணங்களின் பிரதிநிதிகள்.''

திருத்தம் நிறைவேற்றப்பட்டது.

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் பேரில் இருக்கும் திருத்தம் எண் 1375ஐ வாக்கெடுப்பிற்கு விடுகிறேன்.

அதன் வாசகம்:

''விதி 67ன் துணைவிதி (1) -க்கான ஷரத்து நீக்கப்படும்.''

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** ஓர் ஒழுங்குப் பிரச்சினை. ஐயா, ஏற்கனவே நாம் திருத்தம் எண் 1369 ஐ நிறைவேற்றிவிட்ட தால் திருத்தம் எண் 1375ஐ முறையற்றதாகிறது; ஏனென்றால் இந்தத் திருத்தம் எண் 1369 ஷரத்து உட்பட விதிக்கு மாற்றீடாகும். இந்தப் புதிய துணைவிதி இப்பொழுது ஏற்றுக்கொள்ளப்பட்டதால் ஷரத்து நீக்கப்படுகிறது. இல்லாத ஒன்றிற்கு ஒரு திருத்தத்தை கொண்டு வருவதில் அர்த்தமில்லை.

**திரு. துணைத் தலைவர்:** அப்படியாயின், இதை வாக் கெடுப்பிற்கு விடமாட்டேன்.

(கீழே கொடுக்கப்பட்டுள்ள 5 திருத்தங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டன; 23 திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன.)

திருத்தம் எண் 1378.

''விதி 67ல் துணைவிதி 1-க்கு கீழ்க்கண்ட புதிய துணைவிதி சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும். (1-அ) மாநிலங்கள் அவையில் மாகாணங்களுக் காக ஒதுக்கப்படும் இடங்கள் அட்டவணை III-ஆ-ல் அதுபற்றி உள்ள ஷரத்து களுக்கு ஏற்ப இருக்கும்.''

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

1. அ.நி.ச. விவாதங்கள், பாகம் VII, 1949 ஜனவரி 4, ப.1229-31

*திருத்தம் எண் 1380 (டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் கொண்டு வந்தது.)*

*''விதி 67 ன் துணைவிதி 2 க்குப் பதிலாக கீழ்க்கண்டது மாற்றீடு செய்யப் படுகிறது.*

*(2) இந்தத் துணைவிதி (1) ன் உபவிதி (அ) -ன் கீழ் குடியரசுத் தலைவரால் நியமிக்கப்படும் உறுப்பினர்கள், கீழ்க்கண்ட நடைமுறை அனுபவம் பெற்ற நபர்களாக இருப்பர். அவை:*

*'இலக்கியம், கலை, விஞ்ஞானம், சமூக சேவை.''*

*திருத்தம் நிறைவேற்றப்பட்டது.*

*திருத்தம் எண். 1400*

*''விதி 67ன் துணைவிதி, (3) ன் உபவிதி (அ) ன் இறுதியில், கீழ்க்கண்ட சொற்கள் சேர்க்கப்படும்:*

*''ஒற்றை மாற்று வாக்குமுறையின் மூலம் விகிதாசாரப் பிரதிநிதித்துவ முறைக்கு ஏற்ப.''*

*திருத்தம் நிறைவேற்றப்பட்டது.*

*திருத்தம் எண். 1403*

*''விதி 67ன் (3) ன் உபவிதி (ஆ)ல் 'அந்த அவையின்' என்ற சொற்களுக்கு பின், 'விகிதாசாரப் பிரதிநிதித்துவத் திட்டத்திற்கு ஏற்ப ஒற்றை மாற்று வாக்கு முறைப்படி' என்னும் சொற்கள் சேர்க்கப்படும்.''*

*திருத்தம் நிறைவேற்றப்பட்டது.*

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் எண் 1425 ன் முதல் பகுதியும் திரு.காமத் பெயரில் இருக்கும் திருத்தம் 1426ம் ஒத்திருக் கின்றன. திருத்தம் எண் 1425 முதல் பகுதியும் இரண்டாம் பகுதியும் முன்மொழியப்படலாம். திரு.காமத், தங்களின் திருத்தம் எண் 1426 வாக்கெடுப்புக்கு விடப்பட வேண்டுமென்று தாங்கள் விரும்பு கிறீர்களா?

**திரு.எச்.வி.காமத்:** டாக்டர் அம்பேத்கர் என்னை முந்திக் கொண்டார் என்று நினைக்கிறேன்; எனவே, எனது திருத்தத்தை முன்மொழியப் போகும் உத்தேசம் இல்லை.

---

1. அ.நி.ச. விவாதங்கள், பாகம் VII, 1949, ஜனவரி 4, ப.1239

**திரு. துணைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** (பம்பாய்: பொது) நான் அதை முன்மொழியப் போவதில்லை.

★ ★ ★

[1]**பண்டிட் தாகூர்தாஸ் பார்கவா:** கையெழுத்துப் போடுவதை இரண்டு மாதங்களில் கற்றுக்கொள்ளலாம்.

**திரு. அனந்தசயனம் ஐய்யங்கார்:** அதனால் என்ன பலன்? ஒரு மனிதன் தனது பெயரை கையெழுத்துப் போடக் கற்றுக் கொண் டாலே உடனே தனது வாக்கை சரியாகப் பயன்படுத்துமளவுக்கு எழுதப் படிக்கத் தெரிந்த கல்வி கற்றவராகிவிடுவார் என்று நினைப்பது புத்திசாலித்தனமானதல்ல; அத்தகைய தகுதி தேவையற்றது என்று கூறுகிறேன்.

எனது நண்பர் டாக்டர் அம்பேத்கர் முறையாக முன் மொழிந்த திருத்தங்களை ஆதரிக்கிறேன்; திரு.கரிமுத்தீனும் திரு. பெய்க்கும் பேராசிரியர் ஷாவும் முன்மொழிந்த திருத்தங்களை எதிர்க் கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, திரு. துணைத் தலைவர் அவர்களே! பேராசிரியர் ஷாவின் திருத்தங்கள் எண்கள் 1417, 1426, 1431 ஐயும், திருத்தம் 1434 ஐயும் அதை பிரேரேபித்தவரால் திருத்தம் செய்யப்பட்டு, பட்டியல் IIன் திருத்தம் எண் 42, பட்டியல் IIன் 43வது திருத்தம் இவற்றால் திருத்தம் செய்யப்பட்ட திருத்தம் எண் 1434 ஐயும் நான் ஏற்றுக்கொள்கிறேன். மற்ற திருத்தங்களைப் பொறுத்தவரை, கவனமாகப் பரிசீலித்ததில் நான் பதிலளிக்க வேண்டிய தேவையுள்ள திருத்தம் ஒன்று மட்டுமே இருக்கிறது. எனது நண்பர் திரு. கரிமுத்தீனின் திருத்தம் எண் 1415. பல்வேறு மாகாணங்களில் மக்கள் அவைக்கான தேர்தல் விகிதாசாரப் பிரதிநிதித்துவ அடிப்படை யில் ஒற்றை மாற்று வாக்குமுறை மூலம் நடத்தப்பட வேண்டுமென்று அவரது திருத்தம் நிர்ணயிக்கிறது. இந்தத் திருத்தத்தை இப்பொழுது ஏற்றுக்கொள்வது சாத்தியமென்று நான் கருதவில்லை. விகிதா சாரப் பிரதிநிதித்துவ முறையின் தகுதிகளை நான் கணித்தவரை, நம் நாட்டில் இன்றுநிலவும் சூழ்நிலைமைகளில், இந்தத் திருத்தத்தை

1. அ.நி.ச. விவாதங்கள், பாகம் VII, 1949, ஜனவரி 4, ப. 1261-63.

ஏற்றுக் கொள்ள முடியாது என்று நினைக்கிறேன். விகிதாசாரப் பிரதிநிதித்துவத்திற்கு ஒருமுக்கிய முன்தேவை பெருமளவில் கல்வி அறிவு பரவி இருக்க வேண்டும் என்ற கூற்றை எனது நண்பர் திரு. கரிமுத்தீன் ஏற்றுக்கொள்வார் என்று நினைக்கிறேன். உண்மையில், ஒவ்வொரு வாக்காளரும் இலக்கங்களைத் தெரிந்து, வாக்குச் சீட்டில் அவற்றைக் குறிக்கக்கூடிய அளவுக்காவது படித்தவராக இருக்க வேண்டும். இந்த நாட்டில் இன்று கல்வி அறிவு எந்த அளவுக்குப் பரவியுள்ளது என்பதைக் கொண்டுபார்த்தால், இத்தகைய ஒரு திட்டத்தை எல்லை மீறிய கற்பனை என்றே நினைக்கிறேன். இந்த விஷயத்தை பொறுத்தவரை எனக்கு கிஞ்சிற்றும் ஐயம் கிடையாது. உலகில் நமது கல்வியறிவு மிக மிகக் குறைவானது என்று கருதுகிறேன்; வாக்குச்சீட்டுகளில் குறியிடும் ஒரு தேர்தலை திணிப்பது சாத்தியமற்றதாகும். விகிதாசாரப் பிரதிநிதித்துவ முறையைத் தவிர்ப்பதை இது அவசியமாக்குகிறது என்பது என் கருத்து.

இந்த அவையின் கவனத்திற்கு கொண்டுவர நான் விரும்பும் இரண்டாவது விஷயம். எது எப்படியாயினும் இந்த அரசியல் சாசனம் வகுத்தளிக்கும் அரசாங்க அமைப்புக்கு விகிதாசாரப் பிரதிநிதித்துவம் பொருத்தமானதல்ல என்பதாகும். இந்த அரசியல் சாசனம் வகுத்தளிக்கும் ஆட்சிமுறை நாடாளுமன்ற ஆட்சிமுறை எனப்படுகிறது; இதன்படி சட்டம் நிர்ணயிக்கும் காலஅளவு முழுமைக்கும் அதாவது ஐந்து ஆண்டுகளுக்கு ஓர் அரசாங்கம் அவசியமாக பதவியில் இருக்க வேண்டுமென்பதல்ல; மாறாக அவையின் பெரும்பான்மையின் நம்பிக்கை தொடரும் வரைதான் அது பதவியில் இருக்க முடியும். நாடாளுமன்ற முறையிலான அரசாங்கம் உள்ள அவையில், அரசாங்கத்தை ஆதரிக்கத் தயாராக உள்ள பெரும்பான்மை பலமுள்ள ஒரு கட்சி இருக்கவேண்டியது அவசியம். நாடாளுமன்ற, விகிதாசாரப் பிரதிநிதித்துவ முறையின் பலாபலன்களை நான் பரிசீலித்துப் பார்த்தவரை விகிதாசாரப் பிரதிநிதித்துவத்தின் பிரதிகூலங்களின் ஒன்று, சட்டமன்றம் பல பிரிவுகளாகப் பிரிந்துபோவதாகும். ஒருவருக்கு ஒரு வாக்கு என்ற அடிப்படையில் தனிஉறுப்பினர் தொகுதி அமைப்பு நல்லதா என்று பரிசீலிக்கும் நோக்கத்துடன் பிரிட்டிஷ் பாராளுமன்றம் ஒரு ராயல் கமிஷனை **1910**ம் ஆண்டு நியமித்தது. ஆனால், ராயல் கமிஷனின் சிபாரிசை பாராளுமன்றம் ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை. இதைக் குறிப்பாகக் கவனத்தில் கொள்ள வேண்டும்.

அவை இதனை நன்கு அறிந்திருக்க வேண்டுமென நம்பு கிறேன். எனது மதிப்பீட்டின்படி, இதை ஏற்றுக்கொள்ளாததற்கான ஆழமான காரணம் என்னவெனில், ஒரு ஸ்திரமான அரசாங்கம் பதவியில் இருப்பதை விகிதாசாரப் பிரதிநிதித்துவம் அனுமதிக்காது என்பதேயாகும்; ஏனெனில், நாடாளுமன்றத்திலுள்ள சில பிரிவுகளை அதிருப்திபடுத்தும். ஏதாவது ஒன்று நிகழும் ஒவ்வொரு சமயத்திலும், அப்பொழுது அவை அரசாங்கத்திற்கு அளித்த ஆதரவை விலக்கிக் கொள்ளும்; சில குழுக்களது பிரிவினரின் ஆதரவை இழக்கும். அரசாங்கம் சிதறுண்டு போகும். எதிர்கால அரசாங்கம் வேறு எதை அளிக்கிறதோ இல்லையோ, எந்தத் தேவைகள் மக்களைத் துன்பத் துயரங்களில் ஆழ்த்துகின்றவோ அவற்றிற்கு பரிகாரம் தேடுகிறதோ இல்லையோ, நமது எதிர்கால அரசாங்கம் ஒன்றை அவசியம் செய்தாகவேண்டும் என்பதில் எனக்கு எள்ளளவும் சந்தேகமில்லை.

அது என்னவெனில், அது ஒரு ஸ்திரமான அரசாங்கத்தை (கரகோஷம்) ஏற்படுத்திச் சட்டம், ஒழுங்கைப் பாதுகாக்க வேண்டும். எனவே, அரசாங்கத்தின் ஸ்திரத்தன்மைக்கு ஊறுவிளைவிக்கும் தேர்தல் ஏற்பாட்டை ஏற்றுக்கொள்வதில் நான் மிகவும் தயக்கம் கொள்கிறேன். இதன் காரணமாக, இந்த ஏற்பாட்டை ஏற்க நான் தயாராக இல்லை.

கவனத்தில் அவசியம் கொள்ள வேண்டிய மூன்றாவதொரு அம்சமும் உள்ளது என நினைக்கிறேன். இந்த நாட்டில் பற்பல ஆண்டுகளாகவே பெரும்பான்மையினரென்றும் சிறுபான்மையின ரென்றும் மக்கள் பிளவுபட்டு வந்துள்ளனர். பெரும்பான்மையினர், சிறுபான்மையினர் என்று மக்களிடையே உள்ள பிளவு இயற்கை யானதா, அல்லது செயற்கையானதா, அல்லது இந்த நாட்டின் முன்னேற்றத்திற்கு ஆதரவாக கொண்டுவரப்பட்டதா என்ற கேள்வி களுக்கு நான் புகப்போவதில்லை. அது எதுவாக இருந்தபோதிலும், நமது நாட்டில் இந்த பெரும்பான்மையினரும் சிறுபான்மை யினரும் இருந்து வந்திருக்கிறார்கள் என்பது உண்மை; ஆரம்பக் கட்டத்தில், எந்தக் கோட்பாடுகளின் அடிப்படையில் இந்த நாட்டின் அரசியல் சாசனம் அமைய வேண்டுமென்பதை விவாதிக்க இந்த அரசியல் நிர்ணயசபை கூடியபோது பிரதிநிதித்துவ முறை பற்றி சிறுபான்மை சமூகத்தினர்களுக்கும் பெரும்பான்மை சமூகத்தின ருக்கும் இடையே ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. இந்த ஒப்பந்தம் பரஸ் பரம் விட்டுக்கொடுக்கும் அடிப்படையில் அமைந்து இருந்தது. அரசியல் நிர்ணயசபைக் கூட்டத்திற்கு முன்பு, தனித் தொகுதிகள்

முறைவேண்டும் என்ற உறுதியான நிலையை எடுத்துவந்த சிறு பான்மை வகுப்பினர் அந்த முறையைக் கைவிடச் சித்தமாக இருந்தனர் அல்லது சித்தமாக இருப்பதற்குத் தயாராயினர்; எந்தக் குறிப்பிட்ட சமூகத்தினருக்கும் எந்தவிதமான விசேட ஒதுக் கீடும் கூடாது என்று நம்பிய பெரும்பான்மையினர், தனித்தொகுதி களுக்கு ஒப்புக்கொள்ள முடியாவிட்டாலும், இடங்களை ஒதுக்கும் கூட்டு வாக்காளர்கள் தொகுதித் திட்டத்தை ஒத்துக்கொள்வதை அனுமதித்தனர் அல்லது ஒத்துக்கொண்டனர். இந்த ஒப்பந்தம் இரு விஷயங்களுக்கு வழிவகை செய்தது. பல்வேறு சிறுபான்மையின ருக்கு ஒரு குறிப்பிட்ட பிரதிநிதித்துவ பங்கிற்கு வகை செய்தது; அத்தகைய பங்கு கூட்டுவாக்காளர் தொகுதிகள் மூலம் கிடைக்கும். இப்பொழுது நான் பணிவுடன் கேட்டுக்கொள்வது இதுதான்: இந்த அரசியல் சாசனவரைவில் அடங்கியுள்ள ஷரத்துகள் எவற்றையும் திருத்தவும், அதேபோன்று பெரும்பான்மையினருக்கும் சிறுபான்மை யினருக்கும் இடையே ஏற்பட்ட ஒப்பந்தத்தை மாற்றவும் இந்த அவைக்கு அதிகாரம் உள்ளபோதிலும் இதனை எதிர்பாராத வித மாகவோ அல்லது சுற்றி வளைத்தோ செய்யக்கூடாது. அதை நேரடி யாகச் செய்வது நல்லது; விதி 292, 293க்கு மாற்றம் கொண்டு வருவதற்குச் சிறுபான்மையினரிடம் விட்டுவிடுவதேயாகும். இந்த அவையில் பிரதிநிதித்துவம் பெற்றுள்ள எந்த ஒரு குறிப்பிட்ட சிறுபான்மையினரும் தங்களுக்கு ஒதுக்கீடு வேண்டாமென்று கூறி னால், விதி 292 ன் ஷரத்திலிருந்து அந்த குறிப்பிட்ட சிறுபான்மை யின் பெயரை அவை எடுத்துவிடலாம். வேறொரு குறிப்பிட்ட சிறுபான்மையினர் தமது கோரிக்கையை முழுமையாகப் பெற வில்லை என்றாலும், அதாவது தனித்தொகுதி கிடைக்கா விட்டா லும், எதுவும் பெறாமல் இருப்பதை விட, இடங்கள் ஒதுக்கீடு ரூபத்தில் பெறுவது நல்லது என்று கருதினால், அரசியல் நிர்ணய சபை ஏற்கனவே அதற்குக் கொடுத்துள்ளதை வைத்துக் கொள்ள அந்தச் சிறுபான்மை அனுமதிக்கப்படுவது நியாயமானதாகவும் சரியானதாகவும் இருக்கும் என்று நினைக்கிறேன்.

**பண்டிட் தாகூர்தாஸ் பார்கவா:** ஆனால் சமூகங்களிடையே இடஒதுக்கீடுபற்றி ஒப்பந்தம் எதுவும் இல்லை; தனித்தொகுதிகள் குறித்தும் மற்றவை குறித்தும் பல உறுப்பினர்கள் திருத்தங்களைக் கொடுத்திருக்கிறார்கள்; ஆனால் அவை எல்லாம் வாக்கெடுப்பில் நிராகரிக்கப்பட்டன. இந்த விஷயங்கள் குறித்து உடன்பாடு எதுவும் ஏற்படவில்லையே.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் சொல்லிக் கொண்டிருந்தது என்னவெனில், அவற்றை நிர்ப்பந்தத்தின் மூலம் அல்லாமல் உடன்பாட்டின் மூலம் எடுத்துவிடலாம். இந்த ஒப்பந்தம் மூலம் சிறுபான்மையினருக்கு அளிக்கப்பட்டதை கொல்லைப்புறத் தின் மூலம் விகிதாசாரப் பிரதிநிதித்துவம் உண்மையிலேயே எடுத்துக் கொள்கிறது; ஏனெனில், சிறுபான்மை சமூகங்களுக்கு அவை விரும்புவதை, அதாவது திட்டவட்டமான பங்கை விகிதா சாரப் பிரதிநிதித்தவம் அளிக்காது. மாறாக, தங்களது பிரதிநிதி களைத் தேர்ந்தெடுப்பதில் அவர்கள் தங்கள் கருத்தைக் கூறலாம், அவ்வளவுதான். சிறுபான்மை சமூகத்தினர்கள் தங்களுடைய பங்குத் திட்டத்தை விட்டுவிடத் தயாராக இருப்பார்களா, தங்களுடைய பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் கருத்துக் கூறுவது மட்டும் போதும் என்று திருப்தியடைவார்களா என்பதை நியாயப்படி அவர்களுக்கே விட்டு விடப்பட வேண்டும் என்று பணிவுடன் கூறிக் கொள் கிறேன். இக்காரணங்களால், திரு.கரிமுத்தீனின் திருத்தத்தை ஏற்க நான் தயாராக இல்லை.

**திரு. துணைத் தலைவர்:** இப்பொழுது திருத்தங்களை, ஒன்றன்பின் ஒன்றாக அவையின் வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

**திரு. எச்.ஜே. கண்டேகர்:** ஐயா, ஒரு தகவல் எனக்குத் தெரிய வேண்டும். முந்தைய மக்கட் தொகைக் கணக்கெடுப்பு பற்றி டாக்டர் அம்பேத்கரை நான் கேட்கலாமா? அன்று விதி 35 ஐ அவர் திருத்திய போது இதுகுறித்து எதுவும் அவர் கூறவில்லை. முந்தைய மக்கட் தொகைக் கணக்கெடுப்பை மிக அண்மைய மக்கள் தொகைக் கணக்கெடுப்பு என்று கூறித் திருத்தம் செய்ய அவர் தயாரா?

**திரு. துணைத் தலைவர்:** திரு.கண்டேகர் மேடைக்கு வந்து பேசலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு.நஸிருத்தீன் அகமதுவின் திருத்தத்தை, அவர் திருத்தியபடியும், திரு.பார்கவா திருத்தம் செய்தபடியும் ஏற்றுக் கொண்டிருக்கிறேன்.

*(மொத்தத்தில் எல்லா எட்டுத் திருத்தங்களும் நிராகரிக்கப்பட்டன. கீழ்க் கண்ட திருத்தங்கள் ஏற்கப்பட்டன.)*

*"1. விதி 67ன் துணைவிதி (5) ல் உபவிதி (அ) ல் 'வாக்காளர்களால் மாநிலங்களின் பிரதேசங்களிலிருந்து நேரடியாகத் தெரிந்தெடுக்கப்பட்ட மக்களின் பிரதிநிதிகள்' என்ற சொற்களுக்குப் பதிலாக, 'மாநிலங்களில் வாக்காளர்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள்' என்ற சொற்கள் இடம்பெறுகின்றன."*

*2. 'விதி 67ன் துணைவிதி(5)ன் உபவிதி பிரிவு (அ) ல் 'இந்தியாவின் என்ற சொல் நீக்கப்படுகிறது.''*

*3. 'விதி 67ன், துணைவிதி(5)ன்க உபவிதி பிரிவு (ஆ) ல் உள்ள வரம்புரை நீக்கப்படுகிறது.''*

*4. 'திருத்தங்கள் பட்டியலிலுள்ள திருத்தம் எண். 1434 ஐ பொறுத்து, விதி 67ன் துணைவிதி(5) ன் உபவிதி (இ) ல், 'எந்நேரத்திலும் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படும் பொருட்டு' என்ற சொற்களுக்குப் பதிலாக, 'ஒதுக்கீடு செய்யப்பட்ட பிரதிநிதிகள்' என்ற சொற்கள் இடம்பெறுகின்றன.''*

*5. 'விதி 67ன், துணைவிதி(5) ன் உபவிதி (இ)ல் உள்ள 'கடைசியாக முந்திய மக்கட்தொகைக் கணக்கெடுப்பு' என்ற சொற்களுக்குப் பதிலாக, 'சம்பந்தப் பட்ட புள்ளிவிவரங்கள் வெளியிடப்பட்ட கடைசியாக முந்திய மக்கட் தொகைக்கணக்கெடுப்பு' என்ற சொற்கள் இடம்பெறுகின்றன.''*

*6. 'விதி 67ன் துணைவிதி (7)ல், 'செய்யலாம்' என்ற சொல்லுக்குப் பதிலாக, 'அவசியம் செய்ய வேண்டும்' என்ற சொற்களையும் 'பிரதேசங்கள்' என்ற சொற்களுக்குப்பதில் 'அந்த பிரதேசங்கள்' என்ற சொற்களையும், 'மாநிலங் கள் அல்லாத மற்ற' என்ற சொற்களுக்குப் பதில்' ஒன்றியத்தின் அங்கப் பகுதி களாக உள்ள மாநிலங்கள் விஷயத்தில் நடைபெறும் அதே அடிப்படை யில் மத்தியசர்க்காரால் ஆளப்படுகிற' என்ற சொற்களையும் முறையே இடம்பெறச் செய்ய வேண்டும்.''*

*7. 'திருத்தங்களின்பட்டியலிலுள்ள திருத்தம் எண் 1450 சம்பந்தமாக, 67வது விதியின் துணைவிதி (8) க்குப் பின்னால், கீழ்க்கண்ட புதிய ஷரத்து சேர்க்கப்படுகிறது:*

*'அப்பொழுது அமைந்துள்ள அவை கலைக்கப்படுவதற்குமுன் அத்தகைய ஒழுங்குபடுத்துதல் மக்கள் அவையின் பிரதிநிதித்துவத்தைப் பாதிக்காம லிருந்தால்''*

*8. 'விதி 67க்கு, பின்கண்ட புதிய துணைவிதி (10) சேர்க்கப்படுகிறது:*

*(10) 'மக்களவைக்கான தேர்தல் விகிதாசாரப் பிரதிநிதித்துவத் திட்டப்படி ஒற்றை மாற்று வாக்குமூலம் இருக்கும்.'*

*திருத்தப்பட்ட விதி 67, அரசியல் சாசனத்தில் சேர்க்கப்பட்டது.*

★ ★ ★

## விதி 147 - அ

[1]**திரு. துணைத்தலைவர்:** திருத்தத்திற்கு டாக்டர் அம்பேத்கர் பதிலளிப்பார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் சொல்ல விரும்புவது எல்லாம் இதுதான்; அரசியல் சாசன வரைவு எந்தக்

1. அ.நி.ச. விவாதங்கள், பாகம் VII, 1949, ஜனவரி 6, ப.1304.

கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டுள்ளதோ, அதற்கு எதிராக உள்ளது இந்தத் திருத்தத்தின் அடிப்படைக் கோட்பாடு; இப்பொழுது இத்தகைய யோசனையை ஏற்றுக்கொள்வது பெரும் பாலும் சாத்தியமற்றது என்று நினைக்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** இப்பொழுது திருத்தத்தை வாக் கெடுப்பிற்கு விடப்போகிறேன்.

விஷயம் இதுதான்:

''விதி 148க்கு முன்னால், புதிய விதி 147 - அ சேர்த்துக் கொள்ளப்படுகிறது.'

'147 - அ ; ஒவ்வொரு மாநிலத்தின் சட்டமன்றமும் நிர்வாகத்தினின்றும் நீதித்துறையிலிருந்தும் சுதந்திரமாகத் தனியாக இருக்கும்.'

*(பேராசிரியர் கே.டி. ஷாவின் இந்தத் திருத்தம் நிராகரிக்கப்பட்டது.)*

## விதி 148

**திரு. துணைத் தலைவர்:** இந்தத் திருத்தத்திற்கு ஒரு திருத்தம் உள்ளது. டாக்டர் அம்பேத்கர் பெயரில் உள்ள திருத்தம், பட்டியல் 11 ன் எண் 46 திருத்தம் அது. மாண்புமிகு உறுப்பினர் அதை முன் மொழியப் போகிறாரா?

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பின் வருமாறு முன்மொழிகிறேன்:

'திருத்தங்களின் பட்டியலின் திருத்தம் எண் 2231க்கு பதிலாக, கீழ்கண்டது மாற்றீடு செய்யப்படுகிறது:

'விதி 148 ன் துணைவிதி(1) ன் உபவிதி (அ) ல் 'மாநிலங்களில்' என்பதை அடுத்து 'சென்னை, பம்பாய், மேற்கு வங்காளம், ஐக்கிய மாகாணங்கள், பீகார், மற்றும் கிழக்கு பஞ்சாப்' என்ற சொற்கள் சேர்த்துக் கொள்ளப்படுகின்றன.''

ஐயா, மாகாணங்களில் இரண்டாவது அவை வேண்டுமா இல்லையா என்ற பிரச்சினை, இந்த அவையால் அமைக்கப்பட்ட மாகாண அரசியல் சட்டக் குழுவால் விவாதிக்கப்பட்டது. அந்தக் குழுவின் முடிவு என்னவெனில், சம்பந்தப்பட்ட ஒவ்வொரு மாகா ணத்தின் முடிவிற்கு விடப்படவேண்டிய விஷயமாகும் இது என்ப

1. அ.நி.ச. விவாதங்கள், பாகம் VII, 1949, ஜனவரி 6, ப. 1309.

தாகும்; எந்த ஒரு குறிப்பிட்ட மாகாணமும் ஒரு இரண்டாவது அவை வேண்டுமென்று முடிவு செய்தால், 2 ஆவது அவையை வைத்துக் கொள்ள அது அனுமதிக்கப்படவேண்டும்; ஏதாவது ஒரு மாகாணம் இரண்டாவது அவையை விரும்பவில்லையெனில், அதன்மீது இரண்டாவது அவையைத் திணிக்கக்கூடாது. மாகாண அரசியல் சட்டக்குழுவின் சிபாரிசை அமுல்நடத்த, வெவ்வேறு மாகாணங் களைப் பிரதிநிதித்துவப்படுத்தும் அரசியல் நிர்ணயசபை உறுப் பினர்கள் கூடி இதுபற்றி ஒரு முடிவுக்கு வர வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது. எனவே வெவ்வேறு மாகாணங்களை இந்த அவையில் பிரதிநிதித்துவப்படுத்தும் உறுப்பினர்கள் இந்த விஷயம் பற்றி முடிவு செய்ய குழுக்களாக அவர்களே கூடினர். உறுப்பினர் கள் நடத்திய விவாதங்களின் விளைவாக, எனது திருத்தத்தில் குறிப் பிட்டுள்ள மாகாணங்கள் தங்கள் மாகாணங்களில் இரண்டாவது அவை வேண்டுமென ஒப்புக்கொண்டதாக அலுவலகத்திற்குத் தெரி விக்கப்பட்டது. இரண்டாவது அவை வேண்டியதில்லை என்று முடிவு செய்த மாகாணங்கள்; மத்திய மாகாணம் மற்றும் பீரார், அசாம் மற்றும் ஒரிசா ஆகும். மாகாண அரசியல் சட்டக் குழுவின் சிபாரிசிற்கு ஏற்ப, பல்வேறு மாகாணங்களின் பிரதிநிதிகள் கலந்தாலோசனை கள் நடத்தி மேற்கொண்ட முடிவை எனது திருத்தம் நடைமுறைப் படுத்துகிறது.

ஐயா, நான் பின்வருமாறு பிரேரேபிக்கிறேன்.

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர்.

**திரு. எச்.வி. காமத்** (மத்திய மாகாணங்கள் மற்றும் பீரார்: பொது): திரு. துணைத் தலைவர் அவர்களே.

**திரு. துணைத் தலைவர்:** திரு.காமத் மத்திய மாகாணத் திலிருந்து வருகிறார்; அதற்கு மேல் அவை இல்லை. (சிரிப்பு)

**திரு.எச்.வி.காமத்:** அதனாலேயேதான், ஐயா, நான் பேச விரும்புகிறேன்.

**திரு.துணைத்தலைவர்:** இந்த விஷயம் போதுமான அளவு விவாதிக்கப்பட்டுள்ளது என நினைக்கிறேன். மதிப்பிற்குரிய மேலும்

1. அ.நி.ச. விவாதங்கள், பாகம் VII, 1949, ஜனவரி 6, ப.1316-17.

நான்கு உறுப்பினர்கள் பேச விரும்புகிறார்கள் போலும்; ஆனால் நாம் ஏற்கனவே ஒன்றரை மணி நேரம் செலவழித்துள்ளோம்; ஒவ்வொரு நாளும் ஒருகுறிப்பிட்ட முன்னேற்றத்தை நாம் அடைய வேண்டும். ஏமாற்றமடைந்துள்ள உறுப்பினர்கள் என்னை மன்னிக்கு மாறு தெரிவித்துக் கொள்கிறேன். இப்போதைய சூழ்நிலையில் இதைத்தான் நான் செய்ய முடியும். டாக்டர் அம்பேத்கர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, திரு. துணைத் தலைவர் அவர்களே, இந்தக் குறிப்பிட்ட விதிக்கு கொண்டு வரப்பட்டுள்ள திருத்தங்கள் எதையும் ஏற்றுக்கொள்ள முடியாத தற்காக வருந்துகிறேன். இதுவரை ஆற்றிய உரைகளிலிருந்து, பல்வேறு மாகாணங்களில் இரண்டாவது அவை வேண்டுமென்ற கோட்பாடு விஷயத்தில் ஒன்றுபட்ட கருத்து இல்லை என்பதைக் காண்கிறேன். இந்த அவையில் இரண்டாவது அவைக்கு எதிராக தெரிவிக்கப் பட்ட கருத்துக்கள் என்னை ஆச்சரியப்படவைக்கவில்லை. பிரெஞ்சு அரசியல் நிர்ணயசபை கூடியதிலிருந்து, இரண்டாவது அவைக்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் விடாப்பிடியான ஒரு கருத்து இருந்து வந்திருக்கிறது; அங்கு இரண்டாவது அவைக்கு எதிராக உள்ளவர் களின் கருத்தை அப்பி செய்யஸை விட நன்றாக என்னால் எடுத்துக் கூற இயலாது. அவரது கருத்து இரண்டு வகைப்பட்டது. மேலவை தேவையற்றதாகி விடுகிறது; கீழவையுடன் ஒத்துப்போகாவிடில், அது தொந்தரவு கொடுக்கும் அமைப்பாகிவிடுகிறது; அதை நாம் ஏற்றுக்கொள்ளக்கூடாது.(சிரிப்பு). அப்பி செய்யஸ் விமர்சனத்தில் முதல் பகுதி சந்தேகமில்லாமல் ஒப்புக்கொள்ளத்தக்கது; ஏனெனில் அது தெள்ளத் தெளிவானது. ஆனால் அவரது விமர்சனத்தின் இரண் டாவது பகுதியை இதுவரை யாரும் ஒப்புக் கொள்ளவில்லை. பிரான்ஸ் நாடும் அந்தக் கருத்தை ஏற்றுக்கொள்ளவில்லை; இரண் டாவது அவை வைத்துக்கொள்வதென்ற கோட்பாட்டை விடாப் பிடியாக முரணில்லாமல் அவர்களும் நிலைநிறுத்தியுள்ளார்கள்.

இப்பொழுது என்னைப் பொறுத்தவரையில், இரண்டாவது அவை உருவாவதை நான் பலமாக ஆதரிப்பதாக சொல்ல முடியாது. முட்டையில் ஒரு பகுதி மட்டும் நன்றாக இருக்கிறது என்று கூறுவதுபோல் அது இருக்கிறது (சிரிப்பு). இந்த அரசியல் சாசனத்தில் நாம் செய்வதெல்லாம், முற்றிலும் ஒரு பரீட்சார்த்த ஏற்பாடாகவே இரண்டாவது அவையை நாம் கொண்டு வருகிறோம் என்பதே ஆகும். அரசியல் சாசனவரைவு மூலம் இரண்டாவது

அவைக்கு ஒரு நிரந்தர இடத்தை நாம் அளிக்கவில்லை; அரசியல் சாசனத்தின் ஒரு நிரந்தர அம்சமாக அதை நாம் செய்யவில்லை. நான் ஏற்கனவே கூறியது போல் இது முற்றிலும் பரீட்சார்த்த ஏற்பாடே. அவசியம் ஏற்படும்போது இரண்டாவது அவையை எடுத்துவிடுவதற்கு இப்போதைய விதி 304ல் போதுமான அளவு வழிவகை செய்யப்பட்டுள்ளது. இரண்டாவது அவையை நீக்குவது பற்றி பரிசீலிக்கும் விதி தகுதிகளைப் பற்றி நாம் விவாதிக்கும்போது, இரண்டாவது அவையை நீக்குவதற்கு விதி 304ல் செய்யப்பட்டுள்ள ஏற்பாட்டினை மேலும் எளிதாக்க வேண்டும் என்று மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் நினைத்தால், என்னைப் பொறுத்தவரை இது விஷயத்தில் எனக்கு எந்த ஆட்சேபமும் இல்லை. (கரவொலி).

எனவே, ஒரு சமரச ஏற்பாடாக, அரசியல் சாசனத்தில் இந்த விதியை நிறுத்தி வைத்துக் கொள்ளலாமென ஆலோசனை கூறுகிறேன்.

**திரு. துணைத்தலைவர்:** இப்பொழுது திருத்தங்களை ஒவ்வொன்றாக வாக்கெடுப்புக்கு விடப்போகிறேன்.

திருத்தம் இதுதான்:

'விதி 148 ன் துணைவிதி (1) ன் உபவிதி (இ) ல், 'மாநிலங்களில்' என்பதற்குப் பின்பு சென்னை, பம்பாய், மேற்கு வங்காளம், ஐக்கிய மாகாணம், பீகார் மேலும் பஞ்சாப்'' என்ற சொற்கள் சேர்க்கப்படும்.'

(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் நிறைவேற்றப்பட்டது. மேலும் இரு திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன.)

திருத்தப்பட்ட விதி 148 அரசியல் சாசனத்தில் சேர்க்கப்பட்டது.

## விதி 149

[1]**திரு. துணைத் தலைவர்:** நல்லது. இனி விதி 149க்கு வருவோம். அது டாக்டர் அம்பேத்கர் பெயரில் உள்ளது.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** அது முன்மொழியப்படவில்லை. (குரல்கள்: உறுப்பினர் அவையில் இல்லை.(சிரிப்பு)

1. அ.நி.ச. விவாதங்கள், பாகம் VII, 1949, ஜனவரி 6, ப. 1318.

**திரு. துணைத் தலைவர்:** (மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் அவைக்குள் வந்துகொண்டிருப்பதைப் பார்த்துவிட்டு)ஒரு கோப்பை காபி அருந்தவோ, புகைப் பிடிக்கவோ மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் வெளியில்போக முழு சுதந்திரம் இருக்கிறது. இந்த இருவகையான இடைஓய்வுகளுக்குப் பழக்கப்பட்டவர்களின் கஷ்டங்களை அவர்கள் தயவுசெய்து புரிந்துகொள்ள வேண்டும். இத்தகைய இடைஓய்வுக்கு டாக்டர் அம்பேத்கர் தகுதிபெறுகிறார் என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் ஒப்புக்கொள்வார்கள். அவைத் தலைவருக்கு விவாதங்களை காது கொடுத்துக் கேட்பதைத் தவிர வேறு எதுவும் செய்யவேண்டியதில்லை. ஆனால் டாக்டர் அம்பேத்கரோ விவாதங்களைக் கேட்கவேண்டும் என்பதும் மட்டுமன்றி பதிலளிக்கவும் வேண்டும். (சிரிப்பு)

* * *

[1]**திரு. துணைத் தலைவர்:** இப்பொழுது, டாக்டர் அம்பேத்கர் பெயரில் உள்ள திருத்தம் எண் 2250ஐ எடுத்துக் கொள்வோமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நான் அந்தத் திருத்தத்தை முன்மொழியப் போவதில்லை.

**திரு. துணைத் தலைவர்:** அப்படியாயின் பட்டியல் III உள்ள திருத்தம் எண் 59 விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை.

* * *

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பின்வரும் திருத்தத்தை முன்மொழிகிறேன்:

> 'விதி 149ன் துணைவிதி 3-ல் உள்ள ஷரத்துக்குப் பதில் பின்கண்டது மாற்றீடு செய்கிறது:
>
> 'கடைசியாக கடந்த மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் உறுதிசெய்யப்பட்ட ஒரு மாநிலத்தின் மக்கட்தொகை 300 லட்சத்திற்கு அதிகமானால், அந்த மாநில சட்டமன்றத்தில் உறுப்பினர்கள் எண்ணிக்கை, மாநில மக்கள் தொகை முன்னூறு லட்சம் வரை, ஒவ்வொரு லட்ச மக்கள் தொகைக்கு ஓர் உறுப்பினருக்கு மேல் அல்லாமலும் ஒவ்வொரு பத்து லட்சத்துக்கும்

1. அ.நி.ச.விவாதங்கள், தொகுதி VII, 1949 ஜனவரி 6, ப. 1323
2. அ.நி.ச.விவாதங்கள், தொகுதி VII, 1949 ஜனவரி 6, ப. 1324

*ஐந்து உறுப்பினர்களுக்கு மேல் அல்லாமலும், 300 லட்சத்திற்கு அதிகமாக உள்ள மாநிலத்திற்கு.''*

ஒரு மாநிலத்தின் சட்டமன்றத்தில் மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கை எப்படியும் நானூற்று ஐம்பதுக்கு மேற்படாமலும் அல்லது அறுபதுக்குக் குறையாமலும் இருக்கும்.''

[1]**திரு. துணைத் தலைவர்:** அவை என்னிடம் மிகுந்த நல்லெண்ணத்தை வெளிப்படுத்தும் நிலைமையில், என்மீது பெரும் அன்புகாட்டும் நிலைமையில் தமது பதிலை இன்று அளிக்கும்படி டாக்டர் அம்பேத்கரை நான் அழைக்கப் போவதில்லை. வேறு ஏதாவது பணிகளை இன்று நாம் எடுத்துக் கொள்வோம். ஒத்துக் கொள்ளக்கூடிய தீர்வை அடைவதற்காக சம்பந்தப்பட்ட கட்சிகள் ஒன்று கூடுவதற்கு, கலந்தாலோசிப்பதற்கு ஒரு சந்தர்ப்பத்தை இது அளிக்கிறது. எப்படியாயினும், அரசியல் சாசனத்தை வகுப்பது ஒரு கூட்டுறவு முயற்சியே; அதை வெற்றிகரமாக ஆக்குவதற்கு நம்மால் முடிந்ததனைத்தையும் நாம் அவசியம் செய்ய வேண்டும்.

**மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள்:** தங்களுக்கு நன்றி, ஐயா.

★ ★ ★

## விதி 63

**திரு. துணைத் தலைவர்:** இந்தத் திருத்தத்திற்கு பல திருத் தங்கள் உள்ளன.

★ ★ ★

[2]**திரு. பிரபுதயாள் ஹிமத்சிங்கா** (வங்காளம்: பொது): ஐயா, திரு. நஸிருத்தீன் கொண்டுவந்த திருத்தத்தையும் பேராசிரியர் கே.டி. ஷாவின் திருத்தத்தையும் நான் எதிர்க்கிறேன். இந்த விதியை அது இப்போதுள்ள வாசகத்தின்படி இந்த அவை ஏற்றுக் கொள்ள வேண்டும். ஒரு மாகாணத்தின் தலைமை அரசு வழக்குரைஞருக்கும் இந்தியாவின் தலைமை அரசு வழக்குரைஞருக்கும் இடையே நிச்சயம் வித்தியாசம் இருக்கிறது. உபவிதி (4), குடியரசுத் தலைவரின் விருப்பம்

---

1. அ.நி.ச.விவாதங்கள், தொகுதி VII, 1949 ஜனவரி 7, ப. 1349.
2. அதே நூல், பக். 1347.

இருக்கும் வரை மத்திய அரசின் தலைமை வழக்கறிஞர் பதவி வகிக்க வகைசெய்கிறது; இது நோக்கத்தை நிறைவேற்றும் என்று நினைக்கிறேன். அமைச்சரவையில் மாற்றம் இருந்தால், அதனால் இந்திய அரசின் தலைமை வழக்குரைஞர் பதவி விலக வேண்டுமென்பது அவசியமில்லை; ஆனால் மாகாணங்களில், அமைச்சரவை மாற்றத்தோடு, அம்மாகாண தலைமை வழக்குரைஞர் மீண்டும் பதவியில் அமர்த்தப்படாதபோது அவர் பதவியிலிருந்து விலக வேண்டும். எனவே திருத்தங்களை நான் எதிர்க்கிறேன். விதியை அது இப்போதுள்ள உருவத்தில் ஆதரிக்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர்.

**திரு. நஸிருத்தீன் அகமது:** அவர் நடவடிக்கைகளில் கவனம் செலுத்தவில்லை, ஐயா, எவருடைய உத்தரவையோ அவர் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்.

**திரு. துணைத் தலைவர்:** இந்தக் கூற்று பெருந்தன்மை வாய்ந்ததாக இல்லை.

**திரு. நஸிருத்தீன் அகமது:** அப்படியல்ல. இவ்வாறு பேசுமாறு நான் நிர்ப்பந்திக்கப்பட்டிருக்கிறேன்....

**திரு. துணைத் தலைவர்:** மதிப்பிற்குரிய உறுப்பினர் தமது இருக்கையில் அமர்வாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (பம்பாய்: பொது) ஐயா, இதற்கு எந்தப் பதிலும் அளிக்க வேண்டும் என்று நான் கருதவில்லை.

*(எல்லாத் திருத்தங்களும் நிராகரிக்கப்பட்டன; விதி 63 அரசியல் சாசனத்தில் சேர்க்கப்பட்டது.)*

## விதி 64

[1]**திரு. ராஜ்பகதூர்** (மத்திய ஐக்கிய மாகாணம்): பேராசிரியர் கே.டி.ஷா முன்மொழிந்துள்ள திருத்தத்தை எதிர்க்கிறேன். அவ்வப்போது அவர் கொண்டுவரும் திருத்தங்களைப் பார்த்தால் அவர்

1. அ.நி.ச.விவாதங்கள், தொகுதி VII, 1949 ஜனவரி 7, ப. 1352.

ஏதோ ஒரு திட்டஅடிப்படையில் செயல்படுகிறார் என்று நான் நினைக்க வேண்டிய நிலைக்கு தள்ளப்பட்டுள்ளேன். நாடாளுமன்ற முறை ஜனநாயகத்திற்குப் பதிலாக குடியரசுத் தலைவர் ஆட்சி முறை அரசியல் சாசனத்தை அவர் விரும்புகிறார் என்று தோன்று கிறது. ஆனால் அவர் அறிவாழமும், அனுபவமிக்கவராகவும் இருந் தாலும்கூட, இந்த விஷயத்தில் கூட அவர் முரணற்ற நிலையை மேற்கொள்ளவில்லை என்பதையே காண்கிறேன். ஒன்றியத்தின் நிர்வாக அதிகாரம் முழுமையும் குடியரசு தலைவரிடம் அளிக்கும் விதி 42 ஐ நாம் விவரித்தபோது, அவரே இரு திருத்தங்களை முன் வைத்தார்; அந்தத் திருத்தங்கள் 1040 ம் 1045ம் ஆகும்; அவரது ஒரு திருத்தம் பின்வருமாறு கூறுகிறது:

> ''ஒன்றியத்தின் இறையாண்மை அதிகாரமும் மேலாண்மை உரிமையும் குடியரசுத் தலைவருக்கு வழங்கப்பட வேண்டும்; அரசியல் சாசனத்தின் படியும், அவ்வப்போது இயற்றப்பட்டு அமுலில் இருக்கும் சட்டங்கள் படியும் அவர் அவற்றை நடைமுறைப்படுத்த வேண்டும்.''

இதன் பொருள் என்னவெனில், எல்லா நிர்வாக நடவடிக்கை களும் குடியரசுத் தலைவரின் பெயரால் எடுக்கப்பட வேண்டும்; விவாதத்திலிருக்கும், விதி 64ன் உள்ளடக்கமும் பொருளும் அதுதான். அவ்வாறிருக்கும்போது பேராசிரியர் கே.டி.ஷா 42 ஆவது விதிக்குத் திருத்தம் கொண்டு வருவதற்கான காரணம் என்ன என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஒன்றியத்தின் எல்லா நிர்வாக அதிகாரமும் குடியரசுத் தலைவரிடம் உள்ளது; அரசாங் கத்தின் எல்லா உத்திரவுகளும் ஆவணங்களும் குடியரசுத் தலைவர் பெயரால் பிறப்பிக்கப்படுகின்றன. குடியரசுத் தலைவர் பெயரால் உத்திரவுகள் வெளியிடுவது என்பது எந்த ஜனநாயகக் கோட்பாடு களுக்கும் முரணானதோ ஒவ்வாததோ இல்லை. எனவே பேராசிரியர் கே.டி.ஷா கொண்டு வந்துள்ள திருத்தத்தை ஏற்றுக்கொள்வதற்கு காரணம் எதுவும் இல்லை என்று பணிவுடன் கூறுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, இதுவிஷயத்தில் எந்தப் பதிலும் தேவை என்று நான் கருதவில்லை.

(இரண்டு திருத்தங்களும் நிராகரிக்கப்பட்டன; எதுவும் ஏற்றுக்கொள்ளப் படவில்லை. விதி 64 நிறைவேற்றப்பட்டு அரசியல் சாசனத்தில் சேர்க்கப் பட்டது.)

2

## விதி 65

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** அவையின் முன் ஒரே ஒரு திருத்தம் உள்ளது. இனி துணைவிதியை விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளலாம். டாக்டர் அம்பேத்கர், ஏதாவது நீங்கள் கூற விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இல்லை. ஐயா, நான் திரு.காமத்தின் திருத்தத்தை ஏற்றுக்கொள்ளவில்லை.

திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

விதி 65 அரசியல் சாசனத்தில் சேர்க்கப்பட்டது.

★ ★ ★

வாக்காளர் பட்டியல் தயாரிப்பது பற்றிய தீர்மானம்:

[2]**திரு. துணைத் தலைவர்:** தாங்கள் பதிலளிப்பதற்கு முன்பு ஏற்றுக்கொண்ட வடிவில் தீர்மானத்தை தாங்கள் படிக்கும்படி நான் ஆலோசனை கூறலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** சரி, நான் ஏற்றுக் கொள்ளப் போகிற மாற்றங்களைச் சுட்டிக் காட்டப் போகிறேன்.

**திரு. தேசபந்து குப்தா:** ஐயா, டாக்டர் அம்பேத்கர் பதில் அளிக்கத் துவங்குமுன் நான் எழுப்பிய ஒழுங்குப் பிரச்சினை மீது தங்கள் முடிவு என்ன என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா? நான் எழுப்பிய ஒழுங்குப் பிரச்சினை என்னவெனில், 'ஏற்கனவே' என்ற சொல் நீக்கப்படாவிடில் இந்தத் தீர்மானம் பயனற்றதாகி விடும்; விதி 149...

**திரு. துணைத் தலைவர்:** 'ஏற்கனவே' என்ற சொல் ஏற்கனவே விட்டுவிடப்பட்டது என்று கருதுகிறேன்.

---

1. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி VII, 1949 ஜனவரி 7, ப. 1352.
2. அதே நூல், பக். 1382-86.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. துணைத் தலைவர் அவர்களே, இந்தத் தீர்மானத்தை முன்மொழிந்தவர் சார்பாக - முன்மொழிந்தவர் திரு. துணைத்தலைவர் - தங்கள் அனுமதி யுடன் விவாதத்திற்கு பதிலளிக்கப் போகிறேன்.

விரிவான திருத்தங்களை பரிசீலிக்கும் முன், முன்மொழிந்த வரின் இந்தத் தீர்மானத்திற்கு சில திருத்தங்களை முன்வைக்க விரும்பு கிறேன்.

நான் முன்வைக்கும் முதல் திருத்தம் பத்தி 2லிருந்து 'ஏற் கனவே' என்ற பதத்தை நீக்கிவிடுகிறது.

எனது இரண்டாவது திருத்தம் உபவிதி (1) லிருந்து ஷரத்து (அ) ஐ நீக்குவது: மேலும் எழுத்து 'ஆ' ஐயும் அடைப்புக் குறிகளை யும் இரண்டாவது உபவிதியிலிருந்து நீக்குவது; இதனால் உபவிதி (1)ஐ பின்வருமாறு அமைந்திருக்கும்.

> "பித்துப்பிடித்த மனநிலையில் ஒருவர் இருந்தால், அவர் அவ்வாறு பித்துப் பிடித்தவர்தான் என்று சட்டப்படி உரிமைபெற்ற அதிகாரி அறிவித்திருந் தால், அத்தகைய நபர் எவரும் எந்தத் தொகுதியின் வாக்காளர் பட்டியலிலும் இடம்பெறலாகாது."

அடுத்து, பத்தி (4)ல் கீழ்க்கண்ட திருத்தங்களைக் கொண்டு வர எண்ணுகிறேன். 'சம்பந்தப்பட்ட சட்டப் பேரவையின் சட்டத் திற்கு உட்பட்டு' என்று அந்தப் பத்தியில் கண்டுள்ள சொற்களுக்கு எனது திருத்தம்.

'மேற்சொன்ன பத்தி (3) ல் உள்ளது எதுவானாலும் என்ப தாகும். அந்தப் பத்தியின் வரி 5ல், 'ஒரு தொகுதி' என்பதற்குப் பதில் ஒரு வட்டாரம்' என்ற சொற்கள் இடம்பெற வேண்டும்.'

இவை தாம் என் திருத்தங்கள். எனது திருத்தங்களைச் சுருக்க மாக விளக்கப் போகிறேன். 'ஏற்கனவே' என்ற சொல்லை எடுத்து விட வேண்டுமென்ற என்ற எனது திருத்தம் திரு. தேசபந்துகுப்தா எழுப்பிய ஒழுங்குப் பிரச்சினைக்குப் பதிலளிக்கிறது.

★ ★ ★

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, நான் ஏற்கனவே கூறியது போல், ''ஏற்கனவே'' என்ற சொல் தேசபந்துதாஸ் குறிப்பிட்ட சிக்கல்களை எழுப்புகிறது என்பது உண்மை. ''ஏற்கனவே'' என்ற சொல்லை நீக்குவதன் மூலம் அவரது ஆட்சேபணை தீர்க்கப் படும் என்று நம்புகிறேன்.*

*துணைவிதி (1) ஐ நீக்க வேண்டும் என்பதைப் பொறுத்த வரை, அது தேவையற்றது என்று தோன்றுகிறது; ஏனென்றால் துணைவிதியின் மூலக் கருத்து பத்தி (3) லும் (4)லும் உட்படுத்தப்பட் டுள்ளது.*

*''சம்பந்தப்பட்ட சட்டப்பேரவையின் சட்டத்திற்குட்பட்டு'' என்ற சொற்களுக்குப் பதிலாக ''மேலே உள்ள பத்தி (3)ல் உள்ளது எதுவாயினும்'' எனும் சொற்களைப் பயன்படுத்த வேண்டும் என்ற எனது அடுத்தத் திருத்தத்தைப் பொறுத்தவரை முதலில் உபயோ கித்த சொற்கள் உண்மையில் அவசியமற்றவை, இத்தகைய துணை விதிக்குப் பொருத்தமற்றவை. உபவிதி(4) உண்மையில் உபவிதி (3)க்கு ஒரு விதிவிலக்கு. இந்த விஷயம் எனது திருத்தத்தால் தெளிவாகி விட்டது.*

*''தொகுதி'' என்பதற்குப் பதில் ''வட்டாரம்'' என்று மாற்றீடு செய்திருக்கிறேன்; வாக்காளர் பட்டியல் தயாரிக்கப்படும்போது ''தொகுதிகள்'' எதுவும் இல்லை என்ற ஆட்சேபனைக்கு தீர்வு காண்பதற்காகவே இவ்வாறு செய்திருக்கிறேன். ஒருவர் குறிப்பிட்டு கூறக்கூடியது ஒரு வட்டாரம்; ஒரு தொகுதியல்ல. ஏனென்றால் அப்பொழுது தொகுதிகள் இருக்க முடியாது.*

*''அல்லது அறிவிக்கிறார்'' என்ற சொற்களைச் சேர்க்க வேண்டும் என்பது எனது திருத்தம். ஏனெனில் கல்வி அறிவில் லாதவர் பலர் உள்ளனர்; அவர்கள் ஒரு மனுவில் கையொப்பமிட்டு குறிப்பிட்ட அதிகாரியிடம் அளிக்கும் நிலையில் இல்லாமலிருக் கலாம்; அத்தகைய சந்தர்ப்பத்தில் ''அல்லது அறிவிக்கிறார்'' சொற்களைச் சேர்ப்பதால் மாவட்ட மாஜிஸ்ட்ரேட் முன்னாலோ அல்லது வாக்காளர் பட்டியல் தயாரிக்கும் அதிகாரியின் முன்போ வாய்மூலம் அறிவிப்பதை இது அனுமதிக்கிறது. இவ்வாறு இந்த ஆட்சேபணைக்கும் நன்கு தீர்வு காணப்படுகிறது.*

இப்பொழுது, இந்தத் தீர்மானத்திற்குக் கொண்டுவரப்பட்ட மற்ற திருத்தங்களைப் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்கிறேன்.

**திரு.எல்.கிருஷ்ணசாமி பாரதி:** முன்மொழிந்தவருக்கு ஒரு திருத்தத்தைத் தெரிவிக்கட்டுமா? பத்தி (4) ல் ''தொகுதி'' ஐ திருத்துவதற்கான அவரது காரணம்.

**திரு. துணைத் தலைவர்:** தாங்கள் இதை அவையிடம் சொல்ல முடியாது. டாக்டர் அம்பேத்கரிடம் சொல்லலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என்னைப் பொறுத்தவரையில் தேவைப்படும் மாற்றங்களைச் செய்யத் தயாராக இருக்கிறேன். நான் ஏற்கனவே கூறியபடி, மற்றத் திருத்தங்கள் மீது கவனம் செலுத்தப் போகிறேன். எனது நண்பர் திரு. தியாகியின் திருத்தத்தை எடுத்துக் கொள்கிறேன். அவரை நான் சரியாகப் புரிந்து கொண்டேன் என்றால் தீர்மானத்தின் பொதுவான வாசகம் பற்றி அவருக்கு ஆட்சேபனை எதுவும் இல்லை என்று நினைக்கிறேன். அவர் விரும்புவது, விவரங்கள் நீக்கப்படவேண்டும் என்பதுதான். எனது நண்பர் திரு.தியாகி எடுத்துள்ள நிலை, தீர்மானத்தின் குறிக்கோள் அல்லது நோக்கம் என்ன என்பதை எடுத்துக்காட்டுகிறது என எனக்குத் தோன்றுகிறது. தேர்தல்களைக் கூடுமானவரை அநேகமாக 1950ல் நடத்தலாம் என்பதே இந்த அவையின் விருப்பம் என்று அறிவிப்பது மட்டுமே இந்தத் தீர்மானத்தின் நோக்கம். ஆனால், எல்லாத் தேர்தல்களுக்கும் அடிப்படையான வாக்காளர் பட்டியல்களைத் தயாரிக்கும் அதிகாரிகளுக்கு ஆக்கப்பூர்வமான வழிகாட்டு ஆணைகளை வழங்குவதே இந்த தீர்மானத்தின் நடைமுறைக் குறிக்கோளாகும். வாக்காளர் பட்டியல்கள் தயாரிக்கும் விஷயத்தில் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு வழிகாட்டு ஆணைகளை வழங்காமல் 1950ம் ஆண்டில் தேர்தல்கள் நடக்கவேண்டுமென்று அரசியல் நிர்ணயசபை விரும்புகிறது என்ற பிரகடனத்தை மட்டுமே வெளியிடுவது பயனற்றது, குறிக்கோளற்றது. ஏனெனில், தேர்தல் தேதிக்கு போதுமான அளவு முன்பே உரிய காலத்தில் வாக்காளர் பட்டியல்கள் தயாரிக்கப்படாவிடில், எந்தத் தேர்தலும் நடைபெறவே செய்யாது. தீர்மானத்தின் இரண்டாவது பகுதி பல்வேறு அதிகாரிகளுக்கும் வழிகாட்டு ஆணைகளைக் கொண்டுள்ளது; இந்த வழிகாட்டு ஆணைகள் தீர்மானத்தில் சேர்க்கப்படாவிட்டால், அது ஏதோ சம்பிரதாயப் பூர்வமான பிரகடனமாக மட்டுமே இருக்கும்; அதனால் உருப்படியான

பலன் ஏதும் கிட்டாது. இலக்கை அடைவதற்கான முறைகளையும் சாதனங்களையும் எடுத்துக்காட்டாமல் இலக்கை மட்டும் குறிப் பிடுவதாகவே இது இருக்கும். உண்மையைச் சொல்ல வேண்டு மெனில், அப்படியே வைத்திருக்க வேண்டும் என்று அவர் கூறும் தீர்மானத்தின் பகுதியை விட, அவர் நீக்க வேண்டுமென்று சொல்லும் பகுதிதான் அதிக முக்கியத்துவம் வாய்ந்தது என்பதை எனது நண்பர் திரு.தியாகி புரிந்துகொள்வார் என்று நம்புகிறேன். இப்பொழுது எனது நண்பர் திரு. ஹனுமந்தய்யாவின் திருத்தத்திற்கு வருகிறேன்.

**திரு. மகாவீர் தியாகி:** ''ஏற்கனவே'' என்ற சொல் பற்றி தங்கள் கருத்து என்ன?

**திரு. டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதை நீக்கி விடுவதாக ஏற்கனவே கூறியுள்ளேன். திரு.ஹனுமந்தய்யாவின் திருத்தத்தை எடுத்துக் கொண்டால், ''1950 ம் ஆண்டில்'' என்ற வார்த்தைகளை நீக்க அவர் விரும்புகிறார். அவரது வாதத்தின்பின்னே நல்ல பொருள் பொதிந்து உள்ளது; அவர் கருத்துப்படி இந்தத் தீர்மானத்தின் மூலம் 1950 ஐ (தேர்தல்) இலக்காக இந்த அரசியல் நிர்ணயசபை நிர்ண யித்து பிரகடனப்படுத்தினால், ஏதாவது காரணத்தால், வாக்காளர் பட்டியல்கள் தயாரிப்புகள் சம்பந்தமாகவோ அல்லது வேறு சூழ் நிலைகளாலோ 1950ல் தேர்தல்களை நடத்துவது சாத்தியமற்றதாகி விட்டால், அது இந்த சபையை ஒருவிதமான இக்கட்டான நிலைக்கு உள்ளாக்கிவிடும். உண்மையில் இந்தவிஷயம் அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கும்போது, அதை ஓர் அற்பமான விஷயமாக எடுத்துக்கொண்டதாக அவை மீது குற்றம் சாட்டப்படும். ஆனால், அதேசமயம், தீர்மானத்தை முன்மொழிந்தவர் கூறியதுபோல், இந்த அரசியல் சாசனத்தை நிறைவேற்றுவதில் நாம்போதிய வேகத்தைக் காட்டவில்லை, நமது செயல்முறை பெரிதும் மெத்தனமானதாக வும் அதிகம் காலம் கடத்துவதாகவும் இருக்கிறது, இதற்குக் காரணம் விரைவில் தேர்தல் நடைபெறவேண்டுமென்ற அக்கறை நம்மிடம் இல்லை என்ற எண்ணம் நாட்டில் ஓரளவு நிலவுகிறது. நாட்டில் நிலவும் இந்த மாதிரியான எண்ணத்தை நீக்குவதற்காக இலக்குத் தேதியை நிர்ணயிப்பது அவசியமாகிறது; இந்தக் கண்ணோட்டத் திலிருந்து பார்க்கும்போது ''1950ம் ஆண்டில் என்ற சொற்களை அப்படியே வைத்துக் கொள்வது இன்றியமை யாததாகிறது. நிச்சய மாக, தேதியை ஒத்திவைப்பதற்கான காரணங்கள் நியாயமாக இருந் தால் தேர்தல்கள் தேதியை ஒத்திவைப்பது இந்தசபைக்கு அவசிய

மாகும்; இதைப்பற்றி நான் உறுதியாக இருக்கிறேன்; காரணங்கள் ஆதாரபூர்வமானவை, வெறும் சாக்குப்போக்குகளல்ல என்று நாட்டின் முன் இந்த சபை வைக்க முடியும் நிலையில் இருந்தால், மாற்றத்தையும் தேதி ஒத்திவைக்கப்படுவதையும் நாடு புரிந்து கொள்ளும் என்பதில் ஐயமில்லை.

எனது நண்பர் திரு. சாக்சேனா, 1949 ஜனவரி 1க்கு பதில் 1950 ஜனவரி 1 என்று தேதி மாற்றீடு செய்யப்பட வேண்டுமென்று விரும்புகிறார். 1948 மார்ச் 31க்குபதில் 1949 மார்ச்31 என்று தேதி மாற்றீடு செய்யப்படவேண்டுமென்று விரும்புகிறார் திரு.பார்கவா. ஏற்கனவே செய்துள்ளவை பற்றி கணக்கில் எடுத்துக் கொண்டால், இந்தத் திருத்தங்கள் எதையும் ஏற்றுக் கொள்வது சாத்தியமல்ல. சாக்சேனாவை நான் சரியாகப் புரிந்து கொண்டேனெனில் வாக்காளர் பட்டியல் தயாராகும் தேதிக்கும் தேர்தல் நடைபெறப் போகும் தேதிக்கும் இடையே அதிகமான இடைவெளி இருக்கக்கூடாது என்பது அவரது திருத்தத்தின் நோக்கமாக இருக்கிறது. வேறுவார்த்தைகளில் கூற வேண்டுமெனில், வாக்காளர் பட்டியல்கள் நாட்பட்டவையாகவும், காலம் கடந்தவையாகவும் ஆகிவிடக்கூடாது. தேர்தல் 1950ல் நடைபெறபோகிறதெனில், ஒரு வாக்காளரின் தகுதி அவர் 1949 ஜனவரி 1ல் வயது வந்தவராக இருக்க வேண்டும் என்ற அடிப்படையில் வாக்காளர் பட்டியல்கள் தயாரிக்கப்பட்டால், எவ் வகையில் பார்த்தாலும் வாக்காளர் பட்டியல்கள் நாட்பட்டவையாக கருதப்படமாட்டா என்று எனக்குத் தோன்றுகிறது. எல்லா வாக்காளர் பட்டியல்களும் தேர்தல் தேதியிலிருந்து பொதுவாக ஒருவருடம் பிந்தியவையாக இருக்கும் என்ற உண்மையை எனது நண்பர் திரு. சாக்சேனா அறிந்திருப்பார்.

**பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா:** அந்த வாக்காளர் பட்டியல்கள் இரண்டு ஆண்டுகள் பழையவை ஆகிவிடும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஒருவர் 21 வயது ஆகியிருக்கவேண்டும் என்பதுதான் அவர் வாக்காளராவதற்கான ஒரே தகுதி என்ற அடிப்படையில் அதாவது 1949 ஜனவரி 1ல் 21 வயது உள்ளவர்கள் என்ற அடிப்படையில் வாக்காளர் பட்டியலில் வாக்காளர்களாக இடம்பெற உரிமை பெற்றவர்களாயின், தேர்தல் 1950ல் நடைபெற்றால் - தேதியை குறிப்பாகச் சொல்வது சாத்தியமல்ல - வாக்காளர் பட்டியல்கள் பழையனவாக ஆகிவிடும் என்று சொல்ல முடியாது என்று எண்ணுகிறேன்.

இப்பொழுது பண்டிட் பார்கவாவின் திருத்தத்திற்கு வருகிறேன். 1949 மார்ச் 31 என்ற தேதி மாற்றீடு செய்யப்பட வேண்டுமென அவர் விரும்புகிறார். இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்வது சாத்தியமல்ல; ஏனெனில், 1950ம் ஆண்டில் தேர்தல்கள் நடைபெறும் என்ற எதிர்பார்ப்பில், வயதுவந்தோர் வாக்குரிமை அடிப்படையில் வாக்காளர் பட்டியல்களின் தயாரிப்பை துவங்கும்படி பல்வேறு மாகாண அரசாங்கங்களுக்கும் ஏற்கனவே 1948 மார்ச் 1 ல் செயல்முறைக் கட்டளைகள் அனுப்பப்பட்டன. பண்டிட் பார்கவாவின் திருத்தத்தை நாம் ஏற்றுக்கொள்வோமேயானால், அந்த அடிப்படையில் மாகாண அரசாங்கங்களால் ஏற்கனவே மேற்கொள்ளப்பட்ட பணிகளை நாம் வீணாக்க வேண்டிவரும் என்று எனக்குத் தோன்றுகிறது. எனினும் ஏற்கனவே மேற்கொள்ளப்பட்ட பணி எதுவும் வீணாகிவிடும் என்று நான் கருதவில்லை; காரணம், 1948 ஜனவரி 1ல் வயது வந்தவர்களாக உள்ளவர்கள் எல்லோரும் ஏற்கனவே தயாரிக்கப்பட்ட பட்டியல்களில் சேர்க்கப்பட்டிருப்பர்.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** 1949 ஜனவரி 1 என்ற தேதியை 1948 மார்ச் 31 ஆக துணைப் பத்தி (2)ல் மாற்ற வேண்டியதும் அவசியமில்லையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இல்லை. நான் அவ்வாறு நினைக்கவில்லை.

அடுத்து, இப்பொழுது எனது நண்பர் திரு. சௌத்திரியின் திருத்தத்தை எடுத்துக் கொள்கிறேன். அவர் கேட்பது நகைப்புக்கிடமானதாக இல்லாவிட்டாலும் மிகவும் சாத்தியமல்லாததாக எனக்குத் தோன்றுகிறது. மனநிலை சரியில்லாதவர்கள் வாக்காளர் பட்டியலில் சேர்க்கப்படக்கூடாது என்பதை நாம் எல்லோரும் ஏற்றுக்கொள்கிறோம். ஆனால் இங்கு ஒரு கேள்வி எழுகிறது; அதாவது ஒருவர் சீர்கேடான மனநிலையில் இருக்கிறாரா, இல்லையா என்பதை நிர்ணயிப்பது யார்? ஒரு நபர் சீர்கேடான மனநிலையில் இருக்கிறார் என்று எவரேனும் பாரபட்சமற்ற நீதிதுறை அதிகாரியால் தீர்ப்பளிக்கப்பட்டால் மட்டுமே அவர் வாக்காளர் பட்டியலிலிருந்து நீக்கப்படலாம். அப்படி இல்லையெனில், ஒரு குறிப்பிட்ட நபர் சீர்கேடான மனநிலையில் இருப்பதாக ஒரு கிராமப் பட்வாரி நினைத்தால் அவரை வாக்காளர் பட்டியலில் சேர்க்கக்கூடாது என்று கூறும் அதிகாரத்தை அந்தக் கிராம பட்வாரிக்கு அளிப்பதில் போய்

முடியும். இது உண்மையில் ஒரு கப்பல் அறை ஊழியரை கப்பலின் கேப்டன் நிலைக்கு உயர்த்துவதாகும்; எனவே, இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்வது சாத்தியமல்ல என்று நினைக்கிறேன்.

இதற்கு முன்னர் ஏற்கப்பட்ட ஒரு ஷரத்து சம்பந்தமான கேள்வியை எழுப்பினார் எனது நண்பர் திரு. காமத். அதில் சீர்கேடான மனநிலையோடு, வேறு தகுதியின்மைகளும், குறிப்பாக குற்றவாளிகள் பற்றியும் குறிப்பிடப் பட்டிருந்தது.

**திரு.தேசபந்து குப்தா:** முதலாவதாக, மனநோயாளிகள் காப்பகத்தில் உள்ளவர்கள் எல்லோரும் வாக்காளர் பட்டியலில் சேர்க்கப்படுவார்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மற்ற மாகாணங்களில் நிலை என்ன என்று எனக்குத் தெரியாது; ஆனால், பம்பாயைப் பொறுத்தவரை, ஒருவர் சீர்கேடான மனநிலையில் உள்ளவர் என்று பிரதான மாகாண நடுவர் அறிவிக்கப்படாவிடில், அவரை எந்த மனநோயாளிகள் காப்பகமும் சேர்த்துக் கொள்ளாது.

**திரு. துணைத் தலைவர்:** ஆம். வங்காளத்திலும் நிலைமை அதுதான்:

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** வங்காளத்திலும் அதேநிலைமைதான் என்று தோன்றுகிறது. அங்கு மனநோயாளிகள் பற்றிய சட்டம் உள்ளது.

இப்பொழுது, குற்றம் பற்றிய பிரச்சினையைப் பொறுத்தவரை, நான் சொல்லக்கூடியதெல்லாம் என்னவெனில், அந்தக் குறிப்பிட்ட விதியில் 'குற்றம்' என்ற சொல்லை வரைவுக்குழு உபயோகிக்கும்போது, இந்திய அரசாங்கச் சட்டத்தின் ஆறாவது அட்டவணையில் உள்ள ஷரத்தை அப்படியே மீண்டும் கொண்டு வந்துள்ளது என்பதுதான். அந்த விதியில் கூறப்பட்டுள்ளதை விட அதிகமாக எதுவும் வரைவுக் குழுவினரின் மனத்தில் இருக்கவில்லை. அந்த விதியின்படி, குற்றம் இழைப்பது மட்டுமே, ஒரு தகுதியின்மையாகிவிடாது. ஒரு நபர் தண்டிக்கப்பட்டு சிறையில் அடைக்கப் பட்டால்தான் அது தகுதியின்மையாகும். அவர் சிறைப்படுத்தப் பட்டிருக்கும் காலத்தில்தான் வாக்களிக்கும் உரிமையை இழக்கிறார்.

திரு.காமத் குறிப்பிட்ட விதியில் கூறப்பட்ட அதிகப்படியான தகுதியின்மைகளைப் பற்றி நாம் பரிசீலிக்கும்போது இந்த விஷயத்தையும் நாம் கவனத்தில் எடுத்துக்கொள்ளலாம்.

**திரு.எச்.வி.காமத்:** குற்றம், லஞ்சஊழல், சட்ட விரோத செயல்கள் முதலியவற்றிற்காக கடந்த காலத்தில் தண்டனைக்கு உட்பட்டிருக்கக்கூடிய ஒருவரை இந்த விதி தகுதியற்றவராக்காது அல்லது வாக்காளராகப் பதிவு செய்து கொள்வதைத் தடுக்காது அல்லவா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம். இவையெல்லாம் நாடாளுமன்றத்தால் நிர்ணயிக்கப்படும்.

★ ★ ★

**திரு. துணைத் தலைவர்:** விடுமுறை விடும்போது பள்ளிப் பையன்கள் பெரும்பாலும் விவேகமாக நடந்துகொள்வதில்லை என்பதை நான் அறிவேன்.

அடுத்து திருத்தம் பண்டிட் தாகூர்தாஸ் பார்கவாவுடையது. அந்தத் திருத்தம் இதுதான்:

> ''வாக்குமூலம் அளிக்கிறார்'' என்ற சொற்களுக்குப் பதிலாக ''விருப்பத்தை வெளியிடுகிறார்'' என்று மாற்றீடு செய்யப்படுகிறது.

ஆனால் இது டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக்கொண்டதில் அடங்கும்.

அவரது மற்றத் திருத்தம் பத்தி 3ல் உள்ள ''1948 மார்ச் 31'' எனும் வார்த்தைகளுக்குப் பதில் ''1949 மார்ச் 31'' என்ற வார்த்தைகளை மாற்றீடு செய்கிறது.''

திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

**திரு. துணைத்தலைவர்:** அடுத்து நாம் திரு. நாகப்பாவின் திருத்தத்திற்கு வருகிறோம். ஆனால் டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்திலேயே இது இடம்பெற்றிருக்கிறது; எனவே அது வாக்கெடுப்புக்கு விடப்படமாட்டாது.

★ ★ ★

**திரு.துணைத்தலைவர்:** இரண்டாவது பகுதி டாக்டர் அம்பேத்கரால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது; எனவே வாக்கெடுப்பிற்கு விடவேண்டியதில்லை. அடுத்து மூன்றாவது பகுதிக்கு வருகிறோம். ஆனால் இதுவும் டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்தில் அடங்குகிறது.

ஆனால் இது விஷயமாக அவரிடம் மேற்கொண்டும் ஒரு திருத்தம் இருக்கிறது. அந்தத் திருத்தம் இதுதான்:

''உப பத்தி(4) ல் கடைசி வரியில் 'நிரந்தரமாக' என்ற சொல் நீக்கப்படுகிறது.''

திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

★ ★ ★

**திரு. துணைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கரின் திருத்தங்களால் திருத்தப்பட்ட தீர்மானத்தை வாக்கெடுப்பிற்கு விடுகிறேன். அதை நான் படிக்க வேண்டுமென்று அவை விரும்புகிறதா?

**மதிப்பிற்குரிய உறுப்பினர்கள்:** இல்லை .இல்லை.

**திரு. துணைத் தலைவர்:** விஷயம் இதுதான்:

''திருத்தப்பட்ட தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.''

* புதிய அரசியல் சாசனத்தின்கீழ் சட்டமன்றங்களுக்கான தேர்தல் 1950ம் ஆண்டில் எவ்வளவுமுன்பு நடத்தபடமுடியுமோ அவ்வளவு முன்பு நடத்தப்பட வாக்காளர் பட்டியல் தயாரிக்கவும் மற்றும் எல்லா நடவடிக்கைகளை மேற்கொள்ளவும் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு உடனடியாகச் செயல்முறைக் கட்டளைகளை வெளியிடுவது எனத் தீர்மானிக்கிறது.

இந்த சபை ஏற்றுக்கொண்ட புதிய அரசியல் சாசனத்தின் ஷரத்துக்கள் அடிப்படையிலும் இங்கு குறிப்பிடப்பட்டுள்ள கோட்பாடுகளுக்கு ஏற்பவும் மாகாண வாக்காளர்பட்டியல்கள் தயாரிக்கப்பட வேண்டுமென்று மேலும் தீர்மானிக்கிறது. அவை:

(1) ஒரு நபர் சீர்கேடான மனநிலையில் இருந்து, ஒரு தகுந்த நீதிமன்றத்தால் அவ்வாறே அறிவிக்கப்பட்டிருந்தால் அத்தகைய நபர் வாக்காளர் பட்டியலில் சேர்க்கப்படமாட்டார்.

(2) வாக்காளர்களின் வயதை நிர்ணயிப்பதற்கு 1949 ஜனவரி 1 கடைசி தேதியாக இருக்கும்.

(3) 1948 மார்ச் 31 ம் தேதி முடிவடைகிற ஆண்டில் 180 நாட்களுக்கு குறையாமல் ஒரு நபர் ஒரு வட்டாரத்தில் வசித்திருந்தாலொழிய அவர் வாக்காளர்

பட்டியலில் இடம்பெற தகுதிபெறமட்டார். இந்தப் பத்தியின் நோக்கங்களுக்காக, ஒரு நபர். சாதாரணமாக ஒரு வட்டாரத்தில் வசித்துவந்தால் அல்லது அங்கு ஒரு நிரந்தர குடியிருப்பு அவருக்கு உள்ளது என்றால் அவர் அந்த வட்டாரத்தின் குடியிருப்பாளராகக்கருதப்படுவார்.

4. மேற்கண்ட பத்தி 3 ல் உள்ளது எதுவாயினும், ஒரு நபர் தமது முந்தைய குடியிருப்பு இடத்திலிருந்து கலவரத்தின் காரணமாகவோ கலவரம் ஏற்படும். என்ற பயத்தினாலோ வேறுமாகாணத்தில் அல்லது மாநிலத்தில் குடி பெயர்ந்திருந்தால், அந்த வட்டாரத்தில் நிரந்தரமாக வசிப்பதற்கான தனது நோக்கத்தை அவர் பதிவுசெய்தால் அல்லது அறிவித்தால், வாக்காளர் பட்டியலில் சேர்க்கப்படுவதற்கு அவர் உரிமை பெறுகிறார்.

(திருத்தப்பட்ட தீர்மானம் ஏற்கப்பட்டது.)

(தீர்மானம், திருத்தப்பட்டவடிவில் நிறைவேற்றப்பட்டது. 5 திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன.)

★ ★ ★

## விதி 149 (தொடர்ச்சி)

[1]**திரு. துணைத் தலைவர்:** இப்பொழுது நாம் விதி 149 ஐ எடுத்துக் கொள்கிறோம். இந்த விதி பற்றி ஏற்கனவே போதுமான விவாதம் நடந்துள்ளது. இப்பொழுது டாக்டர் அம்பேத்கர் பதில் அளிப்பார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** திரு.துணைத் தலைவர் அவர்களே, விதி 149 மீதான விவாதத்திற்குப் பதிலளிப்பதில், எனது சொந்தத் திருத்தம் எண் 2255 ஐ பொறுத்தவரை, என் நிலையை தெளிவாக்க விரும்புகிறேன். எனது இந்தத் திருத்தத்தை வாபஸ்பெற அவையின் அனுமதி வேண்டும்; அதற்கு பதிலாக திரு.நஸிருத்தீன் அகமதால் பட்டியல்-IIல் எண் 48 ஆல் திருத்தப்பட்ட திருத்தம் எண் 2249 ஐ ஏற்றுக்கொள்கிறேன்.

பட்டியல் IVல் உள்ள திரு. டி.டி. கிருஷ்ணமாகசாரியார் திருத்தங்களாக 62ஐயும் 63ஐயும் திரு.பார்கவாவால், திருத்தப்பட்ட திரு. டி..டி.கிருஷ்ணமாச்சாரியின் திருத்தம் 225ஐயும், திரு. சிபன்லால் சாக்சேனாவின் திருத்தம் எண் 67ஆல் மாறுபாடு செய்யப்பட்ட திருத்தம் எண். 2263 ஐயும் ஏற்றுக்கொள்கிறேன்.

1. அ.நி.ச.விவாதங்கள், தொகுதி VII, 1949 ஜனவரி 8, ப. 1387-89.

ஐயா, இப்போது இந்த விதியின் மீதான பொதுவான விவாதத்தைப் பொறுத்தவரை, பதிலளிக்க வேண்டிய விஷயங்கள் இரண்டு மட்டுமே உள்ளன என்று எனக்குத் தோன்றுகிறது. முதலாவது விஷயம், புதிய தேர்தல்களுக்காக ஏற்றுக் கொள்ளப்பட வேண்டிய மக்கள் தொகைக் கணக்கெடுப்புப் புள்ளிவிவரங்கள் சம்பந்தமானதாகும். சில மாகாணங்களில் மக்கள் தொகைக் கணக்கெடுப்பு துல்லியமாக இல்லை என்றும், பல்வேறு சமூகங்களின் பரஸ்பர விகிதாசாரங்களைப் பொறுத்தவரை அவை உண்மை நிலையை வெளிப்படுத்தவில்லை என்றும், பல்வேறு பேச்சாளர்கள் ஏராளமான வாதங்களை முன்வைத்து குற்றம் சாட்டினர். இந்த வாதங்களில் கணிசமான அளவு வலுவிருக்கிறது என்று நினைக்கிறேன்; மக்கட் தொகைக் கணக்கெடுப்பு ஆணையர்களின் அறிக்கைகளில் அந்த விமர்சனத்தை நியாயப்படுத்த போதுமான ஆதாரம் உள்ளது. இந்த விஷயம் பற்றி மக்கட் தொகைக் கணக்கெடுப்பு ஆணையர்களின் அறிக்கைகளைக் குறிப்பிட்டுப் பேச உத்தேசித்திருந்தேன். ஆனால், நேரம் இல்லாததால், அவற்றைப் பற்றிக் குறிப்பிடாமல் இருப்பது நல்லது. இந்த விஷயம் பற்றிப் பேசிய உறுப்பினர்களில் மிகப் பெரும்பான்மையோர் என்னைவிட அதிகமான விவரங்களை தெரிந் திருக்கிறார்கள். நான் ஒரு விஷயத்தை மட்டும் இங்கு குறிப்பிட விரும்புகிறேன். அதாவது அரசியல் சூழ்ச்சிகள் காரணமாக மக்கள் தொகைக் கணக்கெடுப்பில் நடைபெற்றுள்ள இந்தத் தில்லுமுல்லுகளால் எந்த மக்களாவது பெரிதும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்றால் அவர்கள் ஷெட்யூல்டு வகுப்பினரே ஆவர்(கரவொலி). உதாரணமாக, பஞ்சாபில் ஏனைய சமூகத்தினர் தங்களுடைய பலத்தை அதிகப்படுத்தி, சட்டமன்றத்தில் தங்களுக்கு பிரதிநிதித்துவத்தைப் பெருக்கிக் கொள்வதற்காக ஷெட்யூல்டு வகுப்பினரைப் பலி கிடாக்களாக்க முயற்சி செய்து வருகின்றனர். கிராமங்களில் மிகப் பெரும்பாலும் நிலமற்ற விவசாயிகளாக வாழ்ந்து கொண்டிருக்கிற, இங்கும் அங்குமாகச் சிதறிக் கிடக்கிற, பொருளாதார சுதந்திரம் எதுவும் இல்லாத, அதிகாரிகளிடமிருந்தோ, காவல்துறை அல்லது நீதித்துறையிடமிருந்தோ எந்தவிதமான ஆதரவும் பெறாத இந்த ஏழை மக்கள் சில சக்தி வாய்ந்த சமூகத்தினரால் ஒரு குறிப்பிட்ட சமூகத்தை சேர்ந்தவர்களாகத் தங்களை அறிவிக்கும்படி கட்டாயப்படுத்தப்படுகிறார்கள்; அல்லது தேர்தல்களுக்கு வாக்காளர்களாக பதிவு செய்து கொள்ளாமலிருக்க நிர்ப்பந்தப்படுத்தப்படுகிறார்கள். இதே விஷயம் பெருமளவில் வங்காளத்தில் நடந்ததை நான் அறிவேன். என்னால் புரிந்துகொள்ள முடியாத ஏதோ காரணத்தால் ஷெட்யூல்டு வகுப்பினரில் மிகப்

பெரும்பான்மையினர் தங்களை ஷெட்யூல்டு வகுப்பினர் என்று பதிவு செய்துகொள்ள மறுத்தனர். இந்த உணமையை மக்கட்தொகைக் கணக்கெடுப்பு ஆணையர்களே சுட்டிக்காட்டியுள்ளனர். எனவே, இது விஷயமாக பேசிய பல்வேறு உறுப்பினர்கள் அந்த மக்கட் தொகைக் கணக்கெடுப்பை ஏற்றுக்கொள்வது நியாயமாகாது என்று எடுத்துக் கூறியதை முற்றிலுமாக நான் உயர்வாக மதிக்கிறேன்.

**மதிப்பிற்குரிய உறுப்பினர்:** அசாம் பற்றி என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அசாமிலும் இது உண்மையாக இருக்கலாம். ஆனால் அங்குள்ள நிலைமை பற்றி எனக்கு அதிகம் தெரியாது. இந்த மக்கட் தொகைக் கணக்கெடுப்பு புள்ளி விவரங்களின் அடிப்படையில் தொகுதிகளை நிர்ணயிப்பதோ, பல்வேறு தொகுதிகளுக்கு இடையேயும் பெரும்பான்மை, சிறுபான்மை சமூகத்தினருக்கு இடையேயும் இடங்களை ஒதுக்குவதோ நியாயமாக இருக்காது என்ற கருத்தை நான் ஏற்கனவே கூறியபடி முற்றிலுமாக ஆதரிக்கிறேன். அடுத்த தேர்தல் நியாயமான முறையில் நடைபெற மாகாணங்கள் மற்றும், சமூகங்களின் மக்கட் தொகைக் கணக்கெடுப்பு சரியாக அமைந்திருப்பதற்கு ஏதாவது செய்தாக வேண்டும். இந்தக் கட்டத்தில் நான் செய்யக்கூடியதெல்லாம், இந்த விஷயத்திற்குப் பொறுப்பாக உள்ளவர்களிடம் இந்த சபையின் உணர்வுகளை தெரியப்படுத்துவேன் என்று வாக்குறுதி கொடுப்பதுதான்; இதில் கிஞ்சிற்றும் சந்தேகம் இல்லை.

ஐயா, இதில் அக்கறை கொண்டுள்ள உறுப்பினர்களுக்கு நான் இப்பொழுது அளிக்கும் வாக்குறுதி திருப்தியளிக்காவிடில், அவர்கள் ஒரு கட்டத்தில் விதி 149க்கு ஒரு திருத்தத்தை முன்மொழியலாம் - அதை இப்பொழுது செய்வது சாத்தியமல்ல; அதாவது அவர்கள் குறிப்பிட்டுள்ள குறைகளை நீக்கும் நோக்கத்தோடு குடியரசுத்தலைவர் அவசியம் என்று கருதினால் ஒரு இடைக்கால மக்கட்தொகைக் கணக்கெடுப்புக்கு ஏற்பாடு செய்ய அவரை அத் திருத்தம் அனுமதிக்கும். உண்மையில், இதுசம்பந்தமாக என்னிடம் ஒரு நகல் உள்ளது. பின்பு ஒரு நாள் அதைப் பரிசீலிக்கலாம். ''எந்த ஒரு மாநிலத்தையும் சேர்ந்த சட்டமன்றத்தின் பல வட்டாரத் தொகுதிகளின் ஆரம்ப காலப் பிரதிநிதித்துவம் குடியரசுத் தலைவரின் ஆணையின் மூலம் வேறுவகையில் நிர்ணயிப்பதற்கு அதுமேலும் வகை செய்கிறது.'' சபையில் சுட்டிக்காட்டப்பட்ட சிக்கலுக்கு பரிகாரம் காண இது போதுமானதாகும்.

**ஒரு மதிப்பிற்குரிய உறுப்பினர்:** இந்த நகலை ஏன் தாங்கள் இப்பொழுது முன்மொழியக்கூடாது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதற்கு இப்பொழுது நேரம்இல்லை. நான் இப்பொழுது அளிக்கும் வாக்குறுதியை நம்ப உறுப்பினர்கள் தயாராக இல்லையெனில் சரியான சந்தர்ப்பத்தில் இம்மாதிரியான தீர்மானத்தை முன்வைக்கலாம்.

எனது மதிப்பிற்குரிய நண்பர் பேராசிரியர் சாக்சேனா திருத்தம் எண் 64ல் எழுப்பிய விஷயத்தைப் பொறுத்தவரை, அதை முழு மனதுடன் ஆதரிக்கிறேன். அவர் கொண்டுவர முயல்கிற ஷரத்து முக்கியமான ஒன்றாகும். பிரதிநிதித்துவத்தில் சிறப்பு ஒதுக்கீடு பற்றி அது குறிப்பிடுகிறது. இந்த அரசியல் சாசனத்தில் எல்லாவிதமான சிறப்பு ஒதுக்கீடுகளையும் நாம் அகற்றிவிட்டோம். சிறுபான்மை யினருக்கு சிறப்பு ஒதுக்கீட்டை நாம் நீக்கிவிட்டோம். மத்திய சட்ட மன்றத்தில் பிராந்தியங்களுக்கு சிறப்பு ஒதுக்கீட்டை நீக்கி விட்டோம். பிரிட்டிஷ் இந்தியாவிற்கும் இந்திய சமஸ்தானங்களுக்குமிடையே சிறப்பு ஒதுக்கீட்டை நீக்கிவிட்டோம். எனவே, சட்டமன்றங்களில் பிரதிநிதித்துவத்திற்கு அதே கோட்பாட்டை கடைப்பிடிக்க வேண்டும் என்பது சரியே என்று நான் நினைக்கிறேன். ஆகவே, அந்தத் திருத் தத்தை ஏற்றுக்கொள்கிறேன்.

ஐயா, பரிசீலிப்பதற்கு தகுதிவாய்ந்த வேறு எந்த விஷயமோ, பதிலளிக்கவேண்டிய விஷயமோ இருப்பதாக நான் கருதவில்லை. எனவே திருத்தப்பட்ட விதி 149 ஐ ஏற்றுக்கொள்ளும்படி சபைக்குச் சிபாரிசு செய்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** இப்பொழுது திருத்தங்களை ஒவ் வொன்றாக வாக்கெடுப்பிற்கு விடப்போகிறேன்.

★ ★ ★

**திரு. துணைத்தலைவர்:** பட்டியல் IIன் திருத்தம் 48. அது வருமாறு:

''திருத்தங்களின் பட்டியலில உள்ள திருத்தம் எண் 2249க்குபதிலாக கீழ்க் கண்டது மாற்றீடு செய்யப்படுகிறது: 'விதி 149 ன் துணைவிதி (3)ல் கடைசி யான முந்திய மக்கள்தொகை கணக்கெடுப்பு என்ற வார்த்தைகளுக்குப் பதிலாக 'சம்பந்தப்பட்ட புள்ளிவிவரங்கள் வெளியிடப்பட்ட கடைசியான முந்திய மக்கள் தொகைக் கணக்கெடுப்பு என்னும் வார்த்தைகள் இடம் பெறுகின்றன.''

கீழ்க்கண்ட திருத்தங்கள் அவையால் ஏற்கப்பட்டன:

(1) 'திருத்தங்களின் பட்டியலில் உள்ள திருத்தங்கள் எண்கள் 2249, 2250 சம்பந்தமாக விதி 149 ன் துணைவிதி(3) ல் ''ஒவ்வொரு லட்சம்'' என்ற சொற்களுக்குப் பதிலாக 'ஒவ்வொரு எழுபத்தைந்து ஆயிரம்' என்ற சொற்கள் இடம்பெறுகின்றன.''

(2) 'திருத்தங்கள் பட்டியலில் உள்ள திருத்தம் 225 ஐ பொறுத்தவரை, ''அசாமின் சுயாட்சி மாவட்டங்கள்'' என்ற சொற்களுக்குப் பதிலாக, ''ஷில்லாங் கண்டோன்மென்டையும் நகரசபையையும் உள்ளடக்கிய தொகுதியும்'', என்ற சொற்கள் இடம்பெறுகின்றன.''

(3) 'திருத்தங்கள் பட்டியலிலும் திருத்த எண் 2256, 2257, 2258 சம்பந்தமாக, விதி 149ன் துணைவிதி (2)ன் ஷரத்தில் 'முந்நூறு' என்ற சொற்களுக்குப் பதிலாக ஷரத்தில் 'ஐந்நூறு' என்ற சொற்கள் இடம்பெறுகின்றன.''

(4) 'விதி 149 ன் துணைவிதி (3)க்குப் பின்னால் கீழ்க்கண்ட புதிய துணைவிதி சேர்க்கப்படுகிறது:

> '3 (அ) ஒரு மாநிலத்தின் ஒவ்வொரு வட்டாரத்தொகுதிக்கும் ஒதுக்கப்படும் உறுப்பினர்கள் எண்ணிக்கைக்கும் சம்பந்தப்பட்ட புள்ளிவிவரங்கள் வெளியிடப்பட்ட கடைசியான முந்திய மக்கட் தொகை கணக்கெடுப்பின்படி உறுதிசெய்யப்பட்ட அந்த தொகுதியின் மக்கள் தொகைக்கும் இடையே உள்ள விகிதாச்சாரம் நடைமுறைக்கு எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு மாநிலம் முழுவதும் ஒரேமாதிரியாக இருக்கும்.''

திருத்தம் நிறைவேற்றப்பட்டது

(திருத்தப்பட்ட விதி 1149 அரசியல் சாசனத்தில் சேர்க்கப் பட்டது.)

**(பின்பு சபை 1949 மே 16ம் தேதி வரை ஒத்திவைக்கப்பட்டது.)**

★ ★ ★

சு



த



தா



தே



ந



நா



ப



பி



பே



பி



போ



ம



மோ



மி



மே



மு



மௌ



ரா



ரோ



ல

# சிறப்புப் பெயரகராதி



3

